# தமிழ்ப் புலவர் வரிசை

## பகுதி - ௪



சு. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

கழக வெளியீடு: ௮௨௯

# தமிழ்ப் புலவர் வரிசை

## பகுதி - ௪

[௧௦ முதல் ௧௨ புத்தகங்கள்]

சு. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளார். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

©



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

# பதிப்புரை

நாடு, மொழி ஒன்றாலேயே உயர்ச்சிபெறும்; மொழியை வளர்ப்போர் புலவர் பெருமக்கள்; அவர்கள் வரலாற்றை அறிவது, அறிவு வளர்ச்சிக்குத் துணைபுரிவதாகும்.

பெயர் தெரியாது மறைந்துபோய் அவர் பாடிய பாட்டுக்களில் கருத்துச் செறிவுடைய சொற்றொடர்களானும், உறுப்பு முதலிய சிறப்பானும் பிறவற்றானும் பெயர்கொண்டு நிலவும் புலவர் பெருமக்களும் அஃதன்றி மறைந்து பெயரே தெரியாது, அவர் பாடித்தந்த நூல்கள் மட்டில் இருக்கும் புலவர் பெருமக்களும் பலராவர்.

இத்தகைய மாண்புமிக்க கலைச்செல்வர்களின் வரலாற்றை இயன்றவரை தொகுத்து நம் தமிழ்கூறு நல்லுலகுக்கு அளிக்க வேண்டுமென்ற கருத்தை அடிப்படையாகக்கொண்டு முதற்கண் சங்ககாலத்து வாழ்ந்த தமிழ்ப் புலவர்கள் வரலாற்றைச் 'சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை' என்னும் தொகுப்பில் பதினாறு தனி நூல்களாக வெளியிட்டோம். பின்னர் அவைகளைத் தொகுத்துக் கட்டடஞ்செய்து நூல்நிலையங்கட்கு ஏற்றவாறு அமைத்து ஆறு பகுதிகளாக வெளியிட்டுள்ளோம்.

பின்னர்ச் சங்க காலத்துக்குப் பின்பு விளங்கியிருந்த புலவர் பெருமக்களின் வரலாற்றைத் தொகுக்க எண்ணித் தமிழ்ப் புலவர் வரிசை என்னும் பெயருடன் முயன்று இதுகாறும் ஒன்று முதல் பன்னிரண்டு நூல்கள்வரை கிடைத்த வரலாற்றைக் கொண்டு திரு. சு. அ. இராமசாமிப் புலவரவர்களை எழுதச் செய்து வெளியிட்டுள்ளோம்.

இவ்வரலாறு வெளியிடுவதற்குப் புலவர்களும் அறிவுமிக்க மாண்பினரும் தத்தமக்குத் தெரிந்த புலவர்களின் வரலாற்றைத் தாங்கள் அறிந்தவரையில்—கேட்ட அளவில்—தெரிந்து வரைந்

தனுப்பினல் மேலும் தொடர்ந்து புலவர்கள் வரலாற்றைத் தொகுத்தற்குப் பேருதவியாக இருக்கும். இதனல் புலவர்கள் வரலாறு ஒருவாறு எங்கும் யாவரும் அறிந்துகொள்ளும் வாய்ப்பும் கிட்டும்.

புலவர் வரலாறுகளை, அவர்கள் ஆக்கிய நூல்களின் துணை கொண்டும், நூலினைப் புலவர்களைக் கொண்டும் நன்கு அறியலாம். ஆகவே, இந் நன்முயற்சியில் மூன்ருந் சங்க காலத்துக்குப் பிற்கால முதல் இதுவரை வாழ்ந்திருந்த புலவர்களின் வரலாற்றைத் தொகுத்து முடிப்பதையே முதற்பெருங் கடனுகக் கொண்டுள்ளோம்.

இதுவரை வெளிவந்துள்ள பன்னிரண்டு தனித்தனி நூல்களில் ஒன்று முதல் மூன்று வரையுள்ள மூன்றையும் ஒன்ருகத் தொகுத்துக் கட்டடஞ் செய்து, அதை முதற் பகுதியாகவும் நான்கு முதல் ஆறு வரையுள்ள மூன்றையும் கட்டடஞ் செய்து இரண்டாம் பகுதியாகவும், ஏழு முதல் ஒன்பது வரையுள்ள மூன்றையும் கட்டடஞ் செய்து மூன்றும் பகுதி யாகவும்,பத்துமுதல் பன்னிரண்டு வரையுள்ள மூன்றையும் நான்காம் பகுதியாகவும் தொகுத்துள்ளோம்.

தமிழுலக நன்மக்கள் இவைகளை வாங்கிக் கருவூலங்களில் வைத்துப் போற்றுவதுடன் கற்றும் கற்பித்தும் நாடு மொழி கலைகள் வளரத் துணைபுரிவதோடு எம்மையும் இன்னனபோன்ற அரிய பணிபுரிய ஊக்குவிப்பார்களென நம்புகின்ரும்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை



உ

சிவமயம்.



ஸ்ரீலஸ்ரீ நடேச ஞான தேசிக ஸ்வாப

கழக வெளியீடு: எ௬௬

# தமிழ்ப் புலவர் வரிசை

[பத்தாம் புத்தகம்]



ஆசிரியர் :

திரு. சு. அ. இராமசாமிப் புலவர்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

# பதிப்புரை

முன்னேற்றத்தை விரும்பும் நாடுகள் எல்லாம், தத்தம் நாட்டுப் புலவர்கள் செய்தருளிய தாய்மொழி நூல்களை விரும்பிப் படித்தலும் படிப்பித்தலும் செய்கின்றன.

அத்துடன், அப் புலவர்கள் வரலாற்றைச் செம்மையுடன் உணர்ந்து அவர்தம் அறிவு, ஆண்மை, அன்பு, ஒழுக்கம், தந்நலமின்மை, தாய்மொழிப் பற்று, எல்லாருக்கும் உதவுதல், விடா உழைப்பு, அஞ்சாமை, வாய்மை, கடமை முதலிய நற்பண்புகளை மேற்கொண்டு நடத்தி நற்பயன் பெறுகின்றன.

அம்முறையில் நம்நாட்டுப் புலவர் பெருமக்கள் வரலாறுகளையும், அவர்கள் செய்தருளிய நூல்களையும் மாணக்கர் இளமையிலேயே கற்று அதன்படி ஒழுகுவது, நாட்டுக்கும், மொழிக்கும் செய்யும் நல்தொண்டாகும் எனக்கருதித் தமிழ்ப் புலவர் வரிசையில் இதுகாறும் ஒன்பது நூல்கள் வெளியிட்டுள்ளோம். உங்கள் கையில் மலரும் இந்நூல், இவ்வரிசையில் பத்தாம் புத்தகமாகும்.

இதன்கண் சிற்றம்பலநாடிகள் முதல் பூந்து. சுந்தர முதலியார் ஈறாக ௩0 புலவர் பெருமக்கள் வரலாறுகளும், ஆங்காங்கு அவ்வப் புலவர் பெருமக்கள் யாத்த பாடல்களும், உள்ளுறை நயங்களுடன் செவ்விய இனிய எளிய நடையில் எழுதப்பெற்றிருக்கின்றன.

இதனை எங்கள் விருப்பத்தின்படி ஆக்கித்தந்த திரு. சு. அ. இராமசாமிப் புலவர் அவர்களுக்கு எங்கள் நன்றி உரித்தாகுக.

இதனையும் முதல் ஒன்பது புத்தகங்கள் போலவே ஆசிரியர்களும், மாணக்கர்களும், பொதுமக்களும் வாங்கிக் கற்றும் கற்பித்தும் புலவர் பெருமக்களுக்குச் செய்யும் கடப்பாட்டினைச் செய்து எங்களையும் ஊக்குவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை

# தமிழ்ப் புலவர் வரிசை

## [பத்தாம் புத்தகம்]

### க. சிற்றம்பலநாடிகள்

தோற்றம்

திருஞான சம்பந்தப்பிள்ளையார் பிறந்தருளுமாறு சிறப்புற்றதும் பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பைநகர், கொச்சைவயம், திருக்கழுமலம், சீகாழி என்னும் பன்னிரு திருப்பெயர்களைப் பெற்றதுமாகிய சிவப்பதியிலே சைவ வேளாண்குடியிலே சிற்றம்பலநாடிகள் வெகுகாலத்திற்கு முன்னர்த் தோன்றினார். இவருடைய முழுவரலாறும் விளக்கமாகவில்லை. ஒழிவிலொடுக்கம் செய்தருளிய காழிக் கண்ணுடைய வள்ளல் சிற்றம்பலநாடிகளின் உடன்பிறந்தவர் என்றுங் கருதுகின்றனர். சிற்றம்பலநாடிகளின் பிள்ளைப்பெயர் இன்னதென்று தெரியவில்லை. இவர் திருச்செந்தூரையடைந்து முருகக்கடவுளைப் போற்றி வழிபட்டு அருந்தவம் புரிந்தார். முருகப்பெருமான் இவருடைய தவத்திற்கு இரங்கித் திருவருள் புரிந்து மெய்ஞ்ஞானம் அளித்தருளினார். அது முதல் சிற்றம்பலநாடிகள் என்று இவருக்குப் பெயர் வழங்கத் தொடங்கியது.

திருக்கூட்டம்

சிற்றம்பலநாடிகள் முருகன் திருவருள் பெற்ற பிறகு மாயூரத்தையடைந்து தங்கினார். இவரிடம் பலபேர் அரு

ளுரை பெற்று மெய்ஞ்ஞானச் செல்வர்களாயினர். அவர்கள் தம் ஆசிரியரை விட்டுப் பிரியாதிருந்தனர். ஆகவே, இவர்களுடைய தொகை பெருகி அறுபத்து நான்காகியது. சிற்றம்பலநாடிகள் மடாலயம் ஒன்று அமைத்துத் தம் மாணவர் குழாத்தோடு அதில் வீற்றிருந்தார். இவரிடம் அருளுரை பெற்றவர்களும் தம்முடைய ஆசிரியர்க்குச் சிறிதும் குறையாத மேனிலையிலேயே சிறந்து விளங்கினர்.

ஞானங்குறைந்த ஒருவர்

சிற்றம்பலநாடிகளும் மாணவர்களும் தமது திருமடத்தில் ஒருநாள் உணவருந்துதற்கு அமர்ந்தனர். அப்பொழுது மடைத் தொழிலாளன் உணவும் பருப்பும் படைத்தபின் நெய் ஊற்றுவதற்குப் பதிலாக வேப்பெண்ணெயை எடுத்து வந்து மடத்தனமாக உணவில் ஊற்றி விட்டான். சிற்றம்பலநாடிகளும் மாணவர்களில் அறுபத்திரண்டு பேர்களும் யாதொரு மாறுபாடும் காட்டாமல் உணவை அருந்தினார்கள். ஒருவர் மட்டும் வேப்பெண்ணெய் ஊற்றப்பட்ட உணவை வாயில் வைத்ததும் ஓக்களித்து வாந்தி செய்தனர். சிற்றம்பலநாடிகள் இதனைப் பார்த்தார். "நமது திருக்கூட்டத்திலே பக்குவம் இல்லாதவர்கள் இருப்பதும் தகுதியாகுமோ?" என்று திருவாய்மலர்ந்தருளினார். வேப்பெண்ணெய் உணவை வாந்திசெய்தவருடைய பெயர் கண்ணப்பர். அவர் தம் திருக்கூட்டத்தை விட்டு வெளியேறினார். தம் ஆசிரியருடைய திருவடிகளை எண்ணிக் கொண்டே வடக்கு நோக்கிச் சென்றார்.

,யற்கை

கண்ணப்பர் பிரிந்து சென்று நாட்கள் பலவாயின. சிற்றம்பலநாடிகள் சமாதியடையத் திருவுளங்கொண்டார். அந்நாளில் சோழவள நாட்டினை அரசாண்டு கொண்டிருந்த

சோழ மன்னனை வரவழைத்தார். அவனைப்பார்த்து, "யாம் திருக்கூட்டத்தோடு சித்திரைத் திங்களில் திருவோண நாளில் சமாதியில் இறங்கப்போகிறோம். அதற்குத் தக்க இடத்தினை நீ அமைப்பாயாக!" என்று கட்டளையிட்டருளினார். இதனைக்கேட்ட அரசன் மிக இறும்பூ தடைந்தான். மாயூரத்திற்கு அண்மையிலிருந்த பூம்பொழில் ஒன்றில் சிற்றம்பலநாடிகளின் கட்டளைப்படி அறுபத்து மூன்று சமாதிக் குழிகளை அமைத்தான். இச்செய்தியை நாடெங்கும் பறையறைந்து தெரியப்படுத்தினான்.

இறுதி

மக்கள் இந்தப் புதுமையைப் பார்க்க விரும்பினார்கள். எல்லோரும் பூம்பொழிலுக்கு வந்து ஒருங்கு திரண்டார்கள். அரசன் சிற்றம்பலநாடிகட்குச் செய்தி தெரியப்படுத்தினான். சிற்றம்பலநாடிகள் தம் அடியவர் கூட்டத்தோடு புறப்பட்டுச் சமாதிக்குழி அமைக்கப்பட்டுள்ள பூம்பொழிலுக்கு வந்தார். அங்கு திரண்டுள்ள மக்களைப் பார்த்து வாழ்த்துரை வழங்கினார். எல்லோரும் கேட்குமாறு மூன்று திருவெண்பாக்களைப் பாடியருளினார். தமக்கென்றமைத்த சமாதிக் குழியில் இறங்கினார். சிவசிந்தனையோடு சின்முத்திரையாகிய மோனமுத்திரையைத் தாங்கி அமர்ந்தார். பின்னர் அடியவர்களும் ஒவ்வொரு திருவெண்பா உரைத்துக்கொண்டே ஆசிரியரைத் தொழுது வலஞ்செய்து நிலமுறப்பணிந்து தத்தமக்கமைத்த குழியில் இறங்கிச் சித்திபெற்றனர்.

கண்ணப்பர்

இவ்வாறு நிகழும் புதுமையை அரசனும் பிறரும் பார்த்து வியப்புற்றார்கள். கூட்டத்தினர், "இக்கூட்டத்தைச் சேர்ந்தவர்களில் இன்னும் ஒருவரைக் கா(

அவர் எங்கு சென்றனரோ யாண்டு உள்ளனரோ? அவருக்கு இச்செய்தி தெரியுமோ" என்று பலவாறு உரையாடிக் கொண்டிருந்தனர். அச்சமயத்தில் கண்ணப்பர் திடீரென்று அங்குத்தோன்றினார். சமாதிகள் எல்லாவற்றையும் வணங்கினார். தமக்கென்று ஒரு சமாதி அமைக்கப்படாமையால் ஆசிரியராகிய சிற்றம்பலநாடிகளின் சமாதிக்கு முன்னே நின்று,

"ஆண்ட குருச்சிற் றம்பலவா அடியேற்கா
மீண்டும் எழுந்தருள வேண்டாவோ-நீண்டவனும்
ஆரணனுங் காணாத ஆனந்த வாரிதியில்
பூரணமா வையாத போது"

என்னும் வெண்பாவைப் பாடி நின்றார். உடனே சிற்றம்பல நாடிகளின் சமாதி பிளவுபட்டது. அடிகள் விழித்து நோக்கினார். எதிரில் கூப்பிய கையராய் நின்ற கண்ணப்பரை இருகையும் பொருந்துமாறு தழுவித் தம்மடிமீதிருத்தி ஒன்றுபடுத்திக்கொண்டார். கண்ணப்பரின் சிறந்த பேற்றைக்கண்ட கூட்டத்தினர் கண்ணப்பரின் பெருமையைப் போற்றினர்.

சித்தக்காடு

அச்சமாதிகளையெல்லாம் அரசன் சிறப்பாகக் கட்டிப் பூசை முதலியன நடத்தற்கு ஏற்பாடு செய்தான். மாயூரத்திற்கு அண்மையில் இப்பெரியார்கள் வீடுபேறுற்ற இடம் "சித்தக்காடு" என்னும் பெயருடன் இந்நாளில் வழங்குகின்றது.

"மூத்தர் அறுபத்து மூவர் பணிந்தேத்தும்
சித்தர் வனத்தில்லைச் சிற்றம்பலவா-பத்தர்
பவவிருளை நீக்கியருள் பானுவே தூய்ய
தவவடிவே நின்றாள் சரண்"

என்பது அபியுக்தர் வாக்கு.

இயற்றிய நூல்கள்

சிற்றம்பலநாடிகளால் செய்யப்பட்ட நூல்கள்,

1. திருச்செந்தூர் அகவல்
2. செல்காலத் திரங்கல்
3. நிகழ்காலத் திரங்கல்
4. வருகாலத் திரங்கல்
5. அநுபூதி விளக்கம்
6. தாலாட்டு
7. கலித்துறை
8. முறுவல்
9. துகளறு போதம்
10. சமாதிவெண்பா

என்பன. இவைகள் அச்சிடப்பட்டு உலகில் வழங்குகின்றன.

---

## உ. சாந்தலிங்க அடிகள்

சாந்தலிங்க அடிகள் என்னும் பெரியார் ஏறக்குறைய மூந்நூறு யாண்டுகட்கு முன்னே தொண்டைநாட்டில் தோன்றியருளினர். இளம்பருவத்தில் தானே இலக்கண இலக்கிய நூல்களை இனிதுகற்றுத் தேர்ந்தார். கல்வியை நன்கு கற்றதன் பயன் இறைவன் திருவடிகளைப் போற்றி வழிபடுதலே என்று துணிந்து பல சிவப்பதிகட்குஞ் சென்று இறைவழிபாடுபுரிதலை மேற்கொண்டார்.

அந்நாளில் துறைசையாதீனத்தில் துறைசைச் சிவப்பிரகாச அடிகள் என்னும் பெரியார் ஒருவர் இருந்தார். தற்செயலாகச் சிவப்பிரகாச அடிகளைக்கண்ட சாந்தலிங்க அடிகள் அவரைப் போற்றி வழிபட்டார். சாந்தலிங்க அடிகளாரின் கல்வியறிவு நல்லொழுக்கம் அன்பு முதலியவைகளைக் கண்ட சிவப்பிரகாச அடிகள் சாந்தலிங்க அடிகட்கு அறிவுரை வழங்கி மெய்யறிவைக் கொடுத்தார். மெய்

யறிவு கைவரப்பெற்ற சாந்தலிங்க அடிகள் பேரையூர் என்னும் மேலைச் சிதம்பரத்தை அடைந்து தனிமையான இடத்தில் நிட்டை கூடியிருந்தார்.

சாந்தலிங்க அடிகளின் மெய்ஞ்ஞான நிலையைக் கண்ட அன்பர்கள் அவருக்குத் திருமடம் ஒன்று அமைத்துக் கொடுத்தனர். அடிகளார் அம்மடத்தில் அமர்ந்திருந்தார். அடிகளார்க்குப் பன்முறை கூத்தப்பிரானின் திருக்காட்சி கிடைத்தது. சாந்தலிங்க அடிகள் ஒருமுறை சிவஞான பாலைய தேசிகர் என்னும் பெரியாரைக் கண்டு வழிபடும் பொருட்டுப் பொம்மையபாளையம் என்னும் ஊருக்குப் புறப்பட்டுச் சென்றார். இடைவழியில் துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகள் என்னும் பெரியார் சாந்தலிங்க அடிகளைக் கண்டனர். இருவரும் பொம்மைய பாளையத்திற்குச் சென்று சிவஞானபாலைய தேசிகரைக் கண்டு போற்றினர். அத்தேசிகர் சிவப்பிரகாச அடிகளின் தங்கையாகிய ஞானம்பிகை என்னும் மங்கையைச் சாந்தலிங்க அடிகட்குத் திருமணஞ்செய்து கொடுக்குமாறு கட்டளையிட்டார். சிவப்பிரகாச அடிகளும் அவ்வாறே செய்தார்.

சாந்தலிங்க அடிகள் இல்லறவாழ்க்கையினராய் வெளிக்குக் காணப்பட்ட போதினும் தூய துறவொழுக்கமுடையாராய்த் தக்கார் பலர்க்கு மெய்யறிவு நூல்களைப் போதித்தலை மேற்கொண்டிருந்தார். அடிகளாரின் மாணவர்கள், “நம் ஆசிரியர் இல்லறத்தினராக இருந்துகொண்டு துறவறத்தினர்க்குரிய அறிவுநூல்களைப் போதிக்கின்றாரே, இஃது எவ்வாறு கைகூடப்போகிறது?” என்று ஒருவருக்கொருவர் மறைமுகமாகப் பேசிக்கொண்டார்கள். சாந்தலிங்கஅடிகள் இதனைக் குறிப்பாக உணர்ந்தார். தமது தூய ஒழுக்கத்தை மாணவர்கட்கு விளக்கி அவர்

களது ஐயத்தைப் போக்கவேண்டும் என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தார்.

ஒருநாள் பாடந்தொடங்கப்பெற்றது. அடிகள் தம் மனைவியாராகிய ஞானம்பிகையை அழைத்தார். அவ்வம்மையாரும் விரைந்து வந்தார். அடிகள் ஞானம்பிகையைத் தம் மடிமீது அமர்த்திக்கொண்டு பாடஞ்சொல்லலானார். மாணவர்கள் இக்காட்சியைக் கண்டு ஒன்றுந் தோன்றாமல் மேலும் ஐயங்கொண்ட மனத்தினராய்க் கலங்கினர். சிறிது போது சென்றது. அம்மாணவர்கள் அடிகளாரையும் அம்மையாரையும் சிவபெருமானாகவும் உமாதேவியாகவும் கண்டனர். அவர்களுடைய ஐயம் அகன்றது. "அந்தோ! மெய்யறிவுச் செல்வராகிய நம் ஐயன்மீதும் ஐயங்கொண்டோமே! நம் அறிவு இருந்தவாறென்னே!" என்று கலங்கினார்கள். மாணவர்களின் மனநிலையை உணர்ந்த அடிகளார் அவர்கட்குத் தேறுதல்மொழிகளைக் கூறியருளினார்.

கொலைமறுத்தல், வைராக்கியசதகம், வைராக்கிய தீபம், அவிரோதவுந்தியார் என்னும் நூல்களைச் சாந்தலிங்க அடிகளார் இயற்றினார். அந்நூலின் ஞானத்தன்மையை உணர்ந்த பலர் பெருமகிழ்ச்சியடைந்தனர். குறுகிய மனப்பான்மைகொண்ட சிலர், "வைராக்கிய தீபத்தில் புறத்துறவே அகப்பற்றையும் வாசனையையுங் கெடுத்து மெய்ஞ்ஞானம் அடைதற்கு ஏதுவாகும் என்று கூறிய அடிகள் இல்வாழ்க்கையினராக இருக்கின்றாரே," என்று வெளிப்படையாகக் கூறினார்கள்.

இதனைக்கேட்ட அடிகள் துறவுநெறியை மேற்கொள்ள விரும்பினார். ஞானம்பிகையைப் பார்த்து, "நாம் துறவுக் கோலத்தை மேற்கொள்ள எண்ணினோம். நீ நின்னுடைய

தமையன்மாருடைய ஆதரவில் தங்கியிருப்பாயாக,'' என்று கூறினார். அம்மையாரும் அடிகளாரை வணங்கிப் பிரிந்து சென்றார். அதன் பிறகு சாந்தலிங்க அடிகள் துறவுக் கோலத்தை மேற்கொண்டார்.

அடிகள் ஒருநாள் உணவின்பொருட்டுத் தெரு விற்குச் சென்றார். ஒரு சிறுவனை அன்பாக நோக்கித் தொட்டார். அதுமுதல் அச்சிறுவன் நாளுக்கு நாள் பற்று நீங்கப்பெற்று அடிகளார்க்கடியனாய் இறுதியில் துறவி யானான். இதன்பின் அடிகளாரைத் தெருவிற் கண்டால் தாய் தகப்பன்மார் தங்கள் குழந்தைகளை மறைத்துக் கொள்ளலாயினர்.

கன்னட நாட்டு மன்னனாக இருந்த மகாராசா என் பவர் சாந்தலிங்க அடிகளின் அருளுரையைப்பெற்று மெய்ஞ்ஞானச் செல்வரானதோடு பதினாறு மெய்யறிவு நூல்களையும் இயற்றினார். அவருடைய பெயர் குமார தேவர் என மாறி நின்றது.

அடிகளால் இயற்றப்பட்ட நூல்கள் நான்கிற்கும் குமாரதேவர்க்கு அடியவராக அமைந்து நின்ற சிதம்பர அடிகள் என்னும் பெரியார் அரிய விரிவுரையைச் செய்து அடிகளாரிடம் காட்டினர். தம் கருத்துக் கேற்றவாறு உரை அமைந்திருத்தலைக் கண்டு அடிகளார் உவகைகொண்டனர். அடிகளால் இயற்றப்பெற்ற நூல்கள் நான்கும் உலகில் சிறந்து விளங்குகின்றன.

---

# ௩. குருஞான சம்பந்தர்

## தோற்றமுங் கல்வியும்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீன முதற் குரவரான குருஞானசம்பந்தர் என்னும் பெரியார், நீண்டுயர் மலைகள் ஈண்டிய புகழ்சேர் பாண்டிய நாட்டில், சிவில்லி புத்தூரிலே கார்காத்தவேளாளர் குலத்திலே தோன்றி யருளினார். தந்தையார் பெயர் சுப்பிரமணியபிள்ளை. தாயார் பெயர் மீனாட்சியம்மையார் குருஞானசம்பந்தர் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வட மொழி தென்மொழி எனுமிருமொழியையும் மாண்புடன் கற்றுத் திகழ்ந்தோங்கினார்.

## மதுரைமாநகர் அடைதல்

ஒருநாள் சுப்பிரமணிய பிள்ளையும் மீனாட்சியம்மை யாரும் தங்கள் அருந்தவப் புதல்வனுடன் திருந்திய புகழ் மிகப்பொருந்திய மதுரையை அடைந்தனர். ஆண்டு சில நாட்கள் தங்கிப் பங்கயில் புகழ்சேர் அங்கயற்கண்ணியை யும் தக்கநற் புகழார் சொக்கப்பெருமானையும் போற்றி வணங்கிக்கொண்டிருந்தனர். பின்னர் ஒரு நாள் ஊரை நோக்கிப் புறப்பட்டனர். குருஞானசம்பந்தர் இருமுது குரவருடன் புறப்படாமல் ஆண்டே தங்கத் தொடங்கி விட்டார்.

## சொக்கநாதவெண்பா

மைந்தருடைய மனமாற்றம் தாய் தந்தையர்கட்கு மிகுந்த தடுமாற்றத்தை உண்டாக்கியது. அவர்கள் எவ் வளவோ வருந்தியழைத்துப் பார்த்தனர். யாதும் பய னில்லாமல் போய்விட்டது. காளத்தியப்பரைக் கண்டு

கண்டு பற்றிய கண்ணப்பர் மீளத்தெரியாமல் ஆண்டே தங்கிவிட்டாற்போல் இவருந் தங்கிவிட்டார். சொக்கநாதப் பெருமானைப் புகழ்ந்து,

"ஆடரவஞ் சூழ்மதுரை அம்மானே அன்பருடன்
கூடவிளை யாடிவருங் கோமானே—நீடுபுகழ்
மென்மேலும் என்றனக்கு மேவியிடப் பொல்லாத
என்மேல் வினைகெடுப்பா யே."

என்று தொடங்கிச் சொக்கநாத வெண்பா என்னும் நூலினைப் பாடிப் புகழ்ந்து போற்றினார். தாய் தந்தையர்கள் 'நம் புதல்வன் நல்வழியைத்தான் நாடுகின்றனன்; ஈண்டேயிருக்கட்டும்' என்று எண்ணியவர்களாய்த் தங்கள் ஊருக்குப் புறப்பட்டுப்போய் விட்டனர்.

சிவலிங்கம்பெறுதல்

குருஞானசம்பந்தர் மதுரைப் பெருமானையும் அங்கயற்கண்ணம்மையையும் போற்றி வழிபட்டுக்கொண்டு பல நாள் மதுரையில் இருந்தார். வழக்கம்போல் ஒருநாள் அதிகாலையிற் புறப்பட்டுப் பொற்றாமரைத் தடாகத்திற்கு நீராடச் சென்றார். அங்குப் பல அன்பர்கள் நீராடிச் சிவபூசை செய்துகொண்டிருந்தனர். இவருடைய உள்ளத்தில் நாமும் இவ்வாறு பூசை செய்தல்வேண்டும் என்னும் ஆர்வம் உண்டாகியது. நீராடிமுடித்துச் சோமசுந்தரப் பெருமான் திருமுன்பு சென்றார். "எம்பெருமானே! அடியேனும் தேவரீரைப் பூசித்து வழிபட எண்ணுகின்றேன். திருவருள் பாலித்தருளுதல் வேண்டும்," என்று பலவாறு வேண்டிக்கொண்டு அவ்விழைவுடனேயே தமது இருப்பிடத்திற்குச் சென்றார். அன்று இரவு குருஞானசம்பந்தருடைய கனவிலே சொக்கநாதப்பெருமான் தோன்றினார். "அன்பனே! மனங் கவலற்க! நாம் உன்

னுடைய குறையை முடிக்கத் திருவுள்ளங்கொண்டனம். பொற்றாமரைத் தடாகத்திலே ஈசான மூலையிலே கங்கைக்குள் எழுந்தருளியிருக்கின்றோம். காலையில் அங்குச் சென்று மூழ்கி எம்மை எடுத்துப் பூசிப்பாயாக,'' என்று திருவாய்மலர்ந்தருளினார். குருஞானசம்பந்தர் இறைவன் திருவருளை எண்ணி எண்ணிப் பெருமகிழ்ச்சியடைந்தார். மறுநாள் விடியற்காலையில் எழுந்து பொற்றாமரைக்குச் சென்றார்; நீராடினார். இறைவன் குறிப்பிட்ட இடத்தில் இறங்கித் தடவிப் பார்த்தார். பூசைப் பெட்டியொன்று இவருடைய கையில் சிக்கியது. எடுத்துத் திறந்து பார்த்தார். உள்ளே சிவலிங்கப் பெருமான் எழுந்தருளி யிருந்தார். மிகுந்த மகிழ்ச்சியடைந்து இன்பக் கூத்தாடினார். சொக்கநாதப் பெருமானுடைய திருமுன் சென்று வணங்கிப் போற்றினார்,

"கண்ணுக் கினிய பொருளாகி யேயென் கரத்தில்வந்தாய்
விண்ணும் பரவிடும் அற்புத மேயென்ன விஞ்சையிதான்
மண்ணும் புகழ்ந்திட என்னையும் பூரண வாரியுள்ளே
நண்ணும் படிசெய் மதுரா புரிச்சொக்க நாயகனே."

என்னும் திருப்பாடலை முதலாகக்கொண்டு பதினொரு பாடல்களை இறைவன்மேல் பாடினார்.

குருவைப் பெறுதல்

இவ்வாறு சிவலிங்கம் பெற்ற குருஞானசம்பந்தர் சிவலிங்கப் பெருமானைப் பூசித்தற்குரிய விதிமுறைகளையும், மெய்யறிவுரையையும் ஓர் ஆசிரியர் வாயிலாக அடைய வேண்டுமென்று சொக்கநாதர் திருமுன்பு வேண்டிக் கொண்டார். சொக்கநாதப் பெருமான் அன்றிரவு குருஞானசம்பந்தருடைய கனவிலே தோன்றினார். "அன்பனே! நமது வழிமுறையில் வந்த கமலைஞானப்பிரகாசர் என்னும்

பெரியார் திருவாரூரிலே உள்ளார். நீ அவர் பாற்சென்று விரும்பியவற்றைப் பெறுக,'' என்று கூறிமறைந்தார். அவ்வாறே திருவாரூர் ஞானப்பிரகாசருடைய கனவிலுந் தோன்றி "வருகின்ற திங்கட்கிழமையன்று உன்னிடம் வருகிற நம்முடைய ஞானசம்பந்தனுக்கு முறைப்படி அறிவுரை வழங்கிச் சிவலிங்க பூசையும் எழுந்தருளப்பண்ணிக் கொடுப்பாயாக,'' என்று கட்டளையிட்டருளினார்.

குருஞானசம்பந்தர் மதுரையைவிட்டுப் புறப்பட்டுத் திருவாரூரை அடைந்தார். கமலாலயப் பொய்கையில் நீராடிக் கோயிலுக்குச் சென்றார். இறைவன் கட்டளையைப்பெற்ற ஞானப்பிரகாசர் தட்சிணாமூர்த்தி திருமுன் படைந்து சிவயோகத்தில் எழுந்தருளியிருந்தார். திருக்கோயிலை வலம் வருகின்ற குருஞானசம்பந்தர் தட்சிணாமூர்த்தி திருமுன் ஞானப்பிரகாசரைக் கண்டார். திருவடிகளில் விழுந்து வணங்கி ஒரு பக்கத்திலே ஒதுங்கி நின்றார். ஞானப்பிரகாசர் திருவருள் நோக்கஞ் செய்தார். மெய்யறிவுரை வழங்கிச் சிவபூசையையும் எழுந்தருளப் பண்ணிக்கொடுத்தார். குருஞானசம்பந்தர் தம்முடைய ஆசிரியர்மேல் பண்டாரக்கலித்துறை என்னும் நூலைப் பாடிப் புகழ்ந்து வணங்கினார்.

வியத்தகு நிகழ்ச்சி

ஞானப்பிரகாசரிடம் அறிவுரையும், சிவபூசையும் பெற்ற குருஞானசம்பந்தர் இறைவழிபாடுங் குருவழிபாடுஞ் செய்துகொண்டு திருவாரூரில் இருந்தார். ஒருநாள் ஞானப்பிரகாசர் தம் மாணவரோடு திருக்கோயிலுக்குச் சென்றார். நள்ளிரவுப் பூசை ஆகும் வரையில் தட்சிணாமூர்த்தி (தென்முகக் கடவுள்) திருமுன்பு சிவயோகத்தில் அமர்ந்திருந்தார். நள்ளிரவுப் பூசை யானவுடன் தம்

வீட்டிற்குப் புறப்பட்டார். கைவிளக்குத் தூக்குபவன் உறங்கிவிட்டான். குருஞானசம்பந்தர் தாமே கைவிளக்கைத் தூக்கிக்கொண்டு ஆசிரியருடன் சென்ருர். ஞானப்பிரகாசருடைய இல்லம் குமரகோவிலுக்குப் பின் தெருவில் இருந்தது. வீட்டையடைந்த ஞானப்பிரகாசர் வீட்டிற்குள் நுழையும்போது குருஞானசம்பந்தரைப் பார்த்து, "நிற்க" என்று கூறிவிட்டுத் தாம் வீட்டிற்குள் சென்று விட்டார்.

குருவின் உரை, "நிற்க" என்று பிறந்திருந்திருக்கிறதே என்று எண்ணிய குருஞானசம்பந்தர் முற்றத்தில் கைவிளக்கோடு அப்படியே நின்றுவிட்டார். நின்றவர் சிவயோகத் தமர்ந்து பேரின்ப நிலையில் மூழ்கிவிட்டார். அன்று இரவு பெருமழை பெய்தது. அம்மழை நீரில் ஒரு துளிகூடக் குருஞானசம்பந்தர் மேலே விழவில்லை. ஒரு கோல் அளவில் சுற்றிப் பெய்திருந்தது. விடியற்காலத்தில் ஞானப்பிரகாசருடைய மனைவியார் எழுந்து முற்றம் பெருக்குதற்கு வெளியே வந்தார். கைவிளக்கோடு ஞானசம்பந்தர் நின்றுகொண்டிருத்தலையும் மழை அவரைச் சுற்றிப் பெய்திருத்தலையும் பக்கத்து நீர்கூட விலகிச் சென்றிருத்தலையுங் கண்டார். மிக வியந்து உள்ளே சென்று தம் கணவருக்கு இச்செய்தியைத் தெரியப்படுத்தினர். ஞானப்பிரகாசர் வெளியே வந்தார். தம் மாணவரின் மேலான பக்குவநிலையைக் கண்டார். அவரைப் பார்த்து, "அன்பனே! உன்னால் பல உயிர்கள் ஈடேறவேண்டும். ஆகவே நீ வடக்கே சென்று சைவசித்தாந்த மெய்ந்நெறியைப் பரப்புவாயாக," என்று கட்டளை கொடுத்தார். குருவின் கட்டளையைக்கேட்டு மாணவர் மனம் பதறினர். "தேவரீரைவிட்டு எளியேன் எவ்வாறு பிரிந்திருப்பேன்?" என்று கூறினர். ஞானப்பிரகாசர் மீட்டும் தம் மாணவரைப்

பார்த்து, "அன்பனே! நீ நம்மைவிட்டுப் பிரிந்து வெகு தொலையிற் சென்றிருக்கவேண்டா. அண்மையில் உள்ள தருமபுரத்தையடைந்து, ஆண்டுத் தங்கி அன்பர்கட்கு அருள்செய்து கொண்டிருப்பாயாக," என்று ஆணை கொடுத்து அனுப்பினார்.

*தருமபுரஞ்சார்தல்*

ஆசிரியரின் கட்டளையைத் தலைமேற்கொண்ட குரு ஞானசம்பந்தர் தருமபுரத்தை அடைந்து அங்கு எழுந்தருளியிருந்தார். கண்கட்டி மறைஞான பண்டாரம், சச்சிதாநந்தர், மருதூர் ஆபதுத்தாரணர் முதலிய மாணவர்கட்கு அருள்செய்து அவர்களைக் கடைத்தேற்றினார். இப்பெரியார் பல தொண்டர்கட்கு அருள்செய்துகொண்டிருந்து பின் அவ்விடமே திருக்கோயில்கொண்டு இன்றும் பெருஞ் சிறப்புடன் சிவலிங்க வடிவமாக விளங்குகின்றார். இப்பெரியார் சென்று தங்கிய இடத்தில் இந்நாளில் பெரிய மடாலயம் தேவாலயம் முதலிய அறநிலையங்கள் சிறந்து விளங்குகின்றன.

*இப்பெரியார் இயற்றிய நூல்கள்*

1. சொக்கநாதவெண்பா
2. சொக்கநாதக் கலித்துறை
3. சிவபோகசாரம்
4. திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவல்
5. முத்திநிச்சயம்
6. முத்தி நிலை

முதலியனவாம்.

# ௬. சித்தர் சிவப்பிரகாசர்

## தோற்றம்

கும்பகோணம் என வழங்கும் திருக்குடந்தைப் பதியிலே இற்றைக்கு ஏறக்குறைய மூந்நூறு யாண்டுகட்கு முன்னர் சித்தர் சிவப்பிரகாசர் வேளாளர்குடியிலே தோன்றினர்.

## கல்வியறிவும் நன்னெறியும்

சிவப்பிரகாசர் கற்கவேண்டிய நூல்களையெல்லாம் இளம்பருவத்திலேயே கற்றுச் சிறந்த நல்லொழுக்கம் உடையவராக விளங்கினர். இவருடைய உள்ளம் இல்லற நெறியிற் செல்லாமல் நல்லற நெறியாகிய துறவறத்திலே சென்றது. அக்காலத்தில் திருவாவடுதுறையிலே நமச்சிவாய தேசிகர் ஞானசிரியராக எழுந்தருளியிருந்தார். சிவப்பிரகாசர் நமச்சிவாய தேசிகர்பால் சென்று தீக்கை முதலியன பெற்று அணுக்கத் தொண்டராக அமர்ந்திருந்தார். இவருடைய அறிவாற்றலும் சிவவழிபாடும் எல்லோராலும் போற்றப்பெற்றுச் சிறந்துவிளங்கின.

## திருத்தில்லைக்குச் செல்லுதல்

சிதம்பரம் என்று இக்காலத்திலே வழங்கும் தில்லையில் அந்நாளில் வைணவர்களுடைய ஆர்ப்பாட்டம் மிகுதியாக இருந்தது. விசய நகர மன்னனின் காரியத்தலைவர்களாக இருந்தவர்கள் வைணவர்கள். சைவசமயத்தினிடத்தும் சிவபெருமானிடத்தும் மிகுந்த வெறுப்புடையவர்கள். கூத்தப்பிரானுக்கு நடைபெற்றுக் கொண்டிருந்த பூசை திருவிழா முதலியவைகளை அவர்கள் நிறுத்திவிட்டார்கள். தில்லைவாழ் அந்தணர்கள் வழக்கம்போல் பூசை முதலியவைகளை நடத்துதற்கு முயற்சி செய்தார்கள். அம்முயற்சி

பலனளிக்கவில்லை. ஒரு நாள் இரவு கூத்தப்பிரான் தில்லை வாழந்தணருள் சிறந்து விளங்கிய ஒருவருடைய கனவிற் சென்று "திருவாவடுதுறை நமச்சிவாய தேசிகரிடந் தெரியப்படுத்தினால் அவர் தக்கவாறு ஏற்பாடு செய்வார் என்று தெரியப்படுத்தினார். தில்லைவாழந்தணர் சிலர் திருவாவடுதுறை சென்று நமச்சிவாய தேசிகரிடம் முறையிட்டனர். அத்தேசிகர் சிவப்பிரகாசரைப் பார்த்து, "நீ தில்லைக்குச் சென்று தொல்லைகளை வென்று ஆவன இயற்றிவருவாயாக!" என்று கட்டளையிட்டார். சிவப்பிரகாசர் தில்லையை அடைந்தார்; நிலைமையைக் கண்டார். நம்மால் இங்கு யாதுஞ் செய்ய இயலாது; மேலிடத்தார் இருக்கும் வேலூருக்குச் செல்லவேண்டும் என்று முடிவு செய்தார்.

வேலூருக்கு ஏகுதல்

சிவப்பிரகாசர் வேலூருக்குச் செல்லுதற்கு வேண்டிய ஏற்பாடுகளைத் தில்லைவாழ் அந்தணர்கள் செய்தார்கள். சிவப்பிரகாசர் சிவிகையில் ஏறி வேலூருக்குச் சென்றார். அங்கு அப்போது விசயநகர மன்னருடைய அமைச்சராகவும் செயலாளராகவும் அமர்ந்து அரசாங்கப் பொறுப்பை ஏற்று நடத்தியவருடைய பெயர் இலிங்கண்ணா.[1]

சிவப்பிரகாசர் இலிங்கண்ணாவைக் காண எண்ணினார். அவர் முதிர்ந்த வீரசைவர். வீரசைவக் கோலத்துடன் விளங்குபவர்களைத் தான் இலிங்கண்ணா மிகுதியாகப் போற்றுவாரென்னுஞ் செய்தி சிவப்பிரகாசருக்குத் தெரிந்தது. தாமும் தம்முடைய ஆன்மார்த்த பூசையை மார்பில் அணிந்து கொண்டு சென்று இலிங்கண்ணாவைக் கண்டார்.

1. இவருடைய பெயர் இலிங்கம் நாயக்கர் எனவும் வழங்கப் பெறும்.

இலிங்கண்ணு இவருடைய திருக்கோலப் பொலிவைக் கண்ட அளவில் மிகுதியும் பாராட்டிப் போற்றினர்.

இடையூற்றைப் போக்கல்

சிவப்பிரகாசர் வேலூருக்கு வந்தது தில்லைக்கூத்தப் பிரானது காரியங் குறித்து என்பதை இலிங்கண்ணு உணர்ந்தார். உடனே தருந்தவர்களைத் தில்லைக்கனுப்பித் தொல்லை கொடுத்தவர்களை அடக்கினர். பூசை திருவிழா முதலிய யாவும் கூத்தப்பிரானுக்கு வழக்கம்போல் நடைபெறுவதற்கு ஏற்பாடுசெய்தார்.

மழைபெய்யச் செய்தல்

பல ஆண்டுகள் மழைபெய்யாமையின் நாடு முற்றும் பஞ்சத்தினலும், வறுமையினலும் அல்லற்பட்டுக் கொண்டிருந்தது. இச்செய்தியை இலிங்கண்ணு சிவப்பிரகாசருக்குத் தெரியப்படுத்தினர். உடனே சிவப்பிரகாசர் தம்முடன் வந்த அடியார்களை அழைத்து மேகராகக் குறிஞ்சியைப் பாடச் செய்தார். அவ்வளவில் நாடெங்கும் நன்மழை பொழிந்து வளம்பெற்றது. சிவப்பிரகாசர் அருள் மிகுந்த பெரியார் என்பதை நன்குணர்ந்த இலிங்கண்ணு தமக்கு அண்மையில் வைத்துக்கொள்ள எண்ணினர். திருவருணையில் மடம் ஒன்று கட்டி அங்கேயே தங்கியிருக்குமாறு வேண்டிக்கொண்டார். பலவகையான சிறப்புக்களுஞ் செய்தார். சிவப்பிரகாசர் தாம் வந்தவேலை முடிந்து விட்டபடியால் இனிமேல் இங்குத் தங்கியிருப்பது குருவாணையை மீறிய செயலாகும் என்று எண்ணினர். இலிங்கண்ணுவைப் பார்த்து, "என்னுடைய ஆசிரியர்பாற் சென்று உடன்பாடு பெற்றுக்கொண்டு வருகிறேன்," என்று கூறி மீண்டார்.

திருவாவடுதுறையடைதல்

வேலூரில் இருந்து புறப்பட்டு இடையிலுள்ள பல சிவப்பதிகளையும் போற்றி வழிபட்டுக்கொண்டு திருவாவடு துறையை அடைந்தார். தம் ஆசிரியரைக் கண்டு பணிந் தார். நடந்தவைகளை யெல்லாம் நவின்றார். தம் மாணவ ருடைய நிலையை நமச்சிவாய தேசிகர் கண்டார். திருவருளை எண்ணினார். சிவப்பிரகாசர் அகப்புறச் சமயத்தை அடைந் ததை ஆராய்ந்தார். அவரைப்பார்த்து, "வடதிக்கில், அமர்ந்து இலிங்கண்ணா முதலியவர்கட்கு அறிவுரை வழங் கிக் கொண்டிருப்பாயாக," என்று கட்டளையிட்டருளினார்.

பல சிவப்பதிகட்குச் செல்லுதல்

அக்காலந் தொட்டுச் சிவப்பிரகாசருடைய பெயர் "சித்தர் சிவப்பிரகாசர்" என வழங்கத் தொடங்கியது. சிவப்பிரகாசர் தம் ஆசிரியரிடம் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டார். பல சிவப்பதிகளையும் போற்றி வழிபட்டுக் கொண்டு திருக்கழுக் குன்றத்தையடைந்தார். திருக்கழுக் குன்றமாலை பாடிக் கழுகாசல இறைவனைப் போற்றினார். மேலும் பல சிவப்பதிகளைப் போற்றி வழிபட்டுக்கொண்டு திருச்செங்கோட்டை யடைந்தார்.

கற்காலை கடலை தின்றல்

சிவப்பிரகாசர் சிவிகையில் இவர்ந்தே எல்லா இடங் கட்குஞ் சென்றார். யாருஞ் சிவப்பிரகாசருடைய சிவிகைச் செலவைத் தடைசெய்யார். திருச்செங்கோட்டிலே கேதாரி ஐயர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் கல்வி கேள்வி களிற் சிறந்தவர்; அவருக்கு மாணவர் பலர் இருந்தனர். ஐயரும் அவருடைய மாணவர்களும் ஆணவமலத்தால் பிணிப்புண்டிருந்தனர். கேதாரி ஐயரின் கட்டளைப்படி மாணவர்கள் சித்தர் சிவப்பிரகாசரை எதிர்த்தனர். அவரைப்

பார்த்து, "நீர் உண்மையாக அருளாற்றல் அமையப்பெற்ற வராயின் எமக்கு வியத்தகு நிகழ்ச்சி யொன்று காட்டுதல் வேண்டும். நாங்கள் கடலை சிறிது கொண்டு வந்து கொடி மரத்தின் முன்னுள்ள நந்திதேவர் எதிரே வைப்போம். அக்கடலையை அக் கற்காளை உண்ணுமாறு செய்தல்வேண் டும். அவ்வாறு நீவிர் செய்யின் நாங்களும் எங்கள் ஆசிரி யரும் நுமது சிவிகையைச் சுமக்கிறோம். அவ்வாறு செய்ய மாட்டீராயின் இவ்வூரிலே சிவிகை யிவர்ந்து செல்லாது நடந்தே செல்லுதல் வேண்டும்," என்று கூறி நகைத்து நின்றனர். சித்தர் சிவப்பிரகாசர் அம்மாணவர்களைப் பார்த் துத் தாமும் நகைத்து, "நுங்கள் விருப்பப்படியே கடலை கொண்டு வந்து வையுங்கள். கற்காளை கடலையைத் தின்னு மாறு செய்கிறோம்," என்றனர். அவ்வளவில் அவர்கள் ஒரு கூடை நிறையக் கடலையைக் கொண்டுவந்து நந்தி தேவர் திருமுன் வைத்தனர். சிவப்பிரகாசர்,

வில்லார் பொதுச் சபையின் வித்தகா நீயுமுனம்
கல்லானைக் கிக்கருத்திக் காட்டியவுன்-வல்லாண்மை
கட்டுரையே யாயினிந்தக் கல்லே றெழீஇக்கடலை
இட்டவிவர் முன்தினச்செய் யே.

என்றொரு வெண்பாப் பாடினார். பாடியவுடன் அக்கற் காளை முக்காரமிட்டது. கூடையிலிருந்த கடலையைத் தின்றது. கேதாரிஐயரின் மாணவர்களும் பிறரும் கேதாரிஐயரும் இந்தப் புதுமையைக் கண்டு வியப்படைந் தனர். அருட் பெரியாருடைய சிவிகையைத் தாங்கினால் நல்வினை யுண்டாகுமென்று சிவப்பிரகாசருடைய சிவிகையை அவ்வூர் எல்லைவரை தாங்கினர். இந் நிகழ்ச்சியை,

" பண்பார் சிவப்பிர காசனைத் துட்டர் பழிக்கவவர்
கண்பார்க்க வில்லார் பொதுச்சபை யின்வித்த காவெனவோர்

வெண்பாச் சொலக்கல் விடபங் கடலையை மென்றுதின்னும்
வண்பா வலர்வரு செங்கோடை யுங்கொங்கு மண்டலமே"

என்னும் கொங்குமண்டலச் செய்யுளும் வலியுறுத்தும். பிறகு சிவப்பிரகாசர் மேலும் பல சிவப்பதிகட்கு இறைவழி பாட்டின் பொருட்டுச் சென்றார்.

பல புதுமைகள்

ஓரிடத்தில் சிவப்பிரகாசருடைய திருக்கூட்டம் சென்று கொண்டிருந்தபோது இருளாகிவிட்டது. கையி லிருந்த எண்ணெய் தீர்ந்துபோய் விட்டது. உடனே வாங்குவதற்கு அண்மையில் கடைகளும் இல்லை. திருக் கூட்டத்தினர் இச்செய்தியைச் சிவப்பிரகாசருக்குத் தெரியப்படுத்தினர். அவர் சிறிதுங் கவலை கொள்ளவில்லை. "காவிரித்தண்ணீரை மொண்டு திவட்டியில் ஊற்றுங்கள்," என்றனர். தொண்டர்கள் அவ்வாறே செய்தனர். திவட்டி அணைந்து போகவில்லை; நன்றாக எரிந்தது.

ஓர் ஊரில் சிவப்பிரகாசர் சென்றுகொண்டிருந்த போது ஓர் அந்தணர்இல்லத்தில் கூட்டமும் அழுகையு மாக இருந்தது. சிவப்பிரகாசர் செய்தி என்ன வென்று உசாவினார். அந்தணச்சிறுவன் ஒருவன் பாம்பு கடித்த படியினால் இறந்துபோக அவனுடைய தாய் தந்தையரும் பிறரும் வருந்திக்கொண்டிருக்கிறார்கள் என்று செய்தி தெரியவந்தது. சிவப்பிரகாசர் தமது அருட்டிறத்தால் இறந்து போன சிறுவன் உயிர்பெற்றெழுமாறு செய் தார்.

ஒருவனுக்குக் குறைநோய் (குட்டம்) ஏற்பட்டது. அவனுடைய கால்விரல் கைவிரல் முதலியன இற்று விழுந் தன. அவனைக் கண்டு ஊரார் மிகுந்த வெறுப்படைந்தனர். அவனை ஊருக்குள் வைத்துக்கொண்டிருப்பின் அந்நோய்

எல்லோருக்கும் பரவிவிடும் என்று அஞ்சி அவனைத் தூக்கிக்கொண்டுபோய் ஊருக்குப் புறமாகச் சென்ற பாதையில் போட்டுவிட்டார்கள். அப்போது சிவப்பிரகாசர் அவ்வழியே தமது திருக்கூட்டத்தாரோடு எழுந்தருளி வந்தார். அந்நோயாளி சிவப்பிரகாசரைப் போற்றிக் குறை யிரந்தான். சிவப்பிரகாசர் அவனுக்குத் திருநீறளித்தார். அவன் அந்நீற்றை அணிந்து சிறிதை உள்ளுக்கும் சாப்பிட் டான். அவ்வளவில் அவனுடைய குறைநோய் ஒழிந்தது. அவன் முன்னினும் சிறந்த உடல்நலம் பெற்றவனாய்ச் சிறப் படைந்தான்.

இறுதி

சிவப்பிரகாசர் திருவண்ணாமலையில் தமக்காகக் கட்டப் பட்ட திருமடத்தில் எழுந்தருளியிருந்ததோடு, துறையூரி லும் தமக்காகக் கட்டப்பட்ட திருமடத்திற்கும் அடிக்கடி சென்று தங்கியிருந்தார். இவ்வாறு எல்லாம் வல்ல சித்தராக விளங்கிய இவர் ஒருமுறை சிவபதிப்பயணஞ் சென்று கொண்டிருந்தபோது திருப்பட்டீச்சுரம் என்னும் இடத்தில் சிவலிங்கத்தோடு ஒன்றுனர்

இவர் இயற்றிய நூல்கள்

1. திருக்கழுக்குன்ற மாலை
2. அத்துவிதவெண்பா
3. கணபாஷித ரத்தினமாலை
4. சதகத்திரயம்
5. அநுபவசட்ஸ்தலம்
6. திருவாலந்துறைச்சிந்து

முதலியன, இவரால் இயற்றப்பெற்ற நூல்களாம்.

---

## ரு. துறைசை அம்பலவாண தேசிகர்

### பிறப்பு வளர்ப்பு முதலியன

இவருடைய காலம் பிறப்பிடம் தாய் தந்தையர் இருப்பிடம் முதலியவைகளைக் குறித்து யாதும் விளக்கமாகவில்லை. இவர் திருவாவடுதுறை யாதீனத்திலே நமசிவாய மூர்த்திக்கு அடுத்தபடியாக இரண்டாவது பட்டத்திலே அமர்ந்து சைவப் பேரரசு நடத்தினார். சைவ சித்தாந்த நூல்களை நன்கு கற்றுத்தேறியவர். சித்தர் சிவப்பிரகாசருக்குப் பின் நமசிவாயமூர்த்திகளிடம் சைவத்துறவு பெற்றார். சைவசமயத்தைப் பரப்புதற்காக இவர் அருந்தொண்டுகள் செய்தார். இவருடைய காலத்திலே ஆட்சியாளர்கள் வீரசைவத்தைப் போற்றுபவர்களாக இருந்தார்கள். அதனால் அச் சைவம் பலவிடங்களிலும் பரவத் தொடங்கியது. இவர் வீரசைவ சமயத்தைக் கண்டித்துப், "பாசண்ட நிராகரணம்" என்னும் நூல் ஒன்று எழுதி வெளிப்படுத்தினார்.

### மாணவர்கள்

இவர் கல்வி கேள்விகளில் மிகவும் வல்லவராகச் சிறந்து விளங்கியபடியால், இவருக்கு மாணவர்கள் பலர் தோன்றினர். அம்மாணவர்களுங் கல்வி கேள்விகளில் சிறந்தவர்களாகி நூலியற்றும் ஆற்றல் கைவரப் பெற்றவர்களாக விளங்கினார்கள். அவர்களுள் உலகுடைய நாயனார் என்பவரும் பெரிய பிள்ளை என்பவரும் தம் ஆசிரியர்மீது பாக்கள் பலவற்றைப்பாடிப் போற்றினார்கள்.

### இவர் இயற்றிய நூல்கள்

அம்பலவாண தேசிகர் இயற்றிய சைவநூல்கள் பல. அவற்றுட் சிலவற்றைக் கீழே குறிப்பிடுவோம்.

1. சித்தாந்த சிகாமணி
2. சித்தாந்தப்பஃறொடை
3. சிவாச்சிரமத்தெளிவு
4. சன்மார்க்க சித்தியார்
5. தசகாரியம்
6. உபாயநிட்டை
7. அனுபோகவெண்பா
8. பூப்பிள்ளையட்டவணை
9. பாசண்டநிராகரணம்
10. நமச்சிவாய மாலை
11. அதிசய மாலை
12. உபதேச வெண்பா
13. நிட்டை விளக்கம்

## கா. அகோரமுனிவர்

தோற்றமுங் கல்வியும்

அகோரமுனிவருடைய இயற்பெயர், குடிப்பிறப்பு, ஊர் முதலியன அறியப்படவில்லை. இவர் கமலை ஞானப் பிரகாசரது வழிமுறையில் சைவத்துறவு பெற்றவர். தமிழி லும் வடமொழியிலும் வல்லவர். வடமொழியைத் தில்லை மூவாயிரவர்களில் ஒருவராக விளங்கிய திருமாளிகைத் தேவர் என்பவரிடம் கற்றார். தமிழ்மொழியைத் திருவாரூர் வன்மீகநாத தேசிகரிடம் கற்றார். இந்த வன்மீகநாததேசிகர் இலக்கணவிளக்கம் வைத்தியநாததேசிகருடைய தந்தை யாராவர்.

சிவத்தொண்டு

அகோரமுனிவர், "அகோர சிவத்தியாகராச பண்டாரம்" என்னும் பெயருடன் திருவாரூர்த் திருக்

கோயில் கட்டளைகளில் ஒன்றை நடத்திக்கொண்டிருந்தார். கல்வியறிவில் மிக்க இவர் திருக்கோயிலுக்குப் பலவகையிலும் பொருள் தேடிவைத்தார். இலக்கணவிளக்கம் வைத்தியநாததேசிகருக்கு இவரே இலக்கண இலக்கியங்களைப் போதித்தவரென்றுஞ் செய்திகள் கூறுகின்றன.

இவர் செய்த நூல்கள்

திருக்கோயிலின் திருப்பணிகளைச் செய்துகொண்டும் பல பொதுநலச் செயல்களில் ஈடுபட்டுக்கொண்டும் இருந்த இவர் கலைவளர்ச்சியிலும கருத்துச் செலுத்தினார். வடமொழியிலிருந்து மொழிபெயர்த்து 1118-பாடல்களையுடையதாய்க் கும்பகோணப்புராணத்தைப் பாடி முடித்தார். காந்தத்தில் உள்ள உருத்திரசங்கிதை பதினலாவது காண்டத்திலுள்ளவாறு திருக்கானப்பேர்ப்புராணத்தை மொழிபெயர்த்துப் பாடினார்.. இப்புராணம் 650-பாடல்களையுடையது. மற்றும் இவர் வேதாரணிய புராணமும் பாடினார். இப்புராணம் மற்றிருபுராணங்களிலும் பெரியது. எழுபத்தேழு சருக்கங்களையும் 3243-பாடல்களையும் உடையது. மற்றும் சிறு நூல்கள் பலவற்றை (அந்தாதி, கலம்பகம் முதலியன.) இவர் இயற்றினார். ஆயினும் அந்நூல்கள் [illegible]

## எ. வென்றிமாலைக்கவிராயர்

### தோற்றம்

திருநெல்வேலி மாவட்டத்திலே சிறந்து விளங்குந் திருச்செந்தூர் முருகக்கடவுளுடைய இரண்டாவது படை வீடாகும். இவ்வூர், பெருமைகள் பல பொருந்தப்பெற்ற தாகும். ஏறக்குறைய முந்நூறுயாண்டுகட்கு முன்னர் இவ்வூரிலே அந்தணர் குலத்திலே வென்றிமாலை தோன்றினர்.

### மடைத்தொழில்

வென்றிமாலை பிள்ளைப்பருவத்தில் கல்வியை ஒழுங்காகக் கற்கவில்லை. தம் மனம்போனவாறு திரிந்து அலைந்தார். பிறகு செந்திலாண்டவன் திருக்கோயிலில் மடைத் தொழிலைச் செய்யத்தொடங்கினர். ஒருநாள் காலா காலத்தில் வேலையைச் செய்துமுடிக்கவில்லை. படைப்புச் சோறு முடிவதற்குக் காலமாகவே, பூசை நடைபெறவேண்டிய காலத்தில் நடைபெறவில்லை. கோயிலதிகாரிகள் கடுஞ் சினமடைந்தனர். வென்றிமாலை இதற்கு முன்னரும் பன்முறை இவ்வாறு செய்திருந்தபடியால் இப்பொழுது தக்காங்கு ஒறுக்கத்தொடங்கினர். கசையடிகள் பல வென்றிமாலைக்குக் கொடுக்கப்பட்டன. கசையடிபெற்ற வென்றிமாலை கன்றிய மனத்தினராய் உளம் நொந்தார். 'நான் கடலிலே வீழ்ந்துமாய்ந்து போகிறேன்' என்று முடிவு செய்தார். முருகக்கடவுள்மீது பாரத்தைப்போட்டு விட்டுக் கடலிலே விழுந்துவிட்டார்.

### முருகன் திருவருள்

தமக்கு உணவு சமைத்துப் படைத்துக்கொண்டிருந்த அடியவன் கடலில் அமிழ்ந்து மாண்டுபோகுமாறு அறு முகப்பெருமான் விட்டுவிடவில்லை. வென்றிமாலையைக்

கடலலைகளின் வழியே கரையேற்றினர். "அந்தோ நாம் இறந்துபோக விரும்பியும் முடியவில்லையே," என்று உளம் வருந்தி ஓரிடத்தில் வென்றிமாலை படுத்திருந்தார். முருகக் கடவுள் வென்றிமாலையின் கனவில் தோன்றினர். "அன்பனே! உனக்குக் கல்வியறிவு சிறந்தோங்கவும் செய்யுள் பாடுந்திறமை வளர்ந்தோங்கவும் நாம் அருள்புரிந்தோம்," என்று கூறி மறைந்தருளினர். அந்நாள் முதல் வென்றி மாலை அருட்பாவாணராய்ப் பாமழை பொழியத் தொடங் கினர்.

செந்தூர்ப்புராணம்

வென்றிமாலை பாப்பாடுந் திறனடைந்து விளங்கு தலைக் கண்ட ஊரினர் அவரிடம் நன்மதிப்புக்கொண்டு "வென்றிமாலைக் கவிராயர்" என அழைக்கலாயினர். வென்றிமாலைக் கவிராயர் முருகப்பெருமான்மீது இனிய பாக்கள் பலவற்றைப் பாடிக்கொண்டு நெடுங்காலம் வாழ்ந் திருந்தார். திருச்செந்தூர்ப்புராணம் முதலிய நூல்கள் பல இவரால் இயற்றப்பெற்று விளங்குகின்றன.

## அ. மாசிலாமணி தேசிகர்

தோற்றம்

மாசிலாமணி தேசிகர் சோழவள நாட்டிலே திருவெண் காடு என்னும் சிவப்பதியிலே சைவ வேளாளர் குலத்திலே தோன்றியருளினர். இவருடைய தந்தையார் சிவபெருமா னிடத்திலே பேரன்பு மிக்கவர். திருவாவடு துறையில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளிய மாசிலாமணி யீசரிடத்திலே மாசிலாப் பேரன்பு பூண்டவர். திருவெண் காட்டினராகிய இவர் அடிக்கடி திருவாவடுதுறை போந்து, நன்மகப் பேற்றை நாடி ஆவடு தண்துறையுறையும் அமரர்

கோவைப் போற்றிக் கொண்டிருந்தார். அக்கடவுளருளால் பிறந்தமையின் மாசிலாமணியெனப் பெயரிட்டார்.

கல்வி

மாசிலாமணி ஐந்தாம் அகவையில் பள்ளியில் அமர்த்தப் பெற்றார். தெய்வத்திருவருளால் தோன்றிய இவர் மிகு இளம்பருவத்தில் தானே தென்மொழியையேயன்றி வடமொழியையுங் கற்றுக்கொண்டார். தமிழ் இலக்கண இலக்கியப் பயிற்சியும் நன்கு பொருந்தியது. சமய நூற் பயிற்சியும் தேவாரம் திருவாசகம் முதலிய திருமுறைப் பயிற்சியும் சிறந்தோங்கியது.

ஆதீனத்தில் சேர்த்தல்

தாய் தந்தையராயினார் தம் மக்களை இல்லறக்கடலிலே தள்ளி அவர்களைத் தொல்லைக்குள்ளாக்குவது உலகத் தியற்கை. ஆனால், மாசிலாமணியின் தந்தையார் இதற்கு நேர்மாறாக இருந்தார். தம் மைந்தனை நல்வழிப்படுத்தல் வேண்டும் என்னும் எண்ணம் அவருக்கு மிக்கோங்கியது. அந்நாளில் ஆவடுதுறை ஆதீனத்தில் குருமகா சந்நிதானமாக எழுந்தருளியிருந்த ஞானதேசிகரிடத்திலே அடைக்கலமாக ஒப்புவித்தார். ஞானதேசிகர் மாசிலாமணிக்கு இருவகைத் தீக்கையும் ஈந்து நல்லாடையாகக் கல்லாடையும் நல்கி, மாசிலாமணி என்னும் பெயரையே தீக்கைப் பெயராகவும் அருளினார்.

பிள்ளைத்தமிழ் பாடல்

மாசிலாமணியார், சீகாழிப்பதியின்கண் தோன்றியருளிய திருஞானசம்பந்தப் பெருமான்மீது பேரன்புடையவர். அப்பெருமானது இளம்பருவத் திருவிளையாடல்களை உளங்கொண்டு பிள்ளைத்தமிழ் ஒன்று பாடிப்பரவினார்.

சின்னப்பட்டம் பெறுதல்

அந்நாளில் ஞானதேசிகர் அடியார் குழாத்துடன் சிவப்பதி பலவற்றிற்குப் பயணஞ் சென்றார். திருக்குற்றாலத்தில் தங்கியிருந்தபோது சின்னப்பட்டம் முத்தம்பலவாண தேசிகர் இறைவன் திருவடி நீழலையடைந்தார். பிறகு ஞானாசிரியர் சுசீந்திரத்திற்குச் சென்றார். அங்கு நன்னாள் ஒன்றிலே மாசிலாமணியாருக்கு ஆசாரிய முழுக்குச் செய்து சின்னப்பட்டத்தில் அமர்த்தினார். சின்னப்பட்டம் பெற்ற மாசிலாமணியாரைச் சுசீந்திரத்திலேயே இருக்கச் செய்து விட்டு ஞானதேசிகர் திருவாவடுதுறையை அடைந்தார்.

சாமிநாத தேசிகர்

மாசிலாமணியார் சுசீந்திரத்தில் எழுந்தருளியிருந்த போது இளைஞராக இருந்த சாமிநாத தேசிகர் கல்வி கற்க வேண்டும் என்னும் எண்ணத்துடனும் தீக்கைகள் பெற வேண்டும் என்னும் நோக்கத்துடனும் சுசீந்திரத்தை யடைந்து மாசிலாமணித் தேசிகரைக் கண்டு வணங்கிப் போற்றினார். தமது எண்ணத்தை அவருக்குப் புலப்படுத்தினார். மாசிலாமணி தேசிகர் சாமிநாதருக்கு இருவகைத் தீக்கைகளும் கொடுத்தருளினார். அறிவு நூல்களையும் கற்பித்தார். அக்காலத்தில் அங்கு வந்த மயிலேறும் பெருமாள் பிள்ளை சாமிநாத தேசிகரை மாசிலாமணி தேசிகரின் உடன்பாடு பெற்று அழைத்துச் சென்று கல்வியில் வல்லவராக்கினார்.

எட்டாம் பட்டம்

திருவாவடுதுறையில் எழுந்தருளியிருந்த ஞான தேசிகர் சிவப்பதி வழிபாடுகள் செய்து கொண்டு சுசீந்திரத்தை யடைந்து எழுந்தருளியிருந்தார். அப்பொழுது

அவர் திருவடி நீழலெய்தினர். மாசிலாமணி தேசிகர் துறைசையை அடைந்துஎட்டாம் பட்டத்தில் எழுந்தருளி அடியார்கட்குத் திருவருள் புரிந்துகொண்டிருந்தார்.

தஞ்சையரசர்

மாசிலாமணி தேசிகர் திருவாவடு துறையிலே எழுந்தருளியிருக்கும் போது தஞ்சை மன்னர் தேசிகரின் அருளை ஆய்ந்தறிய எண்ணினர். ஒரு நாள் இரவிலே பஞ்சமக்கோலம் பூண்டு திருவாவடுதுறையை அடைந்தார். மடத்தின் புறத்தே சேய்மையில் நின்று கொண்டு, "சாமி! அடியேன் பசியால் வருந்துகின்றேன்" என்று பேரொலி யிட்டார். அப்பொழுது ஒடுக்கத்திலே அறிதுயிலமர்ந் திருந்த மாசிலாமணி தேசிகர், ஓலமிடுங் குரலைக் கேட் டார். மடைப்பள்ளியிற் புகுந்து ஓர் ஏனத்திலே சோறுங் கறியும் மிகுதியாக எடுத்து வந்து கொடுத்து, "உண்டு பசி யாறுக," என்று திருவாய்மலர்ந்தருளிச் சென்றார்.

இறுதி

மாசிலாமணி தேசிகர் வியக்கத்தக்க அரிய செயல் கள் பலவற்றை நிகழ்த்திக் கொண்டிருந்து பின் இறைவன் திருவடி நீழலையடைந்தார். திருஞானசம்பந்தர் பிள்ளைத் தமிழைத் தவிர வேறு நூல்கள் இவர் செய்ததாகத் தெரியவில்லை.

---

## ൧൨. தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர்

### தோற்றம்

தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ள காட்டு மன்னார் குடியில், கார்காத்த வேளாளர் குலத்தில் இற்றைக்கு ஏறக் குறைய நூற்று எழுபது யாண்டுகட்கு முன் தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர் பிறந்தார். தாய் தந்தையர் பெயர் ஆண்டு முதலியன புலனாகவில்லை.

### கல்விப் பயிற்சி

இளமையிற் பள்ளிக் கல்வியைக் கற்றுத் தேறிய பின் மேலும் இலக்கண இலக்கியங்களையும் நன்கு கற்றுப் புலமை பெறவேண்டுமென்று எண்ணினார். அந்நாளில் திருவாவடு துறையாதீனத்தில் சிவஞானமுனிவர் புலமைக்கடலாய் விளங்கியிருத்தலை யுணர்ந்தார். சிவஞான போதத்திற்கு விரிவுரை செய்தருளிய அப்பேராசிரியரிடம் இலக்கண இலக்கியங்களையும் சைவசித்தாந்த நூல்களையும் கற்றுத் தேறவேண்டுமென்று முடிவு செய்தார். அப்பெரியாரிடஞ் சென்று தமது வேணவாவை விண்ணப்பித்துக் கொண்டார். அப்பெரியார் இவருடைய நுண்ணுணர்வை எளிதி லுணர்ந்து கொண்டு தம் மாணவர் குழுவினுள் ஒருவராகச் சேர்த்துக் கல்வி கற்பித்தார். பல ஆண்டுகள் ஒழுங்காகக் கல்வி பயின்று ஆசிரியருக்கேற்ற மாணவராக விளங்கினார்.

### தொட்டிக்கலை

தொண்டை நாட்டில் தொட்டிக்கலை என்னும் ஊரில் சிவஞான முனிவர் பெரும்பாலும் எழுந்தருளியிருத்தல் வழக்கம். சுப்பிரமணிய முனிவரும் ஆசிரியரைப் பின் பற்றித் தொட்டிக்கலையிலும் திருவாவடுதுறையிலு மாக வதிந்திருந்தார். இவர் தம் ஆசிரியரிடத்தில் பேரன்புடையவர்.

துறவு

திருவாவடுதுறையாதீனத்தில பதினமூன்றாம பட்டத்தில் எழுந்தருளியிருந்த அம்பலவாண தேசிகரிடத்திலே சைவத்துறவும் சிவதீக்கையும் மெய்யறிவுரையும் பெற்றார். ஆதீனத்தில் அறிஞர்களோடும் பெரியோர்களோடும் தங்கியிருந்தமையின் நாளடைவில் இவருடைய புலமை நிலைமையும் அறிவுவளமையும் தலைமை நிலையை அடைந்தன. இவர் தம் ஆசிரியர்களிடத்திலே பேரன்பு செலுத்தினார். நாடோறும் பல செய்யுட்கள் செய்வது இவருக்கு வழக்கம். இவ்வழக்கத்தினால் இவருக்கு மதுரமாகவும் விரைவாகவும் செய்யுள் செய்யும் திறமை உண்டாயிற்று.

மதுரகவி

இவருடைய செய்யுளின் இனிமையைக் கண்ட அறிஞர்கள் இவருக்கு மதுரகவி என்று சிறப்புப்பெயர் வழங்கினர். இவர் தொட்டிக்கலையில் நீண்ட காலந் தங்கியிருந்தபடியால் அவ்வூர்ப் பெயரும் இவர் பெயரோடு ஒட்டியது. ஆகவே இவருடைய பெயர் மதுரகவி சுப்பிரமணியத் தம்பிரான், தொட்டிக்கலைச் சுப்பிரமணியத் தம்பிரான் எனப் பலவாறாக வழங்கலாயின. நாளடைவில் தம்பிரான் போய் முனிவரானார்.

சமகாலப் புலவர்கள்

இலக்கணம் சிதம்பரநாத முனிவர், கச்சியப்ப முனிவர், இராமநாதபுரம் சோமசுந்தரம் பிள்ளை, காஞ்சிபுரம் சரவணப்பத்தர், சீகாழி வடுகநாத தேசிகர் முதலிய அறிஞர்கள் இவர்காலத்திருந்தவர்களாவர்.

இவரைப்போற்றிய செல்வர்கள்

தொட்டிக்கலைக் கேசவமுதலியார், வேதாசல முதலியார் என்னும் இருவர் சுப்பிரமணிய முனிவருடைய

கல்விச் சிறப்பை நன்குணர்ந்து பாராட்டிப் போற்றினர். மடம் ஒன்று அமைத்து அதில் இருக்குமாறு செய்து போற்றினார்கள். முனிவர் அச் செல்வர்களுடைய பெருந் தன்மையைத் தாம் பாடிய கலைசைக்கோவைக்கண் குறிப்பிக்கத் தொடங்கி "வேதாசலத்தின் புகழ்போல் விளங்குக வெண்சங்கமே," "தொட்டிக், கலைக்கேச வன்மெய்ப் புகழ் போல் விளங்குங் கதிர்ப்பிறையே," என்றும் பாராட்டிப் பாடியுள்ளார். சுப்பிரமணிய முனிவர் தங்கியிருந்த மடம் இப்போது "சாமியார் மடம்" என்னும் பெயரோடு வழங்கப் படுவதாகத் தெரிகிறது.

தனிப்பாடல்கள்

செய்யுள் செய்வதிற் சிறந்து விளங்கிய இவர் தனிப் பாடல்கள் பல செய்துள்ளார். அவை படிப்பார்க்கு இன்பம் பயக்கத்தக்கன. இவர் பாப்பாடுதலில் சிறந்து விளங்குதலையுணர்ந்த அம்பலவாண தேசிகர் ஒரு நாள், "நம்முடைய ஆசிரியராகிய திருச்சிற்றம்பல தேசிகர்மீது, 'குரு திருச்சிற் றம்பலவெங் கோ' என்பதை ஈற்றடியாக அமைத்து நேரிசை வெண்பா ஒன்று இயற்றுக," என்று கட்டளையிட்டார். இவர் உடனே,

[1]"முனிக்குமுனி யானை முனிந்தே பொதியின்
முனிக்குமுனி யாதளித்த மூர்த்தி—முனிக்குப்
பொருகளிறு நீரூட்டும் பொன்னித் துறைசைக்
குருதிருச்சிற் றம்பலவெங் கோ."

என்று பாடினார். இதனைக் கேட்ட அம்பலவாணதேசிகர் மகிழ்ந்தார். பாவின் பண்பையும் பொருள் நயத்தையும் வியந்து பாராட்டினார்.

1. முன் இக்கு முனியானை முனிந்து - முன்பு கரும்பு வில்லையுடைய காமனைச் சினந்து. முனி - வில். முனி - யானைக்கன்று. பொரு - போர் செய்கின்ற. பொன்னி - காவிரி. துறைசை - திருவாவடுதுறை.

ஆதீனத்து ஓதுவார்களில் குருசாமியோதுவார் என்னும் பெயருடையவர் ஒருவர் இருந்தார். அவர் இசை பாடுவதில் வல்லவர். அவருடைய இசை மிக இனிமையாக இருக்கும். சுப்பிரமணிய முனிவர் ஒரு நாள் அந்தக் குருசாமி யோதுவாருடைய இனிய இசையைக் கேட்டு மகிழ்ந்து,

[1]"ஒருசாமி வாழ்திருக் கோமுக்தி யூர்தனில் உற்பவித்து
வருசாமி எங்கள் வயித்திய லிங்கம் வலம்புரிந்து
தருசாமி முத்தமிழ்ச் சங்கீத சாமிநற் சாந்தகுணக்
குருசாமி தீங்குரல் எந்நாளுங் கோகிலம் கோகிலமே."

என்னுஞ் செய்யுளைப் பாடினார்.

வெறிவிலக்கல் துறையில் அம்பலவாண தேசிகர்மீது சில செய்யுட்கள் செய்ய வேண்டுமென்று சில அன்பர்கள் விரும்பினர். அப்பொழுது சுப்பிரமணிய முனிவர்,

[2]"இத்தை யனையவுரு வில்லான் விடுமலரே
வைத்தகரை யோதடுக்க மாட்டாதே—நித்தநித்தம்
அங்கமுகங் காத்துறைசை அம்பலவா ணன்புயத்தில்
செங்கழுநீர்த் தாரனையே தேடு."

[3]"இந்தவச மந்தவசந் தன்மலைதற் கேதுசெயும்
நொந்தவச முற்றாட்கே நோக்குங்கால்—பைந்தொடியாய்
ஆண்டகுருத் தென்றுறைசை அம்பலவா ணன்புயத்தில்
பூண்டநிறச் செங்கழுநீர்ப் பூ."

---

1. கோமுக்தியூர் - திருவாவடுதுறை. வயித்தியலிங்கம் - குருசாமியோதுவார் தந்தை. கோகிலம் - குயில்.

2. இத் தையல் நைய - இப்பெண் நலியுமாறு. உருவில்லான் - காமன். மலர்எவை - மலர்க்கணையை. தகர் - ஆடு. ஐயோ, தடுக்கமாட்டாது. அம் கமுகம் கா துறைசை - அழகிய பாக்குச் சோலை சூழ்ந்த திருவாவடுதுறை. அனையே - தாயே.

3. இந்த அசம்-இந்த ஆடு. வசந்தன்-காமன். மலைதற்கு-போர் செய்வதற்கு. அவசம் - மயக்கம்.

என்னுஞ் செய்யுட்கள் இரண்டை இயற்றினார். சென்னைச் செல்வர்கள் சிலரும் சுப்பிரமணிய முனிவரும் ஒரு நாள் சென்னையில் உள்ள திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயிலுக்குச் சென்றனர். சென்னைச் செல்வரில் ஒருவர் பார்த்தசாரதி பெருமாள்மீது செய்யுள் ஒன்று இயற்ற வேண்டும் என்று வேண்டிக்கொண்டனர். சுப்பிரமணிய முனிவர் அதற்கு இணங்கி,

[1]"திருவல்லிக் கேணி வடிவந் தனஞ்சொற்கட் சீர்ச்சிலம்ப
திருவல்லிக் கேணி யலருமுன் னேயருள் செய்யவெழுந்
திருவல்லிக் கேணிபஞ் சொல்லிற்கண் முத்தங்கள் சிந்துந்
திருவல்லிக் கேணி மருவிய சங்கத் திருக்கரனே!" [கண்டாய்

என்னும் பாங்கி கூற்றுச் செய்யுள் ஒன்றைப் பாடினார். பிறகு முனிவர் தமது இருப்பிடத்திற்குச் சென்றார். அங்கிருந்த அறிஞர்களிற் சிலர், "தாங்கள் திருமாலைப் பாடலாமா?" என்று கேட்டார்கள். உடனே இவர்,

ில் எழுந்தருளிய சிவபெருமான் மீதுதான் பாடினேன்" என்று கூறிவிட்டுச் "சங்கத் திருக் கரனே" என்பதற்கு நெற்றிக் கண்ணையுடைய சிவபெரு

1. திருவல்லிக்கேணி மருவிய சங்கத்திருக்கரனே - திருவல்லிக்கேணியில் எழுந்தருளிய சங்கேந்திய பெருமானே, திரு வல் இக்கு எணி-முறையே திருமகளையும் சூதாடுகருவியையும் கரும்பையும் மானையும் போன்ற, வடிவம் தனம் சொல் கண் - வடிவத்தையும் தனத்தையும் சொல்லையும் கண்ணையும் உடைய, சீர்சிலம்பு அதிர் உ வல்லிக்கு-சிறப்பமைந்த சிலம்புகள் முழங்கப் பெற்ற இந்தக் கொடிபோல்பவளாகிய தலைவிக்கு, எணி அலரும் முன்னே - கதிரவன் தோன்றுவதற்கு முன்னரே, அருள் செய்ய எழுந்திரு. வல்லிக்கேள் - விலங்கைப் போல் சூழ்ந்து வருத்தும் உறவினர்கள், நியம் சொல்லின்-பழிமொழிகளைக் கூறுவாராயின், கண்முத்தங்கள் சிந்தும் - கண்கள் முத்துக்களைப்போல நீரைச் சொரியும்.

மானே என்று பொருள் கூறி மற்றவைகட்கு முன் கூறிய வாறே உரைத்துத் தமது அறிவாற்றலைப் புலப்படுத்தினர். கேட்டவர்கள் மிக வியப்படைந்தனர்.

நூற்சிறப்பு

இவருடைய நூல்கள் கற்றவர்க்குக் கழிபேருவகை யளிப்பன. கலைசைச்சிலேடைவெண்பா, திருவாவடுதுறைக் கோவை முதலியன புலவர் தேர்விற்கு அடிக்கடி பாடநூல் களாக அமைகின்றன. கலைசைச் சிலேடை வெண்பாவின் இருபொருள் நயம், மிகுந்த மகிழ்ச்சியை அளிப்பது.

இவர் இயற்றிய நூல்கள்

1. திருவாவடுதுறைக்கோவை
2. திருக்கலைசைக்கோவை
3. திருக்கலைசைச் சிலேடை வெண்பா
4. திருக்கலைசைச் சிதம்பரேசர் சந்நிதிமுறை
5. திருக்கலைசைச் சிதம்பரேசர் வண்ணம்
6. திருக்கலைசைச் சிதம்பரேசர் பஞ்சரத்தினம்
7. திருக்கலைசைச் சிவகாமியம்மை பஞ்சரத்தினம்
8. திருக்கலைசைச் சிதம்பரேசர் பரணி
9. திருக்கலைசைச் சிதம்பரேசர் கட்டியம்
10. திருக்குற்றாலச் சித்திரசபைத் திருவிருத்தம்
11. பழநிக் குழந்தைவேலர் பஞ்சரத்தினமாலை
12. சுப்பிரமணியர் திருவிருத்தம்
13. திருத்தணிகைத் திருவிருத்தம்
14. வடதிருமுல்லைவாயிற் கொடியிடையம்மை பிள்ளைத் தமிழ்
15. ஆயனூர் முருகர் பிள்ளைத்தமிழ்
16. திருச்செந்தில் சந்தவிருத்தம்
17. ஆவிநன்குடிக் கைலாயநாதர் பதிற்றுப்பத்தந்தாதி
18. திருமாளிகைத்தேவர் திருவிருத்தங்கள்
19. திருச்சிற்றம்பலதேசிகர் சிந்து
20. திருச்சிற்றம்பலதேசிகர் சந்தவிருத்தம்

21. அம்பலவாணதேசிகர் பஞ்சரத்தினமாலை
22. அம்பலவாணதேசிகர் வண்ணம்
23. அம்பலவாணதேசிகர் ஆநந்தக்களிப்பு
24. சிவஞானமுனிவர் துதிவிருத்தங்கள்
25. சிவஞானமுனிவர் கீர்த்தனை

இவைகளையன்றி இன்னும் பல நூல்களை இவர் இயற்றியதாகத் தெரிகிறது. அந்நூல்களின் பெயர் தெரியவில்லை. திருவாவடுதுறைக் கோவை, கலைசைக் கோவை முதலிய சில நூல்களை, உ. வே. சாமிநாதையர் பதிப்பித்து வெளியிட்டிருக்கிறார். கலைசைச்சிலேடை வெண்பாவைப் பலர் அச்சிட்டு வெளியிட்டிருக்கின்றனர்.

## க0. பொன்னெட்டிமாலைச் சர்க்கரைப் புலவர்

தோற்றம்

"சர்க்கரைப் புலவர்" என்னுஞ் சிறப்புப்பெயரோடு புலவர் வழிமுறை யொன்று சிறந்தோங்கி வருதலைத் தமிழ்ப்புலவர்கள் நன்கு அறிவார்கள். இவ் வழிமுறைக்கு முதலாவதாக அமைந்த புலவருடைய காரணப் பெயர் பொன்னெட்டிமாலைச் சர்க்கரைப் புலவர் என்பது. இப் பெயரைப் பெறுதற்கு முன்னர் இவருக்கு வழங்கிய இடுகுறிப்பெயர் யாதென்பது அறிய முடியவில்லை. ஆகவே முதலாவது சர்க்கரைப் புலவர் என்று நாம் இவரைக் குறிப்பிடுவோம். முதலாவது சர்க்கரைப் புலவராகிய இவர், சேது நாட்டிலே திருவுத்தரகோச மங்கைக்கு அண்மையிலுள்ள கடாரம் என்னும் ஊரிலே இருநூற்றைம்பது யாண்டுகட்கு முன்னே சைவவேளாண்குடியிலே தோன்றினார். இவருடைய தந்தையார் பெயர் சாந்தாப்பிள்ளை.

கல்வி கற்றல்

முதலாவது சர்க்கரைப் புலவர் நன்கு கல்வி கற்றுச் சிறப்படைய எண்ணினார். அந்நாளிலே திருவாவடுதுறை யாதீனத்திலே எட்டாவது பட்டத்திலே மாசிலாமணி தேசிகர் என்பவர் எழுந்தருளியிருந்தார். அப்பொழுது அங்கு சிவக்கொழுந்து தேசிகர் என்பவர் சின்னப் பட்டத்தில் அமர்ந்திருந்தார். அவர் பெரும்புலவர். சர்க்கரைப் புலவர் சிவக்கொழுந்து தேசிகரை ஆசிரியராகக்கொண்டு இலக்கண இலக்கிய நூல்களையும் சைவசித்தாந்த நூல்களையும் முறைமையாகப் பயின்று ஒப்பற்ற பெரும் புலவரானார். செய்யுள் பாடுந் திறமையுஞ் செம்மையாக அமைந்து திகழ்ந்தது. சுவைமிகப் பொலிய அவைமிக மகிழுமாறு சொற்பொழிவாற்றுந் திறனுஞ் சிறந்து விளங்கியது.

அரசர் அவைக்களப் புலவர்

கல்வியிற் பெருஞ் சிறப்படைந்த பிறகு பிறப்பிடமாகிய சேதுநாட்டிற்குத் திரும்பினார். அந்நாளில் சேதுநாட்டைத் திருமலை விசயரகுநாத சேதுபதி என்பவர் அரசாட்சி செய்து கொண்டிருந்தார். அவர் புலவரின் கல்விப் பெருக்கையுஞ் சிறப்பையும் வருகையையுங் கேள்விப்பட்டார். இத்தகைய புலவரை நாம் வரவேற்றுப் போற்றுதல் நமது பெருமைக்கு மேலும் பெருமையை அளிப்பதாம் என்று முடிவு செய்தார். பெருஞ்சிறப்புடன் வரவேற்றுப் போற்றினார். தம் அரசாங்கப் புலவராக அமர்த்திக்கொண்டார்.

சர்க்கரைப் புலவர்

புலவர் அரசருடைய அவையிலே அரிய பெரிய சொற்பொழிவுகள் பல செய்தார். இனிமையான செய்யுட்கள் பலவற்றைப் புதிதாகப் பாடி மன்னருக்கு மகிழ்ச்

சியை உண்டாக்கினார். சமயம் பார்த்து அரிய சூழ்ச்சித் திறன்கள் பலவற்றை மன்னருக்குரைத்தார். எல்லாவகை யானும் புலவர் தமக்கு மிக இனியராய் விளங்குதலைக் கண்ட அரசர், புலவர்க்குத் தக்க சிறப்பான பெயர் ஒன்று கொடுக்க வேண்டும்; அப்பெயரும் இனியதாக இருக்க வேண்டும் என்று எண்ணினார். "சர்க்கரைப் புலவர்" என்று சிறப்புப்பெயர் வழங்கினார். அப்பெயர் இருநூற் றைம்பது ஆண்டுகட்கு மேலாக அவருடைய வழிமுறை யினருக்குந் தொடர்ந்து வழங்குவதாயிற்று. சின்னாளில் மறைந்தொழியத்தக்க பெயர்களாயில்லாமல் நல்ல பெய ரைத் தேர்ந்தெடுத்து வழங்கியது மன்னரின் அறிவு நலத் தை நன்கு விளக்குகிறதன்றோ?

பொன்னெட்டிமாலை

சர்க்கரைப்புலவர் இச்சிறப்புப் பெயரைப் பெற்றதும் தமது இடுகுறிப்பெயரை இழந்தார். சர்க்கரை என்ப தற்கு முன்னர் பொன்னெட்டிமாலை என்னும் சொல்வந்து ஒட்டிக்கொள்வதற்கு வேறோர் செயல் காரணமாக விளங் கியது. சர்க்கரைப் புலவர் திருமலை விசயரகுநாத சேது பதியின் அவைக்களத்திலே கம்பராமாயணச் சொற்பொழி வைத் தொடர்ந்து நடத்தினார். கடல்தாவு படலச் சொற் பொழிவு நடந்துகொண்டிருந்தது. அனுமார் கடலைத் தாண்டியதைக் குறித்து விரிவாகப் பேசிக்கொண்டிருந் தார். அவையினர் அதனைக் கேட்டு மகிழ்ச்சிக் கடலுள் திளைத்திருந்தார்கள். வியப்புற்றுக் கேட்டுக்கொண்டி ருந்த வேந்தர் புலவரைப் பார்த்து, "மிகப்பெரிய கடலை அனுமார் எப்படித் தாண்டினார்?" என்று கேட்டார். சொற்பொழிவிலேயே புலன் முழுமையையுஞ் செலுத்தி யிருந்த புலவர்க்குப் பரபரப்பும் உவகையும் களிப்பும் வெறியும் மிகுதியாயின. அவர் தம்மை மறந்தார். "இப்

படித்தான் தாண்டினார்" என்று கூறி உட்கார்ந்தபடியே மேலெழுந்துயர்ந்தார். பாய்ந்து சென்று அனுமார் சென்ற வகையைக் காட்டினார். மேல்விதானமாகக் கட்டியிருந்த நெட்டிமாலை யறுந்து புலவர் கழுத்தில் மாலையாக விழுந்தது. அவர் அரசு கட்டிலுக்கு அண்மையில் விழுந்தார். இந்நிகழ்ச்சி அங்கிருந்த அவையினருக்கும் அரசருக்கும் பெருமகிழ்ச்சியை அளித்தது. அரசர் விழுந்து விழுந்து நகைத்தார். பொன்னால் நெட்டிமாலை செய்து புலவருக்கு அணிந்து மகிழ்ந்தார். முற்றூட்டாக உழக்குடி என்னும் ஊரினைக் கொடுத்தார். தந்தப்பல்லக்கு வெள்ளிக் கட்டியத்தடி முதலியவைகளையும் கொடுத்தார். வேறு நன் கொடைகளும் வழங்கினார். "இராமாயணப் பிரசங்கம் பொன்னெட்டிமாலைச் சர்க்கரைப்புலவர்" என்ற பெயரும்

*நீணாள் வாழ்ந்தவர்*

இப்புலவர் நீண்டகாலம் வாழ்ந்திருந்தார். திருமலை ரகுநாத சேதுபதி காலத்தில் மட்டுமன்றி, கிழவன் இரகுநாத சேதுபதி, விசயரகுநாத சேதுபதி ஆகியவர்களுடைய காலத்திலும் இவர் அரசாங்கப் புலவராக அமர்ந்திருந்தார். இவர் திருப்புல்லாணி இராமசாமி கோயிலில் இராமாயணச் சொற்பொழிவு செய்தார். அதனைக் கேட்டுவந்த இரகுநாத சேதுபதியின் உடன்பிறந்தவராகிய முத்துவயிரவநாத தேவர், "கோடகுடி, கொந்தலான்வயல்" என்னும் இரண்டு சிற்றூர்களை இப்புலவர்க்கு நன்கொடையாக வழங்கினார்.

*சவ்வாதுப் புலவர்*

ஒருநாள் சர்க்கரைப் புலவர் இனிய பாக்கள் பலவற்றைப் பாடினார். சேதுமன்னர் சர்க்கரைப் புலவரின் பாடல்களைக் கேட்டு வியந்து அவரைப் புகழ்ந்து பலவாறு

பாராட்டினார். அப்பொழுது அங்கே சவ்வாதுப் புலவர் என்பவரும் இருந்தார். சர்க்கரைப் புலவரை மன்னர் வியந்து பாராட்டியது சவ்வாதுப் புலவருக்குப் பொறுக்க வில்லை. அவர் பேசத் தொடங்கினார். சர்க்கரையின் இனிப்புத் தொண்டைமட்டுந்தான். சவ்வாதின் மணமோ வெகு தொலை. அஃதாவது கண்ட கண்ட இடங்களெல் லாம் பரவும் என்று சொல்ல எண்ணினார். "சர்க்கரை தொண்டைமட்டும், சவ்வாது கண்டமட்டும்" என்று மிடுக்காகவும் வேடிக்கையாகவும் கூறினார். இவர் சொல்லி வாய் மூடுவதற்கு முன்னரே சர்க்கரைப் புலவர், தொண் டையும் கண்டமும் ஒன்றே என்னும் பொருளை உள் ளமைத்துக்கொண்டு, "அதுவும் அந்தமட்டுந்தானே" என்று சொன்னார். அவையினரும் அரசரும் இவருடைய சொற்றிறத்தை வியந்து பாராட்டினார்கள்.

அந்தணர் ஆணவத்தை அடக்குதல்

ஒருநாள் புலவர் கோட்டைப்பட்டினத்தில் இருந்து கோடகுடி என்னும் ஊருக்கு வந்தார். அங்கிருந்து தம் திருக்கூட்டத்தோடு சிறுகம்பையூருக்குச் செல்ல எண்ணி னார். சிவிகையிலேறிச் செய்யானம் என்னும் ஊரை யடைந்தார். அவ்வூரின் அந்தணர் தெருவழியே சென்றார். புலவர் சிவிகையிலேறிச் செல்வது அந்தணர்களிற் சிலருக் குப் பிடிக்கவில்லை. ஒருவர் தமது மந்திர வலிமையால் புலவர் கூட்டம் நடக்க முடியாதவாறு தடைப்படுத்தி விட்டார். புலவர் இச் செய்தியை உணர்ந்தார். தமது வழிபடு கடவுளை மனதில் எண்ணி,

> சத்ய ரகுராம தாசனின்சீர் கொண்டாடும்
> வித்துவான் உண்மை வெளியாகச்—சுற்றுமனைச்
> செய்யானப் பார்ப்பான் சிவிகைதடுத் தான்சிவனேர்
> ஐயாறப் புத்தி அருள்.

என்னுஞ் செய்யுளொன்றைப் பாடினார். அந்தணர் உள்ளத்தில் மயக்கம் கண்டுவிட்டது. அவர்கள் செய்வதொன்றும் அறியாமல் திகைத்து நின்றார்கள். அவர்களுக்கு அச்சம் உண்டாகிவிட்டது. புலவரைப் போற்றித் தமது குற்றத்தைப் பொறுக்க வேண்டும் என்று வேண்டிக் கொண்டார்கள். அதன்பின் புலவர் தமது வழியே சென்றார். அந்தணர் அறிவும் ஒழுங்காகியது.

இவர் காலத்திய புலவர்கள்

அழகிய சிற்றம்பலக் கவிராயர், சவ்வாதுப் புலவர், படிக்காசுப் புலவர், அமுதகவிராயர் முதலியோர் சர்க்கரைப் புலவர் காலத்தில் இருந்த புலவர்களாவர்.

இவர் இயற்றிய நூல்கள்

முதலாவது சர்க்கரைப் புலவராகிய இவர் தம் காலத்திய சேது மன்னர்கள்மேல் இனிய செய்யுட்கள் பலவற்றைப் பாடியதோடு திருச்செந்தூர் முருகக் கடவுள்மீது கோவையொன்றும் பாடினார். வேதாந்த சூடாமணி என்னும் நூலுக்கு உரையொன்றும் இப்புலவர் பெருமானாற் செய்யப்பட்டது.

"சீர்கொண்டு வாழ்சந்த ஞசல வேலர்செந் தூர்ப்பொழிலில்
கார்கொண்டு வட்ட மதிமேற் பிறையும் கதிர்த்தனுசும்
ஏர்கொண்ட மீனமும் கொண்டுகும் பங்கொண் டிலங்குசிங்க
நேர்கொண்டு கர்க்கட கங்கொண்டிங் கோர்வல்லி நின்றதுவே"

என்பது திருச்செந்திற் கோவைப் பாடல். இப்புலவர் நீண்ட காலம் வாழ்ந்திருந்து விண்

## ககு. இரண்டாவது சர்க்கரைப் புலவர்

### பிறப்பும் கல்வியும்

இவர் பொன்னெட்டிமாலைச் சர்க்கரைப் புலவரின் மைந்தரான சீனிப் புலவருக்கு மகனாகத் தோன்றினார். தந்தையினிடத்திலும் பாட்டனாரிடத்திலும் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுத் தேறினார். அகவை இருபது நிரம்புவதற்கு முன்னரே கல்வியில் தேர்ச்சியடைந்து நால்வகைச் செய்யுட்களையும் நன்கு பாடலானார்.

### புலமையுங் கொடையும்

இராமாயணம் முதலிய நூல்களைச் சொற்பொழிவு செய்வதிலும் செய்யுள்கள் பாடுவதிலும் இவரும் பொன்னெட்டிமாலைச் சர்க்கரைப் புலவரைப் போலவே சிறந்து விளங்கினார். இராமநாதபுரம் சமத்தானம் இவர் காலத்தில் பல சமத்தானங்களாகப் பிரிந்தபடியால் இவர் இராமநாதபுரச் சமத்தானப் புலவராக இருந்ததோடு சிவகங்கை சமத்தானப் புலவராகவும் விளங்கினார்.

### தேளியூர்

சிவகங்கைச் சமத்தானாதிபதியாக இருந்த சசிவர்ண பெரிய வுடையாத் தேவர் என்பவர் முன்னிலையில் இவர் கம்பராமாயணச் சொற்பொழிவு செய்தார். இதன் பொருட்டு மேற்படி தேவர் தேளியூர் என்னும் சிற்றூரை முற்றாட்டாகக் கொடுத்தார். அந்த ஊர் குறைந்த விளை வுடையதாகவும் ஏரியில்லாததாகவும் இருந்தது. அதனால் வருத்தமடைந்த இவர் சமத்தானத்து அமைச்சர் தாண்டவராய பிள்ளையைக் கண்டு,

> “நஞ்சைபுஞ்சை விளைவுநிலம் நாலுபத்துக்
> கலந்தேளி நாலெட் டாண்டாய்ப்,
> பஞ்சைவிளை வாகுமதில் கண்வாயு
> மில்லையதிற் பாதி தந்தாய்;

அஞ்சபுல வோர்நாங்கள் அடுத்தசனம்
ஐம்பதுபேர் ஆற்றா தையா,
தஞ்சமென்றே ரைப்புரக்கு முல்லைத்தாண்
டவராயத் தரும வானே.

என்னுஞ் செய்யுளைப் பாடினார். தாண்டவராய பிள்ளை இதனைக் கண்டார். தம் அரசராகிய சசிவர்ண பெரிய வுடையாத் தேவரின் மகனை முத்து வடுகநாத தேவருக்கு இதனைத் தெரியப்படுத்தினார். தேளியூருக்குப் பதிலாக ஆச்சான்குளம் என்னும் ஊரைக் கொடுக்குமாறு செய்தார். அதைக் குறித்துப் புலவருக்கு எழுத்து மூலமாக வுந் தெரியப்படுத்தினார். இதனையறிந்த சர்க்கரைப் புலவர்,

"சூழியண்ணி தம்பிமுன்னே தோன்றியமால்
சிவகங்கைத் துரைத்த னந்தான்,
ஊழியுல குள்ளவரை தானரசு
செய்பெரிய வுடையாத் தேவர்,
தேளியூர்க் கேபதிலாச் சான்குளம்வி க்
ரமவருடன் திருநி ரூபம்,
ஆழிதனி லமிர்தமெடுத் தேபுலவர்க்
கீந்ததென அருள்செய் தானே."

என்னுஞ் செய்யுளால் தமது நன்றியறிதலைத் தெரியப் படுத்திக்கொண்டார். மற்றுமோர்முறை சசிவர்ணப் பெரிய வுடையாத் தேவர் முன்பு தாம் சொற்பொழிவு செய்ததற்கு நன்கொடையாக மருதன்குடி என்னுஞ் சிற்றாரில் நாற்பது செய்யும், காடாவயல் என்னுஞ் சிற்றாரில் முப்பது செய்யும் பெற்றனர்.

மயிலுங் கோழியும்

ஒருமுறை அரசர்குளம் வணங்காமுடியார் என்பவர் முன்னிலையில் சர்க்கரைப் புலவர் இராமாயணச் சொற்பொழிவு செய்தார். அவ்வவையில் வெண்பாப்புலிப்

புலவர் முதலிய புலவர்களும் பல செல்வர்களும் குழுமி யிருந்தனர். சொற்பொழிவு மிகச் சிறந்ததாய்க் கேட்டார்ப் பிணிக்குந் தகையதாய் இனிமை யமைந்திருந்தது. வணங்காமுடியாரும் அவையோரும் புலவருடைய சொற் பொழிவைப் பெரிதும் பாராட்டினர். அந்த அவையிலே வடுகநாத தேசிகர் என்னும் பெரும்புலவர் ஒருவரும் வந் திருந்தார். சிறந்த புலவர் என்று தக்கோரால் நன்கு மதிக்கப் பெற்றவர் வடுகநாத தேசிகர். சீகாழிப்பதியின ராகிய அவர் நாவன்மையும் நன்கு அமையப் பெற்றவர். அப்புலவர் சும்மா இராமல், "இவ்வாறு யாமுஞ் சொற் பொழிவு செய்ய வல்லோம்; இவ்வாறு சொற்பொழிவு செய்தல் அருமையான செயலன்று," என்று கூறினர். கூறியதோடு இருந்தார் அல்லர். எழுந்து சர்க்கரைப் புலவ ரைப்போல் சொற்பொழிவு செய்துகாட்டத் தொடங்கி விட்டார். வடுகநாத தேசிகருடைய சொற்பொழிவு சர்க் கரைப் புலவருடைய சொற்பொழிவைப்போல் இனிமை பயக்கவில்லை. அவையிலிருந்த வெண்பாப்புலிப் புலவர்,

"சர்க்கரைமஞ் ஞைக்கிணையாய்த் தாண்வடுக நாதனெனும்
குக்குடமுங் கூடநடங் கொண்டதோ—தொக்க
இணங்கார் முடியை இடறுகின்ற வெற்றி
வணங்கா முடிசபையில் வந்து."

என்னும் வெண்பா ஒன்றைப் பாடினர்.

இவர் காலத்திய புலவர்கள்

வெண்பாப்புலிப் புலவர், சீகாழி வடுகநாத தேசிகர் முதலியோர் இவர் காலத்திய புலவர்களாவர்.

இவருடைய மக்கள்

இவருக்குச் சாந்துப் புலவர், சீனிப் புலவர், உய்யவந் தாப் புலவர், முத்து முருகப் புலவர் என்னும் பெயர்களை யுடைய நான்கு மக்கள் இருந்தனர்.

)ய நூல்கள்

1. மண்டலக்கோட்டை வண்டுவனப்பெருமாள் ஊசல்
2. திருப்பத்தூர் வைரவ ரலங்காரம்
3. திருப்புனவாயிற் பள்ளு
4. காலசங்காரமூர்த்தி வெண்பா வண்ணம்
5. புதுக்கோட்டைத் தட்சிணாமூர்த்தி மும்மணிக்கோவை
6. நட்சத்திரமாலை
7. தாண்டவராயபிள்ளைமீது கோவை
8. புதுக்கோட்டைத் தொண்டைமான் வண்ணம்
9. வணங்காமுடியார் வண்ணம்
10. திருவாடானைச் சித்திரகவியலங்காரம்

முதலியன இவர் இயற்றிய நூல்களாம். தனிப்பாடல்கள் பல.

## கஉ. சாந்துப் புலவர்

*பிறப்புங் கல்வியும்*

சாந்துப் புலவர், இரண்டாவது சர்க்கரைப் புலவரின் மூத்த புதல்வராகத் தோன்றினார். தந்தையாரிடமே கல்வியை நன்கு கற்று இளம் பருவத்திலேயே பெரும்புலவராகிவிட்டார்.

*குட்டிநாக பந்தம்*

இரண்டாவது சர்க்கரைப் புலவர் காலத்தில், மருது பாண்டியன் என்பவர் பேரும் புகழும் பெற்றுச் சிறந்து விளங்கினார். சர்க்கரைப் புலவர் அந்த மருது பாண்டியனைக் காண எண்ணினார். அட்டநாக பந்தம் என்னும் ஓவியச் செய்யுள் ஒன்றை அந்தப் பாண்டியன்மீது இயற்றிப் பாம்புப் படமும் எழுதி முடித்து வைத்தார். பிறகு தாம் சிவபூசை செய்யச் சென்றார். அந்தச்சமயத்தில்

இளைஞராகிய குட்டிச் சாந்துப் புலவர் அட்டநாக பந்தம் எழுதப்பெற்ற தாளை எடுத்துப் பார்த்தார். அட்டநாக பந்தம் முதலிய ஓவியக்கவிகள் எழுதுவதில் அவரும் கெட்டிக்காரர். ஆகவே அந்த அட்டநாக பந்தத்தாளில் தாமும் ஒரு சிறிய அட்டநாக பந்தத்தை எழுதிவைத்து விட்டார். சாந்துப் புலவரின் தந்தையார் பிறகு தமது திருக்கூட்டத்துடன் மருது பாண்டியனிடத்திற்குப் புறப்பட்டார். அவர் அட்டநாக பந்தம் எழுதப்பெற்ற தாளை விரித்துப் பார்க்கவில்லை. ஆகவே அந்தச் சிறிய அட்டநாக பந்தத்தைப் பற்றி அவருக்கு ஒன்றுந்தெரியாது. இவருடைய வரவை மருதுபாண்டியன் உணர்ந்தார். எதிர்கொண்டு வரவேற்றுப் போற்றினார். மருது பாண்டியனுடைய அவைக்களத்தை யடைந்த புலவர் அட்டநாக பந்தச் செய்யுளைக் கூறிச் சொற்பொழிவு நிகழ்த்தினார். செய்யுள் புலவருக்கு நினைவில் இருந்தபடியால் அவர் தாளை விரித்துப் பார்க்கவில்லை. பாட்டைக் கூறிச் சொற்பொழிவை முடித்தபிறகு பாட்டெழுதிய தாளை யெடுத்து விரித்துப் பார்க்காமலே மருது பாண்டியனிடத்தில் கொடுத்து விட்டார். மருது பாண்டியன் அத்தாளைப் பிரித்துப் பார்த்தார். அதற்குள் பெரிய அட்டநாக பந்தம் ஒன்றும் சிறிய அட்டநாக பந்தம் ஒன்றும் இருக்கக் கண்டார். அவர் உடனே புலவரைப் பார்த்து, "கவிராசரே! தங்களுடைய அட்டநாக பந்தம் குட்டி போட்டிருக்கிறதே என்னை?" என்று உசாவினார். புலவர் தம்முடைய நுண்ணறிவால் ஒருவாறு ஊகித்துணர்ந்து கொண்டார். "குழந்தையைக் கேட்க வேண்டும்" என்று மறுமொழி கூறினார். இவ்வாறு பாவேந்தர் பகர்ந்ததைக் கேட்ட பூவேந்தர், "குழந்தையா? யாருடைய குழந்தை? அஃது எங்கே இருக்கிறது?" என்று கேட்டார்.

சாந்துப்புலவர் வருகை

சர்க்கரைப் புலவர், "நம்முடைய குழந்தைதான்" என்றார். மருதுபாண்டியர், "உங்களுடைய குழந்தையா? அக் குழந்தைப்புலவரை அழைத்துவரச் சொல்லுங்கள். நான் பார்க்க வேண்டும்," என்று கூறிச் சிவிகையையும் அனுப்பத் தொடங்கினார். இதனைக் கேட்ட புலவர், அரசர் பார்ப்பின், பார்வைக்குற்றம் (திருட்டி தோடம்) ஏற்படுமே என்று அஞ்சினார். தாம் ஊருக்குப் போய் அனுப்புவ தாகக் கூறினார். மருது பாண்டியரோ, "அஃதெல்லாம் முடியாது; இப்பொழுதே அழைத்தாக வேண்டும். அப்புல வரைப் பார்க்க வேண்டும் என்று எனக்கு மிகுந்த பற்றுண் டாகிவிட்டது," என்று விடாப்பிடியாக விளம்பினார். வேறு வழியில்லாமல் புலவர் சிவிகையைத் தம்முடைய ஊருக்கு அனுப்பினார். சிறிது நேரத்திற்குள் சாந்துப் புலவர் சிவிகையில் வந்து சேர்ந்தார். சிறுவராகிய சாந்துப் புல வரைக் கண்டு மருது பாண்டியன் மகிழ்ச்சியடைந்தார். பக்கத்தில் வரவழைத்துத் தழுவிக் கொண்டார். பிறகு அவரைப் பார்த்து, "இதில் குட்டி நாகபந்தம் வரைந்து பாட்டெழுதியவர் யாவர்?" என்று உசாவினார். சாந்துப் புலவர், "யான்தான் எழுதினேன்" என்று துடுக்காகப் பதிலுரைத்தார். "முன்னே முளைத்த காதினும் பின்னே முளைத்த கொம்பு வலிமையுடைத்து" என்று கூறி மருது பாண்டியன் மகிழ்ந்தார். பிறகு சர்க்கரைப் புலவரைப் பார்த்து, "புலவரே! இன்றுமுதல் குழந்தை என்னிடத் தில் இருக்கட்டும்; ஆகவேண்டியவைகளை நான் பார்த்துக் கொள்ளுகிறேன்," என்று கூறினார். இதனைக் கேட்டுச் சர்க்கரைப் புலவர் திடுக்கிட்டார். பிறகு மருது பாண்டி யனைப் பார்த்து, "அரசே! பையன் இலக்கண இலக்கியங்களை இன்னும் நன்றாகக் கற்றுணர்ந்திலன். அகவை பதினாறு

தான் விரும்புகின்றது. கல்விப்பயிற்சி நன்றாக முடிவு பெறட்டும்; அதன்பிறகு இவனைத் தங்களுடைய அவைக் களப் புலவனாக இருக்கச் செய்து விடுகிறேன்,'' என்று கூறினார். இதனைக் கேட்ட மருது பாண்டியன், "பையன் இப்பொழுதே பெரும்புலவர்தாம். இன்னும் பெரும் புலவராக்க வேண்டுமென்று விரும்பினால் தாங்களும் கூட வந்திருக்கலாம். இன்றேல் இங்குள்ள புலவர்களைக்கொண்டு கற்பிக்கச்செய்கின்றேன்,'' என்று கூறினார். இவ்வளவு தொலை இயம்பிய பிறகும் புலவரால் மறுக்க முடியவில்லை. சாந்துப் புலவரை மருது பாண்டியனிடம் விட்டு விட்டுத் தம்மூர் போய்ச் சேர்ந்தார்.

மேலுங்கல்விகற்றுச் சிறப்படைதல்

"அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும்'' என்னும் மொழி, சாந்துப் புலவரிடத்தில் உண்மையாகிவிட்டது. அன்றுமுதல் சாந்துப் புலவர் மருது பாண்டியனின் அரண் மனை வளர்ப்புப் புலவராகி விட்டார். மருது பாண்டியன் தன் அவையிலிருந்த சிறந்த புலவர்களைக்கொண்டு மேலும் பல நூல்களைக் கற்பிக்கச்செய்தார். சாந்துப் புலவர் மேலும் பல நூல்களைக் கற்று ஓவியச் செய்யுள்கள் இயற்று வதிலும் சொற்பொழிவுகள் ஆற்றுவதிலும் சிறந்து விளங் கினார். மேலும் மருதுபாண்டியனுக்கு அமைச்சரைப் போலிருந்து சூழ்ச்சித்திறங்கள் பலவற்றையுங் கூறினார்.

உடனிருந்த புலவர்கள்

சாந்துப்புலவர் மருதுபாண்டியனிடத்தில் இருந்த காலத்தில் சவ்வாதுப்புலவர், வெண்பாப்புலிப்புலவர், முத்துமாரியப்பேந்திரக்கவிஞர், வால சரசுவதி முத்து வேலுக்கவிராசர் முதலிய பல புலவர்கள் சாந்துப் புலவ ரோடிருந்தனர்.

பிளவை நோய்

மருது பாண்டியனுக்கு இராசபிளவை நோய் உண்டாகியது. எவ்வளவோ மருத்துவங்கள் செய்தும் அந்நோய் தீரவில்லை. அப்பொழுது முதியவர் ஒருவர் மருதுபாண்டியனிடம் வந்தார். அவர் மருதுபாண்டியனைப் பார்த்து, "முருகன் அடியார்கள் திருநீறளிப்பின் இந்நோய் அகலும். நாட்டுக்கோட்டைச் செட்டிப்பிள்ளைகள் முருகக்கடவுள் மீது பேரன்புடையவர்கள். அவ்வணிகர்களுக்குக் குல தெய்வமும் அறுமுகப் பரமன்தான். ஆகையால் அகப்படுகிற செட்டியார் ஒருவரைப் பிடித்துத் திருநீறு போடச் சொல்லுவது நல்லது," என்று கூறிவிட்டுச் சென்றார். அம் முதியவர் உரையை மருதுபாண்டியர் சிக்கெனப் பிடித்துக் கொண்டார். ஏவலர் சிலரைப் பார்த்து, "நீங்கள் தனவணிகர்கள் ஊரை நோக்கிச் செல்லுங்கள். முதலில் உங்களுடைய பார்வையில் அகப்படுகிற செட்டியாரை என்னிடத்திற்கு அழைத்துக்கொண்டு வாருங்கள்," என்று சொல்லி

ா.

காடப்ப செட்டியார்

மருதுபாண்டியன் கட்டளைப்படி ஏவலர் புறப்பட்டனர். அவர்கள் செட்டியாரைத் தேடிக்கொண்டு செல்லும் போது, காடப்ப செட்டியார் என்பவர் உப்பு மூட்டைகளை எருதுகளின்மேல் ஏற்றிக்கொண்டு வாணிகத்தின் பொருட்டு எதிரே வந்து கொண்டிருந்தார். ஏவலர்கள் உடனே அந்தச் செட்டியாரைக் கைப்பிடியாக அழைத்துக்கொண்டுபோய் மருதுபாண்டியன் முன்பு விட்டனர். செட்டியார் யாது தீமை நேரிடுமோ என்று அஞ்சியவராய் அரசர் முன்பு நின்றார்.

பிளவை நீங்குதல்

மருதுபாண்டியன் செட்டியாரைப் பார்த்து முகமன் மொழிகள் கூறினார். "உமது குலதெய்வமாகிய முருகக் கடவுளை வேண்டிக்கொண்டு இந்நோய் நீங்குமாறு எனக்குத் திருநீறு அளிப்பீராக," என்று கூறினார். செட்டியாருடைய அச்சம் சிறிது தீர்ந்தது. அவர், "எம்பெருமானே! மருதுபாண்டியனுக்குண்டாகியுள்ள இந்நோயைத் தீர்த்தருள் செய்து என்னையும் இவ்விடத்திலிருந்து வெளியேற்றியருளுதல்வேண்டும். குன்றையில் எழுந்தருளிய சண்முகநாதா! உன் திருவடிகளே எனக்கு இப்போது துணை" என்று எண்ணித் திருநீறு கொடுத்தார். பல நாட்களாக உறக்கமற்று வருந்திய மருதுபாண்டியன் அன்றிரவு நன்றாக அயர்ந்து தூங்கினார். அப்பொழுது இளந்துறவியொருவர் மயில்தோகையுடன் வந்து தன் பிளவையைப் பிதுக்கி அதன் ஆணியை எடுத்து ஒரு வாழையிலையில் வைத்துவிட்டுப் பிளவைவாயில் திருநீற்றைப் பூசியதாகக் கனவுகண்டு உடனே விழித்துக்கொண்டு பார்த்தார். கனவு நனவாக இருந்தது. மருதுபாண்டியன் மிகுந்த மகிழ்ச்சியடைந்தார். தம்முடைய ஆதரவில் அச்சத்துடன் இருந்த செட்டியாரை அழைத்தார். "செட்டியாரே! எனக்கு அப்பனும் அம்மையும் நீவிர்தாம். உம்முடைய அருளால் யான் உயிர் பிழைத்தேன். முருகன் உம்முடைய வேண்டுகோளுக்கிரங்கி எனக்கு அருள்புரிந்தான்," என்று கூறிச் செட்டியாரைப் புகழ்ந்து போற்றினார். தம்முடனேயே எப்போதுந் தங்கியிருக்குமாறு வேண்டிக்கொண்டார்.

குன்றையில் திருப்பணி

தமக்கு அருள்செய்த முருகன் குன்றக்குடி என்னும் மயில்மலைச் சண்முகநாதன் என்று செட்டியார் மூலமாக மருதுபாண்டியன் உணர்ந்தார். குன்றக்குடிக்கு வந்து

ஆறுமுகக் கடவுளைப் போற்றி வணங்கினார். குன்றைச் சூழ்ந்து காடாக இருத்தலைக் கண்டு வருந்தினார். காட்டைக் களைந்து சீர்திருத்தினார். கோயிலில் பல திருப்பணிகள் செய்தார். தென்னஞ் சோலைகள் வைத்து வளர்த்தார். மருதாபுரி என்னும் தடாகம் வெட்டினார். மற்றுங் கோயிலுக்குச் செய்யவேண்டிய திருப்பணிகளை யெல்லாஞ் செய்துகொண்டு அவ்விடமே தங்கியிருந்தார்.

மயூரகிரிக் கோவை

தமக்குப் பேரருள் செய்த முருகன்மீது கோவை ஒன்று இயற்றவேண்டுமென்று சாந்துப் புலவரிடந் தெரிவித்தார். உடனே சாந்துப் புலவர் முருகக்கடவுள்மீது கோவையைப் பாடி அரசர் தலைமையில் கோயிலில் அரங்கேற்றஞ் செய்தார். அக்கோவையில் மருதுபாண்டியன் திருப்பணிகளைச் சிறப்பாக எடுத்துக் கூறினார்.

"செந்திரு மார்பன் மருது நராதிபன் செப்புகென்ன
மைந்தர்செல் வத்தொடு மாஞானம் வேண்டி மயூரகிரிப்
பைந்தமிழ்க் கோவையைப் பாடினன் சர்க்கரை பாலனெங்கள்
இந்திரன் சாந்து மகிபால வால கவீச்சுரனே"

என்பது மயூரகிரிக் கோவையின் சிறப்புப் பாயிரம். இக் கோவையைத் தவிர வேறு பல நூல்களையும் தனிப்பாடல்களையும் சாந்துப் புலவர் இயற்றியுள்ளார்.

## கரு. சர்க்கரைமுத்து முருகப்புலவர்

### தோற்றமுங் கல்வியும்

சர்க்கரைமுத்து முருகப்புலவர் என்னும் இவர் இரண்டாவது சர்க்கரைப் புலவருடைய மூன்ருவது மகனுவர். மயூரகிரிக்கோவை பாடிய சார்ந்துப் புலவருக்குத் தம்பியாராவர். தந்தையாரிடத்திலும் பிறரிடத்திலும் கல்வியை நன்கு கற்றுத்தேறிஞர். அரசர்களுடைய அவைக்களப் புலவராகவும் சொற்பொழிவுகள் செய்பவராகவும், பாடல்கள் இயற்றிச் சிற்றரசர்களின் நன்கொடையைப் பெற்று வாழ்க்கை நடத்துபவராகவும் விளங்கினுர்.

இவர் முத்துராமலிங்க சேதுபதி காலத்திய அமைச்சர் முத்திருளப்பபிள்ளையின் நன்மதிப்பைப் பெற்றவர். ஒருகால் முத்திருளப்பபிள்ளையை இவர் பார்க்கச் சென்றபொழுது பின்வருஞ் செய்யுளை எழுதி முத்திருளப்ப பிள்ளைக்கு முன்னதாக அனுப்பிவைத்தார்.

"சித்திரகவி மதுரகவி நாகபந் தக்கவிகள்
 செப்புகவி வர்க்க மெல்லாம்
 திரைநெடுங் கடன்மறை திறந்தெனவே பாடு
 தேசப்ர சித்த கவியாம்
முற்றுசொற் பாரத இராமா யணம்பெரிய
 முதிர்காவி யக்கட லெலாம்
 முழுகிமுன் னிலைகண்ட சர்க்கரைக் கவிமுத்து
 முருககவி எழுது மோலை
சத்ரபதி சேதுபதி மந்த்ரிமுத் திருளப்ப
 உதாரன்எதிர் வந்து காண்க
 சகலகலை இலக்கண இலக்கியக் கடலெலாம்
 தப்பாப்பிர சங்க கவியாம்
எத்திசைக ளும்புகழும் இராசசமு கங்களுக்
 கேத்திடும்உ லாமாலையாம்
 இன்பமொடு வாரிதி எழுதினேம் இதுகண்டு
 எதிர்கொண்டு காண்க வரவே."

நானூறு

அமைச்சர் முத்திருளப்பர் இவருக்கு நன்கொடை ரூபா நூறு வழங்க முடிவு செய்தார். எழுத்தாளரைப் பார்த்து, "(நானூறு ரூபா) நான் நூறு ரூபா கொடுக்கச் சொன்னதாக ஒரு கடிதம் எழுதிக்கொண்டு வாரும்" என்ருர். எழுத்தாளர், நான் நூறு ரூபா - என்று சொல்லியதை - நானூறு ரூபா - என்று சேர்த்து எழுதிக்கொண்டு வந்தார். இதனைக் கண்ட அமைச்சர் அதனைக் கிறுக்கி விட்டு நூறு என்று எழுதிவரச் சொன்னர். இதனைப் பார்த்த புலவர், "பெரியீர்! கிறுக்குத் தீயவர்களிடம் இருப்பது. இக்கிறுக்குத் தங்களுடைய ஓலையில் இருக்கக் கூடாது," என்னும் பொருளை யமைத்து,

"ஒறுக்குமதி வேந்தருக்கும் கள்ளருக்கும் நீதிதப்பி
ஒழுகி னோர்க்கும்
கிறுக்குவரச் செயுந்துரையே பாவாணர் ஓலையினுங்
கிறுக்குண் டாமோ ?
பொறுக்குமர சுரிமைமுத்து ராமலிங்க சேதுபதி
பூமி யெல்லாம்
நிறுக்குமதி மந்திரிமுத் திருளப்பா அருளப்பா
நிருபன் தானே."

என்னுஞ் செய்யுளைப் பாடினர். இதனைக்கேட்ட அமைச்சர் ஓலையை அப்படியே கொடுத்துவிடச் சொன்னர். புலவருக்கு ரூபா நானூறு கிடைத்தது.

இவர் இயற்றிய நூல்கள்

பழைய திவாகரம் பன்னிரண்டு தொகுதியையும், திருத்தியும் விளக்கியும் கூட்டியும் புதுக்கியும் பொருள் விளக்கம் என்னும் பெயர்கொடுத்து உலகிற்குதவினர். மிழலைச் சதகம் என்னும் நூல் ஒன்று இவரால் இயற்றப் பெற்றது.

"அடுக்கப் படிக்கின்ற செந்தமிழ்ப் பாவல ராரிணையும்
தடுக்கப் படிக்கின்ற கல்விகல் லாரிந்தத் தாரணிமேல்
கொடுக்கப் படிக்கின்ற கல்விநன் ருய்வந்து கூடியபின்
நடக்கப் படிக்கின்ற நாட்டார் மிழலை நராதிபரே.

ஆழி நடக்கும் பரிதேர் நடக்கும் அறுமுகனூர்
கோழி நடக்கும் பசுவே றுவணக் கொடிநடக்கும்
வாழி நடக்கு மிழலைநன் ஞட்டு வரம்புடையார்
மேழி நடக்கின் நடவாத தொன்றில்லை மேதினிக்கே."

என்பன அச்சதகத்தின் இரண்டு செய்யுட்களாம். மேலும் இவர் செங்காலபிள்ளை மடத்தில் திருக்கோவில்கொண் டெழுந்தருளிய வயிரவக்கடவுளின் பேரிற் பஞ்சரத்தினம் ஒன்றும் பாடினர். அப்பஞ்சரத்தினம் செங்கால வீரப் பெருமாள் பிள்ளை என்பவர்க்கு மக்கட்பேறு வேண்டிய தன் பொருட்டுப் பாடப்பட்டதாக அப்பஞ்சரத்தினச் செய்யுள் ஒன்ருல் தெரிகிறது.

கொட்ட மிட்ட முடுவன்மீ தேறியோர்
கோடி கோடி பிரமாண்ட மெங்குமே,
வட்ட மிட்டநின் காவலி னல்வெற்றி
மாலை யிட்டயன் மாலான வாகின்ருர்,
அட்ட திக்கும் புகழ்பரப் பிரமநின்
ஆணை தப்பி நடந்தவர்க் குய்வுண்டோ
மட்டு லாவுஞ்செங் காலன்ம டத்தினில்
வளரும் எங்கள் வயிரவ மூர்த்தியே.

என்பது அந்தப் பஞ்சரத்தினச் செய்யுளுள் ஒன்ருகும். இப்புலவர் தமது முன்ஞேரின் மகமைகளைத் தமக்கும் உரிமையாகப் பெற்றிருந்ததுடன் தாமும் புதிதாகச் சில மகமைகளைப் பெற்று வாழ்ந்திருந்தார்.

# ௬௯. முத்தப்ப செட்டியார்

## தோற்றம்

அண்டரும் புகழுந் தண்டமிழ் உலகில், மட்டிலாப் புகழ்சேர் செட்டிமார் நாட்டில், கீழைச் சிவப்பட்டி என்னும் ஊரில், தனவணிக குலத்தில் 1760-ஆம் ஆண்டில் முத்தப்ப செட்டியார் பிறந்தார். தந்தையார் பெயர் அழகப்ப செட்டியார், தாயார் பெயர் இலக்குமிஆச்சி.

## கல்வி

முத்தப்பர் இளமையிற் பள்ளியில் வைக்கப்பட்டார். அக்கால வழக்கப்படியும் குலவழக்கப்படியும் கல்வி கற்கத் தொடங்கினார். சின்னாள் ஆசிரியரிடத்தில் கல்வி கற்றார். சில ஆண்டுகளிற் பள்ளிப்படிப்புக்குப் புள்ளி வைக்கப் பட்டது. முத்தப்பர் குன்றைமுருகனிடத்திலே அளவு கடந்த பேரன்புகொண்டு, அடிக்கடி சென்று போற்றி வழிபட்டுக்கொண்டிருந்தார். முருகனுடைய திருவருளால் கலையறிவு சிறந்தோங்கியது.

## வறுமையுந் தொழிலும்

முத்தப்பர் காலத்திலே தனவணிகர்கள் இக்காலத்தைப்போல் உயர்ந்த வாணிகங்கள் செய்து சிறந்த வாழ்வு நடத்தவில்லை. பலசரக்கு வாணிகம் உப்புவாணிகம் முதலியன செய்தார்கள். வீடு வாசல்களும் இக்காலத்தைப் போற் சிறந்ததாக மாடகூடங்களோடு அமைக்கவில்லை. பொதுவான சிறு இல்லங்களையே அமைத்துக்கொண்டு வாழ்ந்திருந்தார்கள். முத்தப்பருடைய இளமைக் காலத்தில் இவருடைய குடும்பம் மிக வறிய நிலைமையில் இருந்தது. முத்தப்பர் உப்புவாணிகஞ் செய்து அதன் வருவாயைக்கொண்டு வாழ்க்கையை நடத்தத்தொடங்கினார். உப்பு வாங்கிச் சாக்கிலிட்டுக்கட்டி அதனைத் தலையில் தூக்கிக் கொண்டுபோய்ப் பக்கத்தூர்களிற் கூடும் சந்தைகளில்

ரா. ஒருநாள் ஒரு அறமூரில் கூடிய சந்தைக்கு இவர் உப்பு விற்கச்சென்றார். முத்தப்பர் பதினைந்து நாழிகைக்கே சந்தைக்குப் போய்விட்டார். சந்தை மூன்று சாமங்கட்கு மேலேதான் கூடுவது வழக்கம். முத்தப்பர் ஓரிடத்தில் தமது கடையைப் பரப்பினார். இவரிடம் உப்பைத்தவிரக் காசும் இல்லை. உணவுங்கொண்டு வரவில்லை. விறகில்லாமல் எரியும் பெருமை பொருந்திய வயிற்றுத்தீ முத்தப்பருடைய வயிற்றிலே பற்றிக்கொண்டு நன்றாக எரியத்தொடங்கிவிட்டது. அதன் கொடுமைக் காற்றாத முத்தப்பர் சோர்ந்து தளர்ந்து உட்கார்ந்திருந்தார். அண்மையிலிருந்தன செட்டியார் வீடுகள் பல. ஒரு செட்டியார் தம் வீட்டுத்திண்ணையில் நின்று சந்தையைப் பார்த்தார். அவர் முத்தப்பரைக் கண்டார். 'பசித்தோர் முகம்பார்' என்றார் பட்டினத்தடிகள். முத்தப்பருடைய பசிமுகம் அவர் ஒன்றும் உண்ணவில்லையென்பதை அவருடைய முகம் வெளிப்படுத்திவிட்டது. செட்டியார் முத்தப்பரிடம் வந்தார். "மிகக் களைத்துப்போய் இருக்கிறாயே; ஒன்றுஞ் சாப்பிடவில்லையா?" என்று உசாவினார். இல்லையென்றார் முத்தப்பர். செட்டியார் உப்பைப் பார்த்துக் கொள்வதற்கு வேறோர் ஆளிடம் கூறிவிட்டு முத்தப்பரைத் தம் வீட்டிற்கு அழைத்துச் சென்றார். வயிறார உணவிட்டார். உண்டு பசியாறிய முத்தப்பர் தம் பசிப்பிணி மருத்துவனாகிய அச்செட்டியாரை அன்போடு நோக்கினார்.

"அன்போ டறுசுவையோ டன்னமளித் தாதரவாய்
என்பசியைத் தீர்த்துவிட்ட தென்னினமே—பின்பின்
நகரத்தார் தங்களிடம் நண்ணிக் குபேரன்
பகருகடன் கேட்கவரும் பார்."

என்று ஒரு வெண்பாவைப் பாடினார். அன்று தொட்டு அச்செட்டியாருக்குமட்டுமன்றி தனவணிகர்கள் எல்லோருக்குமே செல்வம் பெருகத் தொடங்கிவிட்டது.

செவ்வூரும் முத்தப்பரும்

ஒரு சமயம் செட்டியார் செவ்வூர் என்னும் ஓர் ஊருக்குச் சென்றார். அவ்வூரார்கள் வாயுபசாரமாகப் பேசினார்களே யன்றிச் சாப்பிடச் சொல்லவில்லை. இவரையோ பசி வாட்டத்தொடங்கியது. உடனே இவர் அங்கிருந்து ஒரு செட்டியாரைப் பார்த்து

"எவ்வூர்க்குப் போனாலும் எவ்வுலகஞ் சென்றாலும்
செவ்வூர்க்குப் போகமனஞ் செல்லாதே—அவ்வூரார்
பார்த்திருக்க உண்பார் பசித்தோர் முகம்பாரார்
கோத்திரத்துக் குற்ற குணம்."

என்று ஒரு செய்யுளைப் பாடினார். இதனைக்கேட்ட செட்டியார் அந்தோ ஊர் முழுவதற்கும் வசை நேரும்படியாக நடந்துகொண்டோமே என்று உள்ளம் வருந்தினார். இவரைப் புகழ்ந்து போற்றி உணவிட்டுக் குற்றம் பொறுத்தருளவேண்டும் என்று வேண்டிக்கொண்டார். செட்டியார், தாம் பாடிய பாட்டை இசைப்பாட்டாக மாற்றிச் சென்றார்.

அரியக்குடியும் முத்தப்பரும்

ஒருநாள் ஒரு வேலையை முன்னிட்டு முத்தப்பர் அரியக்குடி என்னும் ஊருக்குச் சென்றார். ஊரார்கள் முத்தப்பரை வரவேற்றுப் போற்றவுமில்லை. ஆகவேண்டிய காரியத்தை நிறைவேற்றி யனுப்பவும் இல்லை. ஒவ்வொருவரும் தத்தம் காரியத்தைப் பார்த்துக்கொண்டு இவரை ஒரு பொருட்படுத்தாமல் இருந்துவிட்டனர். பார்த்தார் முத்தப்பர்: ஏது எல்லோரும் பெரியவர்களாக இருக்கிறார்கள். பாடல் பெறுவிட்டால் ஒழுங்கிற்கு வரமாட்டார்கள் போல் இருக்கிறதே என்று எண்ணினார்; பாடத்தொடங்கி,

"அரியக் குடிநகரம் அத்தனைபேர் அத்தனையும்."

என்றார் : இதனைக்கேட்டவர்கள் அஞ்சி, "வசைபாடாதீர்கள். ஆகவேண்டியவைகளைச் செய்கிறோம். அறிவற்ற எங்களுடைய குற்றத்தைப் பொறுத்துப் பாட்டை இசையாகவே முடித்தருளுங்கள்" என்று வேண்டிக்கொண்டனர். முத்தப்பர் தாம் தொடங்கிய விருத்தத்தை வெண்பாவாக*யாற்றி,

"அரியக் குடிநகரம் அத்தனைபேர் சுற்று
வரிசைக் குடியாக வாழ்க—பெரிய
தெரியாரைப் போன்றிருந்தார் தேடிவந்தார் பின்னர்
உரியாரைப் போன்றார் உகந்து."

என்று பாடலை முடித்தார். ஊரார்கள் ஆகவேண்டிய காரியத்தை முடித்துப் புகழ்ந்துபோற்றி யனுப்பிவைத்தார்கள். முத்தப்பர் வாக்குப்படி இன்றைக்கும் அவ்வூரார்கள் ஒரு வரிசைக்குடியாகவே இருக்கின்றனர்.

சட்டியார்

முத்தப்பர் வாணிகத்தின் பொருட்டு ஒருமுறை ஓர் ஊருக்குச் சென்றார். ஒரு தெருவழியே சென்றுகொண்டிருந்தபோது அத்தெருவில் இருந்த விலைமகள் ஒருத்தி செட்டியாரைப் பார்த்தாள். அவள் ஆணவமும் பணச் செருக்கும் உடையவள். அவள் செட்டியாரைப் பார்த்துக் கேலி செய்ய எண்ணினாள். "பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாரால், பேரா விடும்பை தரும்" என்னும் தெய்வப் புலவர் திருவாய்மொழியை எண்ணாதவளாய்ச் செட்டியாரைப் பார்த்து, "வாரும் ஐயா சட்டியாரே!" என்று அழைத்தாள். முத்தப்பர் அவ் விலைமகளைப் பார்த்து, "ஆம் அம்மா வந்தேன். இருக்கட்டும் நீ என் குலப் பெயரில் உள்ள ஒற்றைக்கொம்பை ஏன் ஒடித்தாய், நீ என்னுடைய ஒற்றைக்கொம்பைக் கவர்ந்தபடியால் நீ உன் குலப்பெயரின் முன் இரட்டைக் கொம்பு பெறுவாயாக,"

என்று இயம்பிவிட்டுச் சென்றார். அப்பொதுமகள் சிறிது கல்வியறிவுடையவள். முத்தப்பர் மொழிந்ததைக் குறித்துச் சிறிது எண்ணமிட்டுப்பார்த்தாள். நமது குலப்பெயர் தாசி. இதற்கு முன்னால் இரட்டைக் கொம்பைச் சேர்த்தால் தோசி என்று ஆகிறது என்று கண்டு திடுக்கிட்டாள். ஆயினும் நாம் செட்டியார் மொழிப்படி தோசியாகவா ஆகிவிடப்போகிறோம் என்று உள்ளந் தேறியவளாய்க் கவலையற்றிருந்தாள்.

அருட்புலவராகிய முத்தப்ப செட்டியாருடைய வாய்மொழி வீணாகப் போகவில்லை. அவ் விலைமகட்குப் பல் வகையான தொல்லைகள் உண்டாயின. மிகுவிரைவாக வறுமை யடைந்து அல்லலுக்கு உள்ளானாள். அவள் சிறிது நல்லறிவு உள்ளவளாகையால் நமக்கு இத்தொல்லை செட்டியாரால்தான் வந்தது என்று எளிதாக அறிந்துகொண்டாள். செட்டியாரைத் தவிர வேறு யாராலுந் தனக்கு உய்வு ஏற்படாது என்பதையும் அவள் உணர்ந்துகொண்டாள். ஆகவே புறப்பட்டுக் கீழைச்சிவப்பட்டிக்கு வந்து சேர்ந்தாள். செட்டியாரைக் கண்டு வணங்கிச், "செட்டியாரே! நான் அறிவற்றவளாகையால் தெரியாத்தனமாக ஏதோ கூறிவிட்டேன். தாங்கள் இப் பேதையின் குற்றத்தைப் பொறுத்துக் காப்பாற்றியருளுதல் வேண்டும். தாங்கள் என்னைத் தண்டித்தது போதும்," என்றுகூறி வருந்தினாள். பார்த்தார் முத்தப்பர். பெண்புத்தி பின்புத்தி தானே; பிழைத்துப் போகட்டும் என்றுமுடிவு செய்தார்.

"என்னெழுத்தை ஈந்தாய் எனக்கானால் நீ இனிமேல்
உன்னெழுத்தைக் கொண்டொழுங்காய் ஓடிப்போ—முன்னமெங்கள்
காளமேகத்தையொரு கன்னியெதோ சொல்லியந்தோ
நீளத்தேய்ந் தாள்நீ நினை."

என்று ஒரு செய்யுள் உரைத்தார். அவ் விலைமகள் அது முதல் வாய்த்துடுக்கு முதலிய தீக்குணங்களையெல்லாம் போக்கி நல்லவளானாள். பிறகு முன்போல் செல்வம் முதலிய சிறப்புக்களை யடைந்து வாழ்ந்திருந்தாள்.

முத்தப்பரும் ஊர்க்காவலரும்

ஒருமுறை முத்தப்பர் நள்ளிரவில் ஓர் ஊரில் இருந்து மற்றொரு ஊரை நோக்கிச் சென்றுகொண்டிருந்தார். அப்பொழுது இரண்டு கள்ளர்கள் இவரை வழிமறித்து மூட்டையைப் பறித்தார்கள். அச்சமயம் ஊர்க்காவலர் (போலீஸார்) அங்குக் காவல் வருகிற ஒலிதெரிந்தது. பறித்த மூட்டையைப் போட்டுவிட்டுக் கள்ளர்கள் ஓட்டம் பிடித்தார்கள் முத்தப்பர் மூட்டையைத் தூக்கிக்கொண்டு புறப்பட்டார். அப்பொழுது ஊர்க்காவலர் முத்தப்பருக்கு முன்னால் வந்து நின்றார்கள். முத்தப்பர் அவர்களைப் பார்த்து, "நீங்கள் யார்?" என்று கேட்டார்: அதற்கு அவர்கள், "நாங்கள் தாம் இரவில் இச்சாலையில் களவு நடக்காமல் பார்த்துக்கொள்கிற காவலர்கள்," என்று மறுமொழி கூறினார்கள். முத்தப்பர் அவர்களைப் பார்த்து, "இதற்காக உங்கட்குக் கூலி கொடுப்பவர்கள் யார்?" என்று மீண்டும் கேட்டார். அதற்கு அவர்கள், "இப்பொழுது நம் இந்தியாவை ஆண்டு வரும் ஆங்கிலேயர்கள்," என்று விடை யளித்தார்கள். முத்தப்பருக்கு மிகுந்த களிப்புண்டாகிவிட்டது. "இங்கிலீஷ்கொடி பறக்கவே இளையாத்தங்குடி சிறக்கவே" என்று கூறிவிட்டு ஊர்க்காவலருக்கு நன்றி செலுத்தினார்.

வெண்பாப்புலியும் முத்தப்பரும்

முத்தப்பர் காலத்திலே வெண்பாப்புலி வீரகவிராயர், வேலுக்கவிராயர் என்பவர்கள் சிறந்த புலவர்களாக

விளங்கிக்கொண்டிருந்தார்கள். வெண்பாப் புலி வீர கவிராயர் என்பவர் வாக்குப் பலிதமுள்ளவர். அவர் வாக்கினுல் எவ்வாறு கூறினுலும் அப்படியே நடக்கும். அவர் வசைபாடுதலில் நசைமிக உடையவர். அந்நாளில் எரகு நகரம் என்னும் ஊரில் இம்முடிலிங்கேந்திரதுரை என்னும் பெயருடைய செல்வன் ஒருவன் வாழ்ந்திருந்தான். அவன் மிகத் தீயவன்; கொலைபுலைகட்கு அஞ்சாதவன். சில கொலைகளுஞ்செய்து சீரழிந்திருந்தான். அவன் தன்னுடைய பழியைப் போக்கிக்கொள்ள விரும்பிப் பெரும்பொருள் கொடுத்து வெண்பாப் புலி வீரகவிராயரிடம் அரைப் பாட்டு எழுதி வாங்கியிருந்தான். அப்பாட்டு,

"இம்முடிலிங் கேந்த்ர துரைக் கேற்ப நடந்தோர்கள்
தம்முடிகொண் டேயுலகில் தாம்வாழ்வார்."

என்பதாம். இப்பாட்டு அவ்வூரினுள்ள ஒவ்வொரு வீட்டுச் சுவரினும் எழுதப்பட்டிருந்தது. வாணிகத்தின் பொருட்டு அவ்வூருக்குச் சென்றிருந்த முத்தப்பர் பாட்டைப் படித்துப் பார்த்தார். பாட்டின் எஞ்சிய பகுதியைத் தாம் பாடத்தொடங்கினுர்:

—சும்மாவே

தப்பில் தலையரிவான் சாட்சியொன்று வேண்டுமெனில்
அப்பனெனும் தொப்பவீர னும்

என்று எழுதிப் பாட்டை நிறைவேற்றிவிட்டுச் சென்றுர். இச்செய்தியை இம்முடிலிங்கேந்திரதுரை உணர்ந்தான். இவ்வாறு எழுதியதற்காக மிகுந்த சினங்கொண்டான். முத்தப்பரைத் தண்டிப்பதற்குக் காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். இச்செய்தி முத்தப்பருக்குத் தெரிந்தது. மேலும் இவர்,

"பத்தலார்க் குதவுபதி எரசு மேவும்
 பாக்கியனே இம்முடிலிங் கேந்தி ராகின்,
தத்துவாம் பரிகளெங்கே கிரீட மெங்கே
 தண்டிகைபல் லக்குமெங்கே தனந்தான் எங்கே,
மெத்தைகொண்ட வீடுமெங்கே யதனுள் மேவும்
 மேலான பஞ்சொடுபண் டார மெங்கே,
சுத்தவீ ரங்களெங்கே சும்மா போச்சோ
 தொப்பைவீ ரனைவதைத்த தோடந் தானே."

என்றொரு பாட்டையும் எழுதியனுப்பினார். இதிலிருந்து அச்செல்வன் மிகுந்த வறுமையையுந் துன்பத்தையும் அடைந்தான். இச்செய்திகளையெல்லாம் வெண்பாப்புலி வீரகவிராயர் உணர்ந்தார். தாம் மூத்தப்பரைச் சொற் போரில் வென்று தோற்கடித்துத் தண்டிக்கவேண்டும் என்று விரும்பினார். கீழைச் சிவப்பட்டிக்கு வந்து மூத்தப்பர் வீட்டில் இருக்கிறாரா என்று உசாவினார். மூத்தப்பர் மிதிலைப்பட்டிக்கு வேலுக்கவிராயர் வீட்டிற்குச் சென்றிருக்கிறார் என்று தெரிந்தது. புறப்பட்டு மிதிலைப் பட்டியில் உள்ள வேலுக்கவிராயர் வீட்டிற்குச் சென்றார். அங்கு வெண்பாப்புலி வீரகவிராயருக்கும் மூத்தப்ப செட்டியாருக்கும் சொற்போர் நடந்தது. வெண்பாப்புலி யார் மூத்தப்பரைப் பார்த்து, "இதோ இங்குக் கட்டியிருக் கும் வேலுக்கவிராயர் வீட்டு ஆட்டுக்கடாவிடத்திலே நம் முடைய சொற்போர்த்திறத்தைக் காட்டுவோம். நான் இந்த ஆட்டுக்கடாவின் தலை பிளக்குமாறு பாடுகிறேன். அது பொருந்தி முன்போலாகுமாறு நீர்பாடுவீரா?" என்று கேட்டார். உடனே மூத்தப்பர், "நீர் வசை பாட மட்டும் வல்லவர் என்பதை நாம் அறிவோம். நாம் உம் மைப்போல் அன்று. இசை வசை இரண்டையும் பாட அறிவோம்" என்றார். வெண்பாப் புலியார் ஆட்டின்

தலை பிளக்குமாறு பாடுவதென்றும், முத்தப்பர் அத் தலை முன்போல் அமையுமாறு பாடுவதென்றும் முடிவாகியது. உடனே வெண்பாப் புலியார்,

"என்கவிக்கு நேரே எதிர்கவியுஞ் செப்புதற்கோர்
பொன்கவியும் உண்டோவிப் பூவுலகில்—நன்கவிசொல்
வேலுக் கவிராயர் வீட்டுக் கடாத்தலையே
சாலரண்டு துண்டாவாய் தான்."

என்று பாடினார். அவ்வளவில் அங்கு நின்றுகொண்டிருந்த ஆட்டுக்கடாவினது தலைதானே துணிப்புற்றுக் கீழேவிழுந்து துடித்தது. உடனே முத்தப்பர்,

"கலையது படித்த வெண்பாக் கவிப்புலி கவியைக் கேட்டுத்
தலையது துணிப்புண் டாடு தவிக்கிற தந்தோ முன்போல்
நிலைபெறப் பொருத வென்று நிகழ்த்தினேன் முத்தப் பன்யான்
உலகினில் உள்ளோர் காண்பீர் உமையவள் சுதன்காப் பாமே."

என்று ஒரு செய்யுளியற்றிக் குன்றை முருகனைப் போற்றினார். முத்தப்பர் இப்பாடலை முடித்தவுடன் துள்ளித் துடித்துக்கொண்டிருந்த ஆட்டுத்தலை கழுத்தோடு ஒன்றாகப்பொருந்தி முன்போல் ஆகியது. உடனே அவ்வாடு காட்டுப் புலியைப்போல் பாட்டுப் புலியான வீரகவிராயர் மேற் பாய்ந்தது. வெண்பாப்புலியார் அஞ்சி நடுங்கி ஒருபுறம் ஒதுங்கினார். அங்கிருந்த ஒரு மனிதன் ஆட்டுக் கடாவைப் பிடித்துக் கட்டினான். வெண்பாப்புலி ஆட்டுக்கு அஞ்சிய புதுமையைக் கண்டு ஆங்குக் கூடியிருந்த மக்கள் எள்ளி நகையாடினர். முத்தப்பர்,

"பாட்டுக்குப் புலிபயந்து பதுங்கியதும் போதாமே
ஆட்டுக்கும் புலிபயந்தால் ஆர்தாம் நகையார்கள்."

என்றுகூறித் தாமும் நகைத்தார். உடனே வேலுக் கவிராயர்,

"காட்டுப் புலியதுபோல் கவிபுகலும் நம்மிடத்தோர்
வீட்டுப் புலியானார் வெண்பாப் புலியானார்."

என்று பாடிப் பாட்டை முடித்துத் தாமும் நகைத்தார். அன்றுமுதல் வெண்பாப்புலியார் தம் செருக்கொழிந்தது டன் பூனைபோல் ஆய்விட்டார். முத்தப்பரின் சீர்த்தியோ நாற்றிசையும் பரவத்தொடங்கிவிட்டது. இச்சமயத்தில் வெண்பாப் புலியார் முத்தப்பரைப் பாராட்டி,

"கற்றவர்க் கெல்லாமோர் பூடணம் நீநின்னைக் காசினியில்
பெற்றவ ளேசெல்வப் பேறுடை யாள்நின் பிதாவிழைத்த
நற்றவ மேதவம் நாட்டார் வணிகர்க்கோர் ரத்தினநீ
கொற்றவ ரும்புகழ் முத்தப்ப வித்வ குலமணியே."

என்னுஞ் செய்யுள் ஒன்றைப்பாடிப் புகழ்ந்தார்.

மழைபெய்வித்தல்

குன்றக்குடியில் ஓராண்டு திருவிழா நடைபெற்றுக் கொண்டிருந்தது. மழையின்மையால் குளம்குட்டைகளெல்லாம் நீர்வற்றிப் போயின. ஒரு நாள் முத்தப்பர் திருவிழாவுக்குச் சென்றிருந்தார். சுவாமி கோவிலைவிட்டுப் புறப்பட்டுக்கொண்டிருந்தது. கூடியிருந்த பெரியவர்களில் ஒருவர் முத்தப்பசெட்டியாரைப் பார்த்துத், "தங்கள் வாக்குப்பலிக்குமே. மழைபெய்யுமாறு ஒரு பாட்டுப் பாடுங்களேன்," என்று கூறினார். முத்தப்பர், "அப்படியே செய்கிறேன். சாமி தெற்குத்தெருவுக்குப் போகட்டும்," என்றார். திருவண்ணாமலையாதீனமடத்தைச் சாமி நெருங்கியது. உடனே முத்தப்பர்,

"அள்ளிநிதி யங்கொடுக்கும் புனல்வயற்சே
றைபதிஎன் ஐயன் குன்றை
வள்ளிமண வாளனுக்கு வெள்ளிமயில்
செய்துவைத்த மகிமை பாரீர்

வெள்ளியறி யாமல்மழை பெய்கிறதே
என்றமொழி மெய்தான் வெள்ளிப்
புள்ளிமயி லேறிமுரு கன்பவனி
வரக்கண்டு பொழிந்த வாறே."

என்று பாடினார். சிறிது நேரத்திற்குள் விண்மீன்கள் மறைந்தன. கருமுகில்குழாம் மேலே பரந்து பெருமழை பெய்யத் தொடங்கிவிட்டது. சாமியை மடத்தின்முன் கொட்டகையில் நிறுத்தி வைத்தார்கள். ஊருணிகளெல்லாம் உலகவாம் பேரறிவாளன் திருவைப்போல் நிறைந்து விட்டன. நீண்டநேரமாகியும் மழை நிற்கவில்லை. மழை பெய்யச் செய்யுமாறு கேட்டுக்கொண்டவர் இப்பொழுது அதனை நிறுத்துமாறு கேட்டுக்கொண்டார். முத்தப்பர்,

"வந்து மழைபொழியும் வானேவெஞ் சூர்தடிந்த
கந்தர் திருவிழாக் காலத்தில்—தொந்தரையாய்
நீர்த்துளியை ஊற்றிவிடல் நேர்த்தியல மாற்றிவிடு
கீர்த்திவரும் நாட்டென்மொழி கேள்."

என்று பாடினார். மழை சிறிது நேரத்திற்குள் ஓய்ந்து விட்டது.

குளிக்கப்போய்ச் சேறுபூசிக்கொள்ளுதல்

திருநெல்வேலிச் சைவர்களில் சிலர் முத்தப்பரைக் குன்றக்குடியிற் கண்டார்கள். முத்தப்பர் வாக்கால் பாடல் ஒன்று பெற்றால் தங்களுக்கு நன்மைகள் பல உண்டாகும் என்று எண்ணினார்கள். தங்கள் மேல் ஒரு பாட்டுப்பாட வேண்டும் என்று கேட்டுக்கொண்டார்கள். திருநெல்வேலிச் சைவர்கள்மீது முத்தப்பருக்கு நல்ல எண்ணமில்லை. ஆகவே அவர்,

"ஒருநெல் பிறர்க்குதவார் ஊர்முதலில் ஆசை
திருநெல்வே லிச்சைவர்க் கம்ம-அருமையொடு
தம்பியென்றும் அண்ணனென்றும் தாம்பேசு வார்அவரை
நம்பினால் போதுமிக நன்று."

என்று பாடினார். பாடக்கேட்டவர்கள் அது குளிக்கப் போய்ச் சேறு பூசிக்கொண்ட கதையாக இருக்கிறதென்று மிகுந்த நாணமடைந்தார்கள்.

சிக்கலில் நிகழ்ந்தது

முத்தப்பர் சிக்கலுக்குச் சென்றிருந்தார். முத்தப்பரு டன் வேறு சிலருஞ் சென்றிருந்தனர். ஒருநாள் நள்ளிரவில் வெற்றிலை வேண்டியதாக இருந்தது. கையிலோ வெற் றிலை யில்லை. கடையில் வாங்கலாம் என்றாலோ கடைக ளெல்லாம் அடைக்கப்பட்டுவிட்டன. ஒருவர் முத்தப் பரைப் பார்த்து, "உங்களுக்குத் தான் எச்செயலும் எளி தாயிற்றே. முருகப்பெருமானைப் பாடிச் சிறிது வெற்றிலை பெறுங்கள்," என்று கூறினார். இச்சிறு செயலுக்காகக் கடவுளிடம் முறையிடுவது முத்தப்பருக்குப் பிடிக்கவில்லை. ஆயினும் முருகக்கடவுளை எண்ணி,

"குத்துவார் வெட்டுவார் கோடிபெறு வார்நின்பால்
பத்தல்ல எட்டல்ல பஞ்சமிலை-இத்தனை தான்
வெற்றிலையும் பாக்கும் விரும்பினேன் சிக்கலின்கண்
உற்றிருக்கும் வேலா உதவு."

என்று வெண்பா ஒன்று பாடினார். வேண்டிய அளவு வெற்றிலைபாக்கு அகப்பட்டது. அதன் சுவை தமிழ்ச்சுவை போல் சிறந்து விளங்கியது. முருகன், வழிப்போக்கர் ஒரு வரைப்போல் வெற்றிலைபாக்கைத் தந்து சென்றான். முருகக் கடவுளின் அருட்டிறத்தைக் கண்ட முத்தப்பர்,

"அவ்வைக்கும் அந்த அருண கிரியார்க்கும்
செவ்வையாய்ப் பாடுந் திறமறிந்தே-நல்வற்
கனியுங் கரும்பும் கலந்தளித்த வாறே
நனியெனக்கீ திந்தவகை நன்று."

என்று பாடினார்.

மார்த்தாண்டப் புலவர்

மூத்தப்பர் காலத்திலே வேம்பத்தூரில் மார்த்தாண்டப் புலவர் என்னும் பெயருடைய புலவர் ஒருவர் இருந்தார். அவர் புலவர்வழியிலே தோன்றியவர். இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுத் தேறியவர். ஆயினும் வறுமையால் பீடிக்கப்பட்டு மிகுந்த தொல்லைப்பட்டார். மூத்தப்பரைப் பார்த்தால், தக்கவாறு உதவிசெய்வார் என்று உணர்ந்து மூத்தப்பர் வீட்டிற்கு வந்து மூத்தப்பரைப் பார்த்தார். மார்த்தாண்டப் புலவரைப்பற்றி முன்னரே கேள்விப்பட்டிருந்தார் மூத்தப்பர். ஆகவே மார்த்தாண்டப் புலவரை வரவேற்றுப் போற்றினர். வந்த காரியம் யாது? என்று உசாவினர். மார்த்தாண்டப் புலவர் மூத்தப்பரைப் பார்த்து, "நான் பல நூல்களையும் நன்கு கற்றுத் தேறியிருக்கிறேன். ஆயினும் இளையவள் (திருமகள்) என்னைக் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை; மூத்தவள் (மூதேவி) தான் எந்நேரமும் பற்றிக்கொண்டு தொல்லைப்படுத்துகிறாள். இதற்குக் காரணம் யாதோ?" என்று கேட்டார். உடனே மூத்தப்பர்,

"படியாத மூடர்களைப் படித்தோர் என்பீர்
பணமற்ற வறிஞனையோ பாக்யன் என்பீர்
குடிகாரப் போக்கிரியைக் குணவான் என்பீர்
குன்றுரும் புயமென்பீர் கூனல் தோளை
வடிகட்டுங் கஞ்சனையோ வள்ளல் என்பீர்
வன்போரில் புலியென்பீர் வலியி லானை
விடியாத மூஞ்சியையோ வேந்தன் என்பீர்
வினைவிடுமோ பொய்க்கவிதான் விளம்பு வோர்க்கே."

என்று பாடினர். மார்த்தாண்டப் புலவருக்கு அறிவுரைகள் பல கூறினர். பிறகு,

"இத்தரை முழுதும் இசைபெறு நம்பீர்
முத்தப் பன்யான் மொழிவது கேண்மின்
செந்தமிழ்ச் செல்வச் சீமான் இவர்தாம்
வளம்பெறு நிம்பை மார்த்தாண்டப் புலவர்
மடப்பளி யடுப்பு மறந்துதன் அடுதொழில்
ஆம்பி பூத்ததாம் ஆதலி னிவர்
நம்பால் உற்றனர் நாவலர் இவர்க்கே
தம்புகழ் நிறீஇத் தருநிகர் நீவிர்
வேண்டும் பரிசில் விரும்புவ தளித்தும்
ஆண்டிவர் வறுமைநோய் அறவே களைந்தும்
சிறப்புற வனுப்புவீர் நேம
நகரிற் குபேர நலம்படைத் தோரே."

என்னும் இனிய செய்யுள் ஒன்றை எழுதி நகரத்தார்களிடம் ஆற்றுப்படுத்தினுர். புலவர் நகரத்தார்களிடம் போய் நற்பொருள் பெற்றுப்பொற்புடன் வாழ்ந்திருந்தார்.

நூல் அரங்கேற்றம்

முத்தப்பர் நேமங் கோயிலில் எழுந்தருளிய செயங் கொண்ட சோழீசர்மீது, "செயங்கொண்டார் சதகம்" என்னும் பெயருடன் நூல் ஒன்று இயற்றினுர். அந்நூலை நேமங் கோயிலில் செயங்கொண்டார் திருமுன்பு அரங்கேற்றஞ் செய்வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. நன்னுள் ஒன்றில் அவை கூடியது. முத்தப்பர் நூலைப் படித்துப் பொருள் விளக்கஞ்செய்யத் தொடங்கினுர். அவ்வவையில் ஊனையூர்ப் பாரதியார் என்பவர் ஒருவர் வந்திருந்தார். அவர் அவையில் எழுந்து எனக்கோர் ஐயம்; அதனைத் தீர்த்தருளவேண்டும். உடன்பாடு தெரிவித்தால் சொல்லுகிறேன் என்றுர். முத்தப்பர் ஐயத்தைத் தெரிவிக்குமாறு சொன்னுர். உடனே ஊனையூர்ப் பாரதியார்,

"ஓங்குபத்மா சூரனைக்கண் டோடியொளித் தார்விசயன்
வாங்குதனு வாற்பூசை வாங்கினுர்-ஈங்கிருக்கும்

நன்னேமச் சோழீச ஞர்செயங்கொண் டாரென்ருல்
என்னசெயங் கொண்டார் இவர்."

என்று ஒரு பாட்டால் தமது ஐயத்தைக் கேட்டார். அவையிற் கூடியிருந்தவர்கள் முத்தப்பர் இதற்கு என்ன மறுமொழி சொல்லப் போகிருரோ என்று ஆவலுடன் அவருடைய முகத்தைப் பார்த்தார்கள். முத்தப்பரோ எத்தகைய தடுமாற்றமும் அடையவில்லை. அவர் அக்கணமே எழுந்து,

"என்னசெயங் கொண்டார் இவரென்றீர் முப்புரத்தைச்
சொன்னமய மாய்ச்சமைத்த சோழீசர்-பின்னும்
சிரித்துச் செயங்கொண்டார் சித்தசனைக் கண்ணுல்
எரித்துச் செயங்கொண்டா ரே."

என்று மறுமொழி கூறினுர். ஊனையூர்ப் பாரதியார் வேறு யாதும் பேசாமல் ஊமைபோல் வாயடங்கியிருந்தார். அவையினர் பேராரவாரஞ் செய்தனர். நூல் அரங்கேற்றஞ் சிறப்பாக நடந்து முடிந்தது. நகரத்தார்கள் முத்தப்பருக்குப் பெரும் பரிசளித்துச் சிறப்புச் செய்தார்கள். அப்பொழுது முத்தப்பர்,

"பரிசிலையே வேண்டியிந்நூல் பாடிவந்தேம் மிக்குப்
பரிசிலையென் ருதளித்தீர் பற்றி-ஒருசிலையை
வில்லா வளைத்துநல்ல வெற்றிகொண்டார் பேரருளால்
எல்லாரும் வாழ்வீர் இருந்து."

என்று எல்லோர்க்கும் நல்வாழ்த்துக் கூறினுர்,

மக்கட்பேறு

முத்தப்பச் செட்டியாருக்கு மக்கள் ஐவர் இருந்தனர். அவர்களுக்குக் கருப்பஞ் செட்டி, மெய்யன் செட்டி, அழகன் செட்டி, இராமன் செட்டி, ஏகப்ப செட்டி என்று பெயர்கள் இட்டிருந்தார். இப்பெயர், "சர்க்கரைக் கருப்பஞ் செட்டி, சவ்வாது மெய்யன் செட்டி, சீனி அழகன்

செட்டி, செவத்தராமன் செட்டி, எங்கும் பராபரம் ஏகப்ப செட்டி," என்று பாட்டாகவும் அமைந்திருந்தது. மக்களும் இளமையிலேயே நன்கு கல்விகற்றுச் செய்யுள் பாடத்தக்க திறமையை அடைந்திருந்தனர். மற்றும் ஒரு பையனிடத்திலே தெய்வத்திருவருளும் அமைந்திருந்தது. அப்பையன் அகவை பதினான்கு நிரம்பப்பெற்றவன். அவன் ஒருநாள் நெல்லுக்குக் காவலாக உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருந்தான். காக்கைகளின் தொல்லை மிகுதியாக இருந்தது. அவைகளை விரட்டி விரட்டிக் கை யோய்ந்த அவன் சீற்றமடைந்து,

"காகா எனக்கதறுங் காகங்காள் இப்பொழுதே
போகாது போனாலோ பொல்லாப்பாம்-சாகாநீர்
நெல்லை அருந்துதற்கு நேர்வந்து யானுமக்குச்
சொல்லிவைத்தேன் செல்வீர் தொலைந்து."

என்று பாடினான். சில காகங்கள் நெல்லை உண்பதற்கு வந்து உட்கார்ந்து இறந்து போயின. மூத்தப்பர் அச்சமயத்தில் நேராடிவிட்டு வந்தார் அவர் காகங்கள் மாண்டு கிடத்தலைக் கண்டார். வசைபாடி ஓர் உயிருக்குத் தீங்கிழைப்பது மூத்தப்பருக்குப் பிடிக்காது. அவர் தம் வாணாளில் வசைபாடி எவருக்குந் தீமை விளைவித்தவரும் அல்லர். ஆகவே அவர், தம் மகனைப் பார்த்துத், "தலை யிருக்க வாலாடுகிறதோ?" என்று கேட்டார். அதுமுதல் அவனுக்குப் பாவியற்றும் வன்மை இல்லாமற் போய்விட்டது.

இறுதி

பல வியத்தகு நிகழ்ச்சிகளைச் செய்துகொண்டிருந்த மூத்தப்பர், தமது எழுபத்தாறாம் அகவையில் சுபானு ஆண்டு ஐப்பசித்திங்கள் ஆறாம் நாளில் இறைவன் திருவடி நீழலையடைந்தார்.

இவர் இயற்றிய நூல்கள்

1. திருமுகவிலாசம்
2. செயங்கொண்டார் சதகம்
3. செட்டிமார் வரலாறு
4. செயங்கொண்ட சோழீசர் பிள்ளைத்தமிழ்
5. பதிற்றுப்பத் தந்தாதி
6. கலித்துறையந்தாதி
7. நேமக்கலம்பகம்
8. செயங்கொண்ட சோழீசர் ஊஞ்சற்றிருநாமம்

முதலியன. இவருடைய தனிப்பாடல்கள் பல இருக்கின்றன.

---

## ௧௫. சேனாதிராய முதலியார்

பிறப்பு

ஈழவள நாட்டிலே யாழ்ப்பாணத்திலே தென்கோவையைச் சேர்ந்த இருபாலை என்னும் ஊரில் இருந்த நெல்லைநாத முதலியார் என்பவருடைய மகனாக, சேனாதிராய முதலியார் ஏறக்குறைய நூற்றுநாற்பது யாண்டுகட்கு முன்னே தோன்றினார். நெல்லைநாத முதலியாரும் நல்ல புலவர்.

கல்வி

சேனாதிராய முதலியார் தம் தந்தையாரிடத்திலே பல இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றதுடன், கூழங்கைத் தம்பிரான் என்பவரிடத்தும், மாதகல் சிற்றம்பலப் புலவர் என்பவரிடத்தும் பல நூல்களைக் கற்றறிந்தார். கூழங்கைத் தம்பிரானுக்குப் பெருந்தொகை கொடுத்து நாற்பது நாளையில் நன்னூலை நன்கு கற்றறிந்தார். தமிழ்மொழியை அன்றி ஆங்கில மொழி, போர்த்துக்கேய மொழி ஆகியவைகளையுங் கற்றறிந்தார். நினைவாற்றலும் இவருக்கு மிகுதியாக இருந்தது.

அலுவல்

நீதிமன்றத்திலே வழக்கறிஞராகவும், மொழி பெயர்ப்பாளராகவும் அலுவல் பார்த்ததன்றித் தாசில்தாராகவும் வேலை பார்த்தார்.

மாணவர்கள்

குலனருள் தெய்வம் கொள்கை மேன்மை முதலிய எல்லாவற்றினுஞ் சிறந்து விளங்கிய இவரிடம் பலர் கல்வி கற்றுச் சிறப்படைந்தார்கள். சிறந்த புலவராக விளங்கிய ஆறுமுக நாவலர்க்கும் இவரே தமிழாசிரியர். மற்றும் நீர்வேலி பீதாம்பரப் புலவர், தென்கோவை அம்பலவாண பண்டிதர், நல்லூர் சரவணமுத்துப் புலவர் முதலியோர் இவருடைய மாணவர்களாவர். இவர் காலத்தில் இருந்த புலவர்களிற் பெரும்பாலானவர்கள் இவரிடம் கல்வி கற்றவர்களே யென்பர். ஆங்கிலேயர் சிலர் கூட இவரிடம் தமிழ் கற்றறிந்தனர்.

கலைத்தொண்டு

நல்லூர்க் கந்தசாமி கோயிலில் முதன் முதலாகப் புராணச் சொற்பொழிவு செய்யும் வழக்கத்தை யேற்படுத்தியவர் இவர் தாம். இவருக்குப்பின் இவருடைய மாணவர்கள் அப்பழக்கத்தைக் கடைப்பிடித்தனர். மாணவர்கட்கு இலக்கண இலக்கியங்களைப் போதித்ததன்றி நூலியற்றல் முதலிய செயல்களிலும் இவர் ஈடுபட்டிருந்தார்.

"கொடிவளரு மணிமாடக் கோபுரஞ்சூழ்
நல்லூரில் குமர மூர்த்தி,
அடியருளத் திருளகல அமரர்முக
மலரவர அணிமான் ஈன்ற,
கொடியினொடும் பிடியினொடும் குலவுமுடம்
பிடியொடுங்கோ தண்ட மேந்தி
மிடியகல மயிலேறி விடியபர்த
தினகரன்போல் மேவி னனே."

என்பது இவர் இயற்றிய தனிப்பாடல்களில் ஒன்றாகும். ஈழநாட்டில் தமிழ்வளர்ச்சிக்குப் பெருந்துணையாக இருந்த இவர் காலமான ஆண்டு முதலிய விவரந்தெரியவில்லை.

இவர் இயற்றிய நூல்கள்

1. நல்லைவெண்பா
2. நல்லையந்தாதி
3. நல்லைக் குறவஞ்சி
4. நீராவிப் பிள்ளையார் கலிவெண்பா

முதலியனவாம். மேலும் இவர் இயற்றிய பல நூல்கள் பாதுகாக்கப் பெறாமல் மறைந்துவிட்டன.

## கசா. சங்கர பண்டிதர்

பிறப்பு

ஈழவளநாட்டில் யாழ்ப்பாணத்தில் உள்ள சுன்னாகத்தில் சைவ வேளாளர் குலத்தில் 1829-ஆம் ஆண்டில் (கலி 4931 விரோதியாண்டு சித்திரைத் திங்கள் உக ஆம் நாள் வெள்ளிக்கிழமை) சங்கர பண்டிதர் பிறந்தார். தந்தையார் பெயர் சிவகுருநாதபிள்ளை. தாயார் பெயர் தெய்வயானையம்மையார்.

கல்வி

பெரும் புலவராகி யிலங்கியிருந்த சேனாதிராச முதலியார் என்பவரின் மாணவராகிய அப்பாப்பிள்ளை என்பவரிடத்திலே கல்விகற்கத் தொடங்கினார். நிகண்டு, அந்தாதி, கலம்பகம், மாலை, உலா முதலிய நூல்களை முதலில் ஐயந்திரிபறக் கற்றுணர்ந்தார். வடமொழிப் புலமையும் இன்றியமையாததென்று அம்மொழியையுங் கற்றுணரா ந்ர். வேதாரணியம் என்னுந் திருமறைக் காட்

டில் இருந்த சாமிநாத தேசிகர் என்பவரிடத்தில் இரகு வமிசம், குமார சம்பவம் முதலிய வடமொழி நூல்களைக் கற்றார். சென்னையில் இருந்த நாகநாத பண்டிதர் என்பவரிடத்திலும் திருப்புகலூரில் இருந்த கலைஞர் (சாத்ரி) ஒருவர் இடத்திலும் வியாகரணம், தருக்கம், மீமாம்சை, நாடகம் முதலிய நூல்களைப் படித்து அவைகளிலும் வல்லவரானார். இருமொழிப் புலமையும் பெற்ற இவருடைய புகழ் யாண்டும் பரவியது.

தீக்ஷை பெறுதல்

இவருக்குச் சமயப்பற்றும் மிகுதியாக இருந்தது. தீக்ஷை பெற்றுக்கொள்ள வேண்டும் என்று எண்ணினார். முத்துசாமி தேசிகர் என்பவரிடத்திலே நிருவாண தீக்ஷை பெற்றுச் சிவபூசை புரிதலையும் மேற்கொண்டார். பிறகு சிவஞானபோதம், சிவஞான சித்தியார் முதலிய சைவ சித்தாந்த நூல்களைக் கற்றுத் தேர்ச்சி பெற்றார்.

நூலின் அருமை

இந்நாளைப்போல் அந்நாளில் வடமொழி நூல்கள் அச்சிற் பதிப்பிக்கப் பெறவில்லை. ஏடுகளைத் தேடி வடமொழி நூல்களைப் பெற்றுக் கற்பது மிகத் தொல்லையான வேலையாக இருந்தது. இவர் குன்றக்குடி மடம், திருவிடைமருதூர்ப் புத்தகசாலை முதலிய இடங்களில் மிக அரிதில் ஏடுகளைப் பெற்று, வியாகரணம், தருக்கம், அலங்காரம், அறநூல்கள், ஆகமங்கள் முதலியவைகளை எழுதிப் படித்தார். இவருடைய எழுத்துக்கள் நன்கு அமைவுடையதாக விளங்கின.

கலைத்தொண்டு

பண்டிதருடைய இல்லம் கலைமகள் திருக்கோயிலாக விளங்கியது. ஏடு பார்த்து எழுதுதல், நூல்களை ஆராய்

தல், நூல்கட்கு உரை எழுதுதல், மாணவர்கட்குப் பாடஞ் சொல்லுதல் முதலிய தொண்டுகள் இவருடைய இல்லத்தில் எப்பொழுதும் நடந்துகொண்டிருந்தன. முதலிற் சுன்னாகத்தில் குடியிருந்த இவர் பிறகு நீர்வேலியைத் தமது இருப்பிடமாகக் கொண்டு கலைத்தொண்டு செய்திருந்தார். ஆகவே இவருடைய பெயர் நீர்வேலிச் சங்கர பண்டிதர் எனவும் வழங்கியது.

இவருடைய மாணவர்கள்

இவரிடம் கல்விகற்றுச் சிறப்படைந்த மாணவர்கள் பலர். சபாபதிக் குருக்கள், சுன்னாகம் பூ. முருகேச பண்டிதர், சங்கானை அ. அருணாசல சாத்திரிகள், அராலி க. சுப்பிரமணியக் குருக்கள், அல்வாய் இராமலிங்கக் குருக்கள், சுப்பையர், நீர்வேலிச் சந்திரசேகரக் குருக்கள், சாமிக் குருக்கள், மாதகல் பரமசுவாமிக் குருக்கள், புன்னாலைக் கட்டுவன் கதிர்காமையர், சு. ஏரம்பையர், கோப்பாய் சபாபதி நாவலர், சு. நமசிவாயப் புலவர். சி. சு. சுந்தரம்பிள்ளை, தி. கந்தப்பர், தி. சிதம்பரநாதர் ஆகியோர் இவருடைய மாணவர்களில் குறிப்பிடத் தக்கவர்களாவர். இவருடைய மக்களாகிய சிவப்பிரகாச பிள்ளை, சிவகுருநாத பிள்ளை என்பவர்களும் இவரிடமே கல்விகற்றுச் சிறப்படைந்தனர்.

சமயத்தொண்டு

உலகெங்குஞ் சென்று தம்மதத்தைப் பரப்புதலை மேற்கொண்ட கிறித்து சமயத்தினர் ஈழநாட்டிற்குஞ் சென்று தமது சமயத்தைப் பொருட்டுணையாலும் அதிகாரத்துணையாலும் பரப்பிச் சைவசமயத்திற்குக் கேடு விளைத்துத் திரிந்தனர். இதனைப் பார்த்து இப்புலவருடைய உள்ளங் குமுறியது. சைவசமயத்தின் பெருமையை விரித்துரைத்தும் கிறித்துசமயத்தின் பொய்ம்மையையும், கீழ்மையை

யும் விளக்கிக் காட்டியும் கிறித்துவர்கள் சமயத்தொண்டு செய்யும் இடங்கட்கெல்லாம் தாமுஞ் சென்று சைவசமயத் தொண்டு செய்தார். கிறித்துவர்களுடைய மிரட்டல் உருட்டல்களுக்கெல்லாம இவர் சிறிதும் அஞ்சவில்லை. பல பாதிரிகளைச் சொற்போருக்கழைத்து அவர்களைத் தோற்கடித்தார். 'கிறித்துமத கண்டனம்' என்னும் நூல் ஒன்றை எழுதினார். இந்நூல் சைவசமய அறிஞர்கள் அனைவராலும் போற்றப்பெற்றது. இந்நூலைக் குறித்து, மதுரை சொ. மு. இராமசாமிச் செட்டியார் என்பவர்,

"முத்துக் குமார கவிராச சேகரன் மொய்யமரில்
தத்தித் தடக்குண்டு நாவலர் தாவச் சவிமடிந்து
பித்தங் கெடவுடல் தாமோத ரேந்த்ரன் சிதைத்தபைபிள்
செத்துக் கிடக்கு துபார்சிவ சங்கரன் தெம்முனைக்கே"

என்னும் பாடலாற் புகழ்ந்து பாடினார். சி. வை. தாமோதரம் பிள்ளை மகனாகிய அமிர்தலிங்கம் பிள்ளை,

"சீர்பட்ட தெய்வ மறையாக மங்களின் தீம்பொருடன்
நாப்பட் டெழுஞ்சிவ சங்கர பண்டித நாயகன்சொல்
பாற்பட்டு வந்த கிறித்து மதகண் டனப்பருவாய்
வாய்பட்டும் வாழ்வதுண் டோபைபிள் காணினி வையகத்தே',

என்னும் பாடலைக் கூறிப் பாராட்டினார். மேலும் சிறு தெய்வவணக்கத்தையுங் கண்டித்துப் பல சொற்பொழிவுகள் செய்தார். ஆறுமுகநாவலர் விரும்பியவாறு வண்ணைச் சைவப்பிரகாச வித்தியாசாலையில் பல சொற்பொழிவுகள் செய்தார். திருமறைக்காட்டுத் திருக்கோயில், திருவாரூர்த் திருமடம், திருத்தில்லை ஆயிரக்கால் மண்டபம், பச்சையப்ப முதலியார் உயர்நிலைப்பள்ளி ஆகிய இடங்களில் சைவசமயச் சொற்பொழிவுகள் பல செய்தார். இவருடைய சொற்பொழிவுகள் தங்குதடையற்றனவாகவும், வேதாகம சாரக் கருத்துக்கள் நிறைந்தனவாகவும், அறிஞர்கள்

வியந்துபாராட்டத் தக்கனவாகவும் விளங்கின. உரையியற்றுந் திறன், செய்யுள்பாடுந் திறன் முதலியவைகளும் இவரிடம் நன்கு அமைந்திருந்தன.

இப்புலவர் பல நூல்களை ஆராய்ந்து அச்சியற்றற்கு வைத்திருந்தார். அந் நூல்களையும தாம் இயற்றிய வேறு பல நூல்களையும் சென்னைக்குச் சென்று பதிப்பித்து வெளியிட விரும்பினார். தமது விளைநிலத்தில் ஒரு பகுதியை விற்று அப்பொருளை யெடுத்துக்கொண்டு தம் குடும்பத்தாருடன் சென்னையை நோக்கிப் புறப்பட்டார். வழியிற் புதுச்சேரியில் சில அன்பர்களின் வேண்டுகோட்படி சில நூல்களைப் பாடஞ் சொல்லிக்கொண்டும் சொற்பொழிவுகள் செய்துகொண்டுந் தங்கியிருந்தார். பேரறிஞராக விளங்கிய இவர்க்கு வாணாள் மிகுதியாக அமையவில்லை; தமது நாற்பத்திரண்டாவது அகவையில் 1871-ஆம் ஆண்டில் புதுச்சேரியிலேயே காலமானார்.

இவரால் இயற்றப்பெற்ற நூல்கள்:

தமிழ்

1. சைவப்பிரகாசனம்
2. சிராத்தவிதி
3. கிறித்துமத கண்டனம்
4. மிலேச்சமத விகற்பம்
5. சிவபூசையந்தாதி உரை

வடமொழி

6. சித்தாந்த சாராவலி லகுடீகை
7. சமக்கிருத சிவஞானபோதத் தமிழுரை
8. சட்சுலோகித் தமிழுரை
9. அகநிர்ணயத் தமிழுரை
10. சத்த சங்கிரகம்

11. அகபஞ்சசட்டித் தமிழுரை
12. பாலபாடம்
13. தாது மாலை

வெளியிடற்குப் பலபடிகொண்டு ஆராய்ந்தவை :

தமிழ்

1. தருக்கபரிபாடை
2. தேவிகாலோத்தரவிருத்தி
3. சிவஞானபோத விருத்தி
4. பௌட்கர ஞானபாத மூலம்
5. மிருகேந்திர விருத்தி

## கூ௭. விசுவநாத பிள்ளை

பிறப்பு

ஈழவள நாட்டிலே சுதுமலை என்னும் ஊரிலே சைவ வேளாண் குலத்திலே 1820-ஆம் ஆண்டில் (விக்கிரம ஆண்டு கார்த்திகைத் திங்கள்) விசுவநாத பிள்ளை பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் வைரவநாத பிள்ளை.

கல்வி

தொடக்கப்படிப்பைத் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் நல்ல நாள் ஒன்றிலே தொடங்கினர். அக்காலமுறைப்படி கல்வி கற்றார். வடமொழிப் புலமை நிரம்பப்பெற்ற கங்க பட்டர் என்னும் அந்தணரிடத்திலே வடமொழி கற்றார். அகவை பன்னிரண்டு நிரம்பும்போதே வடமொழியிலும், தமிழ்மொழியிலும் வல்லவரானர். 1832-ஆம் ஆண்டில் ஆங்கிலப் பாடசாலையிற் சேர்ந்து ஆங்கிலங் கற்றார்.

ஆசிரியர்

ஆங்கிலக் கல்வியையும் முயற்சியுடன் கற்ற இவர் தாம் கற்ற பள்ளியிலேயே ஆசிரியராக அமர்த்தப்பெற்றார்.

அப்பள்ளி கிறித்துவ சமயத்தினருடையது. பள்ளியிற் படிக்கச் சேரும் மாணவர்களைக் கிறித்துவர்களாக்கப் பெரிதும் முயல்வர். அவ்வாறே முயன்று விசுவநாதபிள்ளையும் மனமாற்றமுந் தடுமாற்றமும் அடைந்து மதமாற்றம் பெறச் செய்துவிட்டனர். அந்நாளில் அவர்கள் தொடங்கிய உதயதாரகை என்னும் பத்திரிகைக்கு ஆசிரியராகவும் விசுவநாதபிள்ளையை ஏற்படுத்தினர்.

சென்னைக்குச் செல்லுதல்

பிறகு விசுவநாதபிள்ளை சென்னைக்கு வந்தார். இங்கு அரசியல் அலுவல் ஒன்றைப்பெற்று அதில் அமர்ந்தார். அலுவலில் இருந்துகொண்டே மேலும் ஆங்கிலத்தைப் படித்தார். சென்னைப் பல்கலைக்கழகத்தார் நடத்திய தேர்வில் தேர்ந்து பி. ஏ. பட்டம் பெற்றார், பல்கலைக்கழகத்தார் விருப்பப்படி ஆங்கில நூல்கள் சிலவற்றைத் தமிழில் மொழிபெயர்த்தார. அப்புத்தகங்கள் பல பாடசாலைகளிலும் பாடப்புத்தகமாக ஏற்படுத்தப்பட்டன.

நாவலரும் விசுவநாதபிள்ளையும்

ஆறுமுகநாவலரும் விசுவநாதபிள்ளையும் அகவையில் இரண்டோராண்டுகளே ஏற்றத்தாழ்வுடையவர்கள். விசுவநாதபிள்ளையின் அறிவுமாட்சியை ஆறுமுகநாவலர் மிக வியந்து பாராட்டினர். ஆயினும் சமயக் கொள்கைகள் இடையே நின்று இருவரையும் பிரித்துக்காட்டின. இருவரும் அடிக்கடி நேருக்கு நேராகவும் எழுத்துமூலமாகவும் சொற்போரிடுவர். நாவலர் தம்முடைய முப்பதாம் அகவையில், "சைவதூடணபரிகாரம்" என்னும் நூலை வெளியிட்டார். விசுவநாதபிள்ளை இதனுடைய மறுப்பாகச், "சுப்பிரதீபம்" என்னும் நூலை வெளியிட்டார். ஒரு நாள் ஆறுமுகநாவலரும், விசுவநாதபிள்ளையும் சிதம்பரத்தில்

ஒன்று கூடினர். இருவருக்குஞ் சமயத் தொடர்பாகச் சொற்போர் தொடங்கியது. நாவலர் தமது நாவன்மையால் இவரை மட்டந்தட்டிவிட்டார். விசுவநாதபிள்ளை உடனே தமது தோல்வியை ஒப்புக்கொண்டு நாவலருக்குப் பணிந்துவிட்டார். அதன் பிறகு இருவரும் எச்செயலையும் ஒத்த கருத்துடன் உஞற்றினர். விசுவநாதபிள்ளை தாம் சைவசமயத்தைப் பழித்துரைத்ததற்குக் கழுவாயாகப் பொன்னூசியினால் தமது நாவைச் சுட்டுக்கொண்டார். இதன்பின் நாவலரும், விசுவநாதபிள்ளையும் நெருங்கிய நண்பர்களாகவே விளங்கினர்.

அகரவரிசை

இவர் பல நூல்களை எழுதினார். தமிழ் ஆங்கில அகரவரிசை நூல் ஒன்றை மாணவர்கட்குப் பயன்படுமாறு தொகுத்தமைத்தார். இந்நூல் ஆங்கிலங் கற்கும் மாணவர்கட்குப் பெரிதும் பயனுடையதாக விளங்குகின்றது.

இவரால் இயற்றப்பெற்ற நூல்கள்:

1. தமிழ் ஆங்கில அகரவரிசை
2. சுப்பிர தீபம்
3. வீச கணிதம்
4. கால தீபிகை
5. கலைஞானம்
6. அட்சரகணிதம் முதலியன

இறுதி

தமிழ் அறிஞராய் விளங்கிய இவர் தமது அறுபதாம் அகவையில் 1880-ஆம் ஆண்டு நவம்பர்த்திங்கள் இருபத்தொன்றும் நாள் இவ்வுலகவாழ்வைத் துறந்தார். 1800 ஆண்டுகட்கு முற்பட்ட தமிழர் சரித்திரம் எழுதிய வி. கனகசபைப்பிள்ளை இவருடைய மைந்தராவர்.

## கஅ. தொழூவூர் வேலாயுத முதலியார்

*பிறப்பு*

சான்றோருடைத்தெனப் பாராட்டப்பெறும் வான்றோய் புகழுடைய வளம்பெறு தொண்டை நாட்டிலே, இருபத்துநான்கு கோட்டத்துள் மூன்றுவதாகிய ஈக்காட்டுக் கோட்டத்திலே, செவ்வாய்ப்பேட்டைப் புகைவண்டி நிலையத்தில் இருந்து ஒருகல் தொலைவிலே தொழூவூர், சிறுகடல் என்னும் பெயருடைய சிற்றூர்கள் உள்ளன. இந்தச் சிறுகடல் சிற்றூரிலே 1832-ஆம் ஆண்டு (ஆகஸ்டு) ஆவணித் திங்கள் மூன்றும் நாள் வேலாயுத முதலியார் பிறந்தார். தந்தையார் பெயர் செங்கல்வராய முதலியார். தாயார் பெயர் ஏலவார் குழலியம்மை. வேலாயுத முதலியாருக்கு ஆணும் பெண்ணுமாக உடன்பிறந்தார் இருவர் தோன்றினர்.

*கல்வி*

வேலாயுதம் ஐந்தாவது அகவையில் பள்ளிக்கு அனுப்பப்பெற்றனர். தொடக்கத்தில் தெலுங்கும் வடமொழியும் பயின்றார். பிறகு தமிழறிஞர் ஒருவரிடத்திலே தமிழ் கற்றார். அன்பு, அடக்கம், அருள், பொறை, வாய்மை, தூய்மை, இன்சொல், பெரியோர் கூட்டுறவு முதலிய நற்குணங்களெல்லாம் வேலாயுதனாரிடத்தே சிறந்து விளங்கின. மகனுடைய நற்குணங்களையும், நல்லொழுக்கத்தையுங்கண்ட தந்தையார் மிகுந்த களிப்படைந்தனர். சிறுபிள்ளைப்பருவத்திலேயே தந்தையாரோடு சென்று வாணிப முறைகளையெல்லாம் வளம்பெறப் பயின்றுவந்தார். ஓர் அமயத்தில் தந்தையாரோடு வேலாயுதனார் பூடி என்னுஞ் சிற்றூருக்குச் சென்றார். அங்குத் தந்தையாருக்கு இராச பிளவை கண்டது. அதனால் அவர் இவ்வுலக வாழ்வைத் துறந்தார். வேலாயுதனாருக்கு இளம்பருவத்திலேயே குடும்

பச்சுமை தலையிலேறியது. முன்னோர் தேடிய பொருளாக வீடு ஒன்றுதான் வேலாயுதனார்க்கு எஞ்சியது. சென்னையை அடைந்து அங்கு வாழ்க்கையை நடத்தத்தொடங்கினார்.

நன்னெறிப்படரல்

இறைபரம் பொருளின்மீது நிறைபெரும் அன்பு வேலாயுதனார்க்கு நல்வினைப் பயனால் உண்டாகியது. அடிக்கடி ஒற்றியூர்க்குச் சென்று இறைவனைப் போற்றுதலை மேற்கொண்டார். இவருடைய அன்புவழிபாடு நாள் தோறும் வளர்ந்துகொண்டிருந்தது. அந்நாளில் காளவாய் குப்பண்ண முதலியார் என்பவர் ஒருவர் சென்னையில் இருந்தார். அவர் வேலாயுதனாருடைய தந்தை செங்கல்வ ராய முதலியாருக்கு நெருங்கிய நண்பர். தம் நண்பர் மகனாகிய வேலாயுதனாரை மேலும் நன்னெறிப்படுத்தல் வேண்டுமென்று எண்ணினார். அவருடைய எண்ணம் வீணாகவில்லை.

இராமலிங்க அடிகள் தொடர்பு

அக்காலத்தில் சென்னை மாநகரில், திருவருட்பிரகாச வள்ளலாராகிய சிதம்பரம் இராமலிங்க அடிகள் புகழுடன் விளங்கியிருந்தார். குப்பண்ண முதலியார் வேலாயுதனாரை இராமலிங்க அடிகளிடத்திலே கொண்டுவந்து சேர்த்தார். அடிகளாரைப் பார்த்து, "இச்சிறுவனுடைய பெயர் வேலாயுதன். இவன் இவ்விளம்பருவத்தில்தானே நல்லொழுக்கங்களிலே நனி சிறந்து விளங்குகின்றான். மேலும் நல்வழிப்படுத்தவேண்டியது அடிகளுடைய பொறுப்பு," என்றுரைத்தார். இராமலிங்க அடிகள் வேலாயுதனாரை அன்புடனேற்றார். "இவன் புதியவனல்லன், என்பிள்ளை எனக்குக் கிடைத்தான்," என்று அருமைபாராட்டினார். அன்றுமுதல் வேலாயுதனார் இராமலிங்க அடிகளிடமே

பெரும்பாலுந் தங்கலானார். அடிகளாருடைய சொற்பொழிவுகளையெல்லாம் வேலாயுதனார் கேட்டார். அறிவு விரிந்தது. வேலாயுதனாருக்கு இலக்கணப் பயிற்சியும் நன்கு அமையவேண்டும் என்று எண்ணிய அடிகள் இலக்கணச் சொற்பொழிவுகள் சிலவற்றை வேலாயுதனார்க்கு மட்டும் தனிமையில் செய்தார். இதனால் இலக்கண அறிவும் வேலாயுதனார்க்கு நன்கு அமைந்தது. நாளடைவில் செய்யுளியற்றும் திறமையும் பெற்றார். அடிகளார்க்கு மாணவர்கள் பலர் இருந்தனர். அவர்கள் அனைவரினும் வேலாயுதனாரே தலைசிறந்தவரானார்.

### பாக்கள் இயற்றல்

பிறகு வேலாயுதனார் தம்முடைய குலகுருவாகிய வயலெல்லாநெல்லூர் இரத்தின குருக்களிடம் சமயதீக்கை, விசேடதீக்கை, நிருவாணதீக்கை முதலிய சைவதீக்கைகளையெல்லாம் பெற்றுச் சைவசித்தாந்தத்தை மேற்கொண்டொழுகினார். சிவபெருமான் முதலிய கடவுளர்மீதும் தம் ஆசிரியராகிய இராமலிங்க அடிகள்மீதும் பாடல்கள் பலவற்றைப் பாடினார்.

### திருமணம்

அக்காலத்தில் மைசூரைச் சார்ந்த பெங்களூரில் திருக்கலசை கிருட்டிணசாமி முதலியார் என்பவர் ஒருவர் இருந்தார். அவருக்குச் சீரங்கம்மாள் என்னும் பெயருடைய மகள் ஒருத்தியிருந்தாள். வேலாயுத முதலியார் அப்பெண்மணியைத் திருமணஞ் செய்துகொண்டு பெங்களூரிலேயே சிலகாலம் வாழ்ந்திருந்தார். அடிக்கடி சென்னையை அடைந்து தம் ஆசிரியரையும் போற்றி வழிபட்டுக் கொண்டு சென்றார்.

அருட்பா வெளியிடுதல்

இராமலிங்க அடிகளின் பாடலை வெளிப்படுத்தி உலகினர்க்கு உதவவேண்டுமென்று அவர் விரும்பினர். பாடல்களைத் திருமுறைகளாக வகுத்து அருட்பா என்று பெயர் புனைந்து அச்சிற்பதிப்பித்து வெளியிட்டார்.

அருட்பா மறுப்பு

அந்நாளில் யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் சென்னையில் இருந்தார். "இராமலிங்க அடிகளாரின் பாடல்கள் அருட்பாவாகா; சமயாச்சாரியர் நால்வர் பாடல்களே அருட்பாவாகும்," என்று ஆறுமுக நாவலர் ஒரு மறுப்புரையை எழுப்பினர். இதனால் இராமலிங்க அடிகளாரின் கூட்டத்தினர்க்கும் ஆறுமுகநாவலரின் கூட்டத்தினர்க்கும் சொற்போர்மூண்டு நீதிமன்றம் வரை சென்று வழக்கும், எதிர் வழக்கும் உண்டாயின. பொதுமக்களோ, "யார் கடவுளுடைய அருளைப்பெற்றுப் பாடியிருப்பினும் அவைகளெல்லாம் அருட்பாக்களே யாம்," என்று தமது தீர்ப்பை வெளிப்படுத்திவிட்டனர். எதிரிகளின் நூல் ஒன்று "போலியருட்பா மறுப்பு," என்னும் பெயருடனும் பொய்பித்தலாட்டங்களுடனும் வெளிவந்துலாவியது. அப்போது வேலாயுத முதலியார், "போலியருட்பா மறுப்பென்னும் குதர்க்காரண்ய நாசமகா பரசு," என்னும் நூல் ஒன்றை எழுதி வெளிப்படுத்தினர். இத்துடன் இப்போர் இந்நாளில் ஓய்ந்தது.

உபயகலாநிதிப் பெரும்புலவர்

இராமலிங்க அடிகள் வடலூரில் தங்கியிருந்தார். அப்பொழுது வேலாயுத முதலியார் தம்குடும்பத்துடன் அங்குச் சென்று அடிகளாருடைய தொண்டில் ஈடுபட்டிருந்தார். அப்பொழுது இராமலிங்க அடிகள் வேலாயுத முதலியாரு

டைய பாடல்களை ஆராய்ந்து பார்த்தார். பாடல்கள் செம்பாகமுடையனவாகவும் இலக்கண இலக்கிய நயங்களில் சிறந்தும் விளங்கின. அறிஞர்கள் பலர் முன்னிலையில் அடிகளார், "உபயகலாநிதிப் பெரும்புலவர்," என்னும் பட்டத்தை வேலாயுதனாருக்கு வழங்கியருளினார். அறிஞர்கள் பலரும், "வேலாயுதனார்க்கு இச்சிறப்புப் பெயர் தகுதி வாய்ந்ததே" என்று கூறிக் களித்தனர்.

சென்னை வாழ்க்கையும் அலுவலும்

இராமலிங்க அடிகள் ஊனக்கண்ணுக்கெட்டாது மறைந்தார். வேலாயுதனாரின் வாழ்க்கைத் துணைவியும் விண்ணகம் புகுந்தாள். பிறகு முதலியார் சென்னையை அடைந்து முத்தியாலுப்பேட்டை தண்டையார்ப்பேட்டை முதலிய இடங்களில் தங்கியிருந்தார். இரண்டாவது திருமணமும் நடைபெற்றது. அப்போது சென்னையில் இருந்த பூண்டி அரங்கநாத முதலியார், சோமசுந்தரம் செட்டியார் என்பவர்களுடைய நட்பு வேலாயுதனார்க்கு ஏற்பட்டது. அவர்களுடைய ஏற்பாட்டினால் சென்னை இராசதானிக் கல்லூரியில் தமிழாசிரியராக அமர்த்தப்பெற்றார். பத்தாண்டுகள் அக்கல்லூரியில் ஆசிரியராக இருந்து தமிழ்த் தொண்டு செய்தார்.

மக்கள்

வேலாயுதனார்க்கு முதல்மனைவியிடத்தில் திருநாகேசுவரன் என்னும் மகனும், இரண்டாவது மனைவியிடத்தில் செங்கல்வராயன் என்னும் மகனும் தோன்றினர்.

இறுதி

தமிழாசிரியராக வேலை பார்த்துக்கொண்டும், நூல்கள் இயற்றிக்கொண்டும் தமிழ்த்தொண்டைத் தக்காங்கியற்றிக் கொண்டிருந்த இவர் 1889-ஆம் ஆண்டு பிப்ரவரித்திங்கள்

ரெண்டாம் நாள் இவ்வுலக வாழ்வைத் துறந்து இறைவன் திருவடிநீழலை யெய்தினார்.

இவர் இயற்றிய நூல்கள்

உரைநடை

1. பராசரஸ்மிருதி - ஆசார காண்டம்
2. சங்கர விஜய வசனம்
3. மார்க்கண்டேய புராண வசனம்
4. பெரியபுராண வசனம்
5. வேளாண் மரபியல்
6. திருவெண் காட்டடிகள் வரலாறு
7. யோகவித்தை
8. விநாயக சதுர்த்தி விரதம்
9. போசராச வரலாறு
10. மகாவீர சரித்திரம்

செய்யுள் [மூத்தபிள்ளையார்]

11. துவாதச நாமசங்கீர்த்தனம்
12. திருப்பாதப் புகழ்ச்சிமாலை
13. சரண தசகம்
14. மங்களம்
15. பஞ்சரத்நம்

இளைய பிள்ளையார்

16. சண்முக சரணாட்டகம்
17. திருப்பதத் திருப்புகழ்மாலை
18. திருக்கழற் பல்லாண்டுமாலை
19. சித்திரயமகவந்தாதி
20. திருத்தணிகைச் சித்திரமாலை
21. திருத்தணிகைப் பதிற்றுப்பத்தந்தாதி
22. திருத்தணிகை வெண்பாவந்தாதி
23. திருத்தணிகை நான்மணிமாலை
24. திருத்தணிகை மும்மணிக்கோவை
25. திருத்தணிகை இரட்டைமணிமாலை

26. திருத்தணிகைக் கலம்பகம்
27. திருப்போரூர்க் கலி விண்ணப்பம்
28. தனிப்பதிகங்கள்

சிவபெருமான்

29. சிவாட்டோத்தர சதநாம மஞ்சரி
30. சீபாதத் திருப்புகழ்மாலை
31. திருவடித் திருப்புகழ்மாலை
32. திருப்பதியழகாயிரத்தந்தாதி
33. அடைக்கலமாலை
34. அபயமாலை
35. சிறுவிண்ணப்பமாலை
36. சரணுகதிமாலை
37. அம்பலக்குறம்
38. கையடைமாலை
39. சந்நிதி முறையீட்டுமாலை
40. ஓலமாலை
41. தைநிய சரணியமாலை
42. கையறவுமாலை
43. அபராத க்ஷமிப்புமாலை
44. அருள்நாமபாராயணத் திரட்டு
45. மகிழ்மாக்கலம்பகம்
46. வடிவுடையம்மன் சவுந்தரியாட்டகம்

[illegible]

47. ஆளுடைய பிள்ளையார்
48. ஆளுடைய நம்பிகள்
49. இரட்டை மணிமாலை
50. தசகமாலை
51. கலிவிண்ணப்பம்
52. சிவஞான பாலையதேசிகர் மும்மணிக்கோவை
53. நெஞ்சாற்றுப்படை
54. தாதகுருநாதர் கலிமாலை
55. ஆசுகவித்திரட்டு
56. திருவருட்பிரகாசர் சந்நிதிமுறை

## கக. முகவூர் மீனாட்சிசுந்தரக் கவிராயர்

### தோற்றம்

பாண்டிவள நாட்டிலே சேற்றூர்க்கு அண்மையிலே முகவூர் என்னும் பெயருடைய சிற்றூர் சிறந்துவிளங்குகின்றது. அவ்வூரில் 1823-ஆம் ஆண்டில் கந்தசாமிக் கவிராயர் என்பவர் பிறந்து திருவாவடுதுறை யாதீனத்தையடைந்து அவ்வாதீனத்துச் சுப்பிரமணிய தேசிகரிடமும், அவ்வாதீனத்து வித்துவான் தாண்டவராயத் தம்பிரானிடமும் கல்விகற்றுச் சிறந்த புலமையடைந்து, சேற்றூர்ச் சமத்தானப் புலவராக விளங்கியிருந்து 1887-ஆம் ஆண்டில் காலமானார். மீனாட்சிசுந்தரக் கவிராயர் இவருடைய மைந்தனாகத் தோன்றினார்.

கற்கவேண்டிய நூல்களையெல்லாம் மிக இளம் பருவந் தொடங்கியே தந்தையாரிடங் கசடறக் கற்றார். அகவை இருபது நிரம்புவதற்கு முன்னரே நல்ல புலவராகச் சிறந்து திகழ்ந்தார். இவரேயன்றி இவருடைய குடும்பத்தார் எல்லோருமே சிறந்த புலவராகத் திகழ்ந்தார்கள். ஏழுபேர் ஒரு குடியிற் பிறந்து புலவராக மிளிரும் புதுமையைக் கண்ட ஓர் அறிஞர், வியப்படைந்து,

> "இருவிணிடை யேழிருடி இனமீன்கள்
> உடங்கிலங்கல் என்ன மண்ணில்,
> பெருகுபுகழ் எழுபுலவர் ஒருகுடியில்
> ஒருங்குமிகப் பிறங்கி னரால்"

என்று புகழ்ந்தோதியுள்ளார்.

### வாழ்க்கை

வள்ளல்களாக விளங்கிய செல்வர்மீது பாக்களியற்றல், நன்கொடைபெறல், சிற்றரசர்கள் போல் விளங்கிய குறுநில உரிமையாளரிடம் அவைக்களப்புலவராக இருத்

தல், விரும்பியடுத்த மாணவர்கட்கு இலக்கண இலக்கியங் களைப் போதித்தல் முதலியன இவருடைய செயல்களாக விளங்கின. இராசவல்லிபுரம் முத்துச்சாமிப் பிள்ளை, சேற்றூர்ப்பெருநிலக்கிழார் முதலியவர்களைப் புகழ்ந்து பாடிப் பரிசில் பெற்றுள்ளார். காவடிச்சிந்து முதலிய நூல்கள் பாடிய சென்னிகுளம் அண்ணாமலை ரெட்டியார் என்பவரும் இவரிடஞ் சில நூல்களை ஓதியுணர்ந்தார். இவர் சில ஆண்டுகள் எட்டையபுரம் குறுநில மன்னரின் அவைக் களப் புலவராகவும் இருந்தார். அந்நாளில் எட்டையபுரத் தில் குறுநில மன்னர்களாக இருந்தவர்கள் வேங்கடேசுவர எட்டப்ப பூபதி, வேங்கடேசுவர எட்டுப்பாண்டியன் ஆகி யோராவர்.

சமகாலப் புலவர்கள்

இவர் காலத்தில் சிறந்த புலவர்களாக விளங்கியவர் கள், அழகிய சொக்கநாத பிள்ளை, அண்ணாமலை ரெட்டி யார், விருதை சிவஞான யோகிகள், சி. சுப்பிரமணிய பாரதியார், மு. ரா. அருணாசலக் கவிராயர், சே. ரா. சுப்பிர மணியக் கவிராயர், மு. ரா. கந்தசாமிக் கவிராயர் முதலிய பலர் இவர்காலத்தில் இவரோடு நெருங்கிப் பழகிய புலவர் களாவர். வெ. ப. சுப்பிரமணிய முதலியார் இவருடைய நண்பராவார்.

இவர் இயற்றிய நூல்கள்

இவர் இராசவல்லிபுரம் முத்துச்சாமிப் பிள்ளைமீது வண்டு விடுதூது, பயோதரப்பத்து முதலிய நூல்களைப் பாடி அறிஞர் பலர் முன்னிலையில் அரங்கேற்றஞ் செய்தார். எட்டையபுரம் ஆண்டியப்பப் பிள்ளைமீது பிள்ளைத்தமிழும், உதாரசோதனை மஞ்சரி என்னும் நூலும் பாடினார். ஊற்றுமலை பெருநிலக்கிழார் இருதயாலய மருதப்ப தேவர்

மீதும், எட்டையபுரம் பெருநிலக்கிழார் வேங்கடேசுர எட்டப்ப நாயக்கர்மீதும், சேற்றூர்ப் பெருநிலக்கிழார் சுந்தரதாஸத் தேவர்மீதும் தனிச்செய்யுட்கள் பல இயற்றினார். இவருடைய பாடல்கள் பொருள் நயமுங் கருத்துஞ் சிறந்து அமையப்பெற்றனவாக விளங்கும்.

[1]"மருமலியுங் கமலமொரு வருமறியா
  திராக்குவிந்து மாது கொங்கை
உருவமையா தேங்கியினிப் பகற்காணின்
  நகைவருமென் றுடைந்து கண்ணீர்
பெருமடைபோல் பொழியுமிது பாரிவளைச்
  சேர்கனகெம் பீரா தீரா
தருநிகரா உதவுகரா நெல்லைநகர்
  வாழுமுத்துச் சாமி மாலே"

என்பது இவரால் இயற்றப்பெற்ற பயோதரப்பத்தில் ஒரு பாடலாகும். மற்றும் இவரால் இயற்றப்பெற்றன,

1. ஒருதுறைக்கோவை
2. முருகர் அநுபூதி
3. கழுகுமலைத் திரிபந்தாதி
4. திருப்பரங்கிரிப்பதிகங்கள்
5. குதிரைமலைப் பதிகம்
6. வண்டுவிடு தூது

முதலியன. இவற்றுள் சில அச்சேறி வெளிவந்துள்ளன. சில வெளிவரவில்லை.

இறுதி

இவர் பல ஆண்டுகட்கு முன்னரே காலமானார். பிறந்த ஆண்டு, காலமான ஆண்டு முதலியன விளக்கமாகவில்லை.

---

1. மருமலியும் கமலம் - மணம் மிகுந்த தாமரை. உடைந்து- இதழ்கள் விரிந்து. (மனம் உடைந்து) கண்ணீர் - கள் நீர்- கள்ளாகிய நீர், தேன், கண்ணீர். தரு - கற்பக தரு. கரா, கரத்தை - கையை உடையவனே.

## உ௦ நா. கதிரைவேற் பிள்ளை

### தோற்றம்

ஈழவள நாட்டிலே யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த மேலைப் புலோலியிலே 1874-ஆம் ஆண்டில் கதிரைவேற் பிள்ளை பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் நாகப்பபிள்ளை. இந் நாகப்பபிள்ளை முருகப்பெருமானிடத்தும் அப்பெருமானுடைய வேற்படையினிடத்தும் நீங்காத பேரன்பு பொருந்தியவர். தமது வீட்டிலேயே வேற்படையை நிலைநாட்டி வழிபாடு செய்துகொண்டிருந்தவர்.

### கல்வி

கதிரைவேற்பிள்ளை முதலில் உள்ளூரில் இருந்த வித்தியாசாலை ஒன்றில் ஆறும் வகுப்புவரையிற் படித்தார். வறிய குடும்பத்தில் தோன்றியவராதலின் மேற்கொண்டு படிக்கமுடியாமல் உள்ளூரில் நொத்தாரிசு சிதம்பரம் பிள்ளை என்பவரிடம் எழுத்தாளராக அமர்ந்து சிலகாலம் வேலைபார்த்தார். அவரோடு மாறுபாடு உண்டானமையின் வேலையை விட்டு நீங்கினார். தொடக்கப்பள்ளி யொன்றிற் சிறிதுகாலம் ஆசிரியராக வேலைபார்த்தார்.

### சென்னைக்கு வருதல்

சென்னைக்கு வந்து இங்குள்ள அறிஞர்களிடம் படித்துப் புகழ்பெறவேண்டும் என்னும் அவா இவருக்கு மிகுதியாக இருந்தது. ஆகவே, 1895-ஆம் ஆண்டில் சென்னை மாநகர்க்கு வந்து சேர்ந்தார். சிறிது காலம் குயப்பேட்டையில் தங்கியிருந்தார். பிறகு மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடத்தில் தங்கி அச்சுப்பிழை திருத்துதல் முதலிய வேலைகளைப் பார்த்தார். சிவசங்கரச் செட்டியாரோடும் இவருக்குப் பிடிக்காமற்போகவே அப்பதிப்பகத்தை விட்டு நீங்கினார். தமிழிலும் வடமொழியிலும் வல்லவர்களாக இருந்த சில

புலவர்களை யடுத்து அவர்களபால இலக்கண இலக்கியங்கள் பலவற்றைக் கற்றுணர்ந்தார். இயற்கையிலேயே நுண் மாண்நுழைபுலமுடையவராக இருந்த இவர் சொல்லாற்றலி னும் சிறந்துவிளங்கினர். ஆகவே, இவருடைய புகழ் பல இடங்களினும் பரவியது.

ஆசிரியத் தொழில்

1897-ஆம் ஆண்டிலே வேப்பேரி உயர்நிலைப் பள்ளி ஒன்றில் தமிழாசிரியராக அமர்ந்து சிறிது காலம் வேலை பார்த்தார். 1898-ஆம் ஆண்டில் மயிலாப்பூர் செந்தோம் உயர்நிலைப் பள்ளியில் வேலைபார்த்தார். 1899-ஆம் ஆண் டில் வேப்பேரியில் தங்கியிருந்தபோது சிதம்பர முதலியார் என்பவருடைய பதிப்பகத்தில் அச்சுப்பிழை பார்த்தல், அகராதி தொகுத்தல் முதலிய வேலைகளைச் செய்து தமிழ்த் தொண்டு புரிந்தார்.

மாயாவாத தும்சகோளரி

வேதாந்த நூற்கொள்கையைக் கண்டித்து இவர் பல சொற்பொழிவுகள் செய்தார். இவரை ஒரு பொருட் படுத்தி யாரும் இவர் பேச்சை மறுத்துரைக்கவில்லை. இவருடைய சொல்லாற்றலைப் புகழ்ந்த செந்தினைதையர் "மாயாவாத தும்சகோளரி" என்று இவருக்கு ஒரு பெயர் கொடுத்தார். இவர் இத்துறையில் இறங்கிச் சொற்பொழிவு செய்யக் காரணமாயிருந்தது வைதிக சைவசித்தாந்த சண்ட மாருதம் சூளை சோமசுந்தர நாயகருடைய நூல்களில் சில வற்றைக் கற்றுணர்ந்தமையேயாம். மேலும் இவர் புத்த மதம், வைணவ மதம் ஆகியவைகளின் கொள்கைகளையும் கண்டித்துப் பல சொற்பொழிவுகள் செய்தார்.

திருவருட்பாப் போர்

ஆறுமுகநாவலர், "திருவருட் பிரகாச வள்ளலார் இராமலிங்க அடிகளாரின் பாடல்கள் திருவருட்பா

ஆகா; நால்வர் பாடல்களே திருவருட்பாவாகும்,'' என ஒரு சொற்போரை அவர் காலத்தில் எழுப்பியிருந்தார். அப்போர் அந்நாளிலே நியாயசபைவரை போய் முடிவு பெற்றிருந்தது. கதிரைவேற் பிள்ளை அப்போரைப் புதிப்பித்தார். "மருட்பா மறுப்பு'' என்னும் நூல் ஒன்றை எழுதி வெளிப்படுத்தினார். இதனால் திருவருட்பிரகாச வள்ளலாரின் தொண்டர்கட்கும் இவருக்குஞ் சொற்போர் மூண்டு மிக இழிவான எழுத்துப் போர்கள் நடைபெற்றன. பிறகு நீதிமன்றம் வரைசென்று முடிவாகியது. மறைமலையடிகள் முதலிய பேரறிஞர்கள் ஒன்றுகூடி இராமலிங்க அடிகளாரின் பாடலைத், "திருவருட்பா'' என்று கூறுதல் தகும் என்று முடிவுசெய்தனர். இப்போரில் செந்திநாதையர் முதலிய சில அறிஞர்கள் இவருக்குப் பக்கத்துணையாக நின்றனர்.

திருவருட்பாப் போருக்குப்பின் இவர் குன்னூருக்குச் சென்று அங்குச் சிலருக்குத் தமிழ் கற்பித்துக்கொண்டிருந்தார். அங்குத் தமது முப்பத்து மூன்றும் அகவையில் இவ்வுலகவாழ்வைத் துறந்தார்.

இவர் இயற்றிய நூல்கள்

முப்பத்து மூன்று ஆண்டுகளே வாழ்ந்திருந்த இவர் தமிழுக்குச் செய்த தொண்டு மிகவும் போற்றற்

1. யாழ்ப்பாணப் பேரகராதி
2. ஏகாதசிப்புராணம்
3. சைவபூடண சந்திரிகை
4. சைவசித்தாந்தச் சுருக்கம்
5. சிவாலய மகோற்சவ விளக்கம்
6. சுப்பிரமணிய பராக்கிரமம்

7. கூர்மபுராணவுரை
8. நைடதவுரை
9. பழநித்தலபுராணவுரை

முதலியன இவர் இயற்றிய நூலகளாம.

சமகாலப்புலவர்கள்

இவர் காலத்தில் புலவர்பெருமக்கள் பலர் சிறந்து விளங்கினார்கள். திரு. வி. கலியாணசுந்தர முதலியார் இவருடைய மாணவர்களில் ஒருவராவார். கதிரைவேற் பிள்ளை பூவை - கலியாணசுந்தர முதலியாரிடமும் பல சைவசித்தாந்த நூல்களைக் கற்றுணர்ந்தார். சொற்பொழிவு செய்தலைக் கற்றுணர்ந்ததும் இவரிடமே. மற்றும் இவர் காலத்தில் கோ. வடிவேலு செட்டியார், பல்லாவரம் மறை மலையடிகள், எஸ். அநவரதவிநாயகம் பிள்ளை, திருமயிலை வித்துவான் சண்முகம் பிள்ளை, அப்பாவு செட்டியார், திரு மயிலை வி. சுந்தர முதலியார், முத்தமிழ் ரத்நாகரம் பானு கவி, சிவப்பிரகாச ஐயர், மாயூரம் நமசிவாயம் பிள்ளை, கோவளம் அப்பாசாமி செட்டியார், வித்துவான் சண்முக சாத்திரியார், சீவரம் வேலாயுத முதலியார், திருத்தணிகை குருசாமி ஐயர், தமிழ்ப் பண்டிதர் கந்தசாமிப் பிள்ளை, நெல்லி அப்பாச்சாமி உடையார், வல்லி ப. தெய்வநாயக முதலியார், வண்ணக்களஞ்சியம் - காஞ்சி நாகலிங்கமுனி வர், மயிலை - சிவராச பிள்ளை, செங்கற்பட்டு அரங்கசாமி நாயகர், நின்றை தங்கவேலு முதலியார், வல்லை சண்முக சுந்தரமுதலியார் முதலிய புலவர்பெருமக்கள் சிறந்து விளங்கினார்கள். இவர்கள் அனைவரும் ஒன்றுகூடி இராம லிங்க அடிகளாரின் பாடல்களைத் திருவருட்பா என் றுரைத்தல் பொருந்தும் எனவும் முடிவுசெய்தனர்.

---

## உக. சிற். கைலாச பிள்ளை

### பிறப்பு

ஈழநாட்டிலே நல்லூரிலே 1856-ஆம் ஆண்டில் சிற். கைலாசபிள்ளை பிறந்தார். தந்தையார் பெயர் திருச்சிற்றம் பலம். தாயார் பெயர் மாணிக்கவல்லி.

### கல்வி

இவர் இளமையிற் பள்ளிக்கல்வியைக் கற்று முடித்த பின் "சென்ஜோன்ஸ் காலேஜ்," என்னும் ஆங்கிலக் கல்லூரி யிற்சேர்ந்து ஆங்கிலம் படித்து உயர் வகுப்பில் வெற்றி பெற்றார். சம்பந்தப் புலவர் என்பவரிடம் இலக்கண இலக் கியங்களையுங் கற்றுத்தேறினார். மேலும் தாமாகவே பல நூல்களையும் நன்கு கற்றுப் புலமையைப் பெருக்கிக் கொண்டார்.

சில ஆண்டுகள் அரசாங்க அலுவலில் அமர்ந்திருந் தார். உடல்நலங் குன்றியதன் காரணமாக அவ்வேலையை விட்டு நீங்கினார்.

### தாமோதரம் பிள்ளைக்கு உதவி

உடல்நலங் குன்றப்பெற்ற கைலாசபிள்ளை தென்னிந் தியாவில் உள்ள சிவப்பதிகளில் இறைவழிபாடு இயற்றுவ தற்கு இங்கு வந்தார். அந்நாளிற் சென்னையில் சி. வை. தாமோதரம்பிள்ளை இலக்கண இலக்கிய நூல்களை ஆராய்ந்து வெளியிடும் பணியில் ஈடுபட்டிருந்தார். கைலாச பிள்ளையின் புலமைத்திறத்தை உணர்ந்த தாமோதரம் பிள்ளை தம்மோடு தங்கியிருந்து நூல் வெளியீடுகட்குத் துணை புரியுமாறு கேட்டுக்கொண்டார். இவரும் அவருடன் தங்கி ஏடுகளை ஒப்புநோக்குதல், பதிப்புத்தாள்களைத்

திருத்துதல் ஆகிய வேலைகளில் துணைபுரிந்துகொண்டிருந்தார்.

### நூல் இயற்றல்

சென்னையில் தங்கியிருந்தபோது இவரும் இவருடைய நண்பர்கள் இருவரும் ஆகமூன்று பேர்கள் அடிக்கடி வடதிருமுல்லைவாயில் என்னுஞ் சிவப்பதிக்குச் சென்று இறைவழிபாடு புரிதலை வழக்கமாக மேற்கொண்டிருந்தனர். புலவர்களாகிய மும்மணிகளும் மும்மணிக்கோவை என்னும் நூலை வடதிருமுல்லைவாயிற் சிவபெருமான்மீது இயற்றுதல்வேண்டும் என்று முடிவு செய்தனர். மும்மணிக்கோவை என்னும் நூல் அகவல், வெண்பா, கட்டளைக் கலித்துறை என்னும் மூவகைப் பாக்களும் வகைக்குப் பப்பத்து அமையுமாறு பாடப்படுவது கைலாசபிள்ளை அகவலைப் பாடுவதென்றும் மற்றிருவரும் வெண்பாவையும் கலித்துறையையும் பாடுவதென்றும் முடிவாகியது. விரைவில் மும்மணிக்கோவை நூல், செம்மணிக்கோவை நூலாகப்பாடி முடிக்கப்பட்டது. மற்றிருவருடைய பாடல்களைவிட இவருடைய அகவற்பா மிகவுஞ் சிறப்புற்றோங்கியது. அக்காலத்தில் இருந்த புலவர்களாகிய சபாபதி நாவலர், தொழுவூர் வேலாயுதமுதலியார் முதலிய அறிஞர்கள் இவருடைய அகவற்பாக்களைப் பெரிதும் பாராட்டிப் புகழ்ந்து பேசினர். உ. வே. சாமிநாதையரும் இவருடைய பாக்களின் திட்பநுட்பத்தை வியந்து பாராட்டினார்.

### ஆதீனத்தலைவர் பாராட்டு

உ. வே. சாமிநாதையர் கைலாசப்பிள்ளையை ஒரு முறை திருவாவடுதுறை ஆதீனத்திற்கு அழைத்துச் சென்றார். அப்பொழுது சுப்பிரமணியதேசிகர் ஆதீனத் தலைவராக எழுந்தருளியிருந்தார். தேசிகர் இவருடைய

மும்மணிக்கோவை நூலின் அகவற்பா ஒன்றைப் படித்துப் பொருளுரைக்குமாறு கட்டளையிட்டார். இவரும் அவ்வாறே செய்தார். இவருடைய பாடலைத் தேசிகர் கேட்டுப் புகழ்ந்து பாராட்டினார். பட்டுப்பீதாம்பரம் முதலியன நன்கொடையாக வழங்கினார். மேலும் ஆதீனத்தொடர்புடையவராக வைத்துக்கொண்டார். சைவசித்தாந்த நூல்களையும் இவர் கற்றுச் சிறந்து விளங்கினார்.

இயற்கை

இவர் வெளிப்பகட்டுக்காக நடிக்கமாட்டார். அமைதியும் பொறுமையும் அமையப்பெற்றவர். சொல்லாற்றலும் இவரிடம் சிறந்து விளங்கியது. இசைப் பயிற்சியிலும் இவர் சிறந்து விளங்கினார். சங்கநூற் பாடல்களில் மிகப் பயிற்சியுடைய இவர் அப்பாடல்களை அடிக்கடி பாராட்டிப் பேசுவார்.

வடதிருமுல்லைவாயில் மும்மணிக்கோவை, தனிப் பாடல்கள் சில ஆகியன இவருடைய தமிழ்ப்புலமையை நன்கு விளக்கும். இவர் 1916-ஆம் ஆண்டில் இவ்வுலக வாழ்வைத் துறந்தார்.

## ௨௨. மதுரைநாயகம் பிள்ளை

### தோற்றம்

மதுரை நாயகம் பிள்ளை 1845-ஆம் ஆண்டில் (விரோதி கிருது ஆண்டு ஆடித்திங்கள் 9-ஆம் நாள்) திருச்சிராப் பள்ளியிற் பிறந்தார். பெரும்புலவராக விளங்கிய மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கட்கு இவர் உறவினர். மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களோடும், அவர் மாணவராகிய தியாகராசச் செட்டியாரோடும் நட்புப் பூண்டு நெருங்கிப் பழகிவந்தார். பள்ளிக்கல்வியை நன்கு பயின்றிருந்ததோடு அந்நாளில் நாகூரிலும், நாகபட்டினத்திலும் புத்தகக்கடை வைத் திருந்தவரும் புலவரும் ஆகிய நாராயணசாமிப்பிள்ளை என் பவரிடத்தில் திருவிளையாடற் புராணம், பெரியபுராணம் முதலிய இலக்கியங்களையும் சமயநூல்களையும் நன்கு கற்றுச் சிறந்த அறிஞராக விளங்கினார்.

### அலுவல்

நாகை வெளிப்பாளையத்தில் நீதிமன்றத்தில் 55-ஆண்டுகள் அமீனா வேலையை மேற்கொண்டிருந்தபடியால், இவருடைய வாணாளின் பெரும்பகுதி நாகை வெளிப்பாளை யத்தில் கழிந்தது. அரசியல் அலுவலோடு இவர் ஒதுங்கி யிருக்கவில்லை. நாட்டுமக்கட்கு நன்மை பயப்பதான பொது நலத்தொண்டுகளிலும் ஈடுபட்டார்.

### சைவசித்தாந்த சபை

அந்நாளில் வைணவ சமய அறிஞர் ஒருவர் நாகை வெளிப்பாளையத்தில் திருமாலின் பெருமைகளை எடுத்துச் சொற்பொழிவு செய்யத்தொடங்கினார். அவருடைய சமய வெறி அவருடைய அறிவுக்கண்ணை மறைத்தது. தாம் பேச எடுத்துக்கொண்ட செய்தியைத் தாண்டிச் சிவபிரானை இகழத்தொடங்கினார். சிவபிரானை இகழ்ந்துரைத்தலைக்

கேட்டு மதுரைநாயகம் மனம் பதறினார். தக்கவர்களைக் கொண்டு அறிவு புகட்டவேண்டும் என்று எண்ணினார். அந்நாளில் சென்னை மாநகரிலே சைவசித்தாந்த சண்ட மாருதமாக விளங்கியிருந்த பெரியாராகிய சோமசுந்தர நாயகர் என்பவரைச் சென்னையில் இருந்து அழைத்துக் கொண்டு வந்தார். அவரைக்கொண்டு, சிவபெருமானு டைய பெருமைகளையெல்லாம் எடுத்துக்கூறிச் சைவசித் தாந்தச் சொற்பொழிவுகள் செய்வித்தார். அங்குச் சிவ ஞானியாக விளங்கியிருந்த வீரப்பசெட்டியார் முதலிய பெரியவர்களின் துணையைக்கொண்டு வெளிப்பாளையத் திலே 'சைவசித்தாந்த சபை,' என்னும் பெயருடன் சபை ஒன்றும் அமைத்தார். அச்சபையிலே அடிக்கடி சைவ சித்தாந்த சொற்பொழிவுகள் நிகழ்வதற்கும் ஏற்பாடு செய்தார். இதனால் அப்பகுதியில் வாழ்ந்திருந்த மக்கள் சைவசித்தாந்த உண்மையை உள்ளவாறுணர்ந்து உய்ந்

மதுரை நாயகமும் மறைமலையும்

பிற்றை நாளிற் பெரும் புலவராகச் சிறந்து தனித் தமிழ் மன்னராய்த் தமிழரசுபுரிந்த மறைமலையடிகளார் அக்காலத்தில் வேதாசலம் என்னும் பெயருடன் இளைஞ ராய் ஆங்கிலக் கல்வி கற்றுக்கொண்டிருந்தார். ஆங்கிலக் கல்வியோடு அமையாமல் மதுரை நாயகத்தின் ஆசிரிய ராகிய புத்தகக்கடை நாராயணசாமிப்பிள்ளையை அடுத்துத் தமிழ் இலக்கண இலக்கியங்களையும் பயிலத் தொடங்கினார். தம்மாசிரியரிடத்தே கல்விபயிலும் வேதாசலத்திடத்தே மதுரைநாயகம் அன்புகொண்டு அவரைத் தாம் நண்பராகக் கொண்டார். இருவருடைய நட்பும் பண்புடன் வளர்ந்து சிறந்தோங்கியது. வேதாசலத்திற்கு மதுரைநாயகம்செய்த

நன்மைகள் பல. ஆசிரியராகிய நாராயணசாமிப் பிள்ளையாலும் இப்பெரியவர் நட்பினாலும் வேதாசலம் திருத்தமாக வளர்ந்து புலமைநலம் நிரம்பப்பெற்றார். இப் பெரியவருடைய முயற்சியினாலேதான் வேதாசலம் சோமசுந்தர நாயகரைச் சைவசித்தாந்த ஆசிரியராகக்கொண்டு சைவசித்தாந்த நூல்களைக் கற்றுச் சிறப்படைந்தார்.

சொற்பொழிவு

மதுரைநாயகம் பிள்ளை தமது சைவசித்தாந்த சபையில் தாம் அடிக்கடி சைவசித்தாந்தச் சொற்பொழிவுகள் செய்ததன்றி வேதாசலத்தைக் கொண்டும் பலசொற்பொழிவுகள் செய்யச் செய்தார். பின்னாளில் மறைமலையடிகள் சிறந்து விளங்குதற்கு இச் சொற்பொழிவுகளும் தக்க துணையாயின.

சபைக்குக் கட்டிடம்

மதுரைநாயகம் பிள்ளை தமது சைவசித்தாந்த சபைக்குக் கட்டிடம் ஒன்றைக் கட்ட விரும்பினார். இரண்டாயிரம் வெண்பொற் காசுகள் வரை செலவு செய்து கட்டிடம் ஒன்றை அமைத்தார்.

இறுதி

1909-ஆம் ஆண்டில் இவர் தமது வேலையில் இருந்து ஓய்வுபெற்றுத் தம்முடைய ஊருக்குச் சென்றார். உறையூரைத் தமது இருப்பிடமாகக்கொண்டு தங்கினார். அங்கும் இவர் பல பொதுநலச் செயல்களில் ஈடுபட்டிருந்து 1920-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் மூன்றாம் நாள் இறைவன் திருவடி நீழலையடைந்தார். இப்பெரியவருக்கு மனைவி மக்களிருந்தனர். இவர் காலமான போது மறைமலையடிகள்,

"மணியொளிபோல் எனக்குயிராய் மன்னுசிவம் அருள்சுரந்து
துணிவுடைய பிள்ளைமையாம் பருவத்தே துணையாகப்
பணிவுடைய நினைத்தந்தென் பரிசின்கட் டுரிசகற்றி
அணிசெய்த பான்மையெலாம் அறிந்தறிந்து நைவேனால்"

"ஆராத அன்பினுடன் அடிபணிந்து நீகற்ற
நாரா யணகுரவன் திருவடியை நானணுகிச்
சாராது போயினனேல் சான்றோய்நின் பெருங்கேண்மை
சேராது பலவாறாய்ச் சென்றிருப்பேன் சிறியேனே"

"திருவருள்சேர் நினதுளத்தைச் சிவனடிக்கே ஒப்புவித்தாய்
உருவருநின் எழிலுடம்பை உருத்திரற்கே உவந்தளித்தாய்
இருமைவளர் புகழுடம்பை எந்தையடி யார்க்களித்தாய்
அருமைமகார் துயர்கூர அளித்ததுவும் அழகாமோ"

"இம்மைதனிற் பிரிந்தாலும் இனியொருகால் இசைந்திடலாம்
அம்மைதனில் நீபிரிந்தால் அணைகுவதும் உண்டாமோ
எம்மையிலும் இவையெலாம் இறைசெயலால் நிகழுவதால்
நம்மையவன் அருள்வழியில் நடத்துவது நன்றாமே"

என்னும் இத்தகையபாடல்கள் பலவற்றை இரங்கற்பாவாகப் பாடி வருந்தினார்கள்.

## உங. காசிவாசி செந்திநாதையர்

**பிறப்பு**

ஈழநாட்டிலே சுன்னாகத்தைச் சேர்ந்த ஏழாலை என்னும் ஊரிலே 1848-ஆம் ஆண்டில் (கீலக ஆண்டு ஐப்பசித் திங்கள் இரண்டாம் நாள்) செந்திநாதையர் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் சிந்நய ஐயர்.

**கல்வி**

இவர் பள்ளிக் கல்வியைப் பாங்குறப் பயின்று முடித்த பின்னர், தம் மாமனார் கதிர்காம ஐயர் என்பவரிடம் தமிழ்

இலக்கியங்களையும் வடமொழியையுங் கற்கத்தொடங்கினர். பிறகு சம்பந்தப் புலவர் என்பவரிடம் பல நூல்களைக் கற்றுணர்ந்தார். 1878-ஆம் ஆண்டில் இந்தியாவை யடைந்து திருவனந்தபுரத்திற்குச் சென்றார். அங்கு அப்பொழுது வடமொழிவல்லுநராய்ச் சிறந்து விளங்கிய சுப்பா சாத்திரி என்பவரிடத்திலும், அநந்தகிருட்டிண சாத்திரி என்பவரிடத்திலும் காவியம், தருக்கம், வியாகரணம் முதலிய வடமொழி நூல்களைக் கற்றுணர்ந்தார்.

### ஆசிரியத்தொழில்

1882-ஆம் ஆண்டில் திருநெல்வேலியில் சைவவித்தியாசாலை யொன்றில் ஆசிரியராக அமர்ந்தார். மறு ஆண்டில் நெல்லையில் நடத்தப்பெற்ற பத்திரிகை ஒன்றுக்கு உதவியாசிரியராக அமர்ந்து தொண்டு செய்தார். அந்நாளில் சிலருடைய வேண்டுகோளின்படி "சாண் சத்திரியப் பிரசண்ட மாருதம்" என்னும் மறுப்புரை நூல் ஒன்றை எழுதிக்கொடுத்தார்.

### பலசெயல்கள்

பிறகு பல ஊர்கட்குப்போய்க் காசியை அடைந்தார். அங்குச் சிலகாலம் இருந்தபின் திரும்பித் தமது ஊருக்குச் சென்றார். 1886-ஆம் ஆண்டில் கந்தபுராண நவநீதம் என்னும் நூலை எழுதி வெளிப்படுத்தினர். இணுவில் நடராச ஐயர் என்பவரிடத்தில் சிவஞான சித்தியாரைப் பாடங்கேட்டார். பிறகு இந்தியாவுக்கு வந்து "அமிர்த போதினி" என்னும் வாரவெளியீடு ஒன்றைத் தொடங்கிச் சில காலம் நடத்தினர். அந்நாளிலே கிறித்துவர்கள் "சிவனுந்தேவனு?" என்னும் பெயர்கொண்ட துண்டுப் பிரசுரம் ஒன்றை வெளியிட்டனர். அதற்குக் கண்டனம் ஒன்று எழுதுமாறு சை. இரத்தின செட்டியார் என்பவர்

இவரைக் கேட்டுக்கொண்டார். அவர் விருப்பத்திற்கு இணங்கிச், "சிவனுந்தேவனா என்னுந் தீய நாவுக்கு ஆப்பு" என்னுஞ் சிறுநூல் ஒன்றை எழுதி வெளிப்படுத்தச் செய்தார். மற்றும் பல கண்டன நூல்களையும் எழுதினார்.

சொற்பொழிவுகள்

ஐயருடைய கல்வித் திறத்தையுஞ் சொல்லாற்றலையும் உணர்ந்த பலர் ஐயரைக் கொண்டு சொற்பொழிவுகள் செய்விக்க விரும்பினர். மேலைச் சிதம்பரம் என்னுந் திருப்பேரூரில் "உலகெலா முணர்ந்தோதற் கரியவன்" என்று தொடங்கும் பெரியபுராணக் காப்புச் செய்யுளையும் "அளவாயளவதனளவாய்" என்று தொடங்கும் பேரூர்ப் புராணச் செய்யுளையும் அடிப்படையாகக் கொண்டு சொற்பொழிவுசெய்தார். திருநெல்வேலியில், "ஞானத்தின் திருவுருவை" என்னும் முதலையுடைய பெரிய புராணச் செய்யுளை அடிப்படையாகக் கொண்டு சொற்பொழிவு செய்தார். ஈழநாட்டில் ஆறு திங்கள் சைவசமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். 1901-ஆம் ஆண்டிலே மதுரையில் பல சொற்பொழிவுகள் செய்தார்.

காசிவாசி

ஐயர் 1888-ஆம் ஆண்டில் இருந்து ஏறக்குறையப் பத்து ஆண்டுகள் காசியிலே தங்கியிருந்தார். இதனால் இவருக்குக் 'காசிவாசி செந்திநாதையர்' எனவும் பெயர் வழங்கலாயிற்று.

திருப்பரங்குன்றில்

இவர் மதுரைக்கு அண்மையில் உள்ள திருப்பரங்குன்றத்தில் சிறிது காலந் தங்கி, "வைதிக சுத்தாத்துவித சைவசித்தாந்த வித்தியாசாலை" என்னும் பெயருடைய வித்தியா சாலை ஒன்றை அமைத்து அதில் மாணவர்கட்குத்

தமிழ், வடமொழி, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் உள்ள நூல்கள் பலவற்றைக் கற்பித்தார். ஒரு நாள் தெருவில் பட்டிக்காட்டான் ஒருவன் திருப்புகழைத் தப்புந்தவறுமாகப் பாடிக்கொண்டு சென்றான். அப் பாடலைக் கேட்ட செந்திநாதையருக்கு மிகுந்த சீற்றம் உண்டாகியது. ஐயர் திருப்புகழ் பாடிக்கொண்டு சென்றவனைக் கூப்பிட்டார். அவன் ஐயரிடம் வந்தான். உடனே ஐயர் அவனுடைய தலையிலே நறுக்கென்று ஒருகுட்டுப்போட்டார். அப்பேதை, ஐயர் எதற்காகக் குட்டினார் என்பது தெரியாமல் மிரள மிரள விழித்தான். ஐயர் அவனைப் பார்த்து, "திருப்புகழைத் தப்புந்தவறுமாகப் பாடுகிறாயே; உங்கள் அப்பன் வீட்டுத் திருப்புகழ் என்று நினைத்துக் கொண்டாயோ?" என்று கேட்டார். அப்பேதை மேலும் குட்டு விழுந்தாலும் விழக்கூடும் என்று அஞ்சி ஓடிவிட்டான்.[1]

கதிரைவேற் பிள்ளை தொடர்பு

யாழ்ப்பாணம் நா. கதிரைவேற் பிள்ளை இராமலிங்க அடிகளாரின் திருப்பாடல்கள் அருட்பா அன்றென்றும் "மருட்பா" என்றும் சொற்போரிட்டுத் திரிந்தார். அந் நாளில் ஐயர் அவருக்குப் பக்கத்துணையாக இருந்து பல வகையினும் உதவி செய்ததன்றி நீதிமன்றத்திற்குச் சென்று சாட்சியுங் கூறினார். மேற்படி திரைவேற் பிள்ளைக்கு "மாயாவாத தும்ச கோளரி" என்று பெயருங் கொடுத்தார்.

பதிப்பகம்

1906-ஆம் ஆண்டில் தேவகோட்டைச் செட்டியார்கள் சிலருடைய உதவியைக்கொண்டு, "செந்திநாதைய

1. இச் செய்தியைக் கூறியவர் ஐயரின் இளவல், சி. சிவசம்பு நாதையர்.

சுவாமி யந்திரசாலை" என்னும் பெயருடன் அச்சகம் ஒன்றை ஏற்படுத்தித் தாம் எழுதிய "நீலகண்ட பாடியத் தமிழ் மொழிபெயர்ப்பு," "சீகாழிப் பெருவாழ்வின் சீவ காருணிய மாட்சி," "வைதிக சுத்தா
தாந்த தததுவபபட விஞவிடை"
குறிப்பு" முதலிய பல நூல்களை அச்சிற் பதிப்பித்து வெளி யிட்டார். மேலும் கண்டன நூல்கள் பலவும் வெளிப் படுத்தினர். இவரால் எழுதப்பெற்ற வேறு பல நூல்களும் அந்த அச்சகத்தில் அச்சாயின.

இறுதி

இவ்வாறு பல வகையிலும் தமிழ்த்தொண்டு புரிந் திருந்த இவர் தமது எழுபத்தாறுவது அகவையில் 1924-ஆம் ஆண்டு மேத்திங்கள் பதினைந்தாம் நாள் இறை வன் திருவடி நீழலை அடைந்தார்.

இவரால் இயற்றப்பெற்ற நூல்கள்

1. கந்தபுராண நவநீதம்
2. சிவஞான போதவசனலங்கார தீபம்
3. ஞான ரத்திநவளி
4. சீகாழிப் பெருவாழ்வின் சீவகாருணியமாட்சி
5. தேவாரம் வேதசாரம்
6. தத்துவவிளக்கம் மூலமும் உரையும்
7. சைவ வேதாந்தம்
8. வைதிக சுத்தாத்துவித சைவசித்தாந்த தத்துவப்பட விஞ விடை
9. நீலகண்டபாடியத் தமிழ் மொழிபெயர்ப்பு
10. சாண்சத்திரியப் பிரசண்டமாருதம்
11. ஞானபோத விளக்கச் சூறாவளி
12. சிவனுந் தேவஞ என்னுந் தீயநாவுக்கு ஆப்பு
13. வீரபத்திராத்திரம்
14. விவிலிய குற்சித கண்டன திக்காரம்

15. தாந்திக தூண்ட கண்டன கண்டனம்
16. வச்சிர தண்டம்
17. மகா உக்கிர வீரபத்திராத்திரம்

முதலியன.

---

## உச. கயப்பாக்கம் - சதாசிவச் செட்டியார்

### தோற்றமுங் கல்வியும்

சான்றோருடைத்தென ஆன்றோரால் புகழ்ந்தோதப் பெற்ற வான்றோய் புகழுடைத் தொண்டை நன்னாட்டின் தலைநகராகிய சென்னை மாநகரிலே 1872-ஆம் ஆண்டிலே ஆயிரவைசியர் குலத்திலே கயப்பாக்கம் - சதாசிவச் செட்டியார் தோன்றினார். இவருடைய தந்தையார் பெயர் கயப்பாக்கம் - இரத்தின செட்டியார். கல்வியை முறைமையாகப் பயின்றார். உயர்தரக் கல்வியைப் பச்சையப்பன் கல்லூரியில் பயின்றார். 1894-ஆம் ஆண்டில் பி. ஏ. தேர்வில் முதல்வகுப்பில் தேறினார்.

### அலுவல்

சென்னை 'கஸ்டம் அவு'ஸில் அலுவல் பார்க்கத் தொடங்கினார். இவருக்கு அலுவலில் உயர்வு ஏற்பட இருந்தது. காக்கிச்சட்டை முதலியன அணிய மறுத்துத் தமக்கு வேலை உயர்வு வேண்டாமென்று கூறிவிட்டார்.

### இளமையில் வளமை

இவர் இளம்பருவத்திலேயே சிவபூசை செய்வதிலும் தேவாரம் திருவாசகம் முதலிய திருமுறைகளையோதுவதிலும் பேரார்வமுடையவராக விளங்கினார். அந்நாளில் சென்னையில், "சென்னைச் சிவனடியார் திருக்கூட்டம்" என்னும் பெயருடன் திருக்கூட்டம் ஒன்று சிறந்து விளங்

கியது. அதில் இவர் தாமும் ஓர் உறுப்பினராகச் சேர்ந்து கொண்டு திருப்பணிகள் செய்தார். சமயச் சொற்பொழிவு கள் பல செய்தார். ஒவ்வொரு சனிக்கிழமையின் மாலை யிலும் இவரும் இவருடைய நண்பர்கள் பலரும் புறப் பட்டுத் தக்கோலம் என வழங்கும் திருவூறல் சிவப்பதிக்குச் செல்வார்கள். அன்றிரவு அங்கு தங்கியிருந்து மறுநாட் காலையில் எழுந்து நீராடி உழவாரத் திருத்தொண்டு செய்யத்தொடங்குவார்கள். கோயிலுக்குள் முளைத்திருக் கும் புல்பூண்டு முதலியவைகளைக் களைவார்கள். குப்பை கூளங்களை அகற்றுவார்கள். பிறகு நண்பகல் உணவை முடித்துக்கொண்டு சமயச் சொற்பொழிவுகள் செய்து விட்டு இரவு சென்னைக்குத் திரும்புவார்கள்.

முப்மொழிப் பயிற்சி

ஆங்கிலத்தில் பி. ஏ. வரை கற்ற இவர், தமிழிலும் நல்ல பயிற்சிபெற விரும்பினார். அந்நாளில் சென்னையிற் சிறந்து விளங்கிய சில அறிஞர்களையடுத்து இலக்கண இலக்கி யங்களை நன்கு கற்றார். வடமொழியையுங் கற்கத்தொடங்கி அதிலும்வேண்டிய அளவு பயிற்சிபெற்றார். ஆகவே, இவர்க்கு முப்மொழியிலும் நல்ல பயிற்சியமைந்தது.

சிவப்பதிப் பயணம்

தேவாரம் பெற்ற பல சிவப்பதிகளையும் கண்டுபோற்ற வேண்டும் என்னும் அவா செட்டியாருக் குண்டாகியது. தென்னாட்டுச் சிவப்பதிகள் பலவற்றிற்குஞ் சென்று இறை வழிபாடு செய்தார். ஆங்காங்கு சமய வளர்ச்சிக்காகச் சொற்பொழிவுகள் பலவுஞ் செய்தார். தாம் சென்ற இடங் களில் பன்னிரு திருமுறைகளையும் நன்கு பயின்று இசை யோடு பாடிவரும் பல ஓதுவார்களைக் கண்டார். அவர் களுட் சிறந்தவர்களைச் சென்னைக் கந்தகோட்டத்துப்

பெருந்திருவிழாவில் தேவாரம் பாடுதற்கு அழைப்பிக்க ஏற்பாடு செய்து அவ்வாறே நடப்பித்தார். இவ்வாறு இரண்டு மூன்று ஆண்டுகள் நடைபெற்றன.

சைவசமய பக்தசன சபை

சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தைவிட்டுச் செட்டியார் விலகினார். "சைவசமய பக்த சன சபை" என்னும் பெயருடன் சபை ஒன்றை 1904-ஆம் ஆண்டிற் சென்னையில் ஏற்படுத்தினார். பல சிறுவர் சிறுமியர்களுக்குத் தேவாரந்திருப்புகழ் முதலியவைகளைக் கற்பித்து நன்கு பாடச்செய்தார். மேலும் அவர்களுக்குச் சைவ வினாவிடை முதலியவைகளைக் கற்பித்துச் சைவசமயத்திலே பற்றுண்டாகுமாறு செய்தார். வேறு சிலரும் செட்டியாருக்குப் பக்கத் துணையாக அமைந்து நின்றனர்.

மற்றும் பல திருத்தொண்டு

கந்தகோட்டத் திருக்கோயிலில் நால்வரை எழுந்தருளச் செய்து குடமுழுக்காட்டினார். பிறகு கலிக்கம்ப நாயனார், இயற்பகைநாயனார், மூர்த்திநாயனார், புனிதவதியார், அமர்நீதிநாயனார், சேக்கிழார், குங்குலியக்கலய நாயனார், சிவநேசர், பூம்பாவை ஆகியவர்களுடைய உருவங்களைப் பல அன்பர்களுடைய பொருளுதவியாற் செய்து கோயிலில் அமைத்துக் குடமுழுக்கு நடத்தினார்.

தமிழ்த்தொண்டு

"திராவிட வேதத்திரட்டும் தலமான்யச் சுருக்கமும்," என்னும் நூலை அமைத்து அச்சிட்டு வெளிப்படுத்தினார். இந்நூல் சிவப்பதிகட்குப் பயணஞ்செல்பவர்கட்கும் பிறருக்கும் மிகப் பயன்படுவதாயிற்று. அச்சாகாமல் இருந்த, சிவாகசிய மகேதிகாசத்தின் சில பகுதிகளை மொழியிலும், முதல் மூன்று அம்சங்களின் பொருளைத்

தமிழிலும் அச்சிட்டு வெளிப்படுத்தினர். அகத்தியமுனிவர் திரட்டியருளிய தேவாரத்திரட்டிற்கு விரிவுரை ஒன்று எழுதியும், மூவர் தேவாரம் ஏழு திருமுறைகளைப் பண் முறைக்கேற்பச் சீர்பிரித்துக் குறிப்புக்கள் எழுதியும் திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக வாயிலாக வெளியிடச் செய்தார். "சேக்கிழார் பிள்ளைத் தமிழ்," என்னும் நூலுக்கும், "திருக்கைலாய ஞானவுலா," என்னும் நூலுக்கும் குறிப்புரையெழுதி வெளியிடச் செய்தார். இத்தகைய இவருடைய அரும் பெரும் பணிக ளால் இவருடைய புகழ் திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீன மகாசந்நிதானமாக அக்காலத்தில் எழுந்தருளியிருந்த அம்பலவாண தேசிக பண்டாரச் சந்நிதி யவர்கட்கு எட்டியது. சந்நிதியவர்கள் செட்டியாரைப் பாராட்டி நன்கொடைகள் வழங்கிச் சிறப்புச் செய்தார்.

பெரியபுராண உரைக்கு வழிகாட்டி

இவரது புகழைக் கோவை வழக்கறிஞர், சி.கே. சுப்பிர மணிய முதலியார் உணர்ந்தார். செட்டியாரைத் தம் ஊருக்கு அழைத்துச் சென்று பெரியபுராண விரிவுரை யாற்றச் செய்தார். செட்டியாருஞ் சில ஆண்டுகள் அங்குத் தங்கிப் பெரியபுராணச் சொற்பொழிவு நிகழ்த்தினர். இவருடைய விரிவுரையால் அரிய பல குறிப்புக்கள் வெளிப்பட்டன. அக்குறிப்புக்களை நன்கு கருத்தூன்றிக் கவனித்த முதலியார் பெரியபுராணத்திற்கு உரை ஒன்று எழுதலாம் என்று முடிவுசெய்து பெரியபுராண உரையை எழுதத்தொடங்கினர். செட்டியார் கோவையில் தங்கிப் பெரியபுராணச் சொற்பொழிவு நிகழ்த்திய காலம் நான்கு யாண்டுகள் என்ப. செட்டியாருடைய பெரியபுராணச் சொற்பொழிவே பெரியபுராண உரைக்குக் காரணமாக அமைந்தது என்பதனை, "20-ஆண்டுகளாகப் பெருமுயற்சி

யால் திருவருட்டுணைகொண்டு இப்போது ஏழு பகுதிகளில் முற்றுப்பெற்றுத் திருத்தில்லையில் பெருவிழாக்கொண்டாடி அன்பர்கள் மகிழ்ந்து காணும் எனது பெரியபுராணப் பேருரைக்கு வித்தாக நின்றது அவர்கள் கோவையில் செய்த பெரியபுராணப் பிரசங்கங்களே யாகும்," என்று சுப்பிரமணிய முதலியாரவர்களே குறிப்பிட்டுள்ளார்கள்.

*போதகாசிரியர்*

செட்டியார் உரையாசிரியராக இருந்ததன்றி நூலுரை போதகாசிரியராகவும் விளங்கினார். இவரிடம் பல அன்பர்கள் சைவ நூல்கள் பலவற்றைக் கற்றுச் சிறப்படைந்தார்கள். அவர்களில் கயப்பாக்கம் சோமசுந்தரம் செட்டியார், ரா. சண்முகசுந்தரம் செட்டியார், பூ. ஆலாலசுந்தரம் செட்டியார் என்பவர்கள் குறிப்பிடத்தக்கவர்களாவர்.

*இறுதி*

செட்டியார் தமது இறுதிக்காலம் வரையிலும் சிவன் கோயில் திருப்பணி, சைவசமய வளர்ச்சிக்கான வேலை ஆகியவைகளிலேயே தமது முழுக்கருத்தையுஞ் செலுத்திக்கொண்டிருந்தார். தக்கோலத்தில் கூத்தப்பிரான் திருவுருவம் ஒன்று செய்வித்துக் குடமுழுக்காற்ற ஏற்பாடு செய்தார். திருவாவடுதுறை ஆதீனத்திற்கு உரிமையான திருச்சக்கரப்பள்ளி என்னும் பாடல் பெற்ற சிவப்பதியை அவ்வாதீனத்தாரைக்கொண்டு திருப்பணிசெய்து குடமுழுக்கியற்றச் செய்தார். திருவேற்காடு என்னுஞ் சிவப்பதியில் திருவிழா ஒன்றை ஏற்பாடு செய்தார். இப்படிப் பல திருப்பணிகள் செய்துகொண்டிருந்த இவர் 1929-ஆம் ஆண்டில் தமது ஐம்பத்தேழாவது அகவையில் இறைவன் திருவடிநீழலை யடைந்தார்.

## உ௫. த. கைலாச பிள்ளை

### பிறப்பு

யாழ்ப்பாணத்து நல்லூரிலே கார்காத்தவேளாளர் குலத்திலே ஏறக்குறைய தொண்ணூறு ஆண்டுகட்கு முன்னர் ஞானப்பிரகாசர் வழியிலே கைலாசபிள்ளை பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் தம்பு.

### கல்வி

இவர் கல்வி கற்கத்தொடங்கியபின், ஆறுமுக நாவலரால் வண்ணார் பண்ணையிலே ஏற்படுத்தப்பெற்ற சைவப் பிரகாச வித்தியாசாலையிலே சென்று கல்வி கற்கத்தொடங்கினார். ஆறுமுகநாவலர் இவருக்குச் சிறிய தந்தையார் ஆவர். அவ்வித்தியாசாலையில் அப்பொழுது காசிவாசி செந்திநாதையரும் ஆசிரியராக இருந்தார். பிறகு மட்டுவில் க. வேற்பிள்ளை, ஆறுமுகநாவலர் ஆகியவர்களிடத்திலேயும் படித்தார். தமிழ்மொழியை அன்றி வடமொழி ஆங்கில மொழி ஆகியவைகளையுங் கற்றுணர்ந்தார். சைவசித்தாந்த நூல்கள் ஆகமங்கள் முதலியவைகளை ஆறுமுகநாவலரிடத்திலே ஓதியுணர்ந்தார். சிவபூசை புரிதல் நல்லொழுக்க நெறிநிற்றல் ஆகியவைகளிலேயுஞ் சிறந்து விளங்கினார்.

### ஆசிரியர்

கல்வியறிவில் தேர்ச்சிபெற்றபின் இந்துசாதனப் பத்திரிகைக்கு ஆசிரியராக அமர்ந்து சிறிது காலம் அப்பத்திரிகையை நடத்தினார். அப்பொழுது சைவசமய வளர்ச்சிக்குத் தக்க முறையில் அப்பத்திரிகையில் கட்டுரைகள் எழுதினார். இவருடைய உரைநடை ஆறுமுக நாவலருடைய உரைநடையைப்போல் செம்மையானதாக அமைந்து சிறப்புடன் விளங்கியது.

கலைத்தொண்டு

உரைநடையில் இலக்கண நூல்கள் சிலவற்றை இவர் எழுதினார். காலத்திற்கேற்றவாறு நூல்களை யெழுதி வெளிப்படுத்துவதில் இவர் சிறந்து விளங்கினார். வண்ணார் பண்ணைச் சைவப்பிரகாச வித்தியாசாலைக்குத் தலைவராக அமர்ந்து அவ்வித்தியாசாலையைப் பல வழியிலும் சிறப்புடைய தாக்கினார்.

தமிழ்ச் சங்கம்

அவ்வித்தியாசாலையின் உறுப்பாகத் தமிழ்ச்சங்கம் ஒன்றை ஏற்படுத்தினார். அச்சங்கம் பலவழியிலும் பொதுநலத்தை நாடி வேலைசெய்தது. அந்நாளில் அச்சங்கத்தில் சுன்னாகம் அ. குமாரசாமிப் புலவர், புலோலி வ. குமாரசாமிப் புலவர், மானிப்பாய், ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை, மாதகல் சு. ஏரம்பையர், நீர்வேலி ச. சிவப்பிரகாச பண்டிதர், ஊரெழு சு. சரவணமுத்துப் புலவர் ஆகியோர் உறுப்பினர்களாக அமர்ந்து சங்க வளர்ச்சியை நாடித் தொண்டுசெய்தனர். மதுரையில் பொ. பாண்டித்துரைத் தேவர் சங்கம் அமைத்தபொழுது இச்சங்கத்தின் நடைமுறை முதலியவைகளை உசாவியறிந்து மதுரைச் சங்கத்தையும் அவ்வாறே இயக்கலாயினர் என்ப.

சமயத்தொண்டு

ஆறுமுக நாவலரைப்போல் இவருஞ் சமயத்தொண்டு முதலியவைகளைப் புரிந்தார். சமய வளர்ச்சியின் பொருட்டு வித்தியாசாலையின் சார்பாகச் சித்தாந்தசபை ஒன்றை அமைத்துச் சைவச் சொற்பொழிவுகள் பல நடைபெறச் செய்தார். கோயில் ஒன்றை அமைத்து அதிலே சமய குரவர்களுடைய உருவங்களை நிலைநாட்டினார். நாவலர் உருவச்சிலையையும் அமைத்து நாடோறும் வழிபாடு நடை

பெறச் செய்தார். சைவசமயத்திற்கு மாறுபாடாக நடைபெறத் தொடங்கிய செயல்களையெல்லாம் எதிர்த்து நின்று போராடினார். ஆறுமுக நாவலரைப்போல் சமயப் பழிப்புத் தெய்வப்பழிப்பு ஆகியவைகளை இவரும் பொறார். சைவ சமயப் பகைவர்கள் பலரையடக்கித் தெய்வக்கொள்கையைப் போற்றினார்.

சைவமுந்தமிழுந் தழைத்தினி தோங்க அரும்பெருந் தொண்டு செய்திருந்த இவர், வெகுதானிய ஆண்டு மாசித் திங்கள் பன்னிரண்டாம் நாளிலே இறைவன் திருவடி எய்தினார்.

## உ௬. சி. வி. சாமிநாத ஐயர்

### தோற்றமுங் கல்வியும்

செந்தமிழ் உலகில் பத்திரிகை வாயிலாகத் தண்டமிழ்த்தொண்டு செய்தவர்கள் பலர். அவர்களுள் சி. வி. சாமிநாத ஐயர் என்பவரும் ஒருவர். சி. வி. சாமிநாத ஐயர் தஞ்சை மாவட்டத்திலேயுள்ள திருவையாற்றில் 1863-ஆம் ஆண்டு பிறந்தார்.

சாமிநாதையர் ஆங்கிலக் கல்வியையுந் தமிழ்க்கல்வியையுந் தக்கவாறு கற்றார். தமிழ் இலக்கண இலக்கியங்கள் பலவற்றையும் ஓதியுணர்ந்து தமிழறிவை நன்றாகப் பெருக்கிக் கொண்டார்.

### பத்திரிகைத் தொழில்

பத்திரிகைத் தொழிலில் ஈடுபடவேண்டுமென்பது இவருடைய நோக்கமாக இருந்தது. 1885-ஆம் ஆண்டிற்

சென்னைமாநகருக்குச் சென்றார். சுதேசமித்திரன் அலுவலகத்தில் எளிதாக வேலை கிடைத்தது. உதவியாசிரியராக அமர்ந்த இவர் தலைமையாசிரியருக்கு மனநிறைவு உண்டாகும் வண்ணம் அவ்வேலையை நன்றாகப் பார்த்தார். தம்முடைய பெருமுயற்சியினாலும் திறமையினாலும் தலைமையாசிரியரேயானார். இவர் ஏழு ஆண்டுகள் வரை அப்பதவியில் இருந்து தமிழ்த்தொண்டு செய்தார்.

அறிவு வளர்க்கும் அவை

மக்களிடையில் அறிவு வளர்தற்கான வழியில் வேலை செய்யவேண்டும் என்னும் எண்ணம் சாமிநாதையருக்கு உண்டாகியது. அதன்பொருட்டுக் கழகம் ஒன்றை அமைக்க வேண்டும் என்று எண்ணினார். ஜி. சுப்பிரமணிய ஐயரும், மு. வீரராகவாச்சாரியாரும் இதன்பொருட்டுக் கழகம் ஒன்றை ஏற்படுத்தியிருந்தனர். நாளடைவில் அக்கழகம் வேலை செய்யாது போயிற்று. இவர் அக்கழகத்தை உயிர்ப்பிக்க வேண்டும் என்று எண்ணினார். இதன்பொருட்டு மிகுந்த முயற்சி செய்தார். சர். டி. முத்துச்சாமி ஐயர், பூண்டி அரங்கநாத முதலியார் முதலியோர் சாமிநாதையரின் முயற்சிக்கு நல்ல துணை புரிந்தனர். இப்பெரியார்கள் சாமிநாதையரிடம் நன்மதிப்புக்காட்டிப் பெரிதும் போற்றினார்கள். இவருடைய முயற்சி நாளடைவில் கைகூடியது. கழகம் ஒன்று அமைக்கப்பட்டதுடன், "விவேக சிந்தாமணி" என்னும் திங்கள் வெளியீடு ஒன்றுந் தொடங்கப்பட்டது.

அந்நாளில் சுதேசமித்திரன், சனவிநோதினி, ஞானபாநு முதலிய பத்திரிகைகள் வெளிவந்தன. விவேக சிந்தாமணி மக்களுடைய அறிவுவளர்ச்சிக்கான துறையில்

முழுப்பலத்துடனும் வேலை செய்யத் தொடங்கியது. சாமிநாதையர் ஆசிரியராக அமர்ந்து பல அரிய கட்டுரைகளைத் தேர்ந்தெடுத்து வெளியிட்டதுடன் தாமும் பல கட்டுரைகள் எழுதினார். அப்பொழுது சிறந்த எழுத்தாளர்களாக விளங்கிய வி. கோ. சூரியநாராயண சாத்திரியார் (பரிதிமாற் கலைஞன்), இராஜம் அய்யர், மாதவய்யர் முதலியோர் விவேகசிந்தாமணியில் கட்டுரைகள் எழுதினர். விவேகசிந்தாமணி வேதாந்தப் பத்திரிகையாக விளங்கிற்று. ஏறக்குறையப் பன்னிரண்டு ஆண்டுகள் நடைபெற்ற விவேகசிந்தாமணி 1920-ஆம் ஆண்டில் எதிர்பாராத தடங்கல்களால் நின்றுவிட்டது.

புத்தகங்கள்

விவேகசிந்தாமணி நின்றதாயினும் சாமிநாதையர் தமிழ்த்தொண்டை விடவில்லை. சிறிய புத்தகங்களைக் குறைந்த விலையில் வெளிப்படுத்தித் தமிழ்வளர்ச்சிக்கு வேலை செய்தார்.

ஜார்ஜ்டவுன்

1906-ஆம் ஆண்டிற்கு முன்பு சென்னைமாநகரம் பிளாக்டவுன், ஒயிட்டவுன் (கறுப்பர் நகரம் வெள்ளையர் நகரம்) என்று கூறப்பட்டு வந்தது. பிளாக்டவுன் என்னும் பெயரை ஒழித்துவிட்டு ஜார்ஜ்டவுன் என்று பெயர் வைக்க வேண்டும் என்று முதன்முதலாகக் கூறியவர் சாமிநாதையர். ஐயருடைய இந்த அறிவுரையை அனைவரும் ஒரே நோக்கத்துடன் ஒப்புக்கொண்டு வலியுறுத்திக் கூறினர். அப்போது சென்னைக்கு வந்த வேல்ஸ் இளவரசர் ஜார்ஜ் (பிறகு 5ஆவது ஜார்ஜ்) இதற்குத் தமது உடன்பாட்டையும் அளித்தார். பிறகு ஜார்ஜ் டவுன் என்னும் பெயர் வழக்கத்திற்கு வந்தது.

பத்திரிகைத் தொண்டு, புத்தகத் தொண்டு, நாட்டுத் தொண்டு, சமயத்தொண்டு, தமிழ்த் தொண்டு ஆகிய எல்லாத்தொண்டுகளிலும் ஈடுபட்டு நல்ல வேலை செய்த இவர் ஆங்கிலத்திலும் தமிழிலும் பல நூல்கள் எழுதினார். அந்த நூல்களின் விவரம் விளக்கமாகவில்லை. இவ்வாறு கலைத்தொண்டு செய்திருந்த இவர் 1930-ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 23-ஆம் நாள் இவ்வுலக வாழ்வைத் துறந்தார்.

## உஎ. அம்பலவாண நாவலர்

### பிறப்பு

ஏறக்குறைய நூறு யாண்டுகட்கு முன்னே ஈழவள நாட்டிலே வட்டுக்கோட்டை என்னும் ஊரில் கார்காத்த வேளாளர் குலத்தில் அம்பலவாண நாவலர் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் ஆறுமுகம் பிள்ளை. தாயார் பெயர் சுந்தரவல்லியம்மை.

### கல்வி

அம்பலவாணர்க்கு அகவை ஐந்து ஆனவுடனே தந்தையார் தம் மைந்தருக்குக் கல்விப் பயிற்சியைத் தொடங்கிவைக்க எண்ணினார். சங்கானை என்னும் ஊரில் இருந்த வேற்பிள்ளை என்னும் கணக்காயரைக்கொண்டு எழுத்தறிவித்தார். அம்பலவாணர் வேற்பிள்ளையிடஞ் சில யாண்டுகள் கற்றார். பின்னர் மட்டுவில் வேற்பிள்ளை என்னும் உரையாசிரியரிடம் தமிழ் இலக்கண இலக்கியங் களைக் கற்றறிந்தார். சுளிபுரத்தில் இருந்த கனகரத்தின முதலியார் என்பவரிடத்தில் ஆங்கிலங் கற்றார். நீர்வேலிச்

சிவப்பிரகாச பண்டிதரிடம் வடமொழி நூல்களை ஓதி யுணர்ந்தார்.

### நிருவாணதீக்கை முதலியன

இவ்வாறு மும்மொழிப்புலமை எய்திய அம்பலவாணர் பிறகு தம் குலகுருவாகிய அப்பாத்துரைக் குருக்கள் என்பவரிடம் சமயதீக்கை, நிருவாணதீக்கை முதலியவை களைப் பெற்றுச் சிவபூசை புரிதலையும் மேற்கொண்டார்.

அம்பலவாணருடைய உள்ளம் இல்லற நெறியை நாட வில்லை. துறவற வாழ்க்கையை மேற்கொள்ள விரும்பினார். மதுரையை அடைந்தார். திருஞான சம்பந்தர் ஆதீனத் தலைவரிடம் கல்லாடைபெற்றுத் துறவியானார்.

### கலையறம்

துறவியாயினோர் ஏதேனும் தொழில்புரியத் தொடங் கின் உலக நன்மையை நாடிச் செய்வது இயற்கை. அம்பலவாண நாவலர் ஆறுமுக நாவலரைப்போல் சமயப் பற்று மிக்குடையவராக விளங்கினார். சைவப்பிள்ளைகள் பாதிரிமார்களுடைய பள்ளிக்கூடங்கட்குச் சென்று கல்வி கற்பதைத் தடுக்கவேண்டும் என்று எண்ணினார். சைவத் தமிழ்வித்தியாசாலை ஒன்றை ஏற்படுத்தினார். தாமும் அதில் ஓர் ஆசிரியராக அமர்ந்து கல்வி கற்பித்தார்.

### இரண்டு நாவலர்கள்

அந்நாளில் ஆறுமுக நாவலர் சொற்பொழிவுகள் பல செய்து சீர்த்தியுடன் திகழ்ந்தார். அம்பலவாணர் ஆறுமுக நாவலரின் பெருமையை அறிந்தார். ஆறுமுக நாவலரு டைய சொற்பொழிவுகளைக் கேட்க விரும்பினார். அவர் சொற்பொழிவு செய்யும் இடங்கட்குச் சென்று சொற்

பொழிவுகளைத் தொடர்ந்து கேட்டுக்கொண்டிருந்தார். அவரைப்போல் தாமுஞ் சொற்பொழிவுகள் செய்து சீர்த்தி பெறவேண்டுமென்று எண்ணினார். ஆறுமுக நாவலரையே தம்முடைய ஆசிரியராக எண்ணிக்கொண்டார். தாமும் ஆறுமுக நாவலரைப்போல் சொற்பொழிவுகள் செய்யத்தொடங்கினார். இவருடைய சொற்பொழிவுகளுஞ் சிறந்து விளங்கின. இவருடைய சொற்பொழிவுகளைக் கேட்டு மகிழ்ந்த பொதுமக்களுஞ் செல்வர்களும் இவருக்கு மிகுந்த ஊக்கம் கொடுத்தனர். ஆறுமுகநாவலர் அம்பலவாண நாவலரைப்பற்றிக் கேள்விப்பட்டார். இவரையழைத்து மிகுந்த அன்பு பாராட்டினார். நாவலர் முதியவராக இருந்த அக்காலத்தில் அம்பலவாணர் இளைஞராக விளங்கினார். நாவலர் காலமானபிறகு அவர்மீது அம்பலவாணர் "சற்குருமணிமாலை" என்னும் பெயருடன் நூல் ஒன்றைப் பாடி அச்சிட்டு வெளிப்படுத்தினார்.

செட்டியார்களும் நாவலரும்

அந்நாளில் நாட்டுக்கோட்டைச் செட்டியார் இருவர் வாணிகத்தின் பொருட்டு ஈழநாடு சென்றிருந்தனர். புலவர்களாக விளங்கிய அச்செட்டியார்களின் பெயர், சின்னச் சொக்கலிங்கச் செட்டியார், பெரிய சொக்கலிங்கச் செட்டியார் என்பது. இவர்கள் இருவரும் அம்பலவாணருடைய [illegible] ங் கல்விக்கிறமையையும் உணர்ந்து மிகுந்த பற்றுக்கொண்டார்கள். சொற்பொழிவு செய்விக்கும்படி இந்தியாவில் உள்ள திருநெல்வேலிக்கு அழைத்துக் [illegible]

ஏற்படுத்தி அதில் தங்கியிருக்கச் செய்தார்கள். நெல்லையப்பர் கோயிலில் காந்திமதியம்மை திருமுன்புள்ள வசந்த விலாசமண்டபத்தில் சொற்பொழிவு நடைபெறுவதற்கு

ஏற்பாடாயிற்று. சொற்பொழிவு நடைபெறவேண்டிய இடத்திற்குக் குடை, கொடி, ஆலவட்டம் முதலிய சிறப்புக் களோடும் மேளதாளத்தோடும் அழைத்துச் சென்று சேர்த்தனர். அப்பொழுது சைவசமயச் சொற்பொழிவு ஒன்று இவராற் செய்யப்பட்டது. அச் சொற்பொழிவு கேட்டவர்கள் அனைவரையும் மகிழ்ச்சிக்கடலுள் ஆழ்த்தி யது. சொற்பொழிவின் முடிவில் அங்குள்ள செல்வர்களால் இவருக்கு ஆயிரம் வெண்பொற்காசுகள் நன்கொடை வழங்கப்பெற்றன.

புராணச் சொற்பொழிவு

பிறகு மேற்கூறிய மண்டபத்திலேயே அன்பர்கள் பலர் விரும்பியவாறு ஓராண்டுக்காலம் திருவாதவூரர் புராணச் சொற்பொழிவு நடத்தினர்.

திருஞானசம்பந்தர் மடம்

திருநெல்வேலியில் திருஞானசம்பந்தர் திருமடம் ஒன்று அமைக்க வேண்டுமென்று இவர் எண்ணினர். தம் எண்ணத்தை அன்பர்களுக்குத் தெரியப்படுத்தினர். அன்பர்கள் ஒருங்குசேர்ந்து பணந்திரட்டி ஒரு கட்டிடம் கட்டிக்கொடுத்தார்கள். அக்கட்டிடத்தில் திருஞான சம்பந்தர் திருவுருவத்தை நிலைநாட்டித் திருஞானசம்பந்தர் திருமடம் என்று பெயரிட்டார். நித்திய வழிபாடு குரு பூசை முதலியன நடைபெறுதற்கும் ஏற்பாடு செய்தார்.

நாவலர்

இவர் இந்தியாவில் உள்ள சிவப்பதிகள் பலவற்றையும் போற்றி வழிபட்டுக்கொண்டு திருவாவடுதுறைக்குச் சென் றார். அங்கு அப்பொழுது தலைவராக அமர்ந்திருந்த அம்பல வாண தேசிகரைக் கண்டு உரையாடினர். அத் தேசிகர் இவருடைய இலக்கண இலக்கியத் திறமையை ஆராய்ச்சி

செய்தார். இவருடைய சொல்வன்மை தேசிகருக்கு மகிழ்ச்சியை அளித்தபடியால் "நாவலர்" என்னும் சிறப்புப் பெயரை வழங்கினார்.

பல இடங்களில் சொற்பொழிவு

இவருடைய சொல்லாற்றல் சிறந்து விளங்கியபடியால் இவரைக்கொண்டு, காரைக்குடி, தேவகோட்டை, கண்டனூர் முதலிய செட்டிமார்நாட்டு நகரங்களில் புராணச் சொற்பொழிவுகள் செய்வித்தார்கள். பெரியபுராணச் சொற்பொழிவு செய்வதில் இவர் மிகுந்த தேர்ச்சி பெற்றவர். தேவகோட்டையில் உள்ள தனவைசியச் செல்வர்கள் விரும்பியவாறு தேவகோட்டையில் தங்கி இரண்டாண்டுகள் சொற்பொழிவு நடத்தினார். இறுதியில் இவருக்கு மிகுந்த சிறப்புக்கள் செய்து பன்னிரண்டாயிரம் வெண்பொற்காசுகள் நன்கொடை வழங்கினர். அச்சொற்பொழிவுச் சிறப்புத் தனிநூலாக எழுதப்பெற்று அச்சிடப் பட்டுள்ளது.

தில்லையில் மடம்

அம்பலவாணர் தமக்குத் தேவகோட்டையில் கிடைத்த பொருளைக்கொண்டு தில்லையில் ஒரு மடம் அமைத்து அதற்கு "ஆறுமுகநாவல சந்தான ஞானசம்பந்தசுவாமி ஆதீனத் திருமடம்" என்று ஒருமுழ நீளமுள்ள பெயரை அமைத்து இறுதிவரை அம்மடத்திலேயே தங்கியிருந்தார்.

சொற்பொழிவு செய்தலிலேயே நாள்கழித்த இவர் நூல்கள் சிலவற்றை ஆராய்ந்து அச்சிட்டார். சில நூல்களை இயற்றினார். ஆங்கிரச ஆண்டு சித்திரைத் திங்கள் இருபத்து மூன்றும் நாள் தில்லையிலேயே திருவடிப்பேறு பெற்றார்.

ஆராய்ந்தும் இயற்றியும் பதிப்பித்த நூல்கள்

1. பௌட்கர சங்கிதாபாடியம்
2. அகோர சிவாசாரியார் பத்ததி
3. பிரமதருக்கத்தவம்
4. திருவாதிரைத் திருநாள் மகிமை
5. சற்குரு மணிமாலை
6. வேணுவன லிங்கோற்பவம்
7. அருணாசலமான்மியம்
8. சிவத்துரோக கண்டனம்

அச்சேறுதன

1. பெரியபுராணபாடியம்
2. ஆரியதிராவிடப் பிரகாசிகை
3. சித்தாந்தப் பிரபோதம்
4. தட்சாதர்சம்
5. சைவசந்நியாச பத்ததி

## உஅ. மு. ரா. அருணாசலக் கவிராயர்

பிறப்பு

நன்பாவலர்புகழ் தென்பாண்டி நாட்டிலே, நாற்றிசை புகழுஞ் சேற்றூருக்கு அண்மையில் உள்ள முகவூரிலே, 1852-ஆம் ஆண்டிலே அருணாசலக்கவிராயர் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் இராமசாமிக்கவிராயர். இவர் தோன்றிய குலம் சைவவேளாளர் குலம். (இவருடைய பெரிய தந்தையாராகிய கந்தசாமிக்கவிராயர் என்பவரும் அவருடைய மக்களாகிய[1] மீனாட்சிசுந்தரக்கவிராயர் பழநிக் குமாரத்தம்பிரான் என்பவர்களும் சிறந்த புலவர்களாக விளங்கியிருந்தார்கள்.) இவருடன் பிறந்தவர்கள் சே. (மு) ரா. சுப்பிரமணியக்கவிராயர், மு. ரா. கந்தசாமிக்கவிராயர் என்பவர்களாவர்.

---

1. இவர் வரலாறு முன்னே வெளியாகியிருக்கிறது.

கல்விப் பயிற்சி

திருவாவடுதுறை யாதீனத்தில் சின்னப்பட்டத்தில் நமசிவாயதேசிக மூர்த்திகளிடம் இலக்கண இலக்கியங்களை நன்கு பயின்று சிறந்த புலமை பெற்றார். "குலவித்தை கல்லாமற் பாகம்படும்" என்பர் பெரியோர். அறிஞர் வழி முறையில் தோன்றிய இவருக்குக் கல்விப் பயிற்சி எளிய முயற்சியாலேயே அமைந்துவிட்டது.

வாழ்க்கை

பழந்தமிழ்ப் புலவர் திருக்கூட்டத்தைச் சேர்ந்த இப் புலவர்பிரான் ஒருவருக்குக்கீழ் அலுவல் பார்க்கும் நிலையை வெறுத்தார். ஒருவரை அதிகாரஞ் செய்பவர்கள் தமக்குக் கீழ்ப்பட்ட அறிவினரைத்தான் அதிகாரஞ் செய்யலாம். செல்வச்செருக்காலும் அதிகாரச் செருக் காலும், தம்மினும் மேம்பட்ட அறிவாளிகளையும் அதி காரஞ்செய்யும் கயமைக்குணம் சிலரிடம் அமைந்திருக் கிறது. இதனை நன்கு உணர்ந்திருந்த கவிராயர் எவருடைய அதிகாரத்தின்கீழும் அலுவல் பார்க்கவிரும்பவில்லை. நூலா ராய்ச்சி மாணவர்கட்குக் கல்வி போதித்தலை விருப்பம் போற் போதித்தல் முதலிய செயல்களில் ஈடுபட்டிருந் தார். அழுத்தமான தன்மதிப்பு உடையவர். பாட்டுப் பாடி வறுமையினால் பரிசுபெறுதலை மேற்கொண்டிருந்தா ராயினும் தம்மை உடன்பிறந்தவரைப்போலப் போற்றி மதிக்காத எக்கொடையாளரிடமும் ஏகுவதே இல்லையென் னும் உறுதியை இறுதிவரை மேற்கொண்டிருந்தார். சிறிது நாள் மதுரைத் தமிழ்ச்சங்க அலுவலகத்தில் சங்கப்புலவர் களுள் ஒருவராய் வேலை பார்த்ததையன்றி வேறெங்கும் திங்களூதியத்தில் வேலை பார்க்கவில்லை. இவரோடு நெருங்கிப் பழகிய நண்பர் ஒருவர் இவரைப் பார்த்துத், "தாங்கள்

ஏதேனும் ஒரு கல்லூரியில் தமிழ்ப் புலவராகத்தொடர்ந்து வேலை பார்த்தால் பொருண்முட்டுப்பாடில்லாமல் இனிதாக வாழ்க்கை நடத்தலாம்,'' என்று கூறினார். இதனைக்கேட்ட கவிராயர், "ஆம்; அதனை நானும் நன்கு உணருவேன். ஆனால், ஒருவருடைய அதிகாரத்திற்குக்கீழ் வேலை பார்க்கச் சென்றால் பலவகையான கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டு நடக்கவேண்டியதாக இருக்கும். அவ்வாறு ஒருவருடைய அதிகாரத்தின்கீழ் நான் கட்டுப்பட்டிருத்தலை விரும்பவில்லை,'' என்று கூறிவிட்டார்.

ஆதீன அழைப்பு

திருவாவடுதுறை ஆதீனத்தலைவர் அருணாசலக்கவிராயரைத் தம் 'ஆதீனத்திற்கு' அழைத்துப் பலருக்குப் பாடம் போதிக்கச் செய்யலாம் என்று எண்ணினார். "திருவாவடுதுறை யாதீனத்திற்கு வந்திருந்து மாணவர் பலருக்குப் பாடம் போதிக்கவேண்டும். தனித்த இருப்பிடம், தனித்த சமையல் முதலிய நலன்களெல்லாம் ஏற்பாடு செய்யப்பெறுவதோடு தகுந்த திங்கள் ஊதியமுந் தரப்படும்; காலம், கட்டுப்பாடு முதலிய எவ்வகையான கடுமைகளும் இல்லாமல் தங்கள் நோக்கம்போல் பாடஞ் சொல்லிவைக்கலாம். இந்த வேலை முன்பு உங்களுடைய இளவல் பார்த்த வேலை தான் என்பதையும் நினைப்பிக்கின்றோம். உடனே வந்திருந்து நமது எண்ணத்தை நிறைவேற்றுவீர்கள் என்று எதிர்பார்க்கின்றோம்,'' என்று திருமுகம் ஒன்று அனுப்பினார். கவிராயர் அம்முடங்கலைத் தம் நண்பர் சிலரிடம் காட்டினார். "கட்டுப்பாடு இல்லாத வேலையே இவ்வுலகத்தில் இல்லை. முதலில் இவ்வாறு தான் இயம்புவார்கள். வேலைக்குச் சென்றுவிட்டாலோ எல்லா வகையான கட்டுப்பாடுகளும் ஏற்பட்டுவிடும். பிறகு நம்முடைய விருப்பம்போல் நடப்பதென்பது [illegible]

முடியாததாகப் போய்விடும்," என்று கூறியதுடன், "தமக்கு உடல்நலம் போதியவாறு இல்லாமையால் தாம் அந்த வேலைக்கு வரமுடியாமல் இருக்கிறது," என்று ஆதீனத்திற்குப் பதில் எழுதிவிட்டார்.

தமிழ்த்தொண்டு

தமிழ்த்தொண்டு செய்வதில் கவிராயருக்கு அளவு கடந்த ஆர்வம் இருந்தது. வேணுவனத்தலபுராணம், காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ், திருச்செந்தூர்ப் பிரபந்தத் திரட்டு, திருக்குற்றாலத் தலபுராணம், திருக் குற்றாலக் குறவஞ்சி ஆகிய நூல்களுக்குக் குறிப்புரை யெழுதித் திருத்தமான பதிப்பாக வெளிப்படுத்தினார். திருக்குறள், திருப்பரங்கிரிப் புராணம், திருச்செந்தூர்த் தலபுராணம், முதலியவைகளை எளிய உரைநடையில் எழுதி வெளிப்படுத்தினார். இவர் இயற்றியனவும் பதிப்பித் தனவுமான நூல்கள் மிகவும் எளிய முறையில் அமைந்து மிகக் கற்றோர்கட்கே அன்றி மற்றோர்கட்கும் பயன்படத் தக்கவகையில் விளங்கின. எல்லோருக்கும் நன்கு விளங்க வேண்டுமென்பதே இவருடைய நோக்கமாக இருந்தது. திருக்குறள்மூலமும் பரிமேலழகர்உரையும் ஆசிரியர் உதவியில்லாமல் மாணாக்கர்களால் கற்கமுடியாதவை. அந் நூலை ஆசிரியர் துணையில்லாமல் குறைந்த கல்வி யறிவுடை யவரும் எளிதாகக் கற்றுணருமாறு தெளிபொருள் விளக் கம் எழுதித், "திருக்குறள் மூலமும் தெளி பொருள் வசனமும்" என்னும் பெயருடன் வெளிப்படுத்தினார். அந்நூல் எல்லோருக்கும் பயன்பட்டுக் கல்வி கற்பவர்கட் குச் சிறந்த துணையாக அமைந்தது. மற்றும் இவருடைய நூல்களெல்லாம் எளிமை அமைந்து சிறந்து விளங்கு மாறே பதிப்பிக்கப்பட்டன.

வெள்ளகால் ப. சுப்பிரமணிய முதலியார் இவருக்கு ஆருயிர் நண்பராக அமைந்து விளங்கினார். அவர் கம்பராமாயணசாரந் திரட்டியபோது அவருக்கு உறுதுணையாக நின்று அரிய பாடல்களைத் தொகுத்துக் கொடுத்தார். அவர் இயற்றிய நெல்லைச்சிலேடை வெண்பாவையும் ஆராய்ந்து திருத்தஞ் செய்து கொடுத்தார். இருவரும் ஒருவருக் கொருவர் உதவிசெய்து கொள்வது இயற்கை

வாழ்ந்திருந்த இடங்களும் நண்பர்களும்

இவர் இளம் பருவத்தில் முகவூரில் இருந்தார். க கற்கத் தொடங்கியபோது திருவாவடுதுறையில் இருந்தார். பிறகு சிவகாசி, மதுரை, திருப்பரங்குன்றம் ஆகிய இடங்களில் தங்கியிருந்தார். இவருடைய உடன்பிறந்தவர்கள் முதலிய புலவர்களையன்றித் திருநெல்வேலி கவிராய நெல்லையப்பபிள்ளை, அழகிய சொக்கநாதபிள்ளை, சென்னிகுளம் அண்ணாமலை ரெட்டியார், குன்னூர்க் குமாரசாமி முதலியார், சோழவந்தான் அரசஞ்சண்முகனார் முதலிய புலவர் பெருமக்கள் கவிராயரோடு நெருங்கிப் பழகிய நண்பர்களாக இருந்தார்கள். இவர் நூல்கள் பல இயற்றியதன்றித் தனிப்பாடல்களும் பல பாடியுள்ளார். இவர் நோய் வாய்ப்பட்டிருந்த சமயத்தில் இவருடைய மருத்துவச் செலவிற்காக வெ. ப. சுப்பிரமணிய முதலியார் இருபத்தைந்து வெண்பொற் காசுகள் உதவினார். அப்போது கவிராயர்,

[1]"நானூறு நீங்குமா நாடிநீ நன்களித்த
காணூறும் பெற்றுக் களிப்புற்றேன்—தேனூறு
சொற்சுப் பிரமணிய துங்கா துதிமிகும்வீ
பற்சுமுன்முன் முன்போல் பவா"

என்று புகழ்ந்துபாடினார்.

1. நான் ஊறு - நான் நோய்த்தொல்லை. கால்நூறு-இருபத்தைந்து. வீபற்சு - அருச்சுனன். வீபற்சுமுன் - வீமன். வீமன் முன் - தருமன். தருமன்முன் - கர்ணன்.

“சாமி உனைப்பரங் குன்றினில் தேடித் தவித்துவந்தேன்
காமி எனத்தள்ள லாகாது தள்ளக் கருதுவையேல்
நீமிக வோடித் தினைப்புனத் தேயன்று நின்றகதை
பூமி யறியும் அதைநினை வுற்றுப் புரந்தருளே”

என்பது இவரால் பாடப்பெற்ற திருப்பரங்கிரி அலங்காரப் பாட்டில் ஒன்று.

இவர் இயற்றியனவும் பதிப்பித்தனவும்

1. சிவகாசித்தலபுராணம்
2. சிவகாசிப் பதிற்றுப்பத்தாந்தாதி
3. ஆறுமுக நாவலர் ,, ,,
4. சிவகாசிக் கலி விருத்த அந்தாதி
5. சிவகாசி வெண்பாவந்தாதி மூலமும் உரையும்
6. பர்வதவர்த்தனியம்மை பிள்ளைத்தமிழ்
7. சேறைத் தவம்பெற்ற நாயகி பிள்ளைத்தமிழ்
8. திருப்பரங்கிரிப் பிள்ளைத்தமிழ்
9. பரங்கிரிப் பாமாலை
10. பரங்கிரிக் கலித்துறை யந்தாதி
11. பரங்கிரிப் பதிற்றுப் பத்தந்தாதி
12. பரங்கிரி வெண்பாவந்தாதி
13. பரங்கிரியலங்காரம்
14. பரங்கிரி மும்மணிக்கோவை
15. பரங்கிரி அநுபூதி
16. பரங்கிரிக்கோவை
17. ஒற்றைக்கடை
18. ஒற்றைக்கடை இரட்டைமணிமாலை
19. ஒற்றைக்கடை மும்மணிக்கோவை
20. திருக்குறள் வசனம்
21. திருப்பரங்கிரிப் புராண வசனம்
22. திருச்செந்தூர்ப் புராண வசனம்
23. திருக்குறள் திரட்டும் தெளிபொருள் வசனமும்
24. திருக்குறள் மூலமும் தெளிபொருள் வசனமும்

பதிப்பு

1. வேணுவனத்தல புராணம் குறிப்புரையுடன்
2. காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ் குறிப்புரையுடன்
3. நெல்லைவருக்கக் கோவை
4. திருச்செந்தூர்ப் பிரபந்தத் திரட்டு
5. திருக்குற்றாலத் தலபுராணம் குறிப்புரையுடன்
6. திருக்குற்றாலக் குறவஞ்சி குறிப்புரையுடன்

இக்கவிராயரவர்களை நான் 1927-ஆம் ஆண்டில் திருப்பரங்குன்றில் கண்டு உரையாடினேன். அன்பும் அருளும் அமைந்த உள்ளத்தவர். தாம் இயற்றிய திருப்பரங்கிரிப் பிரபந்தத் திரட்டு என்னும் நூல் ஒன்றை அன்புடன் வழங்கியருளினர். நீண்டகாலம் உலகில் வாழ்ந்திருந்து தமது எண்பத்தேழாம் அகவையில் 1939-ஆம் ஆண்டில்,

"மண்ணாட்டுப் புலவர்குழாத் தினிதுறைந்தாய்
 இதுகாறும் மண்ணோர் போற்றும்
விண்ணாட்டுப் புலவர்குழாத் தினிதுறவோ
 எம்மைவிட்டு விலகிச் சென்றாய்
பண்ணாட்டுப் பாவரசே எமைப் பிரிந்தாய்
 நீயெனினும் பாரில் நின்சீர்
உண்ணாட்டிப் பலபகலும் உனைப்பிரியா
 உளத்துடன்யாம் உறைகின் றோமே."

என்று புலவர்கள் இரங்குமாறு இவ்வுலகவாழ்வைத் துறந்து முருகன் திருவடிநீழலை அடைந்தார்.

கவிராயர் குடும்பத்தவர் எழுவர் ஒரே காலத்தில் புலவர்களாக விளங்குதலைக் கண்டு மகிழ்ந்த வெ. ப. சுப்பிரமணிய முதலியார்,

“கந்தசா மிப்பெயரும் இராமசா
மிப்பெயரும் கவினப் பூண்டு
வந்தஇரு பணைமுனதிற் கிளைத்தகிளை
பழநிக்கு மார சாமி
நந்துமீ னுட்கிசுந்த ரம்பினதில்
கிளைத்தகிளை நலமி குந்த
சந்தவரு ணுசலஞ்சுப் பிரமணிய
னெனுகந்த சாமி யர்லோ”

என்று தாம் கொடுத்த சிறப்புப்பாயிரம் ஒன்றில் வியந்து பாடியுள்ளார்.

---

## உக. ம. நா. சோமசுந்தரம் பிள்ளை

### பிறப்பு

நற்றிணைக்கு உரையெழுதிப் பதிப்பித்த பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயரின் முதற்றமிழாசிரியரான நாராயணசாமிப்பிள்ளையின் அருமைத் திருமகனுகச் சோமசுந்தரம் பிள்ளை 1869-ஆம் ஆண்டு தஞ்சைமாவட்டத்துள்ள மன்னார்குடியிலே பிறந்தார்.

### கல்விப் பயிற்சி

தந்தையாராகிய நாராயணசாமிப் பிள்ளை பெரும் புலவர். மன்னார்குடியில் அந்நாளிருந்த கிறித்தவக் கல்லூரி ஒன்றில் தமிழாசிரியராக இருந்தார். இவர் தமிழில் நல்ல பயிற்சியும் ஆர்வமும் உடையவராதலின், தமக்குக் கல்லூரியில் ஓய்வு கிடைத்த போதெல்லாம் சுற்றுப்புறத்தில் உள்ள ஊர்களுக்குச் சென்று தமிழ்த்தொண்டு செய்தார். இவரால் தமிழ்நலம் உணர்ந்து தமிழார்வம் பெற்றுச் சிறப்படைந்தவர்கள் பலர். நாராயணசாமி ஐயர் இவரிடத்தில் நெருங்கிப் பழகியபோது ஐயருக்குத் தமிழார்வத்

யைப் புகட்டினார். தமிழ்நூல்கள் சிலவற்றைப் பாடஞ் சொன்னார். நாராயணசாமி ஐயர் பின்னாளிற் சிறப்படைந்து விளங்கினார். "மகனறிவு தந்தை யறிவு" என்பது பெரியோர் வாக்கு. இம்மொழி சிலவிடங்களிற் பொய்த்துப் போமாயினும் பலவிடங்களில் மெய்ம்மையாகியே தீரும். எல்லோருக்கும் தமிழ்நலத்தைப் போதித்துவந்த நாராயணசாமிப் பிள்ளை தம் கான்முளையைக் கவனியாமல் விட்டுவிடவில்லை. நான்காம் அகவை தொட்டே கல்வியைக் கற்பிக்கத் தொடங்கிவிட்டார். "இளமையிற்கல்" என்னும் அறவுரைக்கேற்ப இளமைக்காலத்திலேயே நல்ல அறிவாளியாகிவிட்டார். ஆங்கிலக் கல்வியையும் விடாது பயின்றார். தமது பதினாறாவது அகவையில் சென்னைப்பல்கலைக் கழகத்து மெட்ரிக் தேர்வில் வெற்றிபெற்றார்.

தமிழாசிரியர்

சோமசுந்தரம் தமது இளமைப் பருவத்திலேயே தந்தையாரை இழக்குமாறு நேரிட்டுவிட்டது. இதனால் மேலே ஆங்கிலக்கல்வியைத் தொடர்ந்து கற்க இயலவில்லை. கல்லூரித் தலைவர்கள் சோமசுந்தரத்தின் புலமையை நன்கு உணர்ந்திருந்தார்கள். ஆகவே, இவர் சிறுபையன் என்பதையும் பாராமல் இவருடைய தந்தையார் பார்த்து வந்த தமிழாசிரியர் வேலையை இவரிடம் ஒப்புவித்தார்கள். சோமசுந்தரம் தமிழாசிரியர் வேலையை நன்றாகப்பார்த்துப் பேரும் புகழும் பெற்றார். கல்லூரி ஊரினின்றும் எடுக்கப் பட்டது. ஆகவே சோமசுந்தரத்தின் தமிழாசிரிய வேலையும் போயிற்று.

ஊர்க்காவல் துறையில் வேலை

பிறகு சோமசுந்தரம் ஊர்க்காவல் துறையில் (போலீஸ் இலாக்காவில்) உதவிக் கண்காணியாக (சப் இன்ஸ்பெக்ட

ராக) வேலை பார்க்கத்தொடங்கினார். பத்தொன்பதாம் அகவை தொடங்கி ஐம்பத்தைந்தாம் அகவை வரையில் 36-ஆண்டுகள் வேலை பார்த்துப் பிறகு ஓய்வுபெற்றார் இவர் இவ்வேலையில் இருக்கும்போது எல்லோராலும் நன்கு மதிக்கப்பெற்றார். சோமசுந்தரனார் தமிழறிஞராக இருந்த தோடு ஆண்மையுந் தீரமும் அமையப்பெற்றவராக விளங் கினார். கொள்ளைக்கூட்டத்தினர் ஆட்சியை எதிர்த்துப் போராடுவதில் இவர் தனியாண்மைபெற்று விளங்கினார். இவருடைய பெயரைக் கேட்பின் கொள்ளையருங் கள் ளரும் அஞ்சி நடுங்குவர். இவர் தமது அலுவலைக் கண்ணுங் கருத்துமாகப் பார்த்துச் சீர்த்திபெற்றாரே யன்றிக் கைக்கூலிபெற்று எவரையும் குற்றநெறியிலிருந்து தப்பவிட்டாரில்லை. செல்வர்கள் தமது செல்வத்தைப் பயன்படுத்தி இவரைத் தம்வழிப்படுத்த இயலவில்லை. இவர் தமது வேலையில் இருந்து ஓய்வுபெற்ற பிறகும் நூலாராய்ச்சி, தமிழ் கற்பித்தல், கட்டுரை யெழுதுதல் முதலியவைகளில் தமது நேரத்தைப் போக்கினார். பிறந்தது முதல் இறந்ததுவரை இவர் தமிழைக் கண்ணுங்கருத்து மாகப் போற்றினார்.

உடும்புப்பிடி

ஊர்க்காவல்துறை வேலையில் எவ்வளவோ தொல்லை கள் உள்ளன. சமயத்தில் உயிரை இழப்பதற்குக் கூடப் பின்வாங்காதவர்கள்தாம் இவ்வேலையைப் பார்க்க இயலும். சோமசுந்தரம் பிள்ளைக்கும் தொல்லையான சமயங்கள் பல நேர்ந்தன. ஒரு சமயத்தில் இவர், கள்வர் கூட்டத்தலைவன் ஒருவனைப் பிடித்தார். அவன் தன் கையிலே கத்திவைத்துக்கொண்டிருந்தான். இவருடைய பிடியிலிருந்து விடுபட்டோடிப் போதற்கு எண்ணிய

அவன் இவரைப் பல இடங்களினும் கத்தியால் வெட்டிக் காயம் உண்டாக்கினன். தமிழறிஞர் சோமசுந்தரனார், கள்வனுடைய கத்திவெட்டிற்கஞ்சி அவனை விட்டுவிட வில்லை. அவன் தம்மை வெட்டிய காலத்திலும் தம் கைப் பிடியினின்றும் அவன் தப்பியோடிவிடாதபடி பற்றிக் கொண்டே யிருந்தார். அதற்குள் மற்றையோர் விரைந்து வந்து கள்வனைப் பிடித்துக்கொண்டனர்.

தொல்காப்பியம் எங்கே ?

காயமடைந்த சோமசுந்தரனாரை மருத்துவசாலைக்குக் கொண்டுபோய்ச் சேர்த்தனர். காயங்களுக்குக் கட்டுகள் கட்டி மருத்துவஞ் செய்யப்பெற்றது. உணர்விழந்திருந்த சோமசுந்தரனார், சிறிது உணர்வு வரப்பெற்றுத் தம்முடைய கஞ்சுகப்பையைத் தேடினார். அப்போது அங்கமர்ந்திருந்த இவருடைய மேலதிகாரி இவரைப் பார்த்து, "யாது தேடு கிறாய் ?" என்று உசாவினார். உடனே இவர், "பையில் தொல்காப்பியம் வைத்திருந்தேன். அதனைத் தேடு கிறேன்," என்று மறுமொழி பகர்ந்தார். ஒரு சிறிது நேரம் இருப்பினும் அந்நேரத்தைக்கூட வீணாக்காது நூல் களைப் படித்துப் பயன்படுத்துவது இவருடைய வழக்கம். "பாடம் ஏறினும் ஏடு கைவிடேல்," என்பது பழமொழி. எத்தனையோ அறிஞர்கள், தம் கையில் ஏதாவதொரு நூலினை எஞ்ஞான்றும் வைத்துக்கொண்டிருக்கும் வழக் கத்தை மேற்கொண்டிருந்தனர். இன்றும் பலர் மேற் கொண்டிருக்கின்றனர். இவ்வழக்கத்தைப் பின்பற்றியே இவரும் எப்பொழுதும் தமது கஞ்சுகப்பையில் தொல்காப் பியத்தை வைத்துக்கொண்டிருந்தனர். கள்வனைப் பற்றிய குழப்பத்தில் அந்நூல் கீழே விழுந்துவிட்டது. அதனைத் தான் இவர் தேடிப்பார்த்துக்கொண்டு அதிகாரியிடம்

மறுமொழி பகர்ந்தார். இவருடைய மறுமொழியைக் கேட்ட அதிகாரி, "உன் உயிருக்கே ஆபத்து ஏற்பட்டு ஆவி அகத்ததோ புறத்ததோ என்று நாங்கள் ஐயுற்று வருந்திக்கொண்டிருக்கிறோம். நீயோ தொல்காப்பியத்தைத் தேடி வருந்துகிறாய். அந்நூல் இந்நிலையில் உனக்கு யாது பயனைச் செய்யவல்லது?" என்று கூறினார். இதனைக் கேட்ட சோமசுந்தரனார், "எனக்குத் தமிழ்மொழிதான் உயிர். என்னிடம் தமிழ்நூல் இருப்பது உயிர் இருப்பதைப் போன்றது. தமிழ்நூல் போய்விடுவதுதான் உயிர் போய்விட்டதைப் போன்றது. தமிழ்மொழிக்குத் தொல்காப்பியந்தான் உயிர். எனக்கும் அந்நூல் தான் உயிர். என்னுடைய உயிர் எங்கே? அதனை என்னிடம் சேர்ப்பிக்கச் செய்யுங்கள்," என்றார். அதிகாரி அந்நூலை யார் எடுத்துள்ளனர் என்பதை உசாவியறிந்து இவரிடங் கொடுக்கச் செய்தார். அந்நூல் வந்ததும் இவர் அதனை அன்போடு பெற்றுத் தம் பக்கலில் வைத்துக்கொண்டார். பிறகு அந்நூலை அடிக்கடி படித்துப் பொழுது போக்கினார்.

### இவருடைய இயற்கை

பெரும்புலவராகிய இவர் அரசாங்க அலுவலில் அகப்பட்டுக்கொண்டமையின் பெரும்பொழுதும் கள்ளர்களையும் கயவர்களையுந் தேடுவதிலும் பிடிப்பதிலும் உசாவுவதிலும் கழிந்தொழிய நேர்ந்தது. அறிவற்றவராயினும் ஆரவார நீர்மை பொருந்தியவரையே இப்பாருலகம் கொண்டாடும் நீர்மைத்து. இவரோ அறிமடம்பூண்டு ஒன்றுமறியாத முழுமூடரைப்போல் வெளிக்குக் காணப்பெறுவார். இவரை நன்கு உணர்ந்தவர்கள்கூட இவருடைய புலமை நிலையின் தலைமைநிலையை உணர்ந்துகொள்ளாமல் ஏமாந்து போனார்கள். இவரையறிந்த புலவர்களும் இவரை இலக்

கணப் புலமை நிரம்பிய பேரறிவாளரென்றும் கம்பராமா யணப் புலமை நிரம்பிய அறிஞரென்றும் அறிந்துகொண் டார்களே யல்லாமல், மற்றைய சிறப்பையும் புலமையையுந் தக்கவாறு உணர்ந்துகொள்ளவில்லை. இதற்குக் காரணம் இவரது உயர்ந்த பண்பும் அடக்கமுடைமையுமே யாகும். தாம் எவ்வளவு பயின்றிருந்தும், நூல்கள் பலவற்றைக் கற்றோம் என்னும் உணர்ச்சி இவரிடம் இல்லை. இன்னுங் கற்றுணரவேண்டிய நூல்கள் பல இருக்கின்றனவே என் னும் ஏக்கந்தான் இவரிடம் மிகுதியாகக் குடிகொண்டிருந் தது. இவர் யாருடனாவது உரையாட நேர்ந்தால் அவர் கள் சொல்வதைக் கருத்துடன் கேட்பாரே யன்றித் தாம் வலிந்து உரையாடித் தம்முடைய புலமையைப் புலப் படுத்திக்கொள்ளமாட்டார். யாரேனுந் தமிழ் இலக்கண இலக்கிய நூல்களின் கருத்துக்களை நன்குணராமல் பேசு வார்களாயின், அவர்கள் பேசிமுடிந்த பிறகு அவர்களுடைய பிழையைமட்டுந் திருத்தமுற்படுவார். திருத்தாவிடின் அப் பிழை எல்லோர்மாட்டும் பரவிக் கேடு விளைக்குமென்பது இவருடைய எண்ணம்.

பெரும் புலவர் தவறு

மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் முதலாவது ஆண்டு விழாவில் பல புலவர்கள் சேர்ந்து தனித்து உரையாடிக் கொண்டிருந்தனர். அப்பொழுது அந்தக் கூட்டத்தில் இருந்த ஒரு சிறந்த இலக்கணப் புலவர் சில இலக்கணக் கருத்துக்களை நன்கு ஆராயாது கூறினார். அப்பொழுது அங்கிருந்த இவர் ஏதோ சொல்லத்தொடங்கினார். உடனே இலக்கணப் புலவர், "நாம் பேசுவது இலக்கணப் புலவர் களே ஆராயத்தக்கது," என்று கூறியதன்றி இவரைச் சும்மா இருக்குமாறுங் கட்டளையிட்டார். இவர் தமக்கு

இயற்கையான பணிவுடன், "தாங்கள் கூறுவது உண்மையே. தங்கள் கூற்றை மறுப்பது என்னுடைய நோக்க மன்று; என்போன்ற புலவரல்லாதார் தாங்கள் கூறும் பொருளை இவ்வாறு உணர்ந்ததுண்டு," எனக் கூறியதன்றி அப்புலவர் சொன்ன கருத்தை மறுத்து ஆசிரியருடைய கருத்து இன்னதென்று விளக்கிக்கூறினார். பிறகு இவருடைய இலக்கணப்புலமையை அங்குக் கூடியிருந்த அறிஞர்களனைவரும் புகழ்ந்து போற்றினார்கள். இந்நிகழ்ச்சியினால் இவர் பெரும்புலவர் என்று சிலர் உணர்ந்து

எல்லாம் வல்லவர்

இவர் எல்லாவற்றினும் வல்லவர் என்பதை எல்லோரும் உணர்ந்துகொள்ளவில்லை. சங்கநூற் பயிற்சியினும் இவர் மிகச் சிறந்தவர். எட்டுத்தொகை நூல்கள் வெளிவருவதற்கு முன்பே இவர் அத் தொகைநூல்களில் பலவற்றைத் தம் கையால் எழுதிப் படித்துணர்ந்தார். தம் கையாலெழுதிய அகநானூற்றையும் நற்றிணையையும் பின்னாளில் பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயருக்கு உதவினார். பன்னிரு திருமுறைகளையும் நன்கு பயின்றார். அவற்றிற் காணப்பெறும பொருள் நயங்களையும், சங்க நூற்கருத்துக்களோடு ஒத்த கருத்துக்களையும் அரிய இலக்கண வழக்குகளையும் குறித்துவைத்திருந்தார். புராண இலக்கியங்களை நன்கு கற்றுத்தேறினார். தம்முடைய இருபதாவது அகவைக்கு முன்பே இனிய புராணச் சொற்பொழிவாளராகவும் விளங்கினார். திருமுறைகளின் பண்முறைகளை நன்குபயின்றிருந்ததோடு தாமே நன்றாகப் பாடவும் அறிந்திருந்தார். இளைஞர்களை ஒரு கூட்டமாகக் கூட்டித் திருமுறைகளை முறையாகப் பாடுதற்குப் பழக்கு

விப்பது ஒரு காலத்தில் இவருடைய இனிமையான பொழுதுபோக்காக இருந்தது. சைவசித்தாந்தப் பயிற்சியிலும் சோமசுந்தரனார் சிறந்து விளங்கினார். பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களால் மெய்யறிவாளர் என்று புகழ்ந்து கொண்டாடப்பெற்ற நாகபட்டினம் வீரப்ப செட்டியார் என்பவரிடத்தில் சைவசித்தாந்த நூல்களை மூன்றாண்டு கற்றுத்தெளிந்தார். பாடங்கேட்டு முடிந்த பிறகு அப்பெரியாரைச் சோமசுந்தரனார் புகழ்ந்து பாடினார். அப்போது செட்டியார் இவரைப் பார்த்து, "முன்பும் ஒரு சுந்தரன் சைவசித்தாந்த நூல்களைப் பாடங் கேட்டு முடித்த பிறகு இவ்வாறு என்னைப் புகழ்ந்து பாடினான்," என்று மொழிந்தார். தமிழ் இலக்கணத்தில் மட்டுமன்றி ஆங்கில இலக்கணம், வடமொழி இலக்கணம் ஆகியவைகளிலும் இவர் வல்லவராகச் சிறந்து விளங்

பதிப்பாளர்களுக்குப் பயன்

இவருடைய இலக்கணப் புலமை, பவானந்தம் பிள்ளை நமச்சிவாய முதலியார் ஆகியோர் இலக்கண நூல்களைப் பதிப்பித்த காலை பயன்பட்டது.

போற்றிய புலவர்கள்

**உ. வே. சாமிநாதையர், அரசஞ்சண்முகனார், தஞ்சைமருத முத்து உபாத்தியாயர், குடவாயில் சண்முகம் பிள்ளை, பின்னத் தூர் அ. நாராயணசாமி ஐயர், வித்துவான் இராகவ ஐயங்கார், பண்டிதமணி கதிரேசச் செட்டியார், பெரும்புலவர் இராமாநுச ஐயங்கார்** முதலிய பேரறிஞர்கள் சோமசுந்தரம் பிள்ளையின் இலக்கணப் புலமையை வியந்து புகழ்ந்து போற்றினார்கள்.

நாட்டார் நவின்றது

பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார் சோம சுந்தரம் பிள்ளையைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தபோது, "இத்தகைய பெரும் இலக்கணப் புலவர்கள் சில நூற்றாண்டுகளில் ஒருவர்தாம் தோன்றக்கூடும். இவரு டைய இலக்கணப் பயிற்சியையும் தெளிவையுங் கண்டு நாம் வியப்பதா! இவருடைய புலமையை உணர்ந்துகொள்ளாத தமிழ் நாட்டின் போக்கை வியப்பதா?" என்று மிகவும் புகழ்ந்து பேசினார்.

தொல்காப்பியர்

பா. வே. மாணிக்க நாயக்கர் என்னும் அறிஞர் இவருடன் பட்டுக்கோட்டையில் ஒருநாள் பழகினார். அறிஞர் நிலையை அறிஞர்கள் அரைநொடியில் அறிந்து கொள்வரன்றோ? மாணிக்க நாயக்கரும் சோமசுந்தரனாரின் இலக்கணப் புலமையை அந்த ஒரேநாளில் நன்றாக உணர்ந்து கொண்டார். நாட்கள் பல சென்றன. ஒருநாள் நாயக்கர் வேறு சில புலவர்களோடு உரையாடிக்கொண்டிருந்தார். அப்பொழுது அவர்களைப் பார்த்து, "பொதியமலையில் அகத்தியரைக் காணச் சென்றேன். அங்கு அவருடைய அடிச்சுவட்டைக்கூடக் கண்டிலேன். எதிர்பாராத இடத் திலே எதிர்பாராத உருவத்திலே தொல்காப்பியரைக் கண்டேன்," என்று இயம்பினார். உரையாடிக்கொண் டிருந்த நண்பர்கள் வியப்படைந்து, "எங்கே? எப்பொழுது? எவ்வுருவத்தில்?" என்று கேள்விமேல் கேள்வியாக அடுக்கினார்கள். அதற்கு மாணிக்க நாயக்கர், "பட்டுக் கோட்டையில் ஒரு போலீசு சப்இன்ஸ்பெக்டர் உருவத்தில் கண்டேன்," என்றுகூறி, இவருடைய இலக்கணப் புலமையை வியந்து பாராட்டினார்.

நடைய மறுபபுரை

தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்குப் புலவர் ஒருவர் ஆராய்ச்சிக் குறிப்பெழுதி வெளியிட்டார். அவ்வாராய்ச்சிக் குறிப்புக்களில் தவறுகள் பலவற்றைக் கண்ட இவர், அதற்கு மறுப்புரை எழுதிக் கரந்தைத் தமிழ்ச்சங்கத்துத் தமிழ்ப்பொழில் வாயிலாக வெளியிட்டார். அம் மறுப்புரையில் அரிய இலக்கண நுட்பங்கள் பலவற்றைக் கண்ட உ. வே. சாமிநாதையர், "இவ்வரிய குறிப்புக்களை அமைத்துத் தொல்காப்பியத்திற்கு ஓர் உரை எழுதினால் உலகிற்கு மிகப் பேருதவியாக இருக்குமே," என்று கூறினர். அரசியல் அலுவலில் ஈடுபட்டிருந்த இவர் செந்தமிழ், தமிழ்ப்பொழில் முதலிய பத்திரிகைகளில் எழுதியதைத்தவிர தனிநூல்கள் எழுதியதாகத் தெரிய

வேலையிலிருந்து விடுதலைபெற்றபின் தமிழாசிரியராகப் பலருக்கும் இலக்கணங்களைப் போதித்தார். கல்விகற்க விரும்பி வந்தவர்களுக்குத் தமது முதுமைத் துன்பத்தையும் பொருட்படுத்தாமல் கல்விகற்பித்தார். உடலில் இருந்து உயிர்பிரியும் வரையினும் ஏடுங் கையுமாகவே இருந்து, 1939-ஆம் ஆண்டில் தமது எழுபதாவது அகவையில் இறைவன் திருவடி நீழலை அடைந்தார்.

## ௩௦. முத்து. சுந்தர முதலியார்

தோற்றம்

" நற்றமிழுக்கு அகத்தியனும் பிறப்பினில் தொல்காப்பியனும்
நயந்த யார்க்கும்
உற்றதமிழ் இயற்பொருளை விரித்துரைக்க நக்கீரன்
ஓங்கு சைவர்
பெற்றசுத்தாத் துவிதசித்தாந் தம்உணர்த்த மெய்கண்டப்
பெரிய ஞானி
கற்றவர்க்குத் தனித்துணைவன் எனையாண்ட சுந்தரனும்
கவிஞ ரேறே."

என்று ஓர் அன்பரால் புகழ்ந்து பாடப்பெற்ற சுந்தர முதலியார் என்னும் நற்றமிழ் அறிஞர், "செந்தமிழ் நாட்டில் தெண்ணீர்ச் செழுவயல் செறியப்பெற்று, மூந்துநல் அறமுஞ் சீரும் உடையதாய் முதன்மைச் சான்றோர்த், ந் தொண்டை நாட்டில் தனிப்புகழ்க் காமக்கூரில்," 1873-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்களில் (சீமுகயாண்டு கார்த்திகைத் திங்கள் மூன்றும் நாள்) பிறந்தார். காமக்கூர் என்னும் இவ்வூர் சாகீர் ஆரணி நகருக்கு மேற்கில் கமண்டலநாக ஆற்றின் தென்கரையில் உள்ளது. இவருடைய தந்தையார் பெயர் முத்துச்சாமி முதலியார். தாயார் பெயர் இரத்தினம்பாள். இவர் தோன்றிய குலம் தொண்டை மண்டல வேளாளர் குலம்.

கல்வி

சுந்தர முதலியார் முதலில் பொதுவான கல்வி கற்று ஆசிரியப்பயிற்சி பெற்றார். இவர் தோன்றிய காலத்தில் குடும்பம் எளிய நிலைமையில் இருந்தபடியால் உழைப்பால் வரும் ஊதியங்கொண்டே வாழ்க்கையை நடத்தவேண்டியதாக இருந்தது. ஆகவே, காமக்கூர், சம்புவராயநல்லூர், பார்வதியகரம், முள்ளிப்பட்டு என்னும் ஊர்களில் பள்ளிக்

கூடங்கள் வைத்து இருபத்துநான்குயாண்டுகள் வாழ்க்கை நடத்தினார். தாம் சிறுவர்கட்குக் கல்வி பயிற்றியதுடன் தாமுஞ் சிறந்த கல்வி கற்று விளங்கவேண்டும் என்று எண்ணினார். அந்நாளில் ஆரணியில் கந்தசாமி உடையார், ஆண்டி சுப்புராய செட்டியார், செல்லக்குட்டி ஆச்சாரியார் என்பவர்கள் சிறந்த புலவர்களாகத் திகழ்ந்திருந்தார்கள். ஆசிரியத் தொழில் நடத்திக் கொண்டிருந்த சுந்தர முதலியார் மேற்படி அறிஞர்களிடங் கல்விகற்க விரும்பினார். நாள்தோறும் ஆரணிக்குச் சென்று இலக்கண இலக்கியங் களைக் கற்கலானார். கந்தசாமி உடையாரிடம் பத்தொன் பதாயிரம் பாடல்களும், ஆண்டி சுப்புராய செட்டியாரிடம் ஆறாயிரத்து எழுநூற்று நாற்பது பாடல்களும் செல்லக் குட்டி ஆச்சாரியாரிடம் நாலாயிரத்து நூற்று நாற்பது பாடல்களும் பாடங்கேட்டுத் தமிழ்ப் பெரும்புலமை யெய் தினார். மேலும் அந்நாளில் காமக்கூர் வட்டத்தில் தாசில் தாராக இருந்த சுந்தரராமையர் என்பவர் சிறந்த அறிஞ ராக இருந்தார். அவரிடத்திலும் சில இலக்கிய நூல்களை யும் நன்னூல் முதலிய இலக்கண நூல்களையும் கற்றுணர்ந் தார். திருப்பாதிரிப்புலியூர் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரியாரிடம் மறைசையந்தாதி, கல்வளையந்தாதி முதலிய நூல்களை ஓதியுணர்ந்தார். இவர் கல்வி கற்பதில் பேரார்வங் கொண்டவராக இருந்தமையின், அறிஞர்கள் இருக்குமிடம் அறிந்து அங்கங்குஞ்சென்று கல்வி கற்றார். ஆயிரக்கணக்கான பாடல்களை இவர் தம்முடைய நினைவில் பதித்து வைத்துக்கொண்டிருந்தார். ஒன்றை ஒருமுறை கேட்ட அளவில் அதனை உள்ளத்தில் சிக்கெனப் பற்றிக் கொள்ளும் ஆற்றல் இவரிடம் வியக்கத்தக்கவாறு அமைந் திருந்தது. இனிய பாடல்களை யெளிதாக இயற்றும் ஆற்றலும் இவரிடம் நன்கு அமைந்திருந்தது. இலக்கண.

இலக்கியங்களைக் கற்றிருந்ததன்றிக் காலக்கணிதம் (சோதிடம்), சைவசித்தாந்த நூல்கள் முதலியவைகளினும் தகுந்த பயிற்சி பெற்றிருந்தார். சைவசித்தாந்த நூல்களை ஓதியுணர்ந்ததற்கேற்பச் சைவ ஒழுக்கப் பெரியாராகவும் விளங்கினார். இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழிலும் வல்லவராதலின், இசைப்பாடல்களும் நாடகங்களும் இயற்றியுள்ளார்.

தமிழ்த்தொண்டு

இவர் தமிழ்மொழியை நன்கு கற்றுப் புலவரானபின் பலருக்குந் தமிழ் இலக்கண இலக்கியங்களைப் போதித்தலையும் நூலாராய்ச்சி செய்தலையுந் தம்முடைய கடமையாகக் கொண்டார். ஆரணி தேசீயப்பள்ளியில் நான்கு ஆண்டுகள் தமிழாசிரியராகப் பணிபுரிந்தார். மாணவர்கட்குக் கல்வி கற்பிக்கும் தொழிலில் இவர் சிறிதுஞ் சோர்வடைய மாட்டார். ஒவ்வொருவருடைய அறிவின் திறத்தையும் பார்த்து அவரவர் தகுதிக்கேற்றவாறு நாள் ஒன்றுக்கு இரண்டு முதல் இருநூறு செய்யுட்கள் வரையில் பாடஞ் சொல்லுவார். மாணவர்கள் ஐயங் கொண்டு வினவுங்கால் வெகுளாது விளக்கமாகவுந் தெளிவாகவும் மறுமொழி கூறுவார். பாடஞ் சொல்லும்போது விரையாமலும் விரிவாகவும் நூற்பொருளை விளக்கியுரைப்பார். ஒருநூலை இவரிடம் ஒருமுறை பாடங்கேட்டவர்கள் பிறகு என்றும் மறவார். ஒவ்வோராண்டிலும் பல்கலைக்கழகத் தேர்வில் புலவர்ப்பட்டம் பெறுபவர்களில் இவருடைய மாணவர்கள் சிலர் இருப்பார்கள். மற்றுந் திருநெல்வேலித் தென்னிந்திய தமிழ்ச்சங்கத் தேர்வுக்கும் மதுரைத் தமிழ்ச்சங்கத் தேர்வுக்கும் மாணவர்களை அனுப்புதலும் உண்டு. வடஆர்க்காடு மாவட்டத்திலும் பக்கத்து மாவட்டங்களினும் பள்ளிகளில்

உள்ள தமிழாசிரியர்களிற் பெரும்பான்மையானவர்கள் இவரிடத்தில் படித்துப் பட்டம் பெற்றவர்களேயாவர். இப்புலவருடைய இல்லம் பண்டைக்காலத்துத் தமிழ்க் குருகுலமாக விளங்கியது. இப்பெரியார் நடமாடும் பல்கலைக் கழகமாக இலங்கினார். கம்பராமாயணத்தின் நயங்களை நன்கறிந்து விளக்கும் தன்மை இவருக்குத் தனிச்சிறப்பாக மிளிர்ந்தது. கம்பராமாயணத்தை நன்கு ஆராய்ந்து துய்த்தவர்களில் இவர் ஒருவர். கம்பராமாயணத்தில் உள்ள நீதிச் செய்யுட்களைத் திரட்டிக், "கம்பராமாயண நீதிக் கவித் திரட்டு" என்னும் பெயருடன் ஒரு தனிநூலாக அமைத்

நாட்டுப்பற்று

தமிழ்ப்பற்றில் தலைசிறந்து விளங்கிய இப் பெரியார் நாட்டுப்பற்றும் மிக்கமைந்தவராக விளங்கினார். கதர் கட்டுதலின் சிறப்பை நன்குணர்ந்து அவ்வாடையையே எப்பொழுதும் உடுத்தினார். பல அன்பர்களுடைய வேண்டுகோளுக்கு இணங்கி, "மகாத்மாகாந்தி சதகம்" என்னும் நூல் ஒன்றை இயற்றினார். இவருடைய நாட்டுப்பற்று மிகச் சிறந்ததாக விளங்கியது.

தொல்காப்பியம் முதலிய நூல்களில் சொல்லப்பெறாத நுட்பமான இலக்கணங்களை யெல்லாம் தொகுத்தமைத்து, "இலக்கணக்கோவை" என்னும் பெயருடன் இலக்கண நூல் ஒன்றை இயற்றினார்.

நாட்கடன்

சைவசித்தாந்த நூல்களையும் நன்கு கற்றுத்தேறிய இவர், சிவபூசை, திருமுறைப்பாராயணம் முதலியவைகள்

செய்து தம் வீட்டிற்கு எதிரில் உள்ள முருகப்பெருமான் திருக்கோயிலை வலம் வந்து வணங்கிய பின்னரே உணவு கொள்ளும் பழக்கத்தை வழக்கமாக மேற்கொண்டிருந்தார்.

திருப்பணி

இவருடைய முன்னோர்கள் காமக்கூர்ச் சிவன் கோயில் கோபுரத்தைக் கட்டுவித்த பெருமையுடையவர்கள். இவருந் தம்முடைய தகுதிக்கேற்றவாறு திருப்பணி புரிதலை மேற்கொண்டிருந்தார். காமக்கூர்ச் சிவன் கோயிலில் நால்வர் திருவுருவங்களைச் செய்வித்துக் குடமுழுக்கும் நாள்வழிபாடும் நடைபெறுவதற்கு ஏற்பாடு செய்தார். நால்வர் திரு நாட்கள் பல இடங்களிலும் நடைபெறுதற்கு ஏற்பாடு செய்தார். காமக்கூர்ச் சிவன்கோயில் பெருமாள் கோயில் ஆகியவைகளுக்குக் கொடுக்கப்பட்ட ஆண்டுப்படி ஐந்நூறு வெண்பொற்காசுகளை இரண்டாயிரத்திற்கு மேல் தரச் செய்து திருவிழா முதலியன நடைபெறுதற்கு ஏற்பாடு செய்தார். திருக்கோயில் திருப்பணிகளை மேற்கொண்டவர்கள் அவைகளை ஒழுங்காக நடத்தாவிடின் கண்டித்துத் திருத்தி ஒழுங்காக நடத்துமாறு செய்வார்.

மணமும் மக்கட்பேறும்

இவர் ஆரிமுத்து முதலியார் என்பவருடைய திருமகளான கலியாணியம்மை என்னும் காரிகையைக் கடிமணம் புரிந்து இல்லறத்தை இனிது நடத்தினர். மக்கள் சிலர் தோன்றினர். திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனப் புலவராக அவ்வாதீனத்தில் அமர்ந்து தமிழ்த்தொண்டு புரிபவரும் அன்பையும் அருளையும் தமக்கு உரிமையாகக் கொண்டவரும் ஆகிய திரு. முத்து, சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள் இப் புலவர்பிரானுடைய திருமகனே

யாவர். "மகனறிவு தந்தையறிவு" என்னும் முதுமொழிக்கு இம் முதலியாரவர்கள் சரியான எடுத்துக்காட்டாக

புகழ்மலர்

இப்பெரியாருடைய தமிழ்த் தொண்டையுஞ் சிறப்பையும் பாராட்டற்குப் பலர் எண்ணினர். 16-6-38-இல் காமக்கூரில் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள் தலைமையிற் பெருங்கூட்டம் ஒன்று கூடியது. அக்கூட்டத்திற்கு இவருடைய மாணவர்கள் தமிழ் அன்பர்கள் ஆகியோர் இரண்டாயிரம் பேர்கட்கு மேல் கூடினர். பல புலவர்கள் இவருடைய தமிழ்த்தொண்டைப் பாராட்டிப் பேசினார்கள். சென்னைப் பல்கலைக்கழகப் புலவர் வே. வேங்கடராசலு ரெட்டியார் நோக்கப்படி "மாபேராசிரியர்" என்னுஞ் சிறப்புப் பெயர் இவருக்கு வழங்கப்பட்டது. உ. வே. சாமிநாதையர், திரு. வி. கலியாணசுந்தர முதலியார், திரு. தெ. பொ, மீனாட்சிசுந்தரம் பிள்ளை, திரு. க. ப. சந்தோஷம், திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார், திரு. மணி. கோடீசுர முதலியார், காஞ்சிபுரம், அ. க. பொன்னுச்சாமி முதலியார் முதலிய பல அறிஞர்களின் பாராட்டுரையும் பாக்களும் அடங்கிய வாடாப் புகழ் மலர் ஒன்றையும் வழங்கினார்கள். மற்றும் ஐந்நூறு வெண்பொற்காசுகள் அடங்கிய பணமுடிப் பொன்றும் வழங்கப்பட்டது.

இயற்றிய நூல்கள்

1. இலக்கணக்கோவை
2. காந்தி சதகம்
3. கம்பராமாயண நீதிக் கவித்திரட்டு.

*இறுதி*

இவர் வேனிற்கட்டி என்னும் கட்டியால் 'ப படுக்கையில் இருந்தார். இடைவிடாது, "குஞ்சிதபாதந் துணை" என்று கூறிக் கொண்டிருந்தார். திருவாசகத்தை முதலிலிருந்து படித்து வரும்போது திருச்சதகத்தின் இறுதிப்பாட்டில் "வீடு தந்தருளு போற்றி" என்றதைக் கேட்டதும் 6-6-41-இல் தமது அறுபத்தெட்டாம் அகவை யில் இறைவன் திருவடி நீழலையடைந்தார்.



கழக வெளியீடு: ௮௨0

# தமிழ்ப் புலவர் வரிசை

[பதினோராம் புத்தகம்]

யர் :

. சு. அ. இராமசாமிப் புலவர்

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை - 1.

# பதிப்புரை

முன்னேற்றத்தை விரும்பும் நாடுகள் எல்லாம், தத்தம் நாட்டுப் புலவர்கள் செய்தருளிய தாய்மொழி நூல்களை விரும்பிப் படித்தலும் படிப்பித்தலும் செய்கின்றன.

அத்துடன், அப் புலவர்கள் வரலாற்றைச் செம்மையுடன் உணர்ந்து அவர்தம் அறிவு, ஆண்மை, அன்பு, ஒழுக்கம், தந்நலமின்மை, தாய்மொழிப் பற்று, எல்லாருக்கும் உதவுதல், விடா உழைப்பு, அஞ்சாமை, வாய்மை, கடமை முதலிய நற்பண்புகளை மேற்கொண்டு நடத்தி நற்பயன் பெறுகின்றன.

அம்முறையில் நம்நாட்டுப் புலவர் பெருமக்கள் வரலாறுகளையும், அவர்கள் செய்தருளிய நூல்களையும் மாணுக்கர் இளமையிலேயே கற்று அதன்படி ஒழுகுவது, நாட்டுக்கும், மொழிக்கும் செய்யும் நல்தொண்டாகும் எனக்கருதித் தமிழ்ப் புலவர் வரிசையில் இதுகாறும் பத்து நூல்கள் வெளியிட்டுள்ளோம். உங்கள் கையில் மலரும் இந்நூல், இவ்வரிசையில் பதினோராம் புத்தகமாகும்.

இதன்கண் சிவாக்கிர யோகிகள் முதல் பானுகவி அடிகள் ஈருக நடீள புலவர் பெருமக்கள் வரலாறுகளும், ஆங்காங்கு அவ்வப் புலவர் பெருமக்கள் யாத்த பாடல்களும், உள்ளுறை நயங்களுடன் செவ்விய இனிய எளிய நடையில் எழுதப்பெற்றிருக்கின்றன.

இதனை எங்கள் விருப்பத்தின்படி ஆக்கித்தந்த திரு. சு. அ. இராமசாமிப் புலவர் அவர்களுக்கு எங்கள் நன்றி உரித்தாகுக.

இதனையும் முதல் பத்துப் புத்தகங்கள் போலவே ஆசிரியர்களும், மாணுக்கர்களும், பொதுமக்களும் வாங்கிக் கற்றும் கற்பித்தும் புலவர் பெருமக்களுக்குச் செய்யும் கடப்பாட்டினைச் செய்து எங்களையும் ஊக்குவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை

# தமிழ்ப் புலவர் வரிசை

## [பதினோராம் புத்தகம்]



### க. சிவாக்கிரயோகிகள்

*தோற்றம்*

சிவாக்கிரயோகிகள் தொண்டை நாட்டிலே அந்தண குலத்தில் தோன்றினார். வடமொழி தென்மொழி யாகிய வைகளை நன்கு கற்றுச் சிறந்து விளங்கினார். அந்நாளிலே சூரியனார் கோயில் ஆதீனத்தில் சிவக்கொழுந்து சிவாசாரியர் என்பவர் பெருமையிற் சிறந்து விளங்கினார். அவருடைய மெய்யறிவுத் தன்மையையும் பெருமையையுங் கேள்வியுற்ற சிவாக்கிரயோகி சிவக்கொழுந்து தேசிகரையடைந்து போற்றி வழிபட்டார். தேசிகர் சிவாக்கிரயோகிகளின் பக்குவ நிலையை அறிந்து தக்கவாறு அருளுரை வழங்கி ஆசாரிய முழுக்குச்செய்து சிவாக்கிரயோகிகள் என்னும் பெயரையும் வழங்கினார்.

சிவாக்கிரயோகிகள் சிவாநந்த நிட்டையிலே இடையறாது வீற்றிருந்தார். இவருடைய பெருமை யாண்டும் பரவியது. அந்நாளில் தஞ்சையில் அரசாட்சி செய்து கொண்டிருந்த அரசன் சிவாக்கிரயோகிகளின் பெருமையைக் கேள்வியுற்றான். சூரியனார் கோவிலையடைந்து தேசிகரையும் யோகிகளையும் போற்றி வழிபட்டான். சிவாக்

கிரயோகிகளைத் தந்தச் சிவிகையில் விருதுகளோடு சைக்கு அழைத்துச் சென்றான். தனி மடம் ஒன் இருத்தி வழிபட்டு வந்தான்.

வைணவர்கள்

அந்நாளில் வைணவராகிய மணவாளமாமுனி என்பவர் தம்முடைய மாணவர்களோடு அரசனிடத்திற்குச் சென்றார். "வைணவ சமயத்தை இந்நாடெங்கும் பரவச்செய்ய வேண்டும்," என்று அரசனிடங் கூறினார். அரசன், "அவ்வாறு செய்யமுடியாது," என்று மறுத்துரைத்தான். மேலும் மணவாளமாமுனி, "சைவ சமயத்தைப் போற்றிப் பாதுகாப்பவராகிய சிவாக்கிரயோகிகளோடு சொற்போர் செய்து வைணவ சமயத்தை நிலைநாட்டுவேன். அதற்கு உடன்பாடு தருதல் வேண்டும்," என்று கேட்டுக்கொண்டார். அரசன் சிவாக்கிரயோகிகட்கு இந்தச் செய்தியைத் தெரிவித்தான். அவருடைய உடன்பாடு பெற்றுச் சொற்போருக்கு அவையொன்று கூட்டினான். "பதினெட்டு நாட்களுக்குள் சொற்போரில் தோற்றவர் தமது சமயத்தை விட்டுவிட்டு வென்றவருடைய சமயத்திலே சேர்ந்துவி வேண்டும்," என்று கூ

தீத்தொழில்

அரசன் கூறியதை இருபக்கத்தாரும் ஒப்புக்கொண்டனர். சொற்போர் நடைபெற்றது. பதினேழு நாள் வரையிலும் தமக்குத் தோல்வி நேர்தலையே வைணவர்கள் கண்டார்கள். பதினேழாம் நாள் இரவில் சிவாக்கிரயோகிகள் தங்கியிருந்த திருமடத்தில் தீயை வைத்துவிட்டார்கள்.

அரசன் செய்தியறிதல்

சிவாக்கிரயோகிகள் தங்கியிருந்த மடத்தில் தீயிடப்பட்டதை அரசன் அறிந்தான். மனம் பதறினான். யோகிகள்

தங்கியிருந்த மடத்திற்கு விரைந்து ஓடினன். தீயின் நடுவில் உடலுக்கு யாதோர் ஊறும் இல்லாமல் யோகிகள் சிவ யோகத்தில் அமர்ந்திருத்தலைக் கண்டான். அச்சமும் வியப்பும் அடைந்தான். யோகிகளை வணங்கினன். "அருளாளரே! ஆசிரியப் பெருந்தகையே!! இத்தீமையைக் காண்பதற்கோ தேவரீரை இங்கு அழைத்துக்கொண்டு வந்தேன்? என்னுடைய குற்றத்தினைப் பொறுத்தருள்க!" என்று யோகிகளைப் பன்முறை வணங்கினன். ஓடிப்போன வைணவர்கள் போக ஓடாதிருந்த வைணவர்களைப் பிடித்துத் தண்டித்தான்.

திருவீழிமிழலை சேர்தல்

யோகிகள் அரசனைப் பார்த்து, "யாம் பல பெருமைகள் பொருந்திய திருவீழிமிழலையில் தங்கியிருக்க விரும்புறேம்," என்று கூறினர். அரசன் திருவீழிமிழலையிலே தெற்குத் தெருவிலே ஒரு திருமடம் அமைத்து அதில் சிவாக்கிரயோகிகளைத் தங்கியிருக்கச் செய்தான். யோகிகள் மாணவர் பலருக்கு அருளுரை வழங்கி அப்பதியிலே அமர்ந்திருந்தார்.

நூல்கள் இயற்றல்

சிவாக்கிரயோகிகள் இவ்வாறு திருவீழிமிழலையில் எழுந்தருளியிருக்கும் நாளையில், ஸ்மிருதிநெறி பற்றி ஒழுகுபவர்களுக்கும், சிவாகம நெறிபற்றி யொழுகும் நான்காம் வருணத்தவர்களுக்கும் துறவுநிலையைக் குறித்துச் சொற்போர் மூண்டது. இருபக்கத்தார்களும் அரசனிடஞ் சென்று தங்களுடைய சொற்போரை முடிவுசெய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். அரசன் திருவீழிமிழலையில் இருந்த சிவாக்கிரயோகிகளிடம் தெரிவித்தான். சிவாக்கிரயோகிகள் அச்சொற்போரைத் தக்க எடுத்துக்காட்டு

வாயிலாக நிறுத்தினர். நான்காம் வருணத்தவர்கட்கும் துறவுநிலை உண்டென்பதை நிலைநாட்டி அவர்கள் கடைப் பிடிக்கவேண்டிய கடன்முறைகளையெல்லாம் விரித்து விளக்கி எட்டுப் படலங்களையுடைய கிரியாதீபிகையையும், நான்கு வருணத்துத் துறவிகளும் பின்பற்றவேண்டிய விதி முறைகளை விளக்கும் எட்டுப் படலங்களையுடைய சைவ சந்நியாச பத்ததியையுஞ் செய்தார்.

சிவஞானபோதச் சிற்றுரையும் பேருரையும்

அடிக்கடி சூரியனார்கோயில் ஆதீனத்திற்குச்சென்று தம்முடைய ஆசிரியரைக் கண்டு போற்றி வழிபட்டுக் கொண்டுவந்தார். அக் காலங்களில் அவ்வாசிரியர் கட்டளை யிட்டருளியபடி வடமொழிச் சிவஞான போதத்திற்கு ஒரு சிற்றுரையும் பேருரையுஞ்செய்தார்.

சைவ பரிபாடை

பிறகு சித்தாந்தப் பொருள்களைச் சுருக்கி விளக்கி உரைநடை வடிவமான ஐந்து பரிச்சேதங்களையுடைய சைவ பரிபாடை என்னும் நூலைச்செய்தார்.

உரை

சர்வஞ் ஞானோத்தரம், தேவிகாலோத்தரம், அரதத் தாசாரியார் செய்த சுருதி சூக்திமாலை முதலியவைகட்குத் தமிழுரை செய்தார்.

சிவஞானசித்தியார் உரை

சகலாகம பண்டிதரென்னும் அருணந்தி சிவாசாரியர் அருளிச்செய்த சிவஞான சித்தியார் பரபக்க சுபக்கங்களுக் குப் பரமத சுவமதப் பிரமாண உரைகள் காட்டி உரை செய்தார். சிவஞான சித்தியாருக்கு இப்போது வழங்கும் உரைகளுள் இதுவே முற்பட்ட வுரையாகும்.

சிவநெறிப்பிரகாசம்

சிவப்பேறடைதற்காகும் வழியை விளக்குவதாகிய சிவநெறிப் பிரகாசம் என்னும் தமிழ்நூலை சுவாந்த நாச்சியார் என்னும் ஒரு பக்குவியின் பொருட்டு இருநூற்றுப் பதினைந்து திருவிருத்தங்கள் அடங்கியதாகச் செய்தருளினார். அந்நூலுக்கு இவரிடம் அருளுரை பெற்ற நந்தி சிவாக்கிரயோகி என்பவர் உரையெழுதினார்.

அசூதி

இவ்வாறு தென்மொழி வடமொழி என்னும் இரு மொழிகளினும் நூல்களும் உரைகளும் செய்துகொண்டிருக்கும் நாளையில், தம்முடைய ஆசிரியராகிய சிவக்கொழுந்து சிவாசாரியார் திருவடிப்பேறடையுங்காலம் நெருங்கியதை யறிந்தார். சூரியனார் கோயிலையடைந்து தம்முடைய ஆசிரியரைப் போற்றி வழிபட்டார். அரசனைக் கொண்டு கோயில் கட்டச்செய்தார். தம் மாணவர் பலருள்ளும் சிறந்து விளங்கிய நந்தி சிவாக்கிரயோகி என்பவருக்கு இளவரசாகத் திருமுழுக்குச் செய்தார். பிறகு சிறிது காலம் அங்கேயிருந்து மீண்டும் திருவீழிமிழலையை அடைந்து, அங்கே வசித்திருந்து அவ்விடத்தில்தானே திருவடிநீழலையடைந்தார்.

தமிழிலும் வடமொழியிலும் இவர் செய்த நூல்களும் உரைகளும்

1. கிரியா தீபிகை
2. சைவ சந்நியாசபத்ததி
3. சிவஞான போத லகுடீகை
4. சிவஞானபோதப் பேருரை
5. சைவ பரிபாடை
6. சர்வ ஞானோத்தரம் தமிழ் உரை
7. தேவிகாலோத்தரம் தமிழுரை
8. சுருதி சூக்திமாலை தமிழ் உரை

9. 'யார் பரபக்க உரை
10. 'யார் சுபக்க உரை
11. 'ப்பிரகாசம்

என்பனவாம்.

## உ. பரஞ்சோதியார்

தோற்றம்

இவர் திருவிளையாடற் புராணம் இயற்றிய பரஞ்சோதி முனிவர் அல்லர். ஏறக்குறைய நானூறு ஆண்டுகட்கு முன்னர்த் திருத்தில்லையில் தங்கியிருந்து புராணங்கள் இயற்றிக்கொண்டிருந்த புராணத்திருமலை நாதர் என்பவருடைய அருமைத் திருமகனாவார்.

வாழ்க்கை

"பூமன்னு பொழில்வெண்ணெய் மெய்கண்டான் கச்சிப்
புகழ்புனைதத் துவஞான ப்ரகாசமாய் வந்து
பாமன்ன வுரையென்ன அவனருளால் அவன்றன்
பதம்பரவிச் சிதம்பரப்பாட் டியலெனப்பேர் வகுத்தேன்
மாமன்னு சிதம்பரபு ராணமுத னூலும்
மதுரையுலா வும்பகர்ந்தோன் மருவுகுல மைந்தன்
தேமன்னு புராணகலை பலதெரிபு ராணத்
திருமலைநா யகனருளின் தேசுபூண் டேனே."

"சிதம்பரப் பாட்டியலைச் செய்தான் தமிழால்
சிதம்பர புராணமுதற் செய்து—விதம்பெறுசீர்
சேர்ந்த புராணத் திருமலைநா தன்தவத்தால்
சார்ந்தபரஞ் சோதியென்பான் தான்."

என்னுஞ் சிதம்பரப்பாட்டியலின் பாயிரச்செய்யுட்களைக் கொண்டே இவருடைய வாழ்க்கை வரலாறுகளை உணர வேண்டியதாக இருக்கின்றது. சிதம்பரப்பாட்டியல் என்னும் இலக்கண நூலைத்தவிர வேறு நூல் செய்திருப்பதாகவுந் தெரியவில்லை.

# ௩. மண்டலபுருடன்

*தோற்றம்*

மண்டலபுருடன் என்னுஞ் சைனப்புலவர் ஏறக்குறைய நானூறு ஆண்டுகளுக்கு முன்னே, தொண்டைநாட்டிலே பெருமாண்டூர் என்னும் ஊரிலே தோன்றினார். கல்வியை நன்கு கற்றுச் சிறந்த புலவராக விளங்கினார். அந்நாளிலே திருமுனைப்பாடி நாட்டிலே திருநறுங்கொண்டை என்னும் ஊரிலே சைன ஆசாரியபீடம் ஒன்று இருந்தது. அப்பொழுது அங்கே குணபத்ராசாரியர் என்பவர் ஆசாரியராக அமர்ந்திருந்தார். மண்டலபுருடரும் அவ்வாசாரியரைக் குருவாகக்கொண்டு சமய நூல்களையும் பிறவற்றையும் நன்கு ஓதியுணர்ந்தார்.

*தமிழில்அகரவரிசை*

அந்நாளிலே நமது தமிழ் நாட்டிலே தமிழ் அகரவரிசை நூல்கள் இல்லை. ஒரு பொருளுக்கு உள்ள பல பொருள்களைத் தெரிந்துகொள்ள வேண்டுமாயின் உள்ள பொருள்களையெல்லாம் எண்ணமிட்டுப் பார்த்துத்தான் உணர்ந்துகொள்ளவேண்டும். ஒரு மொழியின் பல பொருள்களை நன்கு கற்றவர்களேயன்றி மற்றவர்கள் அறிந்துகொள்வது இயலாத செயலாகவிருந்தது. இக்குறையைப் போக்கவும், தமிழ் கற்போர் எளிதிற் கற்றுப் பயனடையவும் நிகண்டுநூல் ஒன்றை இயற்றுமாறு குணபத்ராசாரியர் தம் மாணவராகிய மண்டல புருடனுக்குக் கட்டளையிட்டார். மண்டலபுருடன் அவ்வாறே சூடாமணி நிகண்டைப் பாடிமுடித்தார். அந்நூல் அந்நாள் தொட்டுத் தமிழ் கற்பவர்கட்கு மிகுந்த உதவியாக விளங்குகிறது. மற்றும் இவர் தீர்த்தங்கரர்களது வரலாற்றையுஞ் சிறப்பையும் கூறுவதாகிய திருப்புகழ்ப் புராணம் என்னும் சைன

யேற்றினர். இவருடைய வரலாறுகளை விளக்கமாக அறிதற்குப் போதிய ஆதாரங்கள் இல்லை.

"ஒருங்குள பொருளு மோர்ந்திட்டுரைத்தனன் விருத்தந்தன்னில்
இருந்தன நல்லோர் குற்றம் இயம்பிடார் என்ப தெண்ணித்
திருந்திய கமல லூர்தி திருப்புகழ்ப் புராணஞ் செய்தோன்
பரந்தசீர்க் குணபத் ரன்தாள் பணிந்தமண் டலதன் தானே."

என்னுஞ்செய்யுள் நிகண்டு நூலின் முன்னர் உள்ள பாயிரச் செய்யுளாகும்.

## ௪. களந்தைக் குமரன்

### தோற்றம்

தொண்டை வளநாட்டிலே பொன்விளைந்த களத்தூரிலே ஏறக்குறைய மூந்நூற்று ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர்க் குமரன் என்பவர் தோன்றினர். கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்கிய இவர் சோழ நாட்டிற்குச் சென்றார்.

### அழகன்

அந்நாளில் சோழவளநாட்டில் திருவாஞ்சியம் என்னுஞ் சிவப்பதியில் அழகவேள் என்னும் பெயருடைய செல்வர் ஒருவர் இருந்தார். இவர் சிவபெருமானிடத்திலும் கற்றவர்களிடத்திலும் பேரன்பு பொருந்தியவர். குமரனை ஆதரித்துத் தம்மிடம் சிலகாலம் வைத்திருந்தார்.

### திருவாஞ்சியபுராணம்

குமரனுடைய புலமை அழகவேளுக்கு மிகுந்த வியப்பை யுண்டாக்கியது. இவரைக்கொண்டு திருவாஞ்சியத்திற்குப் புராணஞ் செய்விக்கவேண்டும் என்று

எண்ணினர். தமது விருப்பத்தைக் குமரனரிடம் தெரிவித்தார். குமரனர் அவ்வூரைப்பற்றி வழங்கிய பழைய செய்திகளையெல்லாம் முதியவர்களிடம் நன்கு உசாவியறிந்துகொண்டு திருவாஞ்சிய புராணம் என்னும் நூலை எண்ணூறு செய்யுட்களுக்குமேல் பாடி முடித்து அரங்கேற்றஞ் செய்தார். சாலியவாகன சகாப்தம் 1538-க்குச் சரியான கி. பி. 1616-இல் இவர் நூல் செய்து அரங்கேற்றினர். இதனைத்தவிர வேறு நூல்கள் இவர் செய்ததாகத் தெரியவில்லை.

"சாற்றும் இப்பெருங் கதையினைச் சகாத்தமா யிரத்தைத்
நூற்று முப்பதோ டெட்டென நுவலுமாண் டெல்லை
ஏற்றம் ஆகிய இராக்கத ஆண்டினில் இசைத்தேன்
போற்று மற்றதன் பேர்திரு வாஞ்சிய புராணம்."

"ஆதலால் முனிவன் சொன்ன ஆரியந் தமிழ்ப்படுத்தி
ஓதினன் அதனை உயர்புகழ் குமரன்தான் இருந்து
மாதொரு பாகர் வாஞ்சை மருந்தனர் திருமுன் வைகிக்
காதலித் திருந்து கேட்பக் கதையரங் கேற்று வித்தான்."

## ரு. நடராசர்

### தோற்றம்

சாதகாலங்காரம் என்னுஞ் சோதிட நூலை இயற்றிய நடராசர் என்பவர் தென்னார்க்காடு மாவட்டத்திலேயுள்ள கீரனூரில் பிறந்தவர். இவருடைய தந்தையார் பெயர் சேவடிநாதன்.

### கல்விப்பயிற்சி

தந்தையாராகிய சேவடிநாதன் கல்வியறிவிற் சிறந்து விளங்கியதோடு வள்ளலாகவுந் திகழ்ந்தார். தம்முடைய மகனாகிய நடராசனுக்கு வடமொழியையுந் தென்மொழி

யையும் நன்கு கற்பித்தார். பல நூல்களையும் நன்கு ஓதி யுணர்ந்த நடராசர் சிறந்த புலவரானார். சோதிட நூலையும் கற்கவேண்டும் என்னும் எண்ணம் நடராசருக்கு உண்டாகியது. அந்நாளிலே திட்டகுடி என்னும் ஊரில், திருமலை ஐயங்கார், நாராயண ஐயங்கார் என்பவர்கள் சோதிடக் கலையிலே மாதிட முடையவர்களாய் விளங்கியிருந்தார்கள். நடராசர் சோதிடக்கலையை இவர்களிடத்திலும் கீழ்முத்தூர் நாராயண ஐயர் என்பவரிடத்திலும் நன்கு கற்றுத் தேறினார்.

சாதகாலங்காரம்

இவர் சோதிடநூல் ஒன்று செய்யவேண்டுமென்று விரும்பினார். தாம்கற்ற சோதிடப் பலன்கள் முதலியவைகளை 1415 விருத்தப் பாடல்களாகச் செய்து கி. பி. 1665-ஆம் ஆண்டில் அரங்கேற்றினார். இந்தச் சோதிடநூல் மிகுந்த பயனுடையதாக விளங்குகின்றது. இதைத்தவிர இவர் வேறு நூல்கள் செய்ததாகத் தெரியவில்லை.

"விளங்கியதோர் சகாத்தமா யிரத்தைந்நூற் றின்மேல்
மேலெண்பத் தேழுவிசு வாவசுவாம் ஆண்டில்
களங்கமிலா வடமொழியைத் தான்தெரிந்து கண்டு
காசினியில் சாதகா லங்கார மெனவே
வளங்குலவும் புகழ்பெறுநற் கீரனூர் வாழும்
வள்ளல்சே வடிநாதன் வரவுருவாய் வந்தோன்
உளங்களிகூர்ந் தருள்ஞான யோகநட ராசன்
உரைத்தனனிப் பொருளுணர்ந்தோர்க் குண்மைதருந் [தானே."

# சா. குமாரசாமி தேசிகர்

*பிறப்பு*

ஏறக்குறைய முந்நூற்றறுபது யாண்டுகட்கு முன் குமாரசாமி தேசிகர் தொண்டைமண்டலத்தில் காஞ்சிபுரத்தில் வாழ்ந்திருந்தார். இவர் வேளாளர்க்குத் தீட்சாகுரு. கல்வியறிவு ஒழுக்கம் சிவபூசை முதலியவைகளிலே சிறந்து விளங்கினர். இவர் ஆண்டுதோறும் காஞ்சியில் இருந்து புறப்பட்டுத் திருவண்ணுமலைக்குச் சென்று திருக்கார்த்திகை விளக்கைக் கண்டு வழிபாடு செய்யும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தார்.

நல்

ஓர் ஆண்டு வழக்கம்போல் திருவண்ணுமலைக்குப் புறப்பட்டார். ஒருநாள் வழியில் இருந்த பூஞ்சோலை ஒன்றில் தங்கிச் சிவபூசை முதலியவைகளை முடித்துக்கொண்டு திருவண்ணுமலையை அடைந்தார். அங்குள்ள ஈசானிய தீர்த்தத்தில் நீராடி நாட்கடன்களைச் செய்தார். உடன் வந்தவர்களைப் பார்த்துப், 'பூசைப்பெட்டி எங்கே?' என்று உசாவினர். பகலில் தங்கியிருந்த இடத்தில் பூசைப்பெட்டியை வைத்துவிட்டு மறதியாக வந்த செய்தி அவர்களுக்கு அப்பொழுதுதான் தெரிந்தது. அவர்கள் மிகுந்த அச்சத்துடன் அச் செய்தியைத் தேசிகருக்குத் தெரியப்படுத்தினர்கள். தேசிகர் இதனைக்கேட்டு மிகவும் மனம் வருந்தினர். பகலில் தங்கியிருந்த இடம்வரையிற் போய்ப்பாருங்கள் என்று தம்மவரை அனுப்பிவைத்தார். தாம் ஓரிடத்திற் போய் நம்முடைய ஆன்மார்த்தமாகிய உடையவரை விட்டுப் பிரியுமாறு நேரிட்டதே என்று கலங்கினர். இரவு முழுவதும் உறக்கம் பிடியாமல் இறைவனை எண்ணிக்கொண்டிருந்தார்.

குமாரசாமி தேசிகர் இறையன்பிற் சிறந்து விளங்கினாராகலின் இறைவன் அவருக்குத் திருவருள் செய்ய எண்ணினார். துறவியைப் போற் கோலம் பூண்டு தேசிகரிடத்திற்கு எழுந்தருளினார். அத்துறவியைக்கண்ட தேசிகர் எதிர் கொண்டு வணங்கிப் போற்றினார். தமக்கு நேரிட்ட தொல்லையைத் தெரியப்படுத்தினார். துறவியாக வந்த இறைவன் தேசிகர்மீது திருவருள் நோக்கஞ் செலுத்தினார். "நீர் அங்கம் வேறு இலிங்கம் வேறாக இருந்தபடியால் இவ்வாறு பிரிய நேரிட்டது. இலிங்காங்கத் தொடர்புடையவராக இருப்பீராயின் இவ்வாறு நேரிடமாட்டாது. உம்முடைய பூசைப்பெட்டி நாளைக்காலையில் வந்து சேரும். நீர் இது முதல் இலிங்கத்தை உடம்பில் அணிந்து கொள்ளும்," என்று திருவாய் மலர்ந்தருளினார். இதனைக்கேட்ட தேசிகர், "இச் செயல் என்னுடைய உற்றார் உறவினர் மாணவர்கள் முதலியோருக்குப் பிடிக்காமல் இருக்குமே," என்று கூறினார். அதனைக் கேட்ட துறவி, "அந்த உறவினர் மாணவர் முதலியோரால் உண்டாகப்போகிற பயன் சிறிதும் இல்லை. நீர் நம்முடைய கட்டளைப்படி இலிங்கங்கட்டிக் கொள்ளுவீராயின் உமக்கு மூன்று ஆண்மக்களும் ஒரு பெண்மகளும் பிறப்பார்கள். அவர்களால் இம்மை மறுமை இன்பங்களும் வீடுபேறும் உண்டாகும் ஆகையால் தெற்குத் தெருவில் உள்ள மடத்தில் இருக்கும் குருதேவரிடத்திலே 'தாரண தீக்கை' செய்துகொள்ளும்," என்று வற்புறுத்திக் கூறினார். வீரசைவ சமய ஆசார நெறிகளையும் போதித்தருளினார். இவருக்குத் தாரண தீக்கை செய்துவைக்குமாறு குருதேவருக்குங் கட்டளையிட்டு மறைந்தருளினார்.

மறுநாட் காலையில் பூசைப்பெட்டி வந்து சேர்ந்தது. குருதேவரால் அனுப்பப்பட்ட அடியார்களோடு மடால

பத்தை அடைந்து குருதேவரைக் கண்டு வணங்கினர். அவரால் தாரண தீக்கை செய்யப்பெற்றர்.

மக்கட் பேறு

குமாரசாமி தேசிகர் திருக்கார்த்திகைத் திருவிழா நிறைவேறியபின் குருதேவரிடத்தில் விடைபெற்றுக் கொண்டு காஞ்சிபுரத்தை யடைந்தார். தம்முடைய மாண வர்களுக்கும் இலிங்கங் கட்டுதலாகிய தாரண தீக்கையைச் செய்துகொண்டிருந்தார். அந்நாளில் அவருக்கு அண்ணு மலையார் திருவருள் நோக்கப்படியே மூன்று ஆண்மக்களும் ஒரு பெண்மகவுந் தோன்றினர். அவர்களுக்கு, சிவப்பிர காசம், வேலாயுதம், கருணைப்பிரகாசம், ஞானும்பிகை என்று பெயர்களிட்டார்.

தம்முடைய மக்களுக்குக் கல்விப்பயிற்சியைத் தொடங் கித் தாமே கல்வியை நன்கு கற்பித்தார். சிவப்பிரகாசர் இளமைப் பருவத்திலேயே அறிவாற்றலிற் சிறந்து விளங் கினர். ஒருநாள் தேசிகருடைய கொல்லையில் எருமைக் கன்றுகள் சில நுழைந்து வாழைக்கன்றுகளை மென்று தின்றுகொண்டிருந்தன. அவைகளைக்கண்ட இவர் தம் முடைய தகப்பனுரை, "அப்பா! அப்பா!!" என்று கூப் பிட்டு, "நம்முடைய தோட்டத்திலேயுள்ள வாழைக்கன்று களை எருமைக்கன்றுகள் சில மென்று மென்று தின்கின் றன," என்று இலக்கணச் சுத்தமாகக் கூறினர். தம் புதல் வர் இளமையிலேயே இவ்வாறு பேசுதலைக் கேட்ட தேசிகர் மிகுந்த மகிழ்ச்சியடைந்தார். ஆயினுந் தம்முடைய மக்களின் கல்விநலம் முழுவதையும் அவர் கண்டுகளிக்க முடியவில்லை. மைந்தர்கள் கல்விகற்றுக் கொண்டிருக்கும் போதே தாம் சிவலிங்கத்தோடு கலந்தார்.

இவர் இயற்றிய பாடல்

இவர் இயற்றிய நூல்களைப்பற்றி ஒன்றுந் தெரிய வில்லை. "சேல்போன்ற கண்களையுடையவளும் உலகங்கள் எல்லாவற்றையும் பெற்ற கொடிபோல்பவளுமாகிய உமாதேவியை ஒரு பாகத்தில் உடையவனே! இல்லறவியல் படைத்த என் தந்தைக்கு நான் உண்டானதும் இவ்விடத்தில் எனக்கு வயல் கிடைத்ததும், மனைவி கிடைத்ததும் புதல்வர்கள் கிடைத்ததும் உன் திருவருள் பெற்ற அன்பர்கட்கும் மற்றவர்கட்கும் நகைப்பல்லவோ," என்னும் பொருளை அமைத்து இவர் பாடிய கட்டளைக் கலித்துறை,

"கயல்வாய்த்த கண்ணி உலகீன்ற
வல்லிபங் காவுனது
செயல்வாய்த்த அன்பர்க்கும் அல்லாத
வர்க்குஞ் சிரிப்பல்லவோ
இயல்வாய்த்த எந்தைக் கியான்வாய்த்
ததுமிங் கெனதனக்கு
வயல்வாய்த் ததுமனை வாய்த்தது
மைந்தர்கள் வாய்த்ததுமே."

என்பதாகும். இதனால் இவருஞ் சிறந்த புலவர் என்பதை நாம் உணர்ந்து கொள்ளலாம்.

## எ. வேலைய அடிகள்

*தோற்றம்*

இவர் காஞ்சிபுரம் குமாரசாமி தேசிகருடைய அருந் தவப் புதல்வராகத் தோன்றியவர். சிவப்பிரகாச அடிகள் இவருக்குத் தமையனார் ஆவர். தம் தந்தையாராகிய குமார சாமி தேசிகர் காலமானபின் சிவப்பிரகாச அடிகளின் பாதுகாப்பில் இருந்தார். சிவப்பிரகாச அடிகளோடு கல்வியை நன்கு கற்றார். சிவப்பிரகாச அடிகள் சிந்து பூந்துறைக்குச் சென்று இலக்கணங் கற்றபோது இவரும் உடனிருந்து கற்றார்.

*திருமணம்*

அக்காலத்தில் வள்ளலாக விளங்கிய அண்ணாமலை ரெட்டியார் இவருக்குத் திருமணஞ் செய்து வைத்தார். அப்பொழுது சிவப்பிரகாச அடிகள்,

"ஐயனின் சென்னியிசை உறைகின்ற மடமங்கை
யாரென்ன உமைவினவவும்
அன்னதொரு மடமங்கை அன்றுவெண் திரைகொழித்
தழுகொழுகு தண்புனல்எனத்,
துய்யவொளி ஆநநம் கரியவிழி காதுவாய்
தோயத்தில் உண்டோ எனச்
சொல்லருங் கமலமலர் காவிமலர் கொடிவள்ளை
தூயசெங் குமுத மென்னப்,
பொய்யென நினைத்துநல் கொங்கையுங் கூந்தலும்
புனலினிடை உண்டோஎனப்
புற்புதஞ் சைவலம தெனவே மறுத்துப்
புகன்றிடுதி நங்காய்எனத்
தையலவள் என்னென்ன நாணொடு வணங்கியென்
தன்பிழை பொறுத்திடென்றே
சங்கரன் உரைத்திடத் திருவுளம் மகிழ்ந்தசிவ
சங்கரி உமைக்காக்கவே."

[அன்னது - அப்படி உனக்குத் தோற்றுவது. தண்புனல் - குளிர்ந்தநீர். ஆநநம் - முகம். தோயம் - தண்ணீர். கமலமலர் - தாமரை மலர். காவிமலர் - கருங்குவளை மலர். கொடிவள்ளை - வள்ளைத்தண்டு. செங்குமுதம் - செவ்வல்லி. புற்புதம் - நீர்க்குமிழி. சைவலம் - பாசி.]

"அம்பிகை அரன்தன்னை நோக்கியுன் னுபரணம்
அரவமென உமையைநோக்கி
அரியரவ சயநத்தை அரவுருவ மாணத்தை
அறியாய்கொல் சிறிதும்என்ன,
நம்பிமனை தொறுமிரந் துணுமாண்டி நீயென்ன
நான்தாதன் அறிவேன்என
நவையுறும் பொய்புகன் றீரெனப் பாரதம்
நடந்ததே கரியாம்என
வெம்பியொரு வன்பிரம் பாலடித் தானென
விளங்கிழை ஒருத்திதாம்பால்
வீசினது சொல்லென்ன எண்ணுயி ரம்பெண்கள்
மிகுகற்பை நீக்கினைஎனப்,
பம்புகற் பினிலோர் இரட்டிப்பு நீக்கினது
பதறுமல் நீகேளெனப்
பரமருடன் இவ்வாறு விளையாடு பச்சைப்
பசுங்கொடி உமைக்காக்கவே."

[அரன் - சிவன். அரவம் - பாம்பு. அரி - திருமால். அரவ சயநம் - பாம்புப்படுக்கை. கரி - சாட்சி. நவை - குற்றம். வெம்பி - சினந்து. விளங்கிழை - பெண். தாம்பு - கயிறு. பம்பு - மிகுந்த.]

என்னும் பாடல்களால் திருமண வாழ்த்துக்கூறியருளினார்.

நூல்கள

சிவப்பிரகாச அடிகளைப்போற் கல்வி கேள்விகளில் வல்லவராக இருந்த இவர் சிவப்பிரகாச அடிகள் நூலியற்றுதற்குப் பேருதவியாக இருந்தார். கருணைப்பிரகாசர் என்

னும் இவருடைய இளவல் பதினெட்டாம் அகவையிற் காலமானார். அப்போது இவர், மிகவும் மனம் வருந்தி "ஆண்டதனால் எனையொவ்வாய்", என்னுஞ் செய்யுளைப்பாடி வருந்தினார். அவர் பாடத்தொடங்கிச் சீகாளத்திச்சருக்கம் வரையிற் பாடி முடித்திருந்த சீகாளத்திப் புராணத்தைத் தாம் பாடி முடித்தார். மற்றும் பல நூல்கள் இயற்றினார். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள்: 1. காளத்திப்புராணப் பிற்பகுதி, 2. நல்லூர்ப்புராணம், 3. இட்டலிங்கக் கைத்தலமாலை, 4. வீரசிங்காதன புராணம், 5. நமச்சிவாய லீலை 6. பாரிசாத லீலை, 7. மயிலத்திரட்டைமணிமாலை, 8. மயிலத்துலா என்பன.

சிவப்பிரகாச அடிகள் முப்பத்திரண்டாம் அகவையிலும், கருணைப்பிரகாசர் பதினெட்டாம் அகவையிலும் காலமானார்கள். இவர் நீணாள் வாழ்ந்திருந்து எழுபத்திரண்டாம் அகவையில் பெருமாத்தூர் மடத்தில் சிவலிங்கத்தோடு கலந்தார்.

## அ. கருணைப்பிரகாசர்

பிறப்பு

குமாரசாமி தேசிகருடைய மூன்றும் புதல்வராகத் தோன்றிய இவர் தமையன்மார்களாகிய சிவப்பிரகாச அடிகள் வேலைய அடிகள் ஆகியவர்களோடு கல்வி கற்றுச் சிறந்து விளங்கினார்.

நன்னெறி

இவர் எப்பொழுதும் சிவப்பிரகாச அடிகளோடு உடனுறையும் இயல்பினர். சிவப்பிரகாச அடிகள் கடற்கரை

யிலே மணற் பரப்பிலே தாம் இயற்றி எழுதிவைத்த நன்னெறி வெண்பாக்கள் நாற்பதையும் எழுதிக்கொண்டு வருமாறு இவரை அனுப்பினர். இவரும் அவ்வாறே சென்று அந்நூலை ஓலைச்சுவடியில் எழுதிவந்தார்.

திருமணம்

அண்ணாமலைரெட்டியார் வேலையருக்கும் இவருக்குந் திருமணஞ்செய்து வைத்தார். அக்காலை சிவப்பிரகாச அடிகள் இவருக்கும் திருமணவாழ்த்துக் கூறியருளினர்.

இட்டலிங்க அகவல் என்னும் நூலைப் பாடிமுடித்த இவர், சீகாளத்திப்புராணத்தைப் பாடத்தொடங்கிச் சீகாளத்திச் சருக்கத்தைப் பாடிக்கொண்டிருக்குங்காலத்தில் தமது பதினெட்டாம் அகவையில் இறைவன் திருவடி நீழலையடைந்தார். இவருடைய பிரிவுக்கு வருந்திய சிவப்பிரகாச அடிகளும் வேலைய அடிகளும் இரங்கற்பாக்கள் பாடி வருந்தினர். சீகாளத்திப்புராணம் வேலையரால் பாடி முடிக்கப்பெற்றது.

---

## சல. சிதம்பரநாதமுனிவர்

தோற்றம்

தருமபுர ஆதீனத்திலே பத்தாவது ஞானசிரியராக எழுந்தருளியிருந்த சிவஞானதேசிகர் சிவப்பதி வழிபாட்டிற்காகச் சென்று திருவாரூரில் தங்கியிருந்த காலத்தில் சிதம்பரநாதர் சென்று வணங்கினர். ஞானசிரியருடைய திருவடிகளிலே திருப்பதிகமாலை ஒன்றை அணிந்தார். சிலநாள் பொறுத்து ஞானசிரியரிடத்தில் அருளுரை பெற்றுக்கொண்டார். பிறகு தருமபுரத்திற்குச்சென்று அடியார்கள் திருக்கூட்டத்தோடு தங்கியிருந்தார்.

நித்திய கன்மநெறி

அக்காலத்தில் தருமபுர ஆதீனத்திற்குரிய திருக்கடவூர்த் திருக்கோயிலில் கட்டளைத்தம்பிரானாக அமர்ந்திருந்த பஞ்சாக்கரமுனிவர் என்பவர் கேட்டுக்கொண்டபடி நித்திய கன்மநெறி என்னும் நூலைக் குறள்வெண்பாவால் இயற்றினார்.

சீகாழிக் கட்டளைப்பணி

பிறகு ஆசிரியருடைய கட்டளைப்படி சீகாழிக்குச் சென்று திருத்தோணியப்பர் திருக்கோயிற் பணியை நடத்திக்கொண்டிருந்தார். அருணாசலக்கவிராயர் என்பவர் சிதம்பரநாத முனிவரோடு முற்காலத்தில் ஒன்றாகக் கல்வி கற்றவர். கவிராயர் பிறந்த ஊர் தில்லையாடி. நன்கு கல்விகற்ற அவர் மிகுந்த சிறப்போடு விளங்கியிருந்தார். அவர் ஒரு வேலையை முன்னிட்டுப் புதுச்சேரிக்குச் சென்றார். செல்லும் வழியில் சீகாழிக்கு வந்தார். அங்கே கட்டளைத் திருப்பணியில் சிதம்பரநாத முனிவராகிய தம் பழைய நண்பர் இருப்பதை அறிந்தார். முனிவரைக் கண்டு அளவளாவினார். முனிவர் தாம் சீகாழிக்கு ஒரு பள்ளுப்பிரபந்தம் பாடத்தொடங்கியிருப்பதாகவும் அதனை முடிப்பதற்கு நேரமில்லையென்றுந் தெரியப்படுத்தினார். பிறகு, தங்கியிருந்து அந்த நூலைப்பாடி முடித்துவிட்டுச் செல்லவேண்டும் என்று கேட்டுக்கொண்டார். முனிவராகிய நண்பரின் கட்டளையை மறுத்துக்கூற அருணாசலக் கவிராயரால் இயலவில்லை. நண்பர் விருப்பப்படி அங்குத் தங்கினார். ஒரே நாளில் அந்நூலைப்பாடி முடித்தார். தாம் அதனைச் சிதம்பரநாத முனிவரிடம் கொடுத்துவிட்டுப் போய்வருவதாகச் சொன்னால் முனிவர் போகவிடாமல் தடுப்பார். மேலும் சிலநாள்கள் தங்குமாறு கூறுவார் என்று எண்ணினார்.

### நல்லவனுக்கு அடையாளம்

"நல்லவனுக்கு அடையாளம் சொல்லாமல் போகிறது தான்", என்று ஒரு பழமொழி இருக்கிறது. கவிராயரும் நல்லவராகையால் சொல்லாமலே போய்விடுகிறது என்று முடிவுசெய்தார். ஒருவரிடம் பாடிமுடித்த பள்ளுப்பிரதியைக் கொடுத்து முனிவரிடஞ் சேர்ப்பிக்குமாறு கூறிவிட்டுத் தாம் இரவிலேயே புறப்பட்டுப் புதுவைக்குப் போய்விட்டார்.

### முனிவர் செயல்

பாடிமுடிக்கப்பெற்றிருந்த நூலை முனிவர் பார்த்தார். ஒரேநாளில் பாடிமுடித்த தம் நண்பர் கவிராயரின் புலமையாற்றலுக்குக் களிப்படைந்தார். அவர் சொல்லாமலே போய்விட்டதை உணர்ந்தார். அவரைச் சீகாழியிலேயே நிலைபெறச்செய்துவிடுவதென்று முடிவுசெய்தார். அவர் பொருட்டு வீடொன்றை உடனே ஏற்பாடுசெய்தார். கவிராயர் எழுதியதுபோல் கடிதம் ஒன்றைக் கவிராயர் குடும்பத்தாருக்கு எழுதி அவர்களைச் சீகாழிக்கு அழைத்துக் கவிராயருக்காக ஏற்பாடுசெய்த வீட்டில் தங்கியிருக்கச் செய்தார்.

### கவிராயர் வியப்பு

புதுவைக்குச் சென்ற கவிராயர் தமது வேலையை முடித்துக்கொண்டு திரும்பிச் சீகாழிக்குவந்து சேர்ந்தார். சிலநாள் முனிவருடன் தங்கியிருந்தார். ஒருநாள் முனிவர் கவிராயரையும் அழைத்துக்கொண்டு, 'தெருச்சுற்றி வருவோம்' என்று சொல்லிப்புறப்பட்டார். இருவரும் வடக்குத்தெருவை அடைந்தார்கள். தம் குடும்பத்தினர் ஒரு வீட்டில் இருப்பதைப்பார்த்துக் கவிராயர் மிகுந்த வியப்படைந்தார். "தங்களை இவ்விடத்திலேயே தங்கச்

செய்வதற்கு இந்த ஏற்பாடுசெய்திருக்கிறேன். தாங்கள் இனிமேல் இந்த ஊரையே தங்களுடைய இருப்பிடமாகக் கொள்ளவேண்டும்'', என்று கூறினார்.

சீகாழி அருணாசலக் கவிராயர்

ிவா ஷ்ருபபப

படி சீகாழியிலேயே உறையலானார். அதுமுதல் அவருடைய பெயர் சீகாழி அருணாசலக்கவிராயர் என்று வழங்கியது. முனிவரும் கவிராயரும் ஒன்று சேர்ந்து பல நூல்களை ஆராய்ந்து இன்புற்றுக் களித்தார்கள்.

## கல. இராமகவிராயர்

தோற்றம்

இவர் தொண்டை நாட்டில் பிறந்தவர். இவருடைய காலம் இற்றைக்கு ஏறக்குறைய நூற்றெண்பது யாண்டுகட்கு முன்னராகும். கல்வியை நன்றாகக் கற்றுச் செய்யுள் பாடுந் திறம் நன்றாக அமையப் பெற்றிருந்தார். தமிழையன்றித் தெலுங்கு மொழியையும் நன்கு உணர்ந்திருந்தார்.

புலவர் வறுமை

புலவர்களைப் பற்றி வருத்தும் வறுமை இவரையும் பற்றி வருத்தியது. நல்லறிவும் நற்குணங்களும் நன்றாக அமைந்திருந்தும் வறுமைக் கொடுமையால் அவைகள் மங்கிப்போயின. பரிசிலைக் கருதிப் பலரிடத்துஞ் சென்றார். இவருடைய அருமை பெருமையை நன்குணர்ந்து போற்றுவார் எவரும் இலராயினர்.

சென்னையை அடைதல்

வேலையற்றவர்கள் வேலையைநாடிச் சென்னையைச் சேர்தல் இப்புலவர் காலத்திலேயே வழக்கமாக இருந்தது போலும். இவருடைய மனஞ் 'சென்னையை அடைந்தால் ஏதேனும் வழிபிறக்கும். அங்குச் செல்வர்கள் பலர் இருப்பார்கள். வாணிகம் மிகுதியாக நடைபெறும் இடமாயிற்றே' என்று எண்ணியது. உடனே புறப்பட்டுச் சென்னையை அடைந்தார். எவ்வளவு தொலை சென்றால் தான் என்ன ? "ஐங்காதம் போனாலும் தன்பாவம் தன்னுடனே ஆகுந்தானே," என்பது அறிஞர்களின் மெய்ம் மொழியன்றோ ? அம்மொழி பொய்ம்மொழியாகப் போகுமா ? புலவரின் அருமையை உணர்ந்து போற்றக் கூடியவர்கள் சென்னையிலும் இல்லாமற்போனார்கள். புலவர் தெருத்தெருவாக அலைந்து திரிந்தார். பலநாட்கள் பட்டினியாகக் கிடந்தார். தெருத்திண்ணைகளில் படுத்துறங்கினார். புலவருடைய நிலை சென்னையை அடைந்த பிறகு மோசமாகிவிட்டது. நாள்தோறும் நீராடாமையால் உடல் அழுக்கடைந்தது. ஆடை கறுத்துப்போயிற்று. எண்ணெயைக் காணாமையால் குஞ்சி திரண்டு சடையாகிவிட்டது. போதாக்குறைக்குச் சிரங்கு வேறு பிடித்துக்கொண்டது. முன்னையினுங் கேடுடைய நிலையினராய்ச் சென்னையிலே சுற்றிக் கொண்டிருந்தார். யாது செய்வதென்று அவருக்கு

சிவமான பாட்டு

புலவர் ஒருநாள் தெருவொன்றிற் சென்று கொண்டிருந்தபோது, புலவரின் ஊரைச் சேர்ந்த செல்வன் ஒருவன் அவரைக்கண்டான். "என்ன ஐயா புலவரே ! இப்போது உம்முடைய நிலைமை எப்படியுள்ளது. சென்னைமாநகர் பெரிய ஊராயிற்றே! தகுந்த பலனடைந்தீரா ?" என்று

உசாவினான். உடனே புலவர் அவனுக்கு மறுமொழி கூறத்தொடங்கினார். "முன்னரைவிட இப்பொழுது என்னுடைய நிலைமை எவ்வளவோ உயர்ந்து விளங்குகிறது. நான் சென்னைப்பட்டினத்திற்கு வந்தபின் சிவபெருமானைப் போலவே பெருஞ் சிறப்படைந்து உயர்ந்துவிட்டேன். எப்படியென்றால் சிவபெருமான் அன்னம் (அன்னப் பறவை) அறியப்படாதவர். நானும் அன்னம் (சோறு) அறியப்பெறாத சிறப்பையுடையவனாக இருக்கிறேன். சிவபெருமான் சிரங்கைக் கொண்டிருக்கிறார். (நான்முகன் தலையைக் கைக்கொண்டிருக்கிறார்) நானுஞ் சிரங்கைக் கொண்டிருக்கிறேன் (சிரங்குப் புண்களைக் கொண்டிருக்கிறேன்) சிவபெருமான் அரைச் சோமன் (பாதிப்பிறை) அணிந்திருக்கிறார். நானும் அரைச் சோமன் (கிழிந்துபோன பாதித்துணி) அணிந்திருக்கிறேன். சிவபெருமானுக்குச் சடையுண்டு; எனக்குஞ் சடை பிடித்திருக்கிறது. அவரும் உடல் முழுவதும் நீறணிந்திருக்கிறார். என்னுடலும் நீறால் (குப்பைத்துகளால்) நிறைந்திருக்கிறது," என்று கூறி இச்செய்திகளை,

"சென்னபுரி வந்து சிவமானேன் நல்லவொரு
அன்னமது காணு தவனாகி - மன்னுசிரங்
கைக்கொண் டரைச்சோமன் கட்டிச் சடைமுறுக்கி
மெய்க்கொண்ட நீறணிந்து மே"

என்று நகைத்துக்கொண்டே கூறினார். அச்செல்வன் அவ்வளவு அறிவாளியல்லன். புலவருடைய இருபொருள் நயத்தைக்கூட நன்குணர்ந்து சுவைக்கத்தெரியாத அவன் ஏதோ சிறிது பொருள் கொடுத்துவிட்டுச் சென்றான். அதனைப்பெற்ற புலவர் இதனைக்கொண்டு ஊருக்குப் போய்விடலாம். இவ்வூருக்கும் நமக்குஞ் சரிப்படாது

என்று முடிவு செய்தார். புறப்பட்டு ஊருக்குப் போய்ச் சேர்ந்தார்.

புதுவைக்குப் போதல்

அந்நாளில் ஆனந்தரங்கப்பிள்ளை என்னுஞ் செல்வர் ஒருவர் புதுச்சேரியில் வள்ளலாக விளங்கியிருந்தார். அவரிடஞ் சென்றால் தக்கவாறு உதவிபெற்று வரலாம் என்று எண்ணியவராய் அவர்மீது சில செய்யுட்களை இயற்றிக்கொண்டு புதுவைக்குச் சென்றார். ஆனந்தரங்கப் பிள்ளை வீட்டில் இல்லை. வயலுக்குச் சென்றிருப்பதாக அறிந்தார். உடனே வயலை நோக்கிச் சென்றார். ஆனந்த ரங்கப்பிள்ளை அறுவடை முடிந்த வயலிலே இருந்தார். நென்மணிகள் பலவிடங்களினும் மிகுதியாகச் சிதறிக் கிடந்தன. உணவுப்பொருளாகிய நெல் சிதறிக் கிடப்பது அவருக்குப் பிடிக்கவில்லை. உட்கார்ந்து அந்நெல்மணிகளை யெல்லாம் பொறுக்கிக்கொண்டிருந்தார். இராமகவிராயர் ஆனந்தரங்கப்பிள்ளையைப் பார்த்தார். தம்முடைய வறுமைக் கொடுமைகளையெல்லாம் விரித்துரைத்தார். "புறப்படுங்கள் வீட்டிற்கு" என்றார். புலவருக்கு வயிற்றுப்பசியும் மிகுதி யாக இருந்தது. ஆனந்தரங்கப்பிள்ளையோ வயலைவிட்டு எளிதில் எழுந்திருப்பதாகத் தெரியவில்லை. பசிக்கொடுமை யால் வாடிய புலவர், "என்ன இன்னும் உட்கார்ந்து கொண்டிருக்கிறீர்கள்? புறப்படுங்கள் போவோம்" என்று குழந்தைகளைப்போல் நெருக்கிக்கொண்டிருந்தார். ஆனந்த ரங்கப்பிள்ளைக்கு ஓர் அணுவளவு சினம் உண்டாயிற்று "ஏனையா பறக்கிறீர்?" என்று கேட்டார் புலவரைப் பார்த்து. புலவருக்கு மிகுந்த பசியிலேயே நகைச்சுவை யோடு ஒரு செய்யுள் தோன்றியது. உடனே அவர்,

"கொக்குப் பறக்கும் ; புறாப்பறக்கும்,
குருவி பறக்கும் ; குயில் பறக்கும்,
நக்குப் பொறுக்கி களும்பறப்பர்
நானேன் பறப்பேன் நராதிபனே!
திக்குவிசயஞ் செலுத்தியுயர்
செங்கோல் நடாத்தும் அரங்கநின்
பக்கம் இருக்க ஒருநாளும்
பறவேன் பறவேன் பறவேனே."

என்று பாடினார். புலவரின் பாட்டு ஆனந்தரங்கப்பிள்ளைக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. அச்சமயத்தில் கொக்கு, புறா, குருவி முதலிய பலவகைப் பறவைகள் பறந்து கொண்டிருந்தன. அதனாலேயே புலவர் இவ்வாறு பாடினார். ஆனந்தரங்கப்பிள்ளை இராம கவிராயரின் புலமையளவை இந்தப்பாட்டு ஒன்றினாலேயே அளவிட்டறிந்து கொண்டார்.

இலையிற் பொன்னிடுதல்

பிறகு ஆனந்தரங்கப்பிள்ளை புலவரையும் அழைத்துக் கொண்டு விரைவாகப் புறப்பட்டார். அவருக்கு உணவிடு தற்கு ஏற்பாடு செய்யுமாறு தம்முடைய மடைத்தொழி லாளிக்குக் கட்டளையிட்டார். அவன் புலவருக்கு இலை போட்டான். ஆனந்தரங்கப்பிள்ளை தம்முடைய அறைக்குட் சென்றார். ஒருதட்டு நிறையப் பொற்காசுகளை அள்ளிக் கொண்டுவந்தார். உண்பதற்கு உட்கார்ந்து கொண் டிருக்கும் புலவருடைய இலையிலே நிறையக்கொட்டினார்! இராம கவிராயர் இதனைப் பார்த்தார். அவருக்கு ஒன்றுந் தோன்றவில்லை. ஆனந்தரங்கப்பிள்ளையினுடைய முகத்தைப் பார்த்தார். ஆனந்தரங்கப்பிள்ளை புலவரைப் பார்த்து, "ஏன் சும்மா இருக்கிறீர்? அள்ளிச் சாப்பிடும்" என்றார். பிறகு அவரைப் பார்த்துப் பொன்மணிகளைவிட நான் நென்மணி களை மிகுதியாக விரும்பிப் போற்றுகிறேன். பொன்மணி

களை வைத்துக்கொண்டு நாம் யாது செய்ய முடியும்? எவ்வளவு பொன்மணிகள் இருந்தாலும், நமது பசியை அவைகளால் நேரடியாகப் போக்கமுடியாது. நம்முடைய உடலுக்குள் சென்று உடலோடு ஒன்றுபட்டு உடலாகும் பேறு நென்மணிகட்குத்தான் உண்டு. இதனைக் கருதித் தான் நான் நென்மணிகளைப் பொறுக்கிக் கொண்டிருந் தேனேயல்லாமல் வேறு எண்ணத்தால் அன்று," என்று கூறினர்.

உணவிடுதல்

பிறகு பொற்காசுகள் போடப்பட்ட இலையைப் பக்கத் தில் இழுத்துப் போட்டுவிட்டு வேறோர் இலையைப் போட்டுச் சோறு கறி முதலியவைகளைப் படைத்து உண்ணச் செய் தார். உண்டெழுந்தபிறகு இலையில் கொட்டப் பெற்றிருந்த பொற்காசுகளைப் புலவருக்கே வழங்கினர். "இதனைக் கொண்டுபோய், தங்களுடைய வறுமையைப் போக்குங் கள்," என்று கூறியனுப்பினர்.

புலவர் ஆனந்தரங்கப்பிள்ளை வீட்டையடைந்து சில நாள் தங்கியிருந்தார் என்றும், புலவரை விரைவில் அனுப்ப விரும்பாத ஆனந்தரங்கர் பேசாமலிருக்கவே கவிராயர், "ஊருக்குப்போகவேண்டும்; ஊருக்குப் போகவேண்டும்," என்று அடிக்கடி கூறினரெனவும் அப்பொழுதுதான் ஆனந்தரங்கப்பிள்ளை புலவரைப் பார்த்து, "ஏன் பறக் கிறீர்?" என்று கேட்டார் எனவும் அப்பொழுதுதான் மேற்படி பாட்டுப் பாடப் பட்டதெனவுஞ் சிலர் கூறுவர்.

சோலையப்பர் மேல் பாட்டு

பின்னர்ச் சோலையப்பமுதலியார் என்பவர் மீது,

" அலையான் கவடுபடான் ஆரிடத்துங் காயான்
[illegible] யென்ப [illegible]

சாலைமுத்துக் கிட்டணருள் சற்குணசிந் தாமணியைச்
சோலையென்று சொன்னவரார் சொல்"

[அலையான் - மரத்தைப்போல் அசையமாட்டான். (கவலையால் உள்ளம் வருந்தான்.) கவடு - கிளை, கபடம். காயா - காய்க்கமாட்டான், சினங்கொள்ளமாட்டான். இலை - இல்லை,

என்னுஞ் செய்யுள் ஒன்றைப் பாடிக்கொண்டு சென்று சிறிது பரிசில் பெற்றுச் சிலநாட்களைக் கழித்தார்.

செல்லப்பன் மேல் பாட்டு

அந்நாளில் காஞ்சியிலே செல்லப்பன் என்னும் பெயருடைய செல்வன் ஒருவன் சிறந்த வள்ளலாக விளங்கிக் கொண்டிருந்தான். அவன்மீது,

"செல்லப்பன் கச்சியிலே சேர்ந்ததற்பின் ஆமணிகள்
நல்லதரு மேகம் நவநிதியம்—சொல்லவே
முட்டின்றி ஒன்றிரண்டு மூன்றுநான் கைந்தாறேழ்
எட்டொன்பான் பத்தான வே."

[செல்லப்பன் கச்சியில் பிறந்த பிறகு, காமதேனு இரண்டாயின. மூன்றுமணிகள் நான்கு மணிகளாயின. கற்பகம் முதலிய தெய்வமரங்கள் ஆறாயின. ஏழு முகில்கள் எட்டுமுகில்களாயின. ஒன்பதாக இருந்த சங்கநிதி பதுமநிதி முதலியவைகள் பத்தாயின. செல்லப்பனையுஞ் சேர்த்து எண்ணியபடியால் இவ்வாறு ஒவ்வொன்றும் ஒவ்வொன்று கூடப்பெற்றன.]

என்னும் இந்தச்செய்யுளைப் பாடிக்கொண்டு சென்றார். செல்லப்பனும் தக்கவாறு பொருள் வழங்கினான். இவருடைய வாழ்க்கை இவ்வாறே பரிசில் வாழ்க்கையாகிக் கழிந்தது.

பிள்ளையார்மீது வசை

இவர் திருச்சிக்குச் சென்றிருந்தபோது உச்சிப் பிள்ளையார் கோவிலுக்குச் சென்றிருந்தார். அங்குக்

கூட்டம் மிகுதியாக இருந்தது. இவர்தம்மிடம் இருந்த சிறிது சில்லறையை மேல் வேட்டித் துண்டிலே முடிந்து மேலே போட்டிருந்தார். கூட்டத்தில் ஒருமுடிச்சுமாறி அக்காசை அவிழ்த்துவிட்டான். காசு பறிபோனதை இவர்

"தம்பியோ பெண்திருடி தாயா ருடன்பிறந்த
வம்பனோ நெய்திருடி மாயனும்—அம்புவியில்
மூத்தபிள்ளை யாரோ முடிச்சவிழ்த்துக் கொண்டீரோ
கோத்திரத்துக் குள்ள குணம்"

என்று பாடினார்.

இவர் இயற்றிய நூல்கள்

திருவாய்ப்பாடிப்புராணம், சாரப்பிரபந்தம் முதலியன இவர் செய்த நூல்கள். இவருடைய தனிப்பாடல்கள் சில தனிப்பாடல் திரட்டிலே சேர்க்கப்பெற்றுள்ளன.

## கக. மதுரகவிராயர்

தோற்றம்

தொண்டைநாட்டிலே அமரம்பேடு என்னும் ஊரிலே ஏறக்குறைய இருநூறுயாண்டுகட்குமுன்பு மதுரகவிராயர் இருந்தார். இவர் நன்கு கல்விகற்று விரைவாகச் செய்யுள் பாடுந் திறமையடைந்து விளங்கினார். செல்வர்கள்பால் செய்யுள் செய்துகொண்டுபோய்ப் பரிசுபெற்று வாழ்க்கையை நடத்துவதே இவருடைய தொழிலாக இருந்தது.

புதுவை ஆனந்தரங்கப்பிள்ளை

அந்நாளில் புதுச்சேரியில் புதுவை ஆனந்தரங்கப் பிள்ளை என்பவர் பெருஞ் செல்வராகவும், வள்ளலாகவும் விளங்கினார். அவரிடஞ் சென்று பரிசில் பெற்று வரலாம்

என்று புதுவையை நோக்கிப் புறப்பட்டார். சகுனங்கள் நல்ல சகுனங்களாக அமைந்தன. மகிழ்ச்சியுடன் போய் ஆனந்தரங்கப்பிள்ளையைப் பார்த்தார். அவர் மிகமகிழ்ச்சி யோடும் மலர்ந்த முகத்தோடும் புலவரை வரவேற்றுப் போற்றினர். ஆனந்தரங்கரின் களிப்பைக் கண்ட புலவர்,

"உலங்கொண்ட மணிப்புயனே பிரம்பூரா
 னந்தரங்கா உன்பால் மேவ
வலங்கொண்ட கருடனையாம் இடங்கண்டோம்
 எழில்நரையான் வலத்தே கண்டோம்
பொலங்கொண்ட மணிமாட மீமிசையில்
 புயல்தவழும் புதுவை என்னும்
தலங்கண்டோம் நினதுநகை முகங்கண்டோம்
 ந் தனங்கண் டோமே."

என்று பாடினர். பிறகு ஆனந்தரங்கர்மீது தாம் இயற்றிக் கொண்டுவந்த அரிய பாடல்களைக் கூறிப் பொருளுரைத் தார். அவற்றுள் இரண்டைக் கீழே காண்க.

### நேரிசை வெண்பா

"தங்கவரை மார்பா துரைரங்க பூபதியே
இங்கோர் புதுமை இயம்பக்கேள்—பங்கயக்கை
ஆயிழைக்கு நான்குநுதல் ஐந்துகுழை ஆறுமுலை
மாயவிழி ஏழாம் மதி."

[பங்கயக்கை - தாமரை மலர் போன்றகை. ஆயிழை - ஆராய்ந்து செய்யப்பட்ட அணிகலன்களையணிந்த பெண் (கன்னிராசிக்கு). நுதல் நான்கு-நெற்றி நான்காவது ராசி. குழை ஐந்து - காதணி ஐந்தாவது ராசி. முலை ஆறு - கொங்கை ஆறா வது ராசி. விழி ஏழு - கண்கள் ஏழாவது ராசி. நான்காவது ராசி தனுசு (வில்), ஐந்தாவது ராசி மகரம் (மீன்), ஆறாவது ராசி கும்பம் (குடம்), ஏழாவது ராசி மீனம் (கெண்டைமீன்)]

" கார்படைத்த கரதலத்தான் துரைதிருவேங்
கடமளித்த கன்று எங்கும்,
பேர்படைத்த ஆனந்த ரங்கமகி
பாலாகின் பிரம்பூர் நாட்டில்,
நேரிழைக்கு விழியேழு முலையாறு
காதைந்து நெற்றி நான்கு
பாரிடத்தில் இப்புதுமை கண்டுவந்தேன்
இதன்பயனைப் பகர்ந்தி டாயே."

[கார்படைத்த - முகிலின் தன்மையைப் பெற்ற. முன்பாட்டைப்போல் இதற்கும் பொருள் காண்க.]

இவ்வாறு பல பாடல்களைக் கூறி ஆனந்தரங்கப் பிள்ளையை மகிழ்வித்தார். ஆனந்தரங்கர் தக்கவாறு நன்கொடை வழங்கியனுப்பினார். நன்கொடையை வாங்கிச் சென்ற புலவர் நன்றாக உண்டு உடுத்துச் செலவு செய்தார். மிகு விரைவில் பொருள் செலவாகியது. மீண்டும் வறுமையில் வாடினார். இனிமேல் யாரிடஞ்சென்று பரிசில் பெறலாம் என்று எண்ணமிட்டார்.

காளத்தி முதலியார்

அந்நாளில் திருநின்றையூர் என்னும் ஊரில் காளத்தி முதலியார் என்னும் பெருஞ் செல்வர் ஒருவர் விளங்கியிருந்தார். அவர் சிறந்த வள்ளல். தம்மிடம் வரும் புலவர்கட்கும் வறியவர்கட்கும் வரையாது பொருள் வழங்கினார். அதனால் இவருடைய புகழ் யாண்டுங் குன்றின் மேலிட்ட விளக்கெனெ விளங்குவதாயிற்று. அந்நாட்டை யாண்டு கொண்டிருந்த குறுநில மன்னன் முதலியாருடைய பொருள்களை யெல்லாம் பறிமுதல் செய்து விட்டான். தம் மனைவியோடு முதலியார் வீட்டை விட்டுப் புறப்பட்டுப் பலவிடங்களினுஞ் சுற்றிக் கொண்டு ஒருநாள் இரவு ஓர் அறச்சாலையிற் படுத்திருந்தார். பரிசில் பெறுவதற்கு யாரிடஞ் செல்லலாம் என்று எண்ணமிட்ட மதுரகவிராயர் காளத்தி

முதலியாரிடஞ் செல்லலாம் என்று முடிவு செய்தார். தம் ஊரைவிட்டுப் புறப்பட்டார், இரவில் காளத்திமுதலியார் படுத்திருந்த அறச்சாலைக்கு மதுரகவிராயரும் வந்து சேர்ந்தார். ஒரு மூலையில் மேல் வேட்டியை விரித்துப் படுத்துக்கொண்டார். இரண்டொரு நாளாகவே அவர் பட்டினி. பசி அவரை மிகுதியாக வாட்டியது. பசிக் கொடுமைக்கு ஆற்றாத அவர் 'நாளைக்குத் திருமின்றையூருக் குப்போய்க் காளத்தி முதலியாரைப் பார்க்கலாம். பிறகு நம்முடைய பசி தொலைந்துபோகும்' என்று எண்ணமிட் டார். அவருடைய உள்ளத்தில் இருந்து,

"நீளத் திரிந்துழன்றாய் நீங்கா நிழல்போல
நாளைக் கிருப்பையோ நல்குரவே—காளத்தி
நின்றைக்கே சென்றக்கால் நீயெங்கே நானெங்கே
இன்றைக்கே சற்றே இரு."

என்னுஞ் செய்யுள் ஒன்று புறப்பட்டது. வேறொரு மூலை யில் இருட்டிற் படுத்துக்கொண்டிருந்த முதலியார் இந்தப் பாட்டைக் கேட்டார், சரி; இந்தப் புலவர் வறுமையால் மிகவும் வாடிப் புறப்பட்டிருக்கிறார். நாளைக்கு நம்முடைய வீட்டிற்குப் போய்ப்பார்த்து நாம் இல்லையென்று அறிந் தால் பெரிதும் வருந்துவார் என்று எண்ணமிட்டார். நள்ளிரவில் எழுந்தார். தம்முடைய மனைவியை அழைத் துக்கொண்டு ஊருக்குப்போய்ச் சேர்ந்தார். தம்முடைய மனைவியின் அணிகலன்கள் சிலவற்றை விற்று வாங்கவேண் டிய உணவுப் பொருள்களை வாங்கிச் சமையல் முதலியவை களைச் செய்துவைத்துக்கொண்டு புலவரின் வரவை எதிர்

### புலவர்வருகை

மதுரகவிராயர் அதிகாலையிற் புறப்பட்டுத் திருமின்றை யூரையடைந்து காளத்தி முதலியார் வீட்டையடைந்தார்.

காளத்தி முதலியாரைக் கண்டு தாம் அவர்மீது ப
செய்யுட்களைப் படித்துப் பொருளுரைத்தார்.
பசியை நன்குணர்ந்திருந்த முதலியார் விரைவில் சாப்பாடு போட்டுச் சாப்பிடச் செய்தார். புலவர் உண்டு பசியாறி மகிழ்ந்திருந்தார்.

புற்றிற் கையிடுதல்

சாப்பாடு முதலியன முடிந்தபின் முதலியார் இவருக்குக் கொடுப்பதற்குப் பொருளொன்றுமில்லையே யாது செய்யலாம் என்று எண்ணமிட்டார். ஒன்றுமில்லையென்று இப்புலவரிடம் இயம்புவதைப் பார்க்கினும் நாம் மாண்டு போகலாம் என்று முடிவு செய்தார். தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார்,

"சாதலின் இன்னாத தில்லை இனிததூஉம்
ஈதல் இயையாக் கடை.'

என்று கூறியிருப்பதும் முதலியாருடைய நினைவுக்கு வந்தது. அவர் வீட்டிற்குப் பின்புறத்தில் பாம்புப் புற்று ஒன்று இருந்தது. விரைந்து அப் புற்றிடத்திற்குச் சென்றார். இப்புற்றிலுள்ள பாம்பு என்னைக் கடித்துக் கொல்வதாக என்று எண்ணிக்கொண்டே அப் புற்றினுள் கையை விட்டார். இறைவன் கட்டளை வேறுவிதமாக இருந்தது. பாம்பு தன்னுடைய முடியில் இருந்த மணியை முதலியார் கையில் உமிழ்ந்தது. வெளியே கையை இழுத்த முதலியார் பாம்பு மணியை (நாகரத்தினத்தை)க் கண்டார். அவருக்கு மிகுந்த மகிழ்ச்சியுண்டாயிற்று. அதனைப் புலவருக்கு

புலவர் அரசனிடம் போதல்

நிகழ்ந்த செய்திகளை அறியாத புலவர், இம் முதலியாரிடம் இத்தகைய மணிகளே உள்ளனபோலும். இதனை

அரசனிடம் கொண்டுபோனால்தான்
வேறெங்கும் விற்பது அருமையென்று முடிவுசெய்தார். முதலியாரின் பொருள்களைப் பறிமுதல்செய்த அரசனிடங் கொண்டுபோய்க்கொடுத்து, "இம்மணியினைப் பெற்றுக் கொண்டு இதற்குரிய விலையினைத் தாருங்கள்," என்று கேட்டார். பாம்பு மணியைக் கண்ட மன்னன் பெருவியப் புடையவனானான். "இம் மணி ஏது? யாண்டுப் பெற்றீர்?" என்று உசாவினான். புலவர், "இம் மணியைக் காளத்தி முதலியாரிடம் பரிசிலாகப்பெற்றேன். இதனை நான் வைத்துக்கொண்டு என்ன செய்வது? மிகுந்த வறுமையால் வாடும் எனக்கு இம் மணி ஏன்?" என்றார்.

முதலியாரை அழைத்தல்

அரசன் உடனே தன் ஆட்களை அனுப்பி முதலியாரை அழைப்பித்தான். அவரைப் பார்த்து, "முன்பு நான் உம்மிடம் இருந்து பொருள்களைப் பற்றியபோது இதனை எவ்விடத்தில் வைத்திருந்தீர்?" என்று உசாவினான். முதலியார் நிகழ்ந்தவைகளை மொழிந்தார். அரசன் நம்பவில்லை. "நீவிர் கூறுவது உண்மையாயின் அப் பாம்பினிடம் உள்ள உயிர் மணியையும் (சீவரத்தினம்) வாங்கும் பார்ப்போம்," என்றான். எல்லோரும் புறப்பட்டு முதலியார் வீட்டிற்குச் சென்றார்கள். முதலியார் புற்றிடம் சென்றார். புற்றை வலம் வந்து வணங்கினார். "பாம்பரசே! நீ எனக்கு முன்பு இந்த மணியைத் தந்தது உண்மையாயின், இப்பொழுது அரசன் பார்க்குமாறு உன்னிடம் உள்ள உயிர் மணியையுந் தந்தருள வேண்டும்," என்றார்.

உயிர்மணி வருதல்

பாம்பு தன்னுடைய புற்றைவிட்டு வெளியே வந்தது. முதலியாரை வலம் வந்து வணங்கி அவர்முன்பு தன்னுடைய

உயிர்மணியை உமிழ்ந்தது. உயிர்மணி வெளிப்பட்டு விட்டபடியால் பாம்பு உடனே இறந்துபோய்விட்டது. முதலியார் அதனைப்பார்த்து வருந்தினர்.

பொருள்களைத் திரும்பத் தருதல்

அரசன் இந்தப் புதுமையைத் தன்னுடைய கண்ணாலே கண்டான். அவனுக்கு முதலியாரிடம் பெரு மதிப்பும் அச்சமும் உண்டாயின. முதலியாரிடமிருந்து தான் பறிமுதல் செய்திருந்த பொருளுக்குமேற் பன்மடங்கு கொடுத்து அவருடைய விருப்பம்போல் வள்ளலாக வாழ்ந்திருக்கச் செய்தான். புலவர் முதலியாரிடம் தக்கவாறு நன்கொடை பெற்றுத் தம்மூர்க்குச் சென்று பன்னெடுங்காலம் வாழ்ந்திருந்து காலமானார்.

இவர் இயற்றிய நூல்கள்

இவர் பல செல்வர்கள்மீது நன்கொடையை விரும்பித் தனிப்பாடல்கள் பல பாடியதுடன், திருக்கச்சூர் நொண்டி நாடகம் முதலிய நூல்களுஞ் செய்துள்ளார்.

## கஉ. அவிநாசிப் புலவர்

தோற்றம்

அவிநாசிப் புலவர் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள வாசுதேவநல்லூரில் ஏறக்குறைய நூற்றிருபது யாண்டுகட்கு முன்பு இருந்தார். இவருடைய தொழில் சாயங்காய்ச்சுதல். குலம் துளுவவேளாளர் குலம். மெலிந்த உடலினராயினும் மனத்துணிவு மிகுதியாக அமையப் பெற்றவர்... உள்ளத்தில் கள்ளங்கபடற்றவர்.

### கல்வி

இவருக்குக் கல்வி கற்றலில் மிகுந்த ஊக்கம் உண்டா யிற்று. தகுந்த அறிஞர்கள்பால் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுத் தேறினர். செய்யுள் பாடுந்திறமுந் தெய்வத் திருவருள் ஆற்றலும் மிகுதியாக அமைந்தது. கல்வி கற்ற லிலேயே எப்பொழுதுந் தமது முழு ஊக்கத்தையுஞ் செலுத்தியிருந்தாராகலின், கைத்தொழில் நடைபெறுமல் நின்றுவிட்டது. கைத்தொழில் நின்றுபோகவே வறுமை வரத் தொடங்கியது.

### பரிசில் வாழ்க்கை

அக் காலப் புலவர்கள் மேற்கொண்டிருந்தவாறு இவ ரும் பரிசில் வாழ்க்கையை மேற்கொண்டார். அதனைப் பெறுதற்குப் பல இடங்களுக்கும் அலைந்தார். இறுதியில் கொங்குநாட்டையடைந்தார். அங்குள்ள அவிநாசி என் னும் ஊரில் சிலகாலந் தங்கியிருந்தார். அதற்குப் பிறகு தான் இவருக்கு அவிநாசிப்புலவர் என்னும் பெயர் உண் டாகிப் பிள்ளைப்பெயர் சிறிது சிறிதாக மறைந்தொழிந்தது.

### சிவகிரிக்குச் செல்லுதல்

அவிநாசியில் இருந்து திரும்பித் தம்முடைய ஊருக்கு வந்தார். இவருடைய குடும்பம் வறுமைவாய்ப்பட்டு மிக வும் தளர்ந்திருந்தது. அதனுல் உளங்கலங்கினர். அந் நாளில் சிவகிரியில் வரகுணராமன் என்னுங் குறுநில மன் னன் ஒருவன் இருந்தான். அவனைக் கண்டால் தமது வறுமையைப் போக்கிக்கொள்ளலாம் என்னும் எண்ணத் தோடு அவன்மீது சில அரிய செய்யுட்களை இயற்றிக் கொண்டு விரைந்து அவன்பாற் சென்றுர். அங்கு அப் பொழுது சர்க்கரையப்பன் என்பவன் தானுதிபதியாக அமர்ந்திருந்தான். அவன் பெயரில் இனியனுயினுஞ்

செயலில் இன்றுதவன். ஆணவம் மிக்கவன். இவரை அவன் சிறிதும் பொருட்படுத்தவில்லை. இயல்பாகவே பிசினக்குணம் படைத்த அவன், நாம் இப் புலவன் நந்தலை வனைக் காணுமாறு விடக்கூடாது. இத்தகைய சோம்பேறி கட்கு எதற்காக உதவி செய்யவேண்டும் என்று எண்ணிய வனுய்த் தன் தலைவனைப் பார்க்கவிடவில்லை. ஆயினும் புலவர் வறுமையால் வாடி நொந்துவந்தவராதலின், தம் முடைய வறுமைக் கொடுமை முதலியவைகளையெல்லாம் உள்ளம் உருகுமாறு உரைத்து, "அரசர் அவர்களைப் பார்த்து ஏதேனும் உதவி பெறுதற்கு வழிசெய்தல் வேண்டும்," என்று மிகுந்த வணக்கத்துடன் வேண்டிக் கொண்டார். சர்க்கரையப்பன் புலவர் புகன்ற மொழி களைத் தன்னுடைய காதிற் போட்டுக்கொள்ளவில்லை. "வீணுகத் தொந்தரவு செய்யாதே; சேவகர்களைக்கொண்டு அடித்து விரட்டச் செய்வேன்; ஒழுங்காக வந்த வழியைப் பார்த்துக்கொண்டு ஓடிப்போ," என்று கடுகடுத்து மொழிந் தான். அரண்மனையைவிட்டு வெளியே விரட்டினுன்.

வசைப்பாட்டு

முன்சினம் அவிநாசிப் புலவருக்கு உண்டு. இப் பேதை நம்மை இவ்வாறு தடுத்துக் கெடுத்துக் கடுத்து மொழிந்தானே என்று உள்ளங்கொதித்தார், வசைப் பாடல்கள் சில தோன்றின. கரித்துண்டு ஒன்றையெடுத்து ஊரிலே பலரும் கூடும் சாவடியொன்றிலே :

"நற்கவி ராசருக் கீயாத மட்டியிந் நானிலத்தில்
அக்கரை யான நிதிபோய்க் கரிக்கந்தை ஆடைகட்டிக்
கற்கரைந் தாலும் கரையாத சிந்தைக் கசடனுக்குச்
சர்க்கரை யப்பனென் றேன்பேரிட் டான்பெற்ற தப்பிலியே.

"ஒருமற் கடகமெ னச்செத்த நாயென ஊதுகின்ற
எருமைக் கடாப்புயல் சர்க்கரை யப்பனை ஏதுக்கென்றே

அருமைத் துரைநல் வரகுண ராமன்என் ஐயன்என்ன
பெருமைக்கு வேண்டிவைத் தானோதன் வாசறபிர தானியென்றே."

என்று எழுதிவிட்டு வயிற்றெரிச்சலோடு சென்றார்.

"வில்லேர் உழவர் பகைகொளினும் கொள்ளற்க
சொல்லேர் உழவர் பகை."

என்று தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார் தம்முடைய திருக்குறளிலே செப்பியுள்ளார். அவ்வாறாகத் தெய்வத் திருவருள் அமையப்பெற்ற புலவரிடம் வசைப் பாடல் பெற்றுவிட்டு அதன்பிறகும் சிறப்புடன் வாழ்ந்து கொண்டிருக்க இயலுமோ? சின்னாளில் சர்க்கரையப்பன் தன்னுடைய தானாதிபதி வேலை போய்ச் சீரழிந்தான்.

மற்றொருவன் கதை

பிறகு புலவர், வேங்கடராமன் என்னும் இழிகுணச் செல்வன் ஒருவன்மீது செய்யுள் பாடிக்கொண்டு சென்றார். வேங்கடராமன் சர்க்கரையப்பனை விடக் கொடியவனாக இருந்தான், சர்க்கரையப்பனாவது புலவரிடம் முகங் கொடுத்துப் பேசாமலே விரட்டியடித்தான். வேங்கடராமனோ காலையிற்சென்ற புலவரிடம் நண்பகல் வரையில் இனிமையாக உரையாடிக்கொண்டிருந்தான். அவனுடைய பேச்சைப்பார்த்த புலவர் இவன் ஏதாவது உதவி செய்வான் என்று மனப்பால் குடித்துக்கொண்டிருந்தார். வேங்கடராமன் பெருஞ்செல்வன். மனம் மிகக் கொடியது. எச்சிற்கையாற்கூடக் காக்கையை விரட்டமாட்டான். மேலும் அவன் கொடியன். புலவரோடு இடையிடையே குறும்பாகவும் உரையாடிக்கொண்டிருந்தான். நண்பகலில் உணவு வேளை நெருங்கியது. புலவர் நெடுந்தொலையில் இருந்து வந்துள்ளாரே உணவாவது அளிப்போம் என்று கூட அந்தக் கீழ்மகன் எண்ணவில்லை. "சரி போய்விட்டு

வாரும். எனக்கு வேலை இருக்கிறது. நீண்டநேரம் உம்மோடு வாயாடிக்கொண்டிருந்து விட்டேன்," என்று சொல்லிவிட்டுச் சாப்பாட்டிற்குப்போனான். கதவையுந் தாளிடச் செய்தான். புலவரின் வயிற்றெரிச்சலைப்பற்றிக் கேட்கவும் வேண்டுமோ? புலவர் தம்முடைய சொல்லம்பை

ா.

"சீவனுள் ளளவுமே நட்டுவக் காலியுந்
தேளுஞ் சினந்து கொட்டத்
திறு திறெனு முண்டவிழி யிற்குளவி கொட்டவது
செங்குருதி யாறு கொட்டப்,
பாவிமக னேஉனது வாசலில் சாம்பிணப்
பறைகள்மிக வந்து கொட்டப்
பந்தரடி மாரடித் துறவினர்கள் வாய்க்கரிசி
படிநெற் கொணர்ந்து கொட்ட
ஆவலொடு கால்மாட்டில் உனதுபெண் டாட்டிகண்
அருவியொரு கோட்டை கொட்ட
ஐயையோ என்செய்வேன் என்றுமகன் நீர்மாலை
அதனைக் கொணர்ந்து கொட்டச்,
சாவடியில் அறுதலிகள் கூடிஅழ நீவந்து
சப்பாணி கொட்டி யருளே
சண்டிக் குலாமகனே வேங்கட்ட ராமனே
சப்பாணி கொட்டி யருளே."

என்னும் பாடல் புறப்பட்டது. தம்முடைய வழக்கப்படி பொதுச்சாவடியிலே கரித்துண்டினால் எழுதிவிட்டுச் சென்றார்.

## முடிவு

இந்த வசைப்பாட்டிற்குப்பின் வேங்கடராமன் நீண்ட காலஞ் சிறந்து வாழவில்லை. விரைவிற் பொருளெலாம் இழந்து மாண்டு மடிந்து முடிந்துபோனான்.

இப்புலவர் செல்வர்கள்பால் பெற்ற உதவியைப் பார்க்கினும் சிறுமையே மிகுதி. பலதடவைகளில் செல்வர்களை இவ்வாறு அழிந்தொழியப் பாடினர். இவர் கல்வியை நன்கு கற்றிருந்தும் போற்றுவாரைப் பெறாத குறையினால் வாணாள் முழுவதும் வருந்தி நொந்து இறுதியில் இறைவன் திருவடிகளைச் சேர்ந்தார். இவருடைய முழு வரலாறும் விளக்கமாகத் தெரியவில்லை.

## கங. இராமச்சந்திர கவிராயர்

தோற்றம்

இராமச்சந்திர கவிராயர் என்பவர் இற்றைக்கு ஏறக்குறைய இருநூறு யாண்டுகட்கு முன்பு தொண்டைவள நாட்டிலே சிற்றூர் ஒன்றிலே இராசு வகுப்பிற் பிறந்தார். பிறகு சென்னைமா நகரை யடைந்து அங்குத் தங்கினர். இவருடைய தாய்மொழி தெலுங்கு. ஆயினுந் தமிழை நன்கு கற்றுப் பெரும்புலமை படைத்திருந்தார். புலவர்களைப் பற்றி வாட்டும் வறுமைப்பேய் இவரையும் பற்றிக் கொண்டது. அதனால் மிகுந்த அல்லல் அடைந்து வருந்தி நின்றார். தம்முடைய அருமையை அறிந்து நன்றாக உதவி செய்வாரைப் பெறாமையால் பரிசில் கருதிப் பல விடங்கட்கும் அலைந்து திரிந்தார். எங்கும் தக்கவாறு உதவி

வார்சன்

ஓர் ஊரில் சீனிவாசன் என்னும் பெருஞ் செல்வன் ஒருவன் இருந்தான். அவன் பெருஞ் செல்வனாயினும் எவருக்கும் யாதும் ஈயான். அப் பேய்ச்செல்வனுடைய உண்மைத் தன்மையை உணர்ந்து கொள்ளாத இவர், அவன்

மீது அரியபாக்கள் பலவற்றைப் பாடிச் சென்றார். அவன் இவருடைய பாக்களைக் கேட்டுத் தலையை ஆட்டினான். பிறகு யாதும் இல்லையென்று இகழ்ந்து அனுப்பினான். 'அந்தோ இந்த வீணனையும் பலவாறு புகழ்ந்து பாடினோமே' என்று உள்ளம் வருந்தினார். அந்தச் சமயத்தில் பாடல் ஒன்று இவரிடமிருந்து புறப்பட்டது. அந்தப்பாடல்,

"கல்லாத ஒருவனைநான் கற்றாய் என்றேன்
காடுறையும் அவனைநா டாள்வாய் என்றேன்
பொல்லாத ஒருவனைநான் நல்லாய் என்றேன்
போர்முகத்தை அறியானைப் புலியே(று) என்றேன்
மல்லாரும் புயமென்றேன் சூம்பல் தோளை
வழங்காத கையனைநான் வள்ளல் என்றேன்
இல்லாது சொன்னேனுக் கில்லை என்றான்
யானுமென்றன் குற்றத்தால் ஏகின் றேனே."

என்பதாகும்.

சிவபிரான் கதை

ஒருநாள் இவர் திருவொற்றியூருக்குச் சென்றார். இறைவனைத் தொழுது வழிபட்டார். கையிற் பணம் இல்லை. உணவின் பொருட்டு எங்குஞ் சென்று இரக்கவும் மானம் இடங்கொடுக்கவில்லை. அங்கிருந்த அறச்சாலை ஒன்றில் பட்டினியாகப் படுத்துக்கொண்டார். காலையில் எழுந்தார். இவரிடம் சில நூல்களைப் பாடங்கேட்ட எளிய மாணவன் ஒருவன் இவரைக் கண்டான். சிறிது நேரம் உரையாடினான். "இறைவழிபாட்டிற்காக வந்தீர்களோ?" என்று ஆசிரியரைப் பார்த்துக் கேட்டான். கற்பனைக் களஞ்சியமாகிய அவர்,

"வஞ்சகர்பால் நடந்தலைந்த காலிற் புண்ணும்
வாசல்தொறும் முட்டுண்ட தலையிற் புண்ணும்
செஞ்சொல்லை கிளைத்துருகு நெஞ்சிற் புண்ணும்
தீருமென்றே சங்கரன்பால் சேர்ந்தேன் அப்பா

கொஞ்சமல்ல பிரம்படியின் புண்ணும் வேடன்
கொடுங்காலால் உதைத்தபுண்ணும் கோபமாகப்
பஞ்சவரில் ஒருவன்வில்லால் அடித்த புண்ணும்
பாரென்றே காட்டிநின்றான் பரமன் தானே."

என்னும் பாட்டின் மூலம் விடையளித்தார். அவன் இவருடைய வறுமைத்துன்பத்தை உணர்ந்து வருந்தினான்.

வேங்கடசாமி

அந்நாளில் மயிலாப்பூரில் வேங்கடசாமி என்னும் பெயருடைய செல்வன் ஒருவன் இருந்தான். அவன்மீது,

"மூங்கிலிலே ஒளிந்திருந்தான் முக்கண் சாமி
முதியகடல் போய்ப்படுத்தான் முகுந்த சாமி
தாங்கமலப் பொகுட்டுறைந்தான் தலைநாற் சாமி
தடவரையில் உழன்றுநின்றான் தகப்பன் சாமி
வாங்கியுண்ண வழிகாத்தான் வயிற்றுச் சாமி
வாணருக்கிங் குதவுவரார் மற்றோர் சாமி
ஓங்கியசீர் மயிலையிற்பொன் னப்ப சாமி
உதவியவேங் கடசாமி உசித வேளே."

என்றுபாடினார். அவன் தன்னால் இயன்ற அளவு உதவி செய்தான். அதனாற் சிறிது காலம் வாழ்க்கையை நடத்தினார். பிறகு பழையபடியே வறுமைத்தொல்லை மிகுதியாயிற்று. "கல்லைத்தான் மண்ணைத்தான் காய்ச்சித்தான் குடிக்கத்தான் நான்முகன் வழிகாட்டினானா? அல்லது வீட்டையும் பொருளையும் எனக்குக் கொடுத்துத்தான் காப்பாற்றினானா! நான் என்னுடைய துன்பத்தைச் சொல்லி யாரை நொந்து கொள்வேன்? இவ்வாறு கண்டவர்களிடமெல்லாம் பல்லைக் காட்டுமாறு நான்முகன் என்னைப் படைத்தானே," என்று சொல்லி வருந்தினார்.

குருவப்பன்

அந்நாளில் சோழவள நாட்டிலே தஞ்சைமா நகரிலே குருவப்பன் என்னும் பெயருடைய செல்வன் ஒருவன்

இருந்தான், அவன் புலவர்கட்கு உதவி செய்கிறான் என்று கவிராயருக்குச் செய்தி கிடைத்தது. வறுமைத் துன்பத்தால் வாடிய புலவர்கள் ஆயிர மைலுக்கு அப்பால் ஒருவன் உதவி செய்கிறான் என்று கேள்விப்பட்டால்கூட உடனே புறப்பட்டுப்போகத் தொடங்கிவிடுவார்கள். இந்நிலையில் இராமச்சந்திர கவிராயர் தஞ்சை அடைந்து குருவப்பனைக் காண விரும்பினார். அவன்மீது செய்யுட்கள் சிலவற்றைப் பாடிக்கொண்டு விரைந்து சென்று அவனைக் கண்டார். குருவப்பன் உள்ளவாறே நல்லறிவுடையவனாகவிருந்தான். அவன் இவரை வரவேற்றுப் போற்றினான். தன்னோடு சில காலம் வைத்துக்கொண்டு விருந்து செய்தான். அக்காலத்துப் புலவர்கள் காதில் கடுக்கன் கையில் மோதிரம் முதலியன அணிந்திருப்பார்கள். இராமச்சந்திர கவிராயரோ ஒன்றுமில்லாமல் இருந்தார். குருவப்பன் நல்ல கடுக்கன்கள் இரண்டைச் செய்து புலவருக்கு அணிந்தான். இராமச்சந்திர கவிராயருக்கு மிகுந்த மகிழ்ச்சியுண்டாயிற்று.

"எதிலே வறியவர்க்கும் இனியகவிப்
புலவருக்கும் இரங்கி யந்தப்
போதிலே தனங்கொடுக்கும் தஞ்சைநகர்க்
குருவப்ப பூபன் எற்குக்
கோதிலே கிடந்துழலும் பலரிடத்தில்
சென்றுதமிழ் கூறா வண்ணம்
காதிலே ஒட்டிட்டுத் தாடையின்மோ
தக்கடுக்கன் தானிட் டானே."

என்று புகழ்ந்து பாடினார். புறப்படும்போது மேலும் அவன் சிறிது பொருள் வழங்கினான். அதனைப் பெற்றுச் சென்று சிறிதுநாள் குடும்பத்தைப் பேணினார்.

பாக்குவெட்டி

இவருக்கு கொல்லன் ஒருவன் நல்ல பாக்குவெட்டி ஒன்றைச் செய்து நன்கொடையாக வழங்கியிருந்தான்.

அந்தப் பாக்குவெட்டி வெள்ளி வேலைப்பாடு அமையப் பெற்றது. அஃது எப்பொழுதும் புலவருடைய வெற்றிலை பாக்கு பைக்குள்ளேயே இருக்கும். அந்தப் பாக்கு வெட்டி புலவருக்குப் பலவகைகளில் பயன்பட்டுக் கொண் டிருந்தது. ஒருநாள் பொதுச்சாவடி யொன்றிலே புலவர் அமர்ந்து வெற்றிலை பாக்குப் போட்டுக்கொண்டு சிலரோடு உரையாடிக்கொண்டிருந்தார். அப்பொழுது அங்கிருந்த கீழ்மக்கள் சிலர், புலவருடைய பாக்குவெட்டியை மெதுவாகக் களவாடிவிட்டார்கள் புலவர் தேடினர். பலரிடமுங் கேட்டுப்பார்த்தார்.

“விறகு தறிக்கக் கறிநறுக்க
வெண்சோற் றுப்புக் கடகுவைக்கப்
பிறகு பிளவு கிடைத்ததென்றால்
நாலா றாகப் பிளந்துகொள்ளப்
பறகு பறகென் றேசொறியப்
பதமா யிருந்த பாக்குவெட்டி
இறகு முளைத்துப் போவ துண்டோ
எடுத்தீ ராயிற் கொடுப்பீரே.”

என்று மிகுந்த கனிவுடன் பாடினர். அங்கிருந்தவர்கள் பாட்டருமை அறியாத காட்டெருமைகளாதலின், பாக்கு வெட்டியைத் தராமலே நழுவி விட்டார்கள்.

துன்பம்வந்தால் தொடர்ந்துவரும்

இவர் ஒருநாள் தம் நண்பர்கள் சிலரோடு உரையாடிக் கொண்டிருந்தார். அப்பொழுது ஒருவர் இவரைப் பார்த்துத் “துன்பம் வந்தால் தொடர்ந்து வரும்.” ஓர் ஊரிலே ஒரு குடியானவன் இருந்தான். அவனுடைய பசு கன்று போட்டது. அப்பொழுது மழைபெய்யத் தொடங்கியது. மழையினல் பசுவுக்கும் கன்றுக்கும் தொல்லையேற்படுமே என்று எண்ணிய அவன் பசுவைப் பிடித்து வீட்டின் ஒரு

யின் தலைவனாகிய இந்திரனுக்கு மகன் வீமன் தம்பியாகிய அருச்சுனனாவன் ; கந்தனுக்கு மாமனார் காமன்தானே—முருகப்பெருமானுக்கு மாமனாக இருப்பவர் கற்பகச் சோலைக்குத் தலைவனாகிய இந்திரனே ; மாமனுக்கு—குதிரைக்குத் தலைவனாகிய நகுலனுக்கு, முன்தமையன்—முற்பட்ட அண்ணனாகிய தருமருடைய, தந்தை காலன்—தகப்பனார் எமனாவன்; வையகத்தில் இம்முறைமை வழங்கலாலே—உலகத்திலே இத்தகைய முறைவைப்புப் பேசப்படுதலால், இராமனுக்கு—இரவுக்குத் தலைவனாகிய திங்களுக்கு, சீதை தங்கையாகவேண்டும்—திருப்பாற்கடலில் உடன்பிறந்த திருமகளாகிய சீதை தங்கை முறையாதல் வேண்டும் ; இராவணனுக்குத் தந்தை இராமன்தானே—இரவின் கருநிறத்தையுடைய காமனுக்குத் தந்தை இராமனாகத் தோன்றிய திருமாலே யாவர்,'' என்று பொருள் உரைத்தார். இதனைக் கேட்டவர்கள் கவிராயருடைய புலமையைப் பெரிதும் வியந்து கொண்டாடினார்கள்.

எல்லீசு துரை

அந்நாளில் சென்னையில் இருந்த எல்லீசு துரை என்பவர் இவரிடம் தமிழ் கற்றார். இவருடைய புலமை அவருக்கு மிகுந்த வியப்பை உண்டாக்கியது.

கட்டளை

"செந்தமிழ்ச் செல்வனும் ஓரா யிரந்தலைச் சேடனும் யாழ்
சுந்தரத் தோடிசை வல்லோனும் யாவருந் தோத்திரஞ்செய்
கந்தனைச் சொல்லுங் கவிராமச் சந்த்ரனைக் கண்டுவெட்கி
அந்தர வெற்பிழி பாதாளந் தேடி அடங்கினரே."

என்று புகழ்ந்து பாடினார்.

[செந்தமிழ்ச் செல்வன்—அகத்தியர். யாழ் சுந்தரத்தோடு வல்லோன்—நாரதன். அந்தரம்—வானுலகம். வெற்பு—பொதிய மலை. பாதாளம்—கீழ் உலகம்]

*தனிப்பாடல்கள்*

இப்புலவர் இயற்றிய தனிப்பாடல்கள் பல. அவை களில் மறைந்தொழிந்தன போக எஞ்சியவை தனிப்பாடல் திரட்டு, தனிச் செய்யுட் சிந்தாமணி முதலிய திரட்டு நூல் களிற் சேர்க்கப்பட்டுள்ளன. இவர் நாடகப் புலமையிற் விளங்கினார். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள் :

1. விலாசம்
2. பாரத விலாசம்
3. தாருகா விலாசம்
4. இரணியவாசகப்பா
5. ...கோன் சண்டைநாடகம

முதலியன.

*இறு..*

இவர் தோன்றிய ஆண்டு மறைந்த ஆண்டு முதலியன விளக்கமாக

## கச. பொன்னம்பலம்பிள்ளை

*பிறப்பு*

ல்வேலி மாவட்டத்திலே உள்ள வாசுதேவ நல் லூரில் வேளாளர் குலத்தில் பொன்னம்பலம்பிள்ளை ஏறக் குறைய இருநூறு ஆண்டுகட்குமுன் பிறந்தார். நுண்மா ணுழை புலம் மிக்கவராகிய இவர் கற்கவேண்டிய கல்வியை நன்கு கற்று இளம் பருவத்திலேயே சிறந்த அறிஞரானார். போராற்றலும், அரசியலை ஒழுங்குபெற நடத்துந் திறமை யும், நுண்ணுணர்வும் அவரிடத்தில் நன்கு பொருந்தி யிருந்தன.

தானாதிபதி

பெருநிலக் கிழவர்களிடமும் சிற்றரசர்களிடமும் அமைச்சரைப்போல் அமைந்து நின்று எல்லாக் காரியங் களையும் பார்ப்பவர்கள் தானாதிபதிகள் என்று வழங்கப் பெறுவர். அந்நாளில் நமது நாட்டிலே எண்ணற்ற பெரிய ஊர்கள் சிற்றரசாக
சமீன் எனினும் ஒன்றே. இத்தகைய சமீன்களுள் சொக்கம்பட்டி என்பதும் ஒன்று. அந்தச் சமீன் வடகரை யாதிக்கம் என்றும் வழங்கப்பட்டது. அங்கே சின்னணஞ் சாத்தேவர் என்பவர் சமீன்தாராக இருந்தார். அவர் புலவர் பாடும் புகழுடையவராகவும் அறம்பல புரிந்த திறம் படைத்தவராகவும் விளங்கினார். செந்தமிழ் வாணர்கள் பலரை அன்புடன் ஆதரித்துப் போற்றினார். மேலகரம் திரிகூடராசப்பக்கவிராயர், செங்கோட்டைக் கவிராச பண்டாரம் முதலிய அறிஞர்கள் சின்னணஞ்சாத்தேவ ரிடம் சிறந்த உதவிபெற்றவர்கள். பொன்னம்பலம்பிள்ளை யின் அறிவு மாட்சியில் ஈடுபட்டதேவர் பிள்ளையைத் தமக் குத் தானாபதியாக வைத்துக்கொண்டார். பொன்னம் பலம் பிள்ளையின் பரந்த அறிவையும் விரிந்த நோக்கத்தை யுங்கண்ட தேவர், அவர் சொல்லுக்கு மாறு பேசுவதே இல்லை. எல்லாச் செயல்களும் பொன்னம்பலம்பிள்ளை யின் விருப்பப்படியும் நோக்கப்படியுமே நடைபெற்றன. மற்றைச் சமீன்தார்கள் நமக்கு இத்தகைய அமைச்சர் வாய்க்கவில்லையே என்று ஏக்கமடைந்தனர்.

சூழ்ச்சி

அந்நாளில் இருந்த சேதுபதி மன்னர் பொன்னம் பலம்பிள்ளையைப்பற்றி அறிந்தார். இராமநாதபுரத்திற்கு அழைத்து அவரோடு உரையாடி மகிழ்ந்தார். பொன்னம்

பலம்பிள்ளையை இராமநாதபுரத்திலேயே வைத்துக்கொள் வதற்குப் பெருமுயற்சி செய்தார். ஆனால், பொன்னம்பலம் பிள்ளை சிறிதும் இணங்கவில்லை. பொன்னம்பலம்பிள்ளை அடிக்கடி இராமநாதபுரத்திற்குச் சென்று சேதுவேந்த ரோடு அளவளாவி வந்தார். ஒருமுறை சேதுவேந்தர் பொன்னம்பலம்பிள்ளையைப் பார்த்துத், "தங்கள் சமீன் தாரை இவ்விடத்திற்கு வருவியுங்கள். நான் அவரைப் பார்த்து உரையாடி மகிழவேண்டும். அவருஞ் சிறந்த அறி வாளி என்று தெரிகிறது," என்று கூறினார்.

அதற்கும் பொன்னம்பலம்பிள்ளை, "அவரிடம் வேலை பார்க்கும் நான் அவரை இவ்விடத்திற்கு வருமாறு அழைப் பது தகுதியாகமாட்டாது. அவர்களை வருவிக்கவேண்டு மானால், நான்தான் நேராகச்சென்று அழைக்கவேண்டும். அவர்கள் மிகுந்த சிறப்புடையவர்கள்," என்று பதிலுரைத் தார். —னே சேதுபதி, "நான் கடிதமெழுதி அவரை இங்கு வரவழைத்து விடுவேன்," என்றார். ஒருநாளும் முடியாது என்றார் பொன்னம்பலம்பிள்ளை. "பார்க்க லாமா?" என்று இருவரும் பந்தயம் போட்டுக்கொண் டனர்

"தாங்கள் கட்டாயமாக இவ்விடத்திற்கு ஒருமுறை வந்து செல்லவேண்டும். அரசர் அவர்களால் நமக்கு ஆக வேண்டிய காரியங்கள் பல இருக்கின்றன. இப்படிக்குத் தங்கள் ஊழியன் பொன்னம்பலன்," என்று பொய்யான கடிதம் ஒன்றை எழுதிக் கையெழுத்தையும் போலியாகத் தாமே போட்டுப் பொன்னம்பலம்பிள்ளை எழுதியதைப் போல் அமையச்செய்து ஓர் ஆளிடங்கொடுத்துச் சொக்கம் பட்டிக்கு அனுப்பிவைத்தார். இவ்வாறு பொய்க்கடிதம் அனுப்பிய செய்தி பொன்னம்பலம்பிள்ளைக்குச் சிறிதுந் தெரியாது.

சமீன்தார் வருகை

சின்னணைஞ்சாத்தேவர் சேதுபதியின் கடிதத்தைப் பார்த்தார். தம் அமைச்சர் பொன்னம்பலம் பிள்ளை எழுதியிருக்கிறார் என்றே நம்பினார். அவர் அதுவரையிலுஞ் சேதுவேந்தரைப் பார்த்தவரும் அல்லர். இராமநாதபுரத்திற்குச் சென்றவரும் அல்லர். சின்னணைஞ்சாத்தேவராகிய சொக்கம்பட்டி சமீன்தாரைச் சேதுவேந்தரும் பார்த்தவரல்லர். கடிதத்தைப்பெற்ற தேவர் 'போகலாமா வேண்டாமா? இதில் ஏதாவது சூழ்ச்சியிருக்கக்கூடுமா?' என்று எண்ணினார். பிறகு நம்முடைய அமைச்சர் வீணாக எழுதமாட்டார். ஏதாவது தகுந்த காரணம் இருக்கக் கூடும். போய்வருவோம் என்று முடிவுசெய்தார். எல்லாவற்றிற்கும் ஆடம்பரம் இல்லாமற் போவோம் என்று நினைத்து வேலைக்காரர்கள் சிலரை உடனழைத்துக்கொண்டு புறப்பட்டார்.

சேதுவேந்தரோ தம்முடைய அதிகாரிகளிடம் சொக்கம்பட்டியில் இருந்து சமீன்தாருடைய சிவிகை வருமென்றும், உடனே தமக்கு அறிவிக்கவேண்டுமென்றும், வருகிறவருக்குத் தக்கவாறு வேண்டிய வரவேற்புக்களையெல்லாம் செய்யவேண்டுமென்றுஞ் சொல்லியிருந்தார்.

பொன்னம்பலம்பிள்ளை சூழ்ச்சி

சின்னணைஞ்சாத்தேவர் சிவிகையில் முகவை அடைந்தார். தமக்கு அமைக்கப்பட்டிருந்த விடுதியிற்சென்று தங்கினார். சேதுமன்னரைத் தாமே போய்ப்பார்ப்பது தமது பெருமைக்குச் சிறுமையாகலானும், தாம் தம்முடைய அமைச்சர் விருப்பப்படி வந்திருப்பதாலும் தம்முடைய அமைச்சரின் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்.

சமீன்தார் வந்திருப்பது பொன்னம்பலம் பிள்ளைக்குத் தெரியாது. சேதுவேந்தர் பொன்னம்பலம் பிள்ளைக்குத் திடீரென்று பெருவியப்பை உண்டாக்கவேண்டுமென்று எண்ணினார். அவரையும் உடனழைத்துக்கொண்டு சமீன்தார் தங்கியிருந்த விடுதிக்கு வந்தார். சிறிது தொலையில் வரும்போதே பொன்னம்பலம் பிள்ளை தம் தலைவராகிய சின்னணைஞ்சாத்தேவரைப் பார்த்துவிட்டார். ஏதோ சூது நடந்திருக்கிறதென்று உணர்ந்துவிட்டார். ஆயினும் சேதுவேந்தரை ஏமாற்றிவிடவேண்டுமென்று தமது மனதிற்குள் திட்டம்போட்டுக்கொண்டார். சேதுவேந்தரோ சின்னணைஞ்சாத்தேவரைக் கண்டதும் பொன்னம்பலம்பிள்ளை திடுக்கிட்டுப் போவாரென்று எண்ணினார். பொன்னம்பலம்பிள்ளையோ தேவரிடஞ் சென்றதும், "ஏனடா சின்னணைஞ்சா! எப்பொழுது வந்தாய்? சமுகத்தில் நன்றாக இருக்கிறார்களா? திடீரென்று புறப்பட்டு வந்திருக்கிறாயே என்ன செய்தி? உன்னிடம் என்ன சொல்லி அனுப்பினார்கள்?" என்று கேட்டார்.

தேவர் மறுமொழி

முன்னரே ஐயப்பட்டுக்கொண்டிருந்த சமீன்தார் ஏதோ சூழ்ச்சி நடந்திருக்கிறதென்று அறிந்துகொண்டார். அவர் உடனே பொன்னம்பலம்பிள்ளையைப் பார்த்து, "சமுகத்தில் நன்றாகத்தான் இருக்கிறார்கள். அதிக நாளைக்கு உங்களைப் பிரிந்திருக்கமுடியவில்லையாம். -- -னே அழைத்துக்கொண்டு வரச்சொல்லி அடியேனை அனுப்பினார்கள்," என்று மறுமொழி கூறினார்.

சேதுவேந்தர் ஏமாந்தார்

பெருமிலக்கிழவரைப் பார்த்து, "விரைவிற் புறப்படுவோம்," என்று கூறிவிட்டுச் சமீன்தார் தங்கியிருந்த விடு

தியைவிட்டு அப்பாற் செல்லத்தொடங்கிச் சேதுபதியைப் பார்த்து, "வாருங்கள் போவோம்" என்று மேலே செல்லத் தொடங்கினர். சேதுவேந்தருக்கு ஒன்றும் விளங்கவில்லை. அவர் அதற்குமுன் சமீன்தாரைப் பார்த்தவரல்லராகையால் அவர் தாம் சமீன்தார் என்று உணர்ந்துகொள்ளமுடியவில்லை. இவர் சமீன்தாராக இருந்தால் பொன்னம்பலம்பிள்ளை இப்படிப் பேசுவாரா? அவர்தாம் இவ்வாறு மறுமொழி கூறுவாரா? இவர் அலுவல் பார்ப்பவர்களில் ஒருவர்போல் தெரிகிறது. அமைச்சராகிய பொன்னம்பலம்பிள்ளையை ஏமாற்றத்தொடங்கி நாமே ஏமாந்து போய்விட்டோம். சமீன்தார் பொன்னம்பலம் பிள்ளையைப் பார்க்கினுஞ் சிறந்த அறிவாளி என்று தெரிகிறது. நாம் சூழ்ச்சியாக எழுதியதை எவ்வாறோ உணர்ந்துகொண்டு தமது பெயருள்ள ஓர் அதிகாரியை அனுப்பி வைத்துவிட்டார் என்று எண்ணமிட்டார். இருவரும் அரண்மனைக்குத் திரும்பிவிட்டார்கள்.

மன்னிப்புக்கேட்டல்

பொன்னம்பலம்பிள்ளை பிறகு தனியேவந்தார். சமீன்தாரைக்கண்டு வணங்கி நலம் உசாவினர். பொய்க்கடிதம் பெற்றது முதலிய செய்திகளைத் தெரிந்துகொண்டார். பிறகு சமீன்தாரைப்பார்த்து, "நான் செய்த குற்றத்தைப் பொறுத்தருளவேண்டும். சமூகத்தினுடைய பெருமைக்கு இங்கெல்லாம் இவ்வளவு எளிதாக வருதல் ஏற்றதன்று. நமது பெருமைக்குச் சிறுமையுண்டாகக்கூடாது என்பதற்காகவே நான் இவ்வாறு சூழ்ச்சி செய்தேன். சமூகத்தைப் பற்றி இவ்வாறு பேச நேர்ந்ததைக் குறித்து நான் பெரிதும் வருந்துகிறேன்," என்று சொல்லி மன்னிப்புக் கேட்டுக்கொண்டார். தேவரோ சிறிதும் உள்ளம் வருந்தவில்லை. "தாங்கள் சமயத்திற்குத் தக்கவாறு சூழ்ச்சி

செய்து எனது பெருமையைக் காப்பாற்றியதுபற்றி மகிழ்ச்சியடைகிறேன். தாங்கள் உள்ள அளவும் எனக்கு எத்தகைய இழிவும் ஏற்படாது,'' என்று கூறிப் பொன்னம்பலம்பிள்ளையைப் பெரிதும் பாராட்டினார். அன்றே புறப்பட்டு 5வரும் ஊருக்குச் 'ட்டார்கள்.

சேற்றூர் சமீன்தாரருக்கு உதவி

அந்நாளில் சேற்றூரில் சிவப்பிரகாச திருவணுதத்துரை என்பவர் சமீன்தாராக இருந்தார். அவர் சின்னணைஞ்சாத்தேவரிடமும் பொன்னம்பலம்பிள்ளையிடமும் பெருமதிப்பு வைத்திருந்தார். பகைவரால் அடிக்கடி அல்லலுக் குள்ளாகிய திருவணுதத்துரை தமக்கு உதவி செய்யவேண்டுமென்று சொக்கம்பட்டிப் பெருநிலக்கிழார் சின்னணைஞ்சாத்தேவரை நேரிற்கண்டு வேண்டிக்கொண்டார். உதவிசெய்வதாக வாக்களித்தவர் பிறகு எக்காரணத்தாலோ அவருக்கு உதவிசெய்யப்போகாமல் தமது காரியத்தைப் பார்த்துக்கொண்டிருந்தார். சேற்றூர் சமீன்தாரோ பன்முறை உதவிகேட்டுப் பார்த்து அலுத்துப் போனார். பொன்னம்பலம்பிள்ளை மனம் வைத்தால் உதவி கிடைக்குமென்று துணிந்த சேற்றூர் சமீன்தார், பொன்னம்பலம்பிள்ளைக்கு அன்புடனும் வணக்கத்துடனும் உதவி செய்யவேண்டுமென்று கடிதம் அனுப்பினார். பொன்னம்பலம்பிள்ளை உதவிசெய்ய எண்ணினார். தம் தலைவராகிய சமீன்தாரைப்பார்த்து, "சேற்றூர்ச் சமீன்தார் துரையவர்கட்குப் பல கடிதங்கள் எழுதியுள்ளார். ஒவ்வொரு கடிதமும், அக்கடிதத்தில் அவர் எழுதும் பாக்களும் மிகச் சுவையுடையனவாக இருக்கின்றன. துரையவர்கள் பராமுகமாக இருந்தும் அவர் சலிக்காமல் அடிக்கடி கடிதம் எழுதிக் கொண்டேயிருக்கிறார். அவருக்கு உதவிசெய்தால் சமூகத்

திற்குப் பெருமையுண்டாகும்," என்று கூறினார். மேலும் அவரைப்பற்றி,

"வேலைகள் சூழ்புவி வேந்தர்கள் போற்ற விதிமறையோர்
நூலை எழுதப் படாதென்று வைத்தனர் நுண்ணிசைப்பா
மாலை எழுதப் பராசர் மந்திரி மார்கள்மெச்ச
ஓலை எழுதச் சடையன் திருவன் ஒருவனுமே"

என்னுங்கட்டளைக் கலித்துறையையும் பாடினார். சின்ன ணைஞ்சாத்தேவர் சேற்றூர்ப் பெருநிலக்கிழவருக்குத் தக்க வாறு உதவிசெய்ய எண்ணினார். "நீங்களே ஒரு படை யுடன் சென்று அவருக்கு உதவிசெய்து அவருடைய விருப்பத்தை நிறைவேற்றுங்கள்," என்று கூறினார். பொன்னம்பலம்பிள்ளையும் சேற்றூர்த் திருவணாதத் துரைக்கு உதவியாகச் சென்றார். அதுமுதல் சேற்றூர்ச் சமீன்தார்க்குத் தொல்லை நீங்கியது. அவர் பொன்னம் பலம்பிள்ளையைப் புகழ்ந்து பாராட்டினார்.

"சேற்றூரார் நெஞ்சந் திடப்பட்டார் தென்மலையார்
தோற்றோமென் றோடித் துயருற்றார்—மாற்றலர்கள்
தெண்டனிடுஞ் சின்னணைஞ்சான் சேனா பதிபொன்னன்
தண்டிகையைக் கண்டவுடன் தான்"

என்று செய்யுள் ஒன்றையும் பாடினார்.

நட்பு

சேற்றூர்ச் சமீன்தாரின் அன்புடைமையும் அறி வுடைமையும் பொன்னம்பலம்பிள்ளைக்கு மிகுந்த மகிழ்ச் சியை உண்டாக்கியது. இருவரும் உளங்கலந்த நட்பினர் களானார்கள். பொன்னம்பலம்பிள்ளை அடிக்கடி சேற்றூருக் குச்சென்று திருவணாதத்துரையோடு அளவளாவி மகிழ்ந் திருப்பதுண்டு. ஒருநாள் பொன்னம்பலம்பிள்ளை சேற் றூருக்குச் சென்றார். அப்பொழுது திருவணாதத்துரை சாப்பிட்டுக்கொண்டிருந்தார். பொன்னம்பலம்பிள்ளையைக்

கண்ட வேலையாட்கள் விரைந்துசென்று சமீன்தாரிடம் பொன்னம்பலம்பிள்ளையின் வருகையைப் புகன்றார்கள். சமீன்தார் பொன்னம்பலம்பிள்ளையை ஒரு கணங்கூடக் காக்கவைத்தலை விரும்பவில்லை. சாப்பாட்டைக்கூடச் சரியாக முடித்துக்கொள்ளவில்லை. பொன்னம்பலம்பிள்ளையையும் அழைத்துச் சாப்பிடச் சொல்லவேண்டுமென்று எண்ணினார். கையை அலம்பாமலே எழுந்து ஓடிவந்தார். "வாருங்கள் வாருங்கள்; இன்னுஞ் சாப்பாடாகவில்லையல்லவா? சாப்பிடுதற்கு வாருங்கள்," என்று சொல்லி அழைத்தார்.

சேற்றூர்ப் பெருநிலக் கிழவரின் பேரன்பு பொன்னம்பலம்பிள்ளைக்கு மிகுந்த மகிழ்ச்சியை உண்டாக்கியது. பார்த்தார் சமீன்தாரை, ஒரு கையில் சோறு, ஒரு கையில் பொன் மோதிரம்; வாயிலோ உணவருந்த வேண்டுமெனும் அன்புச்சொல் : இக் காட்சி பொன்னம்பலம் பிள்ளையின் உள்ளத்தில் செய்யுள் ஒன்றை உண்டாக்கியது. உடனே அவர்,

"ஒருகையிலே அன்னம் ஒருகையிலே சொன்னம்
வருகையிலே சம்மான வார்த்தை—பெருகுபுகழ்ச்
சீமான் திருவாழ் சிவப்பிரகா சத்திருவக்
கோமானுக் குள்ள குணம்."

[அன்னம் - சோறு. சொன்னம் - பொன். சம்மானவார்த்தை - உண்ண வேண்டும் என்னும் அன்புமொழி]

பூசைத்தாயாருக்கு உதவி

ஊற்றுமலைச் சமீன்தாரின் மனைவியான பூசைத்தாயார், பொன்னம்பலம்பிள்ளையின் உதவியைக் கொண்டே இழந்துபோன தமது ஊரையடைந்து நலத்துடன் வாழ்ந்தார். அவ்வம்மையார் இவரைப் பாராட்டிச் *செய்யுள் ஒன்றும் பாடினார்.

* பூசைத்தாயார் வரலாற்றில் காண்க.

தலைவர் பிரிவு

பொன்னம்பலம் பிள்ளையின் அருமைபெருமையை நன்குணர்ந்து போற்றிய பெரியசாமிச் சின்னணைஞ்சாத் தேவர் 1721-ஆம் ஆண்டிற் காலமானார். அவருடைய பிரிவு இவருக்குப் பெருந்துன்பத்தை அளித்தது. அதனால் வருந்திய இவர்,

" வானு டரசாளப் போன மகராசன்
தானு பதியெனவுஞ் சற்றுமதித் தானிலையே
சேனு பதிப்பெருமான் சின்னணைஞ்சான் போனவழி
போனால் ஒழியமனப் புண்பாடு தீராதே."

என்று இரங்கற்பாப் பாடினார்.

பெரியசாமிச் சின்னணைஞ்சாத் தேவருக்குப்பின் சில காலம் ஆட்சிவேலையை நடத்திவந்தார். 1729-ஆம் ஆண்டில் சிவராமச்சின்னணைஞ்சாத்தேவர் என்பவர் சமீன்தாரானார். இவர் காலஞ்சென்ற பெரியசாமிச் சின்னணைஞ்சாத்தேவருடைய தம்பியின் மகன். இச்சமீன்தார் பொன்னம்பலம்பிள்ளையின் அருமை பெருமையை நன்குணர்ந்து போற்றவில்லை. பொன்னம்பலம்பிள்ளையின் எண்ணத்திற்கு மாறுபாடாகவே எல்லாக் காரியங்களையும் நடத்தினார். பொன்னம்பலம்பிள்ளையோடு பெரிய நாயகம்பிள்ளை என்பவரும் தானாதிபதியாக இருந்தார்.

திருப்பணி மறுப்பு

புதிய சமீன்தாரின் மனமாறுபாட்டையும் போக்கையும் பொன்னம்பலம்பிள்ளை பார்த்தார். அவரிடம் வேலை பார்ப்பதற்கு மனம் பொருந்தவில்லை. சில திருப்பணிகளை நடத்திக்கொண்டு ஓய்வுடன் பொழுதுபோக்க எண்ணினார். தமது நோக்கத்தைப் புலப்படுத்தினார். பொன்னம்பலம் பிள்ளையின் விருப்பத்திற்குப் புதுச்சமீன்தார் இணங்க

வில்லை. சினத்துடன் பேசிப் புலிபோற்சீறினர். சமீன்தாருடைய தன்மையைக் கண்ட இவர்,

"என்றுவரும் என்றுவரும் என்றிருந்தேன் திவ்யகுணக்
குன்றமே கோபங் குறியாதே—மன்றுதனில்
செம்பியன்போல் வாழுஞ் சிவராம தேவமன்ற
அம்புவிமேற் செம்புலிப்பட் டம்."

என்று பாடினர்.

வெளியேறுதல்

இதற்குமேல் பொன்னம்பலம்பிள்ளை அங்கிருக்க விரும்பவில்லை. அங்கிருந்து புறப்பட்டார். சங்கரநயினர் கோயிலையடைந்து இறைவழிபாடு செய்தார். தமது உள்

உ௬

"காவிக் கலையிலை யோகப்பல் ஏறக் கடலிலையோ
ஆவிக்கு மீளப் பிறப்பிலை யோகல்லில் அம்புதனை
ஏவிப் பிளப்பது போலே இதமறி யாதவரைச்
சேவிப்ப ரோசிவ சங்கர ராசைச் சிவக்கொழுந்தே."

[காவிக்கலை - காவியாடை. ராசை - இராசபுரம் என்பதன் மரூஉ. இராசபுரம் - சங்கர நயினர் கோயில்.]

என்று பாடினர். பிறகு திருநெல்வேலிக்குச் சென்றார். அப்பொழுது அங்கிருந்த ஆறை அழகப்பமுதலியார் என்பவர் பொன்னம்பலம்பிள்ளையை வரவேற்றுப் போற்றினர். "இப்பொழுது தாங்கள் சொக்கம்பட்டியில் முன்புபோல் இருக்கிறீர்களா ?" என்று உசாவினர். அதற்குப் பொன்னம்பலம்பிள்ளை,

"தானு பதியெனும் பேர்மாத் திரமென் தமிழருமை
ஆனல் அறிவது நீமாத் திரமெனக் காதரவு
நானு விதத்திலுங் காணேன் உனைமுற்றும் நம்பிவந்தேன்
மானு காரதொண்டை நாடா அழகப்ப மன்னவனே."

என்று பாடினார். இப்பாடலைக்கேட்ட அழகப்பமுதலியார் பொன்னம்பலம் பிள்ளை தக்கவாறு நடத்தப்படவில்லை என்பதை உணர்ந்துகொண்டார். "தாங்கள் இனிமேல் அங்குச் செல்லவேண்டாம். இவ்விடத்திலேயே நலத்துடன் இருக்கலாம்," என்று கூறி இவருக்கு வேண்டிய உதவிகளை யெல்லாஞ்செய்து பாதுகாத்தார்.

திருப்பணி

பொன்னம்பலம்பிள்ளை, திருநெல்வேலியில் ஆறை அழகப்ப முதலியாரின் ஆதரவில் இருப்பதை அறிந்த சிலர் சொக்கம்பட்டியின் புதிய சமீன்தாராகிய சிவராமச் சின்னணைஞ்சாத்தேவரிடஞ் சென்று, "பொன்னம்பலம் பிள்ளை இவ்வாறு அழகப்பமுதலியாருடைய ஆதரவில் இருப்பது உங்களுடைய பெருமைக்குச் சிறுமையாகும். மேலும் அழகப்பமுதலியாரால் ஏதாவது அல்லல் நேரிடவுங்கூடும்," என்று கூறினர். சொக்கம்பட்டி ஆறை அழகப்பமுதலியாரின் பேராட்சிக்கு உட்பட்டது. ஆகவே புதுச்சமீன்தாருக்கு அச்சம் உண்டாயிற்று. "திருப்பணி முதலியவைகளை உங்களுடைய விருப்பம்போற் செய்து கொள்ளலாம். அன்புகூர்ந்து சொக்கம்பட்டிக்கு வந்து சேரவேண்டும்,"என்று தக்கார்கள்மூலம் சொல்லியனுப்பினார். தம் எண்ணம நிறைவேறும் என்பதை உணர்ந்த பொன்னம்பலம்பிள்ளை முதலியாரின் உடன்பாடு பெற்றுச் சொக்கம்பட்டிக்கு வந்துசேர்ந்தார். தம்முடைய பொருளை மிகுதியாகச் செலவிட்டுத் திருமலையாண்டவர் கோயிலில் சில திருப்பணிகளை இயற்றுவித்தார். அவருடைய உள்ளம் ஒருவாறு அமைதிபெற்றது.

கலைத்தொண்டு

இவர் அரசியல் வேலை பலவற்றை மேற்கொண்டிருந்தும் தாம்பிறந்த ஊராகிய வாசுதேவநல்லூரின் புராணத்

தைப் பாடி முடித்தார். இவரால் அவ்வக்காலங்களில் இயற்றப்பெற்ற பாடல்கள் பல.

*இறுதி*

பொன்னம்பலம் பிள்ளையின் காலத்திலேயே சொக்கம் பட்டியில் அரசாட்சி உரிமைபற்றிக் கலகங்களும் குழப்பங் களும் ஏற்பட்டன. பொன்னம்பலம்பிள்ளை எதிலுங் கருத் துச் செலுத்தவில்லை. அவ்வாறு செலுத்துவதற்கு அவரு டைய முதுமையும் இடங்கொடுக்கவில்லை. 1762-ஆம் ஆண் டில் இறைவன் திருவடி நீழலையடைந்தார்.

## ௬௫. பூசைத் தாயார்

பல ஆண்டுகட்கு முன்பு ஊற்றுமலை என்னும் ஊரில் பெருநிலக் கிழவராக இருந்தவருடைய மனைவியார் கல்வி யறிவிற் சிறந்து விளங்கினார். அவருடைய பெயர் பூசைத் தாயார் என்பது. பூசைத்தாயாருடைய கணவராகிய பெரு நிலக் கிழவர் சில காரணங்களை முன்னிட்டுப் பகைவர்கள் கையிற் சிக்கி மாண்டொழிந்தார். அந்தப் பெருநிலக் கிழவருக்கு ஆண்மக்கள் இருவர் இருந்தனர். அவர்களில் மூத்தவன் பெயர் மருதப்பதேவன், இளையவன் பெயர் சிவலவதேவன்.

பெருநிலக் கிழவரின் மனைவியும் தமிழறிஞருமாகிய பூசைத்தாயார் தம் கணவன் மாண்டதைக் கண்டு உள்ளம் வருந்தினார். தம் மக்களின் பொருட்டுத் தாம் உயிர் விடா மல் பிழைத்திருந்தார். ஆயினும் ஊற்றுமலையாகிய ஊரில் இருந்தால் மக்களுயிர்க்குத் தொல்லை யேற்படுமென்று எண்ணினார். தென்காசியை அடைந்து அங்கு மறைவாகத் [illegible]ந்தார். தம்முடைய பிள்ளைகளைப் பள்ளியில்

வைத்துக் கல்விகற்பித்துக் கொண்டிருந்தார். ஒருநாள் பெரியவன் சிறியவனை ஒரு காரணத்தை முன்னிட்டு அடித்து விட்டான். மானமுடைய இளையவன் மூத்தவன் அடித்ததற்குப் பெரிதும் வருந்தினன். தன் தாயிடஞ் சென்று தன் தமையன் அடித்ததைக் கூறி வருந்தி அழு

தாம் ஆதரவற்ற நிலையில் திண்டாடிக்கொண்டிருக்கும் போது மக்கள் இவ்வாறு போரிட்டுக் கொள்ளுகின்றனரே என்று எண்ணியபோது அப் பெண்மணிக்கு மனவருத்தம் உண்டாகியது. அவர் உடனே சிறியவனைப் பார்த்து,

"தேரோடு நின்று தெருவோ டலைகிற செய்திதனை
ஆரோடு சொல்லி முறையிடு வோம்இந்த அம்புவியில்
சீரோடு நாமும் நடந்துகொண் டால்இந்தத் தீவினைகள்
வாராவ டாதம்பி சிவல ராய மருதப்பனே."

என்று பாடினர். பிறகு பொன்னம்பலம் பிள்ளை என்பவருடைய முயற்சியினாலும் உதவியினாலும் பழைய நிலைமையைப் பெற்று ஊற்றுமலையை அடைந்து மக்களுடன் சிறப்பாகக் காலந்தள்ளினர். இவருடைய புலமை நிலைமையே இழந்த செல்வத்தைப் பெறுவதற்குத் துணையாகியது. பிறகு பொன்னம்பலம் பிள்ளையைப் பாராட்டி,

"கூட்டினன் மிகுந்தபா ளையக்காரர்
சேகரத்தைக் குறைவ ராமல்
சூட்டினன் மணிமகுடந் துரைபெரிய
சாமிசெயுஞ் சுகிர்தத் தாலே
தீட்டினன் அம்பலம்பொன் னம்பலத்தான்
திரிகூட வரையிற் கீர்த்தி
நாட்டினன் ஊற்றுமலை நாட்டரசு
தழைக்கநிலை நாட்டி னனே."

என்று புகழ்ந்து பாடினர். இவ்வம்மையாருடைய பிற செய்திகள் புலப்படவில்லை.

# ககா. சந்திரசேகர கவிராச பண்டிதர்

சந்திரசேகர கவிராச பண்டிதர் சோழவள நாட்டிலே தில்லையம்பூர் என்னும் ஊரில் தோன்றியவர். இவர் சென்னையை அடைந்து, அந்நாளில் அங்குச் சிறந்து விளங்கிய விசாகப் பெருமாளையரிடத்தினும் சரவணப் பெருமாள் ஐயரிடத்தினும் நன்கு கல்விகற்றுத் தேறினர். அந்நாளிற் சென்னையில இருந்த வித்துவான் மகாலிங்கையர், இராமானுச கவிராயர், தாண்டவராய முதலியார் முதலிய பலஅறிஞர்களோடு பழகிப் புலமைநலம் மிளிரப் பெற்ருர்.

அலுவல்

சித்தூரில் உள்ள உயர்நிலைப் பள்ளியில் பல ஆண்டுகள் தமிழாசிரியராக வேலைபார்த்தார். கும்பகோணம் கல்லூரியில் தமிழாசிரியராக இருந்த தியாகராசச் செட்டியார் ஆறு திங்கள் வரை ஒய்வெடுத்துக்கொண்டபோது, இவர் அந்த

ஙயைப் பார்த்தார்.

தமிழ்த்தொண்டு

அறிஞர்களிற் சிலர் தமிழ்த்தொண்டு புரிவதற்கென்றே தமது வாணுளைச் செலவிடுகின்றனர். அந்தக் கூட்டத்திலே இக் கவிராச பண்டிதருஞ் சேர்ந்தார். இவருடைய மனம் நூல்களைப் பதிப்பித்து வெளியிடுவதிற் சென்றது. தம் ஆசிரியர் இயற்றிய ஐந்திலக்கண வினுவிடை, பாலபோத இலக்கணம் ஆகியவைகளையும், நன்னூல் விருத்தியுரை, யாப்பருங்கலக் காரிகையுரை, தண்டியலங்காரவுரை, வச்சணந்தி மாலை, விடப்பிரதி விடத்திரட்டு, அரபத்த நாவலர் இயற்றிய பாத நூல் முதலியவைகளை ஆராய்ந்து திருத்தமான பதிப்புக்களாக வெளிப்படுத்தினர்.

தனிப்பாடல் திரட்டு

தனிப்பாடல் திரட்டு என்னும் நூல் தமிழுலகத்திலே மிகுந்த புகழ் பெற்றது. ஏனெனின் அந்நூல் பல புலவர்களால் இயற்றப்பட்டது. ஒரு புலவரால் இயற்றப்பட்ட நூலைப் பார்க்கினும் பல புலவர்களால் இயற்றப்பெற்ற நூல் சிறந்து விளங்குவது இயற்கைதானே! நாம் இக்காலத்தில் இரண்டொரு ரூபாய் கொடுப்போமானல் தனிப்பாடல் திரட்டு எளிதாகக் கிடைத்து விடுகிறது. இந்தக் கவிராச பண்டிதர்தாம் தனிப்பாடல் திரட்டைத் திரட்டியவர். அக்காலத்தில் இவர் பாடல்களைத் திரட்டித் தொகுப்பதற்குப் பட்ட தொல்லை இவ்வளவு அவ்வளவு என்று இயம்ப முடியாது. ஒவ்வொரு புலவரிடமுஞ் சென்று பாடல்களை வாங்கி ஒன்றுபடுத்துவதற்கும் காலமானவர்களுடைய பாடல்களைப் பெறுவதற்கும் மிகுந்த முயற்சி செய்து உழைத்தார். கவிராச பண்டிதர் ஒரு பாடலைப் பெறுவதற்குச் செய்த முயற்சியைப் பாருங்கள்.

ஒரு பாட்டு

கவிராச பண்டிதர் சென்னை வண்ணாரப்பேட்டையில் சிலகாலம் குடியிருந்தார். அந்தக்காலந் தனிப்பாடல் திரட்டைத் திரட்டிக்கொண்டிருந்த காலம். ஒருநாள் இரவில் கவிராச பண்டிதர் வீட்டுத் திண்ணையில் அமர்ந்திருந்தார். தெருவில் ஐயமேற்பவன் ஒருவன் நீட்டி முழக்கிப் பாடிக்கொண்டு சென்றான். கவிராசர் அவன் பாடுவதைக் கேட்பதிற் கருத்தைச் செலுத்தினர். இரவில் வந்த அந்த இரவலன், "ஊஉஉஉஉரைச்சுடுமோ ஒஒஒஒ," என்று பாடிக்கொண்டு சென்றான். அந்தப்பாட்டு முழுவதையுங் கேட்க விரும்பிய கவிராசர் திண்ணையைவிட்டு இறங்கி ஐயமேற்பவனைப் பின்தொடர்ந்தார். நீண்டநேரஞ் சென்றபின், "உலகந் தனைச்சுடுமோ ஒஒஒஒ," என்றான்.

பொறுமையை இழந்த கவிராசர் பிச்சைக்காரனைப் பிடித்து நிறுத்தினர். "நீ இப்பொழுது பாடியபாட்டை முழுவதுஞ் சொல்; காசுதருகிறேன்," என்றார். அவனே, "சாமி அது தானக வந்தால் வருமே தவிர, நான் எவ்வளவு எண்ணிப் பார்த்தாலும் வராது," என்று கூறிவிட்டான். கவிராசர் இந்தப் பாட்டை எப்படியும் முழுவதும் அறிந்துவிட வேண்டும் என்று உறுதிகொண்டார். மறுநாளும் அந்தப் பிச்சைக்காரனைப் பிடித்து நெருக்கினர். இரண்டாவது அடி வெளியாயிற்று. பாட்டு முழுவதையும் பெறுவதற்கு ஐந்தாறு நாட்களாகிவிட்டன. கவிராசர் பெரு முயற்சி பெற்ற பாட்டு,

"ஊரைச் சுடுமோ உலகந் தனைச்சுடுமோ
ஆரைச் சுடுமோ அறியேனே—நேரே
பொருப்புவட்ட மானநகிற் பூவையரே இந்த
நெருப்புவட்ட மான நிலா."

என்பதுதான். மேலுஞ் சில பாடல்களை அப்பிச்சைக் காரனிடம் இருந்து தெரிந்துகொண்டார். பிறகு இவை கள் தனிப்பாடல் திரட்டிற் சேர்க்கப்பட்டன.

மும்மணிக்கோவை

அந்நாளில் திருவாவடுதுறை ஆதீனத்தில் தலைவராக எழுந்தருளியிருந்த சுப்பிரமணிய தேசிகர்மீது மும்மணிக் கோவை ஒன்று பாடி அரங்கேற்றினர்.

பொன்னுச்சாமித் தேவர்

இவர் தனிப்பாடல் திரட்டைத் திரட்டுவதற்குக் காரணமாக இருந்தவர் பொன்னுச்சாமித்தேவர். இவர் பொன்னுச்சாமித்தேவர்மீது பல தனிப்பாடல்கள் பாடி

"செவ்வேல் திகழ்கரன் மாமலர்ச்
சேவடி சிந்தைசெய்யும்
தெவ்வே றிகல்பொன்னுச் சாமிபூ
பாலனற் சீர்க்கிரிவாய்
வெவ்வே றினமணி மேவமு
தக்கட நீர்மறைத்து
உவ்வே றினமத கவ்விளைக்
காட்டலென் ஞெண்டொடியே."

என்பது இவர் புறங்காட்டல் துறையாகப் பொன்னுச்சாமித்தேவர்மீது பாடிய பாடல்களில் ஒன்றாகும் உ ஏறின மதக என்பது-முதுகு.

இறுதி

பலவகையானும் சிறந்த செந்தமிழ்த்தொண்டு செய்திருந்த இவர் 1883 ஆம் ஆண்டில் இவ்வுலக வாழ்வைத் துறந்தார்.

இவரால் இயற்றப்பெற்றனவும் பதிப்பிக்கப்பெற்றனவுமான நூல்கள்:—

1. தனிப்பாடல் திரட்டு
2. வருடாதி நூல்
3. துலுக்காணத்தம்மை பதிகம்
4. மும்மணிக் கோவை
5. ஐந்திலக்கண வினவிடை
6. பாலபோத இலக்கணம்
7. நன்னூல் விருத்தியுரை
8. யாப்பருங்கலக்காரிகையுரை
9. தண்டியலங்கார உரை
10. வச்சணந்திமாலை
11. விடப்பிரதி விடத் திரட்டு
12. பரதநூல்

# கஎ. சுப்பிரமணிய தேசிகர்

*தோற்றம்*

*பாண்டிவளநாட்டிலே திருக்குற்றாலத்திற்கு அண்மையில் உள்ள மேலகரத்திலே வழிவழிச் சைவவேளாளர் குலத்திலே, சுப்பிரமணியதேசிகர் சாலிவாகன சகாப்தம் 1755-க்குச் சரியான விசய ஆண்டு தைத்திங்கள் முதல்நாள் அவிட்ட விண்மீனிலே தோன்றினார். இவருடைய தந்தையார் பெயர் சுப்பிரமணியக் கவிராசர். தேசிகருக்கு இடப்பட்ட பிள்ளைப்பெயர் குற்றால லிங்கர்.*

*இளமைப்பருவத்தில் குற்றாலலிங்கருக்குச் செய்யப் பெறவேண்டிய சடங்குகள் யாவும் நன்கு செய்யப்பட்டன. ஐந்தாம் அகவையிற் கல்விப்பயிற்சி தொடங்கப்பட்டது. தமிழ், தெலுங்கு, வடமொழி என்னும் மும்மொழிகளையும் பயின்றார். குற்றாலலிங்கருக்கு அகவை பன்னிரண்டு ஆனபொழுது அவருடைய தந்தையார் அவரைக் கல்விடைக்குறிச்சித் தளிகை மடத்திற்கு அழைத்துவந்தார். கல்லிடைக்குறிச்சித் தளிகைமடம் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்துச் சின்னப்பண்டார சந்நிதிகளின் இருப்பிடமாகும். அங்கு அப்பொழுது இலக்கணம் அம்பலவாணத்தம்பிரான் என்பவர் தங்கியிருந்தார். அவர் சிறந்த அறிஞராகவும் துறவியாகவும் விளங்கினார். சுப்பிரமணியக்கவிராயர் குற்றாலலிங்கரை இலக்கணம் அம்பலவாணத்தம்பிரானிடம் ஒப்புவித்து அவருக்குத் தமிழ் கற்பிக்குமாறு வேண்டிக்கொண்டார். அவரும் அதற்கு உடன்பட்டுத் தாம் தமிழ் கற்பித்ததன்றி, ஆதீன வடமொழிப்புலவராக இருந்த வேதாந்த சாத்திரிகளிடம் வடமொழி பயிலுமாறுஞ் செய்தார். குற்றாலலிங்கர்*

மற்றைய மாணவர்களைக்காட்டிலும் ஊக்கமாகப
கல்வியில் தேர்ச்சியடைந்தார்.

சின்னப்பட்டம்

அந்நாளில் திருவாவடுதுறையாதீனத்து மகாசந்நிதானமாக எழுந்தருளியிருந்த அம்பலவாணதேசிகர் தென்னாட்டுச் சிவப்பதிகட்கு இறைவழிபாட்டின்பொருட்டுச் சென்று பின்னர்த் திருநெல்வேலியை அடைந்து ஈசான மடத்தில் எழுந்தருளியிருந்தார். குற்றாலலிங்கரின் தந்தையாராகிய சுப்பிரமணியக்கவிராசர் இதனை அறிந்தார். தம் மைந்தரையும் அழைத்துக்கொண்டு திருநெல்வேலிக்கு வந்தார். தேசிகரைக்கண்டு வணங்கி அவரோடு தங்கியிருந்தார். பின்பு தேசிகர் கல்லிடைக்குறிச்சியை அடைந்து சிலநாள் உறைந்தார். அப்பொழுது தேசிகர் குற்றாலலிங்கருடைய கல்வியறிவையும் நல்லொழுக்கங்களையுங் கண்டு மகிழ்ந்தார். ஆதின முறைப்படி அவருக்கு ஞானவழித் தீக்கை செய்து சின்னப்பட்டமாகத் திருமுழுக்குச்செய்தார். தம் ஞானசாரியரின் திருப்பெயராகிய சுப்பிரமணிய தேசிகர் என்பதையே தீட்சைப்பெயராக வழங்கியருளினார். அப்பொழுது குற்றாலலிங்கருக்கு அகவை ஈரேழு.

திருவாவடுதுறைக்குச் செல்லுதல்

பிறகு சுப்பிரமணியதேசிகர் தம் ஞானசிரியர்பால் ஆதீனத்திற்குரிய அறிவு நூல்களை ஓராண்டு ஐயந்திரிபற ஓதியுணர்ந்தார். அப்பால் ஞானசாரியருடன் துறைசையடைந்து நமச்சிவாயமூர்த்திகளைப்போற்றி வழிபட்டார். சிலகாலம் அங்கிருந்த பின்னர்க் கல்லிடைக்குறிச்சியை அடைந்து அங்குத் தங்கினார். மாணவர் பலருக்குப் பல நூல்களைப் பாடஞ் சொன்னார்.

சித்தியாருக்குப் பதவுரை செய்தல்

ஆண்டுகள் பன்னிரண்டு சென்றன. தம் ஞானசாரியரைக்கண்டு போற்றவேண்டுமென்று திருவாவடுதுறையை அடைந்தார். ஞானசாரியரைப் போற்றி வழிபட்டார். திருவண்ணாமலை, திருவெண்ணெய்நல்லூர் முதலிய சிவப் பதிகட்குச்சென்று இறைவழிபாடுசெய்து துறைசைக்கு மீண்டார். இந்நாளிலேதான் திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை திருவாவடுதுறை ஆதீனப்புலவராக அமர்ந்து மாணவர் பலருக்குக் கல்வி கற்பித்துக்கொண்டிருந்தார். இந்நாளில் சுப்பிரமணியதேசிகர் சிவஞான சித்தியாருக்கு மாதவச்சிவஞான சுவாமிகள் அருளிச் செய்த பொழிப்புரையைத் தழுவிப் பதவுரை ஒன்றை அன்பர்களுடைய வேண்டுகோளின்படி எழுதினார்.

பெரிய பட்டத்தில் எழுந்தருளல்

பிறகு சுப்பிரமணியதேசிகர் சேதுமன்னரும் பிறரும் வேண்டிக்கொண்டதற்கிணங்கி இராமேசுரம் இராமநாத புரம் முதலிய இடங்கட்குச் சென்றார். பிறகு திருப் பெருந்துறையை அடைந்து இறைவழிபாடு செய்து கொண்டு சிலகாலம் தங்கியிருந்தார். அன்பர்கள் பலர் கல்லிடைக்குறிச்சிக்கு எழுந்தருளவேண்டும் என்று கேட்டுக்கொண்டதற்கு இணங்கிப் புறப்பட்டு மதுரையை அடைந்தார். அப்பொழுது ஞானசாரியர் திருவடிப்பேறு பெற்ற செய்தி எட்டியது. ஆகவே திருவாவடுதுறையை அடைந்து ஆசிரியருக்குச் செய்யவேண்டிய சடங்குகளை யெல்லாம் முறைப்படி செய்தார். பத்தாநாட் குரு பூசையை மிகச்சிறப்புடன் நடத்தினார். பிறகு ஆதீனத்தின் பெரிய பட்டமாக எழுந்தருளியிருந்தார்.

நமச்சிவாயதேசிகர்

திருநெல்வேலிக்குப் பக்கத்தில் உள்ளதும் மங்கலப் பேட்டை என்று சொல்லப்படுவதுமாகிய பேட்டை என்னும் ஊரிலே வழிவழிச் சைவவேளாளர் குலத்தில் தோன்றி இளமைப்பருவத்திலேயே திருவாவடுதுறையை அடைந்து நன்கு கல்வி கற்றிருந்ததன்றித் தம் ஆசிரியராகிய அம்பலவாணதேசிகரிடத்திலே மூவகைத் தீக்கையும் பெற்றவராகிய நமச்சிவாயதேசிகரை ஆதீன முறைப்படி பிரமோதூத ஆண்டுச் சித்திரைத் திங்களில் சின்னப்பட்டமாகத் திருமுழுக்காட்டினார்.

சிவஞானயோகிகட்குக் கோயில்

பிறகு தேசிகர் தென்னாட்டிற் சுற்றுப்பயணம் செய்ய எண்ணினார். நமச்சிவாயதேசிகரையும் உடன் அழைத்துக்கொண்டு திருப்பெருந்துறை, பிரான்மலை, திருக்கானப்பேர், திருவாலவாய் முதலிய சிவப்பதிகளை வணங்கிக் கொண்டு திருநெல்வேலியை அடைந்தார். பிறகு தனிகை மடத்தையடைந்து ஆதீன வழக்கப்படியே நமச்சிவாய தேசிகரை அங்கிருக்கச்செய்தார். தாம் செவந்திபுரத்தில் எழுந்தருளியிருந்துகொண்டு நாள்தோறும் பாபவிநாசப் பதிக்குச்சென்று உலகம்மையையும் முக்களாலிங்கப்பெருமானையும் போற்றி வழிபட்டுக்கொண்டுவந்தார். அந்நாளில் விக்கிரமசிங்கபுரத்தில் இருந்த சிவஞானபோத மாபாடிய சிவஞான அடிகளின் இல்லத்தை ஆதீனத்திற்கு உரிமையாக்கி உருவச்சிலையை அமைத்தார். இரண்டுகால பூசைக்குவேண்டிய ஏற்பாடுகளையுஞ் செய்து வைத்தார்.

திருவனந்தபுர அரசர் வரவேற்பு

சிலநாட்சென்ற பின்பு தேசிகர் நமச்சிவாயதேசிகரையும் உடன் அழைத்துக்கொண்டு மலைநாட்டுக்கு எழுந்

தருளினார். ஆதீனச் சின்னப்பட்டத்திற்குரிய பழைய மடாலயமாகிய சுசீந்திரத்தையடைந்து அங்குத் தங்கியருளினார். அந்நாளில் திருவனந்தபுரத்தில் அரசராக அமர்ந்திருந்த ஆயிலியந்திருநாள் இரண்டு பெரியார்களையும் திருவனந்தபுரத்திற்கு அழைத்துக்கொண்டு சென்றார். தமது அரண்மனையில் இலட்சுமி விலாசத்தில் அவர்களை இருக்கச் செய்தார். ஏழெட்டு நாட்கள் இரு பெரியார்களும் அங்குத் தங்கியிருந்தனர். அரசர் குருமூர்த்திகளோடு அளவளாவி மகிழ்ந்து நாள்தோறும் நகர்வலஞ் செய்வித்தார். சந்நிதானங்கள் திரும்புங்காலத்தில் தந்தச்சிவிகை, குடை கட்டிய வெள்ளித்தடி முதலியவைகளை வழங்கிச் சிறிது தொலை பின்சென்று வழியனுப்பினார். தேசிகர் பாண்டி நாடடைந்து தளிகை மடத்தில் நமச்சிவாயதேசிகரை நிறுத்தித் தாம் துறைசைக்கு மீண்டார்.

தேசிகரைப் போற்றியவர்கள்

சுப்பிரமணியதேசிகர் அருங்கலை விநோதர். மடாலயத்தில் எப்பொழுதும் தென்மொழிப்புலவர்கள் கூட்டமும் வடமொழிப்புலவர்கள் கூட்டமும் நிறைந்திருக்கும். தேசிகர் ஒவ்வொருவருடைய புலமைத் திறத்தையும் நன்குணர்ந்து தக்கவாறு நன்கொடை வழங்குவார். கல்வி கற்பதில் ஒவ்வொருவரையும் மேன்மேலும் ஊக்கப்படுத்த வேண்டுமென்பது தேசிகருடைய கொள்கை; ஆகவே அவர்களைப்பார்த்து இன்னும் நன்கு கற்றுவருவீர்களாயின் தக்கவாறு பரிசு பெறுவீர்கள் என்று ஊக்குவார். தேசிகர் காலத்திய புலவர்களில் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை, தில்லையம்பூர்ச் சந்திரசேகர கவிராசர், வேதநாயகம்பிள்ளை, காசிவாசி பரமசிவசுவாமிகள், சேதுபதிகள், மகாவைத்தியநாதையர், இராசுச் சாத்திரிகள் முதலிய பல பெரிய அறிஞர்கள் தேசிகரைப் புகழ்ந்து

பாராட்டியுள்ளனர். யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் மூன்றுமுறை ஆதீனத்திற்குவந்து தேசிகரை வணங்கிச்சென்றார். மற்றும்பலர் துறைசையை அடைந்து அடிக்கடி தேசிகரைப்போற்றிச் செல்வர். திராவிடப் பிரகாசிகை என்னும் நூல் இயற்றிய யாழ்ப்பாணம் வட கோவைச் சபாபதி நாவலர் தேசிகரிடத்தே அருளுரை பெற்று ஆதீனப்புலவராக விளங்கினார்.

### அரசர் வருகை

ஆயிலியந்திருநாள் அரசருக்குப்பின் அரசராகிய விசாகந்திருநாள் காசியாத்திரை முடித்துக்கொண்டு செல் லும்போது திருவாவடு துறையாதீனத்தை அடைந்து ஒரு நாள் தங்கியிருந்தார். கையுறையாகக் கங்கைநீர், காண்டா மிருகக்கொம்பு முதலியவைகளைக் கொடுத்ததோடு இரண்டு யானைகளையும் வழங்கிச் சென்றார்.

### மாணவாகளா

தேசிகரிடம் தீக்கைபெற்றவர்களும் கல்விகற்றவர் களும் பலர். அவர்களுள் சூரியனார்கோயில் ஆதீன முத்துக் குமார தேசிக அடிகள், திருப்பனந்தாள் குமாரசுவாமிகள், மதுரை திருஞானசம்பந்தப்பிள்ளை, பழனிக்குமாரசுவாமி கள், ஆறுமுக சுவாமிகள், மகாலிங்க சுவாமிகள் முதலிய வர்கள் குறிப்பிடத்தக்கவர்களாவர்.

### இறுதி

இவ்வாறு புகழ்பெற்று விளங்கிய தேசிகர் தமது வாணாளில் செந்தமிழ்க்குத், தக்கவாறு ஆக்கவேலை செய் தருளிச் சாலிவாகனசகம் ௧௭௯௯ சர்வசித்து ஆண்டு மார்கழித்திங்கள் ௨௫-ஆம் நாள் (1888) இறைவன் திரு வடி நீழலைச் சேர்ந்தார்.

## ௧௮. பேரறிஞர் கந்தசாமி முதலியார்

### தோற்றம்

பொங்குமா புகழார் கொங்குமா நாட்டில், மருவூர் பொழின்மிகு கருவூர் தன்னில் கந்தசாமி முதலியார் 1838-ஆம் ஆண்டிலே தொண்டைமண்டலம் கொண்டை கட்டி வேளாளர்மரபிலே மாங்காடு நாட்டு நெல்வேலியார் குடியிலே பிறந்தார். தந்தையார் பெயர் உலகநாத முதலியார், தாயார் பெயர் பார்வதியம்மையார்.

இளமைப் பருவத்திலேயே தந்தையை இழந்தமையால் தாயார் பிறந்த வீட்டில் வளர்ந்தார். உரிய காலத்தில் பள்ளியில் வைக்கப்பெற்றுப் பள்ளிக்கல்வியை ஊக்கமாகப் பயின்றார். தமிழ்க்கல்வியை நன்கு கற்றுச் சிறப்படைய வேண்டும் என்று எண்ணினார். அந்நாளில் திருத்தணிகை சரவணப்பெருமாளையரிடம் கல்விகற்றுச் சிறந்துவிளங்கிய சந்திரசேகரம்பிள்ளை என்பவரையடுத்துத் தமிழ் நூல்கள் பலவற்றையும் முறையாக ஓதியுணர்ந்தார்.

### அக்காலத்திய அறிஞர்கள்

யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர், சபாபதி நாவலர் திரிசிரபுரம் பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம்பிள்ளை முதலிய அறிஞர்கள் இவர்காலத்தில் சிறந்துவிளங்கினார்கள். கந்தசாமிமுதலியார் மேற்கூறிய புலவர் பெருமக்களோடு நட்புடையவராக விளங்கினார்.

### வாழ்க்கை

தம்மையடுத்துக் கல்விகற்கவிரும்பிய அன்பர்களுக்கு நூல்கள் பலவற்றையும் கற்பித்தார். சூளை சோமசுந்தர நாயகர் முதலிய அறிஞர்களை அழைத்துச் சொற்பொழிவு

கள் செய்வித்துச் சிறப்புச்செய்தார். சைவ சமயத்திடத்திலே மிகுந்த பற்றுக்கொண்டு விளங்கினார். சிவனடியார்களிடத்திலும் திருநீறு சிவக்கண்மணி ஆகியவைகளிடத்திலும் பேரன்புகொண்டிருந்தார். அந்நாளில் தேவாரம் முதலிய திருமுறைகளை முறைமையாகப் பயின்று ஓதுவோர் மிக அரியர். அத்தகையோர் எவரையேனும் கண்டால் தேவார திருவாசகங்களைப் பாடச்செய்து இன்புறுவார். சிவவழிபாட்டிலும் திருக்கோவிலுக்குச் செல்வதிலும் மிகுந்த ஊக்கம் உடையவர்.

கலைத் தொண்டு

கொங்குநாட்டுச் சிவப்பதிகளான திருப்பேரூர், அவிநாசி, திருமுருகன் பூண்டி, திருக்கருவூர், பவானி என்னும் திருநணா ஆகியவைகளின் தலபுராணங்களை ஆராய்ந்து அச்சிற்பதிப்பித்து வெளிவரச் செய்தார். கொடுமுடிப் புராணத்தைத் தொகுத்துச் சில பகுதிகள் பாடினார். பிறகு இப்புராணம் இவருடைய மாணாக்கர் வேங்கடரமணதாசர் என்பவரால் இயற்றி நிறைவேற்றப்பெற்றது.

சிவத்திருப்பணி

இவர் கோயமுத்தூரில் முன்சீப்கோர்ட் வழக்கறிஞராக அலுவல்பார்த்துத் தமது வாழ்க்கையை நடத்தினார். அதில் நல்ல வருவாய் வந்தது. ஆயினும் அத்தொழிலையே நீடித்து நடத்திப் பெரும்பொருள் திரட்டிப் பெருஞ்செல்வராக வாழ்தற்கு எண்ணவில்லை. திருப்பேரூர்ச் சிவப்பதியினிடத்திலே மிகுந்த அன்புகொண்டு அப்பதியில் திருப்பணி செய்தலையே தமது வாணாளின் குறிக்கோளாகக் கொண்டார்.

கோயமுத்தூர்த் தாலுகா இந்து தேவத்தானக் கமிட்டியில் செயலாற்றும் உறுப்பினராகத் தம் வ ள

முடிவுவரை இருந்தார். பேரூர்த் திருக்கோவிலுக்குச் சேர வேண்டியதாக இருந்தும் இருபதாண்டுகள்வரையிற் பறிமுதல் செய்யப்பட்டிருந்த இனாம் சிற்றூரை மீட்ட தல்லாமலும் பேரூர்க் கிராமத்தைச் சர்வமானியமாக ஆக்கச் செய்தார். பேரூர்ச் சுவாமிகோயில், அம்மன் கோயில் ஆகியவைகளை முழுமையும் கருங்கல் திருப்பணி யாகச் செய்துமுடித்தார். இப்பொழுதுள்ள மேற்படி கோயில் நகைகள் பெரும்பாலும் இவர் செய்வித்தனவே யாம். தேர் முதலாகிய ஊர்திகள் செய்வித்தார். புதிய திருவிழாக்களையும் திருவிழாக் கடவுளரையும் உண் டாக்கித் திருவிழாக்கள் சிறப்பாக நடைபெறச் செய்தார். அரசம்பலவாணர் என்னும் காலவேச்சுரத்திருக்கோயில் முழுதும் இவர் செய்வித்த திருப்பணியேயாகும்.

சைவச் சொற்பொழிவு நிலையம்

1866-ஆம் ஆண்டில் "சைவப்பிரசங்கசாலை" என்னும் ஒரு நிலையத்தை நிறுவினார். அந்நாளில் கிறித்துவர்கள் தமது சமயத்தை நாடெங்கும் பரப்புவதற்கு மிகக்கடுமை யாக வேலைகள் செய்தனர். கிறித்துவ சமயச்சொற் பொழிவுகள் எங்கு பார்க்கினும் மிகுதிப்பட்டன. அதற்கு எதிரிடையாக இவர் பலவேலைகள் செய்தார். திருப் பேரூர்க் கிள்ளைவிடுதூது என்னும் பெயருடன் தாமியற் றிய நூலில் கிறித்துவமத கண்டனஞ் செய்தார். சைவப் பிரசங்கசாலையும் அம்முயற்சிகளுள் ஒன்று. இதற்காகத்
ய கட்டிடம் அமைத்து, ல கக
கடவுள் கூத்தப்பிரான் (நடராசர்) முதலிய கடவுளர்களின் திருவுருவங்களை அமைத்து, நாள்தோறும் வழிபாடு நடத் தினார். திங்கட்கிழமைகள்தோறும் சிவபுராணச் சொற் பொழிவுகள் நிகழ்த்தினார். சமயாசாரியர்களுக்குக் குரு
நடத்தினார். சிவராத்திரி, திருக்கார்த்திகை,

விநாயகசதுர்த்தி, நவராத்திரி, கந்தசட்டி முதலிய திரு நாட்களைக் கொண்டாடினார். அவ்வத் திருநாட்களின் பெருமைகளைப்பற்றிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். இதனால் சைவசமய உண்மைகளை மக்கள் எல்லோரும் நன்கு தெரிந்துகொள்வதற்கு வழியேற்பட்டது. சொற்பொழிவுநிலையம் இன்றும் நன்றாகத் தொண்டாற்றி வரு கின்றது. அதற்கென்று இவருடைய மகனாரால் பெரிய கட்டிடம் ஒன்றும் அமைக்கப்பட்டுள்ளது.

### நூல்கள் இயற்றுதல்

இவருடைய கிள்ளைவிடுதூது என்னும் நூலில் கிறித்து மத கண்டனஞ் செய்யப்பட்டுள்ளமையைப் பார்த்த கிறித் துவர்கள் 'பிள்ளைவிடுதூது' என்னும் கண்டனநூலை எழுதி வெளிப்படுத்தினர். அதற்கு மறுப்பாக இவர், "சிசு தௌத் திய திரணசண்டமாருதம்," என்னும் கலிவெண்பாச் செய் யுள் நூலையும், "பிள்ளைவிடுதூது ஆபாசவிளக்கம்," என் னும் உரைநடைநூலையும் தம்முடைய மாணாக்கர்களாகிய வேங்கடரமணதாசர், நமசிவாயச் செட்டியார் என்பவர் களுடைய பெயரால் வெளிவரச் செய்தார். கிறித்துவர்கள் போராட்டம் இவ்வளவில் ஒருவாறு முடிவுபெற்றது. மேலும் இவர் சில நூல்களை இயற்றினார்.

### இவர் குடும்பம்

இவருக்குத் திருமகன் ஒருவர் தோன்றினார். அவர் தாம் கோயமுத்தூர் வழக்கறிஞரும் பெரிய புராண உரை யாசிரியருமாகிய சிவக்கவிமணி, திருமுறை ஞானபானு சி. கெ. சுப்பிரமணிய முதலியாராவர். இக்குடும்பத் தினர்க்குப் பெயர்ப்பொருத்தம் நன்றாக அமைந்துள்ளது. தகப்பனார் உலகநாத முதலியார்; தாயார் பார்வதியம்மை யார், மகன் கந்தசாமி முதலியார், மாமன் அரங்கசாமி

முதலியார். கந்தசாமி முதலியார் தம்முடைய ஆசிரியர் மீது பாடிய திருப்பேரூர்க் கிள்ளைவிடுதூது என்னும்

எய்து உயாவாம இளங்கிள்ளியே என்றனது
செய்தி சிலவெடுத்துச் செப்பக்கேள்—வையத்துள்
வீசு புகழ்சேர் வியன்பதியென் றிவ்வுலகம்
பேசுகரு ஆரிற் பிறந்தேன்யான்—மூசுதிரை
வெள்ளப் புனன்மே வியசீர்க்கங் காகுலத்தில்
பிள்ளையென வந்து பிறந்தேன்யான்—வள்ளல்பேர்
பூணுலக நாதன் பொருந்தவரும் பார்ப்பதியால்
பேணு மகவாய்ப் பிறந்தேன்யான்—பூணற்
கரிய புகழ்சேர் அரங்கசா மிக்குப்
பிரியமரு காகப் பிறந்தேன்யான்..............
...................................இளமையில்
தந்தை இறந்தொழியத் தாயார் பிறந்தகத்தில்
வந்து வளர்க்க வளர்ந்தேன்யான்...............

என்று தமது வரலாற்றுப் பகுதிகள் சிலவற்றை அமைத்துள்ளார்.

இவர் 1890-ஆம் ஆண்டில் இறைவன் திருவடிநீழலை எய்தினர்.

இவரால் இயற்றப்பெற்ற நூல்கள்

1. திருப்பேரூர்க் கிள்ளைவிடுதூது
2. திருப்பேரூர்ப் பச்சைநாயகியம்மையார் ஊசல்
3. பச்சைநாயகி அம்மையார் ஆசிரிய விருத்தம்
4. திருப்பேரூர் மும்மணிக்கோவை
5. தருதமலை ஆண்டவர் உயிர்வருக்கமாலை
6. திருப்பேரூர்ப் போற்றிக் கலிவெண்பா
7. திருப்பேரூர் மாலை.
8. முத்துவிநாயகர் பதிகம்
9. கோட்டைச் சண்முகநாதர் பதிகம்.

10. வெள்ளை விநாயகர் பதிகம்.
11.

முதலியன இவர் இயற்றிய நூல்கள். இவருடைய நூல்களில் இருந்து சில பாடல்களைக் காண்க.

## பச்சை நாயகியார் ஊசல்

"சந்திரனை வென்றிலகு வதன மாடத்
தடநெடுங்கண் ணுடுசெவிகள் தாம்போ ராட
எந்தவுல குந்தருமால் இலையும் ஆட
இல்லையுண்டென் றோதும்இயல் இடையும் ஆடப்
பந்தமறுத் தருள்நல்கும் பதங்கள் ஆடப்
பலமுனிவர் கொண்டாடிப் பாடி யாடச்
செந்திருவாழ் பேரைநகர்ப் பட்டி நாதர்
தேவிபச்சை நாயகியார் ஆடி ரூசல்."

## பச்சைநாயகியம்மை ஆசிரிய விருத்தம்

"சீர்கொண்ட வதனமும் கார்கொண்ட முகிலெனத்
திரள்கொண்ட பைங்கூந்தலும்
சிலைகொண்ட கருவமும் விலைகொண்ட புருவமும்
செங்கையிற் கொண்டகிளியும்,
ஏர்கொண்ட பண்மொழியும் கூர்கொண்ட வேல்விழியும்
எழில்கொண்ட நுண்பணிகளும்
இடைகொண்ட கலையுமவ் விடைகொண்ட மேகலையும்
ஏழ்கொண்ட புவிதாவியே,
தார்கொண்ட மணிமுடியும் நார்கொண்ட வடிகளும்
சயங்கொண்ட மால்முதலினோர்
தலைகொண்ட தேகமோர் நிலைகொண்ட பாகமும்
தனங்கொண்ட திருமார்பமும்,
பார்கொண்ட அடியரொடு நேர்கொண்டு நீ சேவை
பாலிப்ப தெந்நாளோ
பச்சிளஞ் சோலைதிகழ் உச்சிதப் பேரைவளர்
பச்சைமர கதவல்லியே."

## ௧௬௯. வெள்ளியம்பல உபாத்தியாயர்

### தோற்றம்

வெள்ளியம்பல உபாத்தியாயர் இற்றைக்கு அறுபது ஆண்டுகளுக்கு முன்பு சென்னை திருமயிலையில் சிறந்த தமிழ்ப்புலவராக விளங்கியிருந்தார்.

### தந்தையார்

இவருடைய தந்தையார் பெயர் பாலமுத்து உபாத்தியாயர். இவர் சேயூரில் இருந்து சென்னைக்குக் குடியேறியவர். சிவபெருமானிடத்தும் அடியார்களிடத்தும் பேரன்புடையவர். நாள்தோறும் ஆனைமுகக் கடவுளைத் தவறாமல் பூசை செய்வார். ஒரு சிவனடியாருக்கு அன்னமிடாமல் காலையுணவு உட்கொள்ளமாட்டார். வெள்ளியம்பலவருக்கு முன்னவராக முருகப்ப உபாத்தியாயர் என்னும் மூத்தவரும் இருந்தார். அவரும் தமிழ்ப் புலமை நிரம்பப் பெற்றவர்.

### கல்வி

வெள்ளியம்பலவர் தசாவதானம் வீராச்சாமிச் செட்டியாரிடம், இலக்கண இலக்கியங்களை முறைமையாகக் கற்றுணர்ந்தார்.

### கல்வித்தொண்டு

வெள்ளியம்பலவர் தமிழ் நூல்களைப் பயின்று புலமையடைந்ததும் பெண்கள் நார்மல் பள்ளியில் தமிழாசிரியராக அமர்ந்தார். திருவிளையாடற் புராணம் பெரிய புராணம் முதலிய சிவபுராணங்களைத் திருவல்லிக்கேணியில் அந்நாளில் இருந்த வேங்கடாசலச் செட்டியார் என்பவருடைய ஆதரவில் சொற்பொழிவு செய்தார். இவருடைய இனிமையான சொற்பொழிவு கேட்டார்ப்பிணிக்குந் தன்மையொடு

விளங்கியது. இவருடைய புராணச் சொற்பொழிவினால் மக்கள் கடவுளன்பு அடியாரன்பு முதலிய நல்லறிவுகளைப் பெற்றதுடன் நல்லொழுக்கம் கல்வியில் விருப்பம் முதலிய நன்மைகளையும் பெற்றார்கள். அக்காலத்திய அறிஞரும் பிறரும் இவரிடத்தில் சிறந்த நன்மதிப்புக்கொண்டிருந்தார்கள்.

வழிவழிப் புலமை

இவருடைய தந்தையாராகிய பாலமுத்து உபாத்தியாயரும் புலவராக விளங்கியிருந்ததன்றி மைந்தராகிய சிவஞானம் பிள்ளை என்பவரும் சிறந்த தமிழ்ப் புலமை அமையப் பெற்றவராக இருந்தார்.

இறுதி

நார்மல் பள்ளியில் தமிழாசிரியராக இருந்த இவர் பிறகு செந்தோம் பள்ளியிலும் தமிழாசிரியராகப் பணி புரிந்திருந்து, 1895-ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் நான்காம் நாள் தமது அறுபத்து மூன்றாம் அகவையில் இறைவன் திருவடி நீழலை யடைந்தார்.

குண நலன்கள்

இவர் மிகுந்த பொறுமைக் குணம் உடையவர். சிவ பூசையைத் தவறாது செய்யும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தவர். ஏழை எளியவர்களிடத்தில் மிகுந்த இரக்கம் உடையவர். பள்ளியில் வேலைபார்த்ததன்றிக் கைம்மாறு கருதாது இல்லத்திலும் பலருக்குக் கல்வி கற்பித்தார். இவரிடங் கல்விகற்ற மாணவர்களில் ஆ. சிங்காரவேலு முதலியார், நல் சுப்பிரமணிய முதலியார் முதலியோர் சிறந்து விளங்கினர். இவர் காலமானபோது திருமயிலை அறிஞர் சண்முகம் பிள்ளை இரங்கற்பாப் பாடி வருந்தினர்.

## ௨௦. இராமசாமிராசு

தோற்றம

இராமசாமிராசு என்னும் இவர் தென்னாற்காடு மாவட்டத்திலே உள்ளே திண்டிவனத்தில் 1852-ஆம் ஆண்டிற் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் அரங்கசாமிராசு.

கல்வி

இராமசாமிராசு இளம் பருவத்திலேயே நுண்ணுணர்வும் ஆழ்ந்த எண்ணமும் உடையவராக இருந்தார். இவருடைய உறவினர் ஒருவர் ஒருநாள் இவரைப்பார்த்து, "அகவை பத்து நிரம்பியும் ஆங்கிலக் கல்வியைக் கற்கத் தொடங்காமல் இருக்கும் நீ எவ்வாறு உருப்படப் போகிறாய்?" என்று சொல்லிக் கண்டித்து இகழ்ந்துரைத்தார். அப்பொழுது பத்து ஆண்டு நிரம்பப்பெற்ற சிறுவராக இவர் அவ் விகழ்ச்சியைப் பொறுக்க முடியாமல் தமது வீட்டிற்கு விருந்தினராக வந்திருந்த இராமச்சந்திர நாயுடு என்பவருடன் புறப்பட்டுச் சென்னைக்குச் சென்றார். இராமச்சந்திர நாயுடு தமக்கு மக்கட் பேறின்மையால் இராமசாமி ராசுவையே மகனாகக் கருதினார். தந்தையினும் பன்மடங்கு போற்றிப் பாதுகாத்தார். ஆங்கில பாடசாலையொன்றிற் சேர்த்துக் கல்வியிலச் செய்தார்.

)ராசு மூன்றாவது நான்காவது வகுப்பிற் படிக்கும் போதே ஆங்கில மொழியில் பேசுந்திறமையை அடைய வேண்டும் என்னும் கருத்தோடு ஐரோப்பியச் சிறுவர்களோடு நெருங்கிப் பழகிவந்தார். சிறிது காலத்தில் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்தார். பதினான்காம் அகவையிலேயே மெட்ரிகுலேஷன் வகுப்பை அடைந்து விட்டார். பத்தாவது அகவையில் ஆங்கில மொழியைப் பயிலத் தொடங்கிப் பதினான்காவது அகவையிலேயே

பிரதாபசந்திரவிலாசம்

மிகுந்த செல்வமும், குறைவற்ற கல்வியும், நற்குடிப் பிறப்பும் அமைந்த இளைஞர்கள் பலர் ஒழுக்கம் சிறிது மில்லாத தீயோர்களுடைய வஞ்சனைக்குள்ளாகி, அறிவு திரிந்து நெறிதவறிப் போவதை நாம் நாளும் காண்கிறோம். இதற்குக் காரணம் யாதெனின், பசுத்தோல் போர்த்த புலியைப்போல் நடித்து மாயப்பொய்ம்மொழிகள் பேசி நடிக்கும் கயவர்களது உண்மைக் கருத்தை அறிதற்கு ஏற்ற உலகப்பழக்கம் அச் சிறுவர்கட்கு இல்லாமையே யாகும். ஆகவே அக் குறையைப் போக்கக்கருதி, ஈனர்களுடைய இயல்பை நன்கு விளக்கிக்காட்டித் தமிழ்மொழியில் இவர் பிரதாபசந்திரவிலாசம் என்னும் நாடகம் ஒன்றை இயற்றினர். அந் நாடகம் இவருடைய தமிழ்ப் புலமையையும் அறிவுத் திறமையையும் நன்கு விளக்குவதாக அமைந்திருக்கிறது. அவர் அந் நாடகத்தில் இயற்றியுள்ள பாடல்களிற் சிலவற்றைக் கீழே காண்க.

"மைடியர் பிரதரே எங்கள் மதருக்குக் கூந்தல் நீளம்
ஐடிலா யவளுந் தூங்க அறுத்ததை விற்று நானும்
வைடிலோர் லேடி யாகச் சட்காவில் ஏறிக் கொண்டே
ஒய்டான ரோட்டின் மீதில் உல்லாச மாகப் போனேன்."

"ஆரடா எசமான் வீட்டின் அண்டையில் இடைவி டாமல்
கார்டுசெய் சிப்பாய் வாடா கடுகியே சென்று உந்தன்
லார்டான பிரதா பசந்திர லட்சுமி புத்தி ரற்கிக்
கார்டையுங் கொடுத்து நீதான் கவனமாய்ப் பதில்சொல் வாயே."

"தடநெடும் உலகில் இந்தத் தப்பிலிப் பயலைப் போலக்
கிடைப்பதே அரிதா குங்காண் கிட்டிய மட்டும் நம்மைத்
தடவியே தலையின் மூளை தனையுறிஞ் சிட்ட கெட்ட
மடையன்தன் வார்த்தை நம்பி மதிமோசம் போய்விட் டோமே."

இறுதி

இவ்வாறு உலகியலிலும் தமிழ்த்தொண்டிலுஞ் சிறந்து விளங்கிய இவர் நீண்டகாலம் இவ்வுலகில் வாழவில்லை. தமது நாற்பத்தைந்தாம் அகவையில் 1897-ஆம் ஆண்டு சூலைத்திங்கள் 17-ஆம் நாள் உதகமண்டலத்தில் இவ்வுலக வாழ்வைத் துறந்தார்.

## உக. இலிங்கப்ப ஐயர்

உ. வே. சா. காலம்

இவர் உ. வே. சாமிநாத ஐயருடைய ஊராகிய உத்தமதானபுரத்தில் இருந்தார். சாமிநாதையர் சிறுவராக இருந்தபோது இவர் முதியவராக இருந்தார். இவர் கல்வியை நன்கு கற்றிருந்தார். செய்யுள் இயற்றும் ஆற்றலும், இசைப்பயிற்சியும் இவரிடம் நன்றாக அமைந்திருந்தது. கம்பராமாயணச் சொற்பொழிவு செய்வதில் தேர்ச்சி பெற்றவர்.

குறவஞ்சி நாடகம

இவர் பல இசைப்பாடல்களை இயற்றினார். சுவாமிமலையில் எழுந்தருளிய முருகக்கடவுள்மீது குறவஞ்சி நாடகம் ஒன்றுபாடி அரங்கேற்றினார். உத்தமதானபுரம் கோயிலில் எழுந்தருளிய ஆனந்தவல்லியம்பிகைமீதும் ஆனைமுகக்கடவுள்மீதும் இசைப்பாடல்கள் பலவற்றை இயற்றினார். இவருடைய மக்களாகிய சேஷையர் சாமிநாதையர் என்பவர்களும் கல்வியறிவிற் சிறந்தவர்களாய் இராமாயணச் சொற்பொழிவு செய்வதில் வல்லவர்களாய்ச் சிறந்து விளங்கியிருந்தார்கள்.

## ௨௨. சடகோப ஐயங்கார்

### தோற்றம்

உ. வே. சாமிநாத ஐயருக்குத் தமிழாசிரியராக இருந்த பலரில் இந்தச் சடகோப ஐயங்கார் தாம் முதலாவது ஆசிரியராவர். இவருடைய தந்தையார் பெயர் ஐயாவையங்கார். இந்நாளில் அரியலூர் என வழங்கும் அரியலூரே சடகோப ஐயங்காருடைய ஊராகும். சடகோப ஐயங்காருடைய தந்தையாராகிய ஐயாவையங்காரும் நல்ல தமிழறிஞராவார். இந்த ஐயாவையங்கார் உடையார் பாளையம் அரண்மனைப்புலவராக அமர்ந்திருந்தார். இவர் தமது அலுவலைவிட்டு விலகியபோது அரியிலூர்ப் பெருமாள் கோயில் நரசிங்க மூர்த்திமீது,

"வஞ்ச மாரும் மனத்தரைக் காவென்று
வாழ்த்தி வாழ்த்தி மனதுபுண் ணாகவே
பஞ்ச காலத்தில் பிள்ளைவிற் பார்கள்போல்
பிரபந்தம் விற்றுப் பரிசுபெ றாமலே
நெஞ்சம் வாடி இளைத்துநொந் தேனையா
நித்த நின்மல நின்னடி தஞ்சங்காண்
செஞ்சொல் நாவலர் போற்றஎந் நாளினும்
செழித்து வாழரி யில்நர சிங்கமே."

என்று பாடினார். சடகோப ஐயங்கார் தம்முடைய தந்தையாரிடமே கல்வியை நன்கு கற்றுச் சிறந்து விளங்கினார்.

### பாடஞ்சொல்வதில் விருப்பம்

பாடஞ் சொல்வதில் சடகோப ஐயங்காருக்கு மிகுந்த விருப்பம் உண்டு. காலையில் ஐந்து மணிக்கே படுக்கையை விட்டு எழுந்துவிடுவார். நீராடல் முதலிய நாட்கடன்களை முடித்துக்கொண்டு வெளித் திண்ணையில் புத்தகமுங் கையுமாக வந்து உட்கார்ந்து விடுவார். தெருவிற் செல்வோர்

ஐயங்கார் படிப்பதைக் கேட்பதற்குவந்து உட்காருவார்கள். யாரும் வந்து உட்காராமற் போனாலும் ஐயங்காருக்குக் [illegible] உள்ள தூண்களைப் பார்த்துப் படித்துப் பொருள் சொல்லிக்கொண்டிருப்பார். அவர் சொல்லுவதைப் பார்த்தால் தூண்களுக்குப் பாடஞ்சொல் வதைப்போலவே இருக்கும். தூணானாலுஞ்சரி, அதற்குப் பாடஞ்சொன்னால் சொல்பவர்களுக்கு நன்மையுண்டு என் பது ஐயங்காருடைய கொள்கை. கம்ப ராமாயணத்தில் ஐயங்காருக்கு மிகுந்த பயிற்சி இருந்தது. கம்பராமாயணப் பாடல்களைச் சொல்லி மணிக்கணக்காகப் பொருள் விரித் துக்கொண்டிருப்பார். சிலபேர் ஐயங்காரிடம் முறையாகப் பாடங் கேட்டுக்கொண்டும் இருந்தார்கள்.

உ. வே. சாமிநாதையர் சடகோப ஐயங்காரிடம் சில அந்தாதிகளையும் கலம்பகங்களையும் நீதி நூல்கள் சிலவற் றையுங் கற்றார். உ. வே. சாமிநாதையருக்குக் கல்வியில் ஊக்கம் ஏற்படுமாறு செய்து முதன்முதலாக அவருக்குப் பாடஞ்சொல்லிய பெருமை இவருக்கே உரியது. ஐயர் இவரிடம் பாடங்கேட்ட நூல்கள், திருவேங்கடத்தந்தாதி, திருவேங்கடமாலை, அழகர் கலம்பகம், மணவாள நாராயண சதகம், அறப்பளீசுர சதகம், குமரேச சதகம், இரத்தின சபாபதி மாலை, நீதிவெண்பா முதலியன.

பொது நோக்கு

சடகோப ஐயங்கார் வைணவராக இருந்தும் மதவெறி யற்ற பொதுநோக்காளராக விளங்கினர். அத்வைதக் கொள்கையில் இவருக்குப் பற்று மிகுதி. சிவபெருமான் திருமால் முதலிய தெய்வங்களிடத்தில் பேதம் பாராட்ட மாட்டார். ஆனைமுகக் கடவுள், சிவபெருமான் அம்பிகை முருகக்கடவுள் முதலிய தெய்வங்களின்மேல் தனிச் செய்

யுட்கள் சிலவற்றையும், இசைப்பாடல்கள் பலவற்றையும் இயற்றியிருக்கிறார். இராமாயண வண்ணம், இராமாயணச் சிந்து, சிவப்பிரம ஐக்கிய வரலாறு முதலியன ஐயங்காரால் இயற்றப்பெற்றனவாகும்.

### புலவர் வறுமை

புலவர்கட்குரிய வறுமை ஐயங்காரையும் பற்றி வாட்டியது. ஆனால், ஐயங்கார் அதனை ஒருபொருட்படுத்தவில்லை. தமிழின்பத்தில் மூழ்கியவர்கள் வேறு எதனையும் ஒருபொருட்படுத்தமாட்டார்கள் என்பதற்கு இவர் சிறந்த எடுத்துக்காட்டாக அமைந்தார். சில சமயங்களில் செல்வர் சிலர்மீது செய்யுட்கள் செய்துகொண்டு போய்ச் சிறு நன்கொடைகளும் பெற்றுவந்தார்.

### இரவல் வேட்டி

சாமிநாதையர் இவரிடங் கல்வி கற்றுக்கொண்டிருந்த போது மாலையில் கடைத்தெருவிற்குத் திருவுலாப் புறப்பட்டால் சாமிநாதையருடைய மேல் வேட்டியை வாங்கித் தம் மேலே போட்டுக்கொண்டு புறப்பட்டுவிடுவாராம். இவர் கடைத்தெருவிற்குச் செல்லும்போது இவரைக் கண்டு ஒவ்வொரு கடைக்காரரும் எழுந்து வணக்கஞ்செய்வதோடு மரத்தட்டு ஒன்றிலே நான்கு வெற்றிலைகளையும் இரண்டு பாக்குகளையும் வைத்துக் காணிக்கைப் பொருளாக வழங்குவார்களாம். ஐயங்கார் அந்த வெற்றிலைபாக்குக் காணிக்கையை விற்றுக் கிடைக்கும் ஓரணா இரண்டணாக் காசைக்கொண்டு வீட்டுச் சாமான்கள் ஏதாவது வாங்குவாராம். இந் நாளைவிட முன்னாளிலே தமிழறிஞர்கள் மிகுந்த வறுமை நிலையிலே மூழ்கியிருந்தார்களென்பது அவர்களுடைய வரலாறுகளால் நன்கு பெறப்படுகின்றன.

---

## உ௩. செங்கணம் விருத்தாசல ரெட்டியார்

*தோற்றம்*

*விருத்தாசல ரெட்டியார் என்பவர் செங்கணம் என்னும் ஊரில் இருந்த பெருஞ்செல்வர். "பூமகள் பொருந்தியுள்ள இடத்தை நாமகள் நாடாள்," என்னும் அறிஞர் மொழியைப் பொய்யாக்கியவர். இவர் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுச் சிறந்த தமிழ்ப்புலவராக விளங்கியிருந்தார். உ. வே. சாமிநாதையருக்குத் தமிழாசிரியர்களாக இருந்தவர்களில் இந்த ரெட்டியாரும் ஒருவர். இவர் ஐயருக்குப் பாடஞ்சொன்னதல்லாமல் ஐயரையும் ஐயருடைய தாய்தந்தையர்களையும் ஐயர் தம்மிடம் கல்வி கற்றுவரையில் பொருளுதவிசெய்து பாதுகாத்தவர். இவருடைய உதவியினால் ஐயர் பல நூல்களைக் கற்றுச் சிறப்படைந்தார். இந்த இரட்டியாரைப்பற்றி ஐயர் தமது வரலாற்றில் எழுதியுள்ள குறிப்புப்படி நாம் விருத்தாசல ரெட்டியாரைப் பார்ப்போம். "விருத்தாசல ரெட்டியார் குட்டையான வடிவினர். கறுப்பு நிறத்தினர். தேகம் பளபளப்பாக இருக்கும். எப்பொழுதும் சுத்தமாக இருப்பார். காலை ஐந்து மணிக்கு எழுவார். ஊரைச்சுற்றிலும் காடுகளும் நீரூற்றமும் மணற்பரப்புள்ள ஓடைகளும் உண்டு. ஏதேனும் ஒரு பக்கஞ்சென்று தந்த சுத்தி முதலியவற்றை முடித்துக்கொண்டு ஏழு மணிக்கு வீட்டிற்கு வருவார். கால் கையைச் சுத்தம் பண்ணிக்கொள்வதற்கும் முகத்தைச் சுத்தம் பண்ணிக்கொள்வதற்கும் அரை மணிநேரம் பிடிக்கும். பிறகு திருநீற்றை உத்தூளனமாக இட்டுக்கொண்டு படிக்கத் தொடங்குவார். பதினொரு மணிவரையிற் படித்துக் கொண்டேயிருப்பார்."*

அவரைப்பற்றிய செய்தி

விருத்தாசல ரெட்டியார் கல்விச் செல்வத்தையும் பொருட் செல்வத்தையும் ஒருங்கே பெற்றிருந்தமையால் எல்லோரும் ரெட்டியாரிடத்தில் நன்மதிப்புக்கொண்டிருந் தார்கள். ரெட்டியார் கன்னியர் என்னும் வீர சைவரிடத் தில் பாடங்கேட்டவர். துறைமங்கலம் சிவப்பிரகாச அடி களைப்பற்றிய செய்தியையும், அடிகளை அண்ணுமலை ரெட் டியார் போற்றிப் பாதுகாத்ததையும் அடிக்கடி சொல்லிக் கொண்டிருப்பார். ஏட்டுச் சுவடிகளில் பலவற்றையும் அச்சான புத்தகங்கள் பலவற்றையும் ரெட்டியார் தொகுத்து வைத்திருந்தார். ரெட்டியார் பெருஞ்செல்வ ராகவும் நிலங்களையுடையவராகவும் இருந்தும் அழியும் மாலையவாய அவைகளை ஒருபொருட்படுத்தாமல் படிப்பதி லும் பாடஞ்சொல்லுவதிலும் தமது கருத்தைச் செலுத்திக் கொண்டிருந்தார். குடும்பக் காரியங்களையெல்லாம் ரெட்டி யாருடைய பிள்ளைகள் பார்த்துக்கொண்டார்கள்.

ஐயர் கற்றது

1869-ஆம் ஆண்டில் ஐயர் விருத்தாசல ரெட்டியாரிடம் பாடங்கேட்கத் தொடங்கினர். முதலில் யாப்பருங்கலக் காரிகையைப் போதித்தார். செய்யுள் இலக்கணத்தைச் சிறிதும் உணராமல் இருந்த ஐயர், அதனை நன்றுகஉணர்ந்து கொள்ளுமாறு தெளிவாகக் கற்பித்தார். ஐயர் செய்திகளை நன்கு தெரிந்துகொண்டாரா என்பதைக் கேள்விகள் மூலம் ஆராய்ந்து அறிந்துகொண்டார். செய்யுளைப் புதி தாக இயற்றுவதற்கும் பழக்கி வைத்தார்.

காரிகைக்குப் பிறகு பொருத்த இலக்கணங்களையும் பிரபந்த இலக்கணங்களையும் போதித்தார். மற்றும் இரட்டை நாகபந்தம் அட்ட நாகபந்தம் முதலிய ஓவியக்

கவிகளையுங் கற்பித்து அவைகளில் ஐயர் தேர்ச்சியடையுமாறு செய்தார்.

புத்தகங்கள் கிடைப்பதற்கு அருமையாக இருந்த அந்நாளிலே இரட்டியார் ஐயருக்குத் தனிப்பாடல் திரட்டு, யாப்பருங்கலக்காரிகை முதலிய அச்சுப் புத்தகங்களை நன்கொடையாக வழங்கினார்.

இரட்டியாரிடம் நூல்கள் ஏராளமாக இருந்தன. ஐயர் அவைகளையெல்லாம் எடுத்துப் பார்த்தும் படித்தும் தமிழ்க்கடலின் பரப்பை ஒருவாறு உணர்ந்துகொண்டார். இரட்டியார் ஐயருக்குப் போதித்த கல்விதான் ஐயர் பின்னாளிலே சிறந்த நன்னிலைக்கு வருவதற்கு அடிப்படையாக அமைந்து விளங்கியது.

இரட்டியாருக்கு மக்கள் பலர் இருந்தனர். அவர்களிற் சிலர் தந்தையைப்போல் நன்கு கல்வி கற்றுச் சிறந்த நிலையில் விளங்கியிருந்தனர்.

## உச. திரிசிரபுரம் கோவிந்தபிள்ளை

தோற்றம்

"வித்துவசனசேகரர்" என்னுஞ் சிறப்புப்பெயர் பெற்ற திரிசிபுரம் கோவிந்தபிள்ளை என்பவர் சாமிநாத ஐயர் இளைஞராக இருந்த காலத்தில் முதியவராக இருந்தார். கம்பராமாயணம் முதலிய வைணவநூல்களை நன்கு கற்றுத்தேறிய இவர், அந்நூல்களைப் பாடஞ்சொல்வதில் வல்லவர். கம்பராமாயணம் முழுவதையும் ஆராய்ந்து அச்சிட்டார். சுந்தரகாண்டத்திற்கு உரையெழுதி உரையுடன் வெளிப்படுத்தினார்.

பாடஞ்சொல்லுதல்

கம்பராமாயணம் முதலிய நூல்களைப் பாடஞ்சொல்வதில் வல்லவராக இருந்த இவர் தம்மையடுத்துப் பாடங்கேட்கவிரும்பியவர்களுக்கு மனமகிழ்ச்சியுடன் பாடஞ்சொன்னார். வன்தொண்டர் இவரிடம் கம்பராமாயணத்தின் சில பகுதிகளைப் பாடங்கேட்டார். மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் காலமான பின்பு சாமிநாதையர் முதலிய சிலர் கம்பராமாயணத்தைப் பாடங்கேட்கவிரும்பினார்கள். அப்பொழுது கோவிந்தபிள்ளை தஞ்சைமாவட்டம் பாபநாசத்துக்கு வடக்கேயுள்ள கபித்தலம் என்னும் ஊரில் அங்கிருந்த சில செல்வர்களுக்குப் பாடஞ்சொல்லிக்கொண்டிருந்தார்.

சாமிநாதையர் முதலியோர் கோவிந்தபிள்ளையிடம் பாடங்கேட்க விரும்பியிருத்தலைக் கேள்வியுற்ற சுப்பிரமணியதேசிகர் இவரை மடத்திற்கு அழைக்கவிரும்பினார். தக்கார் சிலரைப்பக்குவமாக அனுப்பி மடத்திற்கு வரவழைத்தார். வந்துசேர்ந்த கோவிந்தபிள்ளைக்கும் இவரோடு வந்தவர்களுக்கும் தகுந்த விடுதிகள் ஏற்படுத்தினார். உணவு முதலியவைகளுக்கு வேண்டிய பொருள்களையும் அனுப்பினார். இவர்களுக்கு ஆகவேண்டியவைகளைச் செய்யுமாறு செயலாளர் ஒருவரையும் ஏற்படுத்தினார்.

கோவிந்தபிள்ளை சிலகாலம் அவ்விடத்தில் இருந்து இராமாயணம் முதலிய நூல்களைப் பாடஞ்சொன்னார். சைவநூல், வைணவநூல் முதலிய எல்லாவற்றிலும் ஒருவரே வல்லவராக இருத்தல் முடியாத காரியம். கோவிந்தபிள்ளையும் அவ்வாறே வைணவ நூல்களில் மட்டும் வல்லவராக இருந்தார். வைணவத்தொடர்புள்ள நூல்களைப் பாடஞ் சொல்லும்போது கேட்பவர் வியப்படையுமாறு

கூ

தம்பிரான்கள் ஆராய்ச்சி

ஆதீனத்தில் இருந்த தம்பிரான்கள் ஐயங்கேட்பதைப் போல் இவரைப் பல கேள்விகள் கேட்டு இவருடைய திறமையை ஆராயத்தொடங்கினார்கள். தம்பிரான்களின் கேள்விகட்கு இவரால் தக்கவாறு மறுமொழி கூறமுடியவில்லை. மேலும் வைணவராகிய அவருக்குச் சைவர்களிடையே பழகுவதற்குந் தொல்லையாக இருந்தது. இவர்கள் பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம்பிள்ளையிடம் பல நூல்களைப் பாடங்கேட்டவர்களாக இருக்கிறார்கள். நாமோ வைணவ சமய நூல்களில் மட்டும் வல்லவராக இருக்கிறோம். நீண்ட நாளைக்கு இவ்விடம் தங்குவோமானால் நமது பெருமைக்குச் சிறுமையேற்படும் என்று எண்ணினார்.

விடைபெற்றேகல்

கோவிந்தபிள்ளை தேசிகரிடம் சென்று, "இவ்விடத்தில் உள்ளவர்கள் மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்களிடம் பாடங்கேட்ட நல்ல அறிவாளிகளாக இருக்கிறார்கள். நான் எனக்குத் தெரிந்ததைச் சொல்லிவிட்டேன். இனிமேல் இவர்கள் தாங்களாகவே படித்துக்கொள்ளலாம். நான் விடைபெற்றுக் கொள்ளுகிறேன்" என்று கூறினார். சுப்பிரமணியதேசிகர் சால்வை பொருள் முதலியன வழங்கினார். "அடிக்கடி வந்துபோகவேண்டும்" என்று விடை கொடுத்தனுப்பினார். கோவிந்தபிள்ளை தமது இருப்பிடம் போய்ச்சேர்ந்தார்.

பொன்னுச்சாமித்தேவர்

பொன்னுச்சாமித்தேவருக்கும் இவருக்கும் நெருங்கிய பழக்கமுண்டு. அடிக்கடி அவரைப் பார்த்து அளவளாவுவார். பொன்னுச்சாமித்தேவர்மீது தனிச் செய்யுட்கள் பல இயற்றியிருக்கிறார்,

"துணிவேன் முனிதன் குருசாமி என்கை சுரர்கள்சிந்தா
மணிவேன் முருகனை யோபொன்னுச் சாமி எனவகுத்த
பணிவே நினைத்த படியவர் சொல்லப் பயப்பட்டதால்
தணிவேன் விடாய்சாமி சாமியென் றுன்பேர் தழைக்கநின்றே"

"இந்திரனே சேதுபதி என்னப்பொன் னுச்சாமி
மந்திரியென் றிம்மூ வகைநாம—முந்திருவோா(டு)
ஓங்கச் செறிதேவர் ஓடுற்றால் ஓர்பொருளே
தாங்கத்

என்பன இவருடைய பாடல்களில் இரண்டு.

இவர் இயற்றிய நூல்கள்

1. இராசமன்னார் கோவில் தலபுராணம்
2. அலங்காரக்கோவை
3. சுந்தரகாண்ட வுரை

முதலியன இவர் இயற்றிய நூல்கள்.

இறுதி

இவருடைய புதல்வர்களும் நன்கு கல்வி கற்றுப் புலவர்களாயினர். இவர் 1890-ஆம் ஆண்டில் பரமபதம் அடைந்தார்.

## உரு. பரமசிவத் தம்பிரான்

தோற்றம்

பரமசிவத்தம்பிரான் என்பவர் தருமபுர ஆதீனத்து அடியவர்களில் ஒருவர். தமிழ் நூல்களை நன்கு கற்ற தமிழறிஞர். காசியிற் சில ஆண்டுகள் தங்கியிருந்தவர். இவர் திருவாவடுதுறை ஆதீனத்தலைவராக இருந்த சுப்பிர மணியதேசிகரிடத்தில் மிகுந்த அன்புடையவராக இருந் தார். தருமபுர ஆதீனத்தலைவருடைய உடன்பாட்டைப் பெற்றுப் பெரும்பாலும் திருவாவடுதுறையாதீனத்தி லேயே தங்கியிருந்தார். மாணவர்கட்குப் பல நூல்களைப் பாடஞ்சொல்லிக்கொண்டும் சிறந்த நூல்களை ஆராய்ச்சி செய்துகொண்டும் இருந்தார். சாமிநாதையர், சண்பகக் குற்றாலக்கவிராயர் முதலியோர் இவரிடத்தில் நன்னூல் ...ரை முதலிய நூல்களைப் பாடங்கேட்டார்கள்.

பாடங்கேட்டல்

பலருக்குப் பாடஞ்சொல்லிக்கொண்டிருந்த இவர், சுப்பிரமணியதேசிகரிடத்தில் சில தமிழ் நூல்களையுஞ் சைவநூல்களையும் பாடங்கேட்டார். மடத்திலிருந்த வட மொழிப்புலவர்களிடத்தில் வியாகரணமும் படித்தார். தமிழ்ச் செய்யுள்களை நன்றாக இயற்றும் ஆற்றலும் சொற் பொழிவுசெய்யுந் திறமையும் பெற்றிருந்தார்.

நூல்கள்

சுப்பிரமணியதேசிகரிடத்தில் பேரன்பு கொண்டிருந்த ...ர், அப்பெரியார்மீது மும்மணிக்கோவை என்னும் நூல் ஒன்றை இயற்றி அதனைத் தேசிகர் திருமுன் அரங் கேற்றஞ்செய்தார். பிறகு அந்நூல் பலர் அளித்த சிறப்புப் பாயிரங்களோடு தில்லையம்பூர்ச் சந்திரசேகர கவிராச பண்டிதரால் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

## ௨௯. சாமக்குளம் வேங்கடரமணதாசர்

**தோற்றம்**

கொங்கு நாட்டிலே கோயமுத்தூருக்கு வடக்கே பன்னிரண்டு நாழிகை வழித்தொலைவில் உள்ள சாமக்குளம் என்னும் ஊரிலே இற்றைக்கு ஐம்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னர் வேங்கடரமணதாசர் வாழ்ந்திருந்தார். இவர் வைணவ சமயத்தில் தோன்றியவர்.

**கல்வி**

கந்தசாமி முதலியாரிடம் இலக்கண இலக்கியங்களை நன்றாகக்கற்றுத் தேறினார். மெய்யறிவு நன்றாகக் கைவரப் பெற்றமையின், சைவசமயத்தின் மேம்பாட்டை நன்றாக உணர்ந்தார். வைணவ சமயத்தைத் துறந்து சைவ சமயப் பழக்க வழக்கங்களை மேற்கொண்டார். திருநீறு, சிவ கண்மணி ஆகியவைகளை அணிந்துகொண்டார். சைவ சமயத்தின் மேன்மையைத் தமது சொற்பொழிவின்மூலம் எங்கும் பரவச்செய்தார்.

**சிறப்புப்பெயர்**

இவர் சைவ சமயத்தைத் தழுவி வாழ்ந்தமையால் இவருடைய உறவினர்கள் இவரைத்துறந்தனர். இவருடைய பெண்மக்களை அவர்கள் மணம்புரிந்துகொள்ள மறுத்தனர். அதனால் பெண்களுக்குத் தகுந்த கணவர்கள் அகப்படாமல் வருந்தினார். ஆயினும் அவைகளையெல்லாம் இவர் ஒரு பொருட்படுத்தாமல் சைவ நன்னெறியில் உறைப்புடன்

**சேதுபதிநன்கொடை**

இவர் சொற்பொழிவு செய்வதிலும் மிகுந்த திறமையுடையவர். இராமநாதபுரத்தில் சேதுபதியவர்கள் முன்

னிலையில் "சிவாயநம என்று சிந்தித் திருப்பார்க் கபாயம் ஒருநாளும் இல்லை" என்னும் வெண்பாவை அடிப்படையாகக்கொண்டு ஓர் அரிய சொற்பொழிவு செய்தார். முகவைமன்னர் இவருடைய சொற்பொழிவைப் பாராட்டி, எழுநூறு வெண்பொற் காசுகள் நன்கொடை வழங்கினார்.

கிறித்துமத கண்டனம்

இவருடைய காலத்தில் கிறித்துவ சமய வளர்ச்சிச் சொற்பொழிவுகள் எல்லாவிடங்களினும் மிகுதியாக நடைபெற்றன. இந்துக்களை மதம் மாற்றுவதற்குக் கிறித்துவர்கள் மிக இழிவான முறைகளையெல்லாங் கையாண்டார்கள். இவர் கிறித்துவர்களுடைய சொற்பொழிவுகட்கு எதிராகப் பல சொற்பொழிவுகள் செய்து கிறித்துவ சமய கண்டனஞ் செய்தார். கந்தசாமி முதலியார் முயற்சியினால் உரை நடையில் "பிள்ளை விடுதூது ஆபாச விளக்கம்" என்னும் கண்டன நூலும், கலிவெண்பாவில் "சிசுதௌத்திய திரண சண்டமாருதம்" என்னும் கண்டன நூலும் வெளிவந்தன. இவைகளில் "சிசுதௌத்திய திரண சண்டமாருதம்" என்பது இவருடைய பெயரால் வெளியாகியது. இக் கண்டனங்கள் மிகுந்த வன்மையுடையனவாயும் அசைக்கமுடியாத நேர்மைபொருந்தியனவாயும் விளங்கின. இதன்பிறகு கிறித்துவர்கள் அடங்கினர்.

திருப்பாண்டிக்கொடுமுடிப்புராணம்

கந்தசாமி முதலியார், கொடுமுடி என்று வழங்கும் திருப்பாண்டிக்கொடுமுடி என்னுஞ் சிவப்பதியின் செய்திகளைத் தொகுத்துக் கொடுமுடிப்புராணம் இயற்றுதற்குத் தொடங்கியிருந்தார். அப்புராணத்தை இவர் பாடிமுடித்து நிறைவேற்றினார்.

தமிழ்த்தொண்டு, சமயத்தொண்டு முதலியவைகளைச் செய்திருந்த இவர் 1900-ஆம் ஆண்டில் இறைவன் திருவடி எய்தினர்.

## உஎ. வன்தொண்டர்

தோற்றம்

வன்தொண்டர் என்னும் காரணப்பெயரைப்பெற்ற நாராயண செட்டியார், செட்டிமார் நாட்டிலே தேவ கோட்டையிலே நாட்டுக்கோட்டைச் செட்டியார் வகுப்பிலே ஏறக்குறைய நூற்றைம்பது யாண்டுகளுக்கு முன்பு பிறந்தார். நாராயண செட்டியாருடைய தந்தையார் பெயர் அண்ணாமலைச் செட்டியார். அண்ணாமலைச் செட்டியாரும் அவருடைய முன்னோர்களும் பலவகையான அறச்செயல்களிலே ஈடுபட்டவர்கள். திருப்பெருந்துறையிலே உண விடும் அறச்சாலை முதலியவைகளை அமைத்தவர்கள்.

கல்வி

நாராயண செட்டியார் ஐந்தாம் அகவையில் பள்ளிக்கூடத்திலே வைக்கப்பட்டார். கல்வியைக் கற்றுக்கொண்டிருக்குங்காலத்தில் அம்மைநோய் கண்டது. அதனால் கண்கள் இரண்டுங்குருடாயின. எப்பொருளையுங் காணாவாறு முழுக்குருடாகவே ஆய்விட்டன. ஆயினும் பிறரைப் படிக்கச் சொல்லிக்கேட்டு அவைகளைத் தம்முள்ளத்திலே அமைக்கலானார். நீதிநூல்கள், அந்தாதிகள், கலம்பகங்கள், மாலைகள் முதலிய நூல்களைக் கற்றார். எங்கெங்கு அறிஞர்கள் இருப்பதாக அறிந்தாரோ அங்கெல்லாஞ் சென்று தமிழ் நூல்களை ஊக்கத்துடன் கற்றார். அந்நாளில் கீழ் வேளூரில் இருந்த சுப்பிரமணிய தேசிகரென்னும் தமிழறி

ஞர் சிலரால் தேவகோட்டைக்கு அழைக்கப்பெற்றிருந்தார். அவர் பல செட்டியார்கட்கு இலக்கண இலக்கியங்களைப் போதித்தார். நாராயண செட்டியார் அத்தேசிகரிடத்திலே பல இலக்கண இலக்கியங்களையும் இனிது கற்றுணர்ந்தார்.

அரியக்குடி முதலிய இடங்களில் இருந்த வைணவப் புலவரிடம், பிள்ளைப்பெருமாள் ஐயங்காரால் இயற்றப்பெற்ற அழகர் கலம்பகம், அழகர் பிள்ளைத்தமிழ், திருவேங்கடக் கலம்பகம் முதலிய நூல்களைப்படித்தார். இவ்வாறு வேறு சில வைணவர்களிடம் வைணவ நூல்களையும் சைவப்புலவர்களிடம் சைவநூல்களையும் கற்றுத்தேறினார். செட்டியாரின் அறிவு புறக்கண்வழியாக எல்லாப் பொருள்களின்மீதும் செல்லாமல் அகக்கண்ணால்மட்டும் நூலாராய்ச்சி ஒன்றில் சென்றபடியால் பாடஞ்சொல்லப்பெறும் நூற்பொருள்களையெல்லாம் எளிதாகவும் விரைவாகவும் உள்ளத்திலே பற்றிக்கொண்டார். இவருக்குப் பாடஞ்சொல்லியவர்கள் இவருடைய தமிழன்பின் மிகுதியையும் ஆழ்ந்து பயிலுந் திறமையையுங்கண்டு மிகுந்த வியப்படைந்தார்கள். மற்றவர்கள் பன்முறை கேட்டு அடையும் பயனை இவர் ஒருமுறை கேட்பதாலேயே அடைந்தார். படித்த செய்திகளைத் தெளிவாக உணர்ந்து விளக்கமாக மனதில் பதிய வைப்பது செட்டியாருக்கு இயற்கை. சிறிய ஐயம் ஏற்படினும் அதனைப் போக்கிக்கொள்ளாமல் அப்படியே விட்டு வைக்கமாட்டார்.

வேங்கடராமையங்கார்

ல் திருவையாற்றிற்கு அண்மையில் உள்ள திருநெய்த்தானத்தில் வேங்கடராம ஐயங்கார் என்னும் வைணவர் ஒருவர் கம்பராமாயணத்திலும் வேறு பல

வைணவ நூல்களிலும் வல்லவராக இருந்தார். செட்டியார் அவரிடஞ்சென்று அவர் அறிந்த நூல்களை ஓதியுணர்ந்தார்.

திருவாவடு துறையில்

நாராயண செட்டியார் பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களுடைய பெருமையைப் பலராலும் நன்கறிந்தார். அவர்களிடமுஞ் சென்று பல நூல்களைக் கற்றுணர வேண்டுமென்று எண்ணினார். அப்பொழுது திருக்குடந்தையிலே மகாமகம் வந்தது. அதன்பொருட்டு நாராயணசெட்டியார் திருக்குடந்தையை அடைந்தார். மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களுஞ் சென்றிருந்தனர். பிள்ளையவர்கள் தங்கியிருந்த இடத்திற்குப்போய்ச் செட்டியார் பிள்ளையவர்களைப் பார்த்தார். கல்வி கற்கவேண்டும் என்னும் தமது நோக்கத்தைப் புலப்படுத்தினார். பிள்ளையவர்கள் செட்டியாருடைய தன்மையை ஆராய்ந்து பார்த்தார்கள். செட்டியாருக்குக் கல்வியில் உள்ள ஆர்வமும் நினைவாற்றலும் பிள்ளையவர்கட்கு மிகுந்த மகிழ்ச்சியை உண்டாக்கின. இவருக்குப் பாடஞ் சொல்வது மிகச் சிறந்ததென்று எண்ணினார்கள். அவருடைய விருப்பத்திற்கு உடன்பட்டார்கள். அதுமுதல் இருவருக்கும் மிகுந்த பழக்கம் உண்டாயிற்று. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் திருவாவடுதுறை ஆதீனப்புலவராக அமர்ந்து பாடஞ் சொல்லத்தொடங்கிய காலத்தில் பாடங் கேட்கத் தொடங்கியவர்களில் நாராயண செட்டியாரும் ஒருவர். பிள்ளையவர்களிடத்தில் காஞ்சிப் புராணம், கந்தபுராணம், திருவானைக்காப்புராணம், திருத்தணிகைப் புராணம், பேரூர்ப் புராணம், விநாயக புராணம், திருக்கோவையார் முதலிய நூல்களைப் பாடங்கேட்டார்.

பிறருடைய கண்கள்

செட்டியார் பாடங்கேட்பதற்குப் பிறருடைய கண்களே பயன்பட்டன, படிப்பதற்கு விரும்பும் நூல்களைக்

கூலிகொடுத்து எழுதச் செய்வார். பிள்ளையவர்களிடம் மற்றைய மாணவர்கள் பாடங்கேட்கும் பொழுது உடனி ருந்து கேட்டுக்கொண்டிருப்பார். மற்றைக் காலங்களில் வேறொருவரைப் படிக்கச் செய்து பாடங் கேட்பார். படிப் பவர்கள் இல்லாத சமயங்களில் பிள்ளையவர்களே படித்துப் பொருள் உரைப்பார்கள். செட்டியாரவர்கட்குப் பாடஞ் சொல்லுவதில் பிள்ளையவர்கட்கு மிகுந்த அன்புண்டு. செட்டியார் பொருட்டுப் படிப்பதற்கும் பிற உதவிகளைச் செய்வதற்கும் வேறொரு செட்டியார் எப்பொழுதும் இவரோடுகூட இருந்துகொண்டேயிருப்பார்.

பலரிடமும் படித்தல்

ஒருவரிடமே பாடங்கேட்டுக்கொண்டிருப்பது செட்டி யாருக்கு அவ்வளவாகப் பிடிக்காது. ஒவ்வொருவருடைய அறிவாற்றலையும் உணர்ந்து கொள்ள வேண்டுமென்பதே அவருடைய நோக்கம். ஆகவே பிள்ளையவர்களிடம் பாடங் கேட்டுக்கொண்டிருக்கும் போதே பலவிடங்கட்குஞ் சென்று பலரிடமும் பாடங்கேட்டு வருவார். திரிசிரபுரத் தில் இருந்த கோவிந்த பிள்ளை என்னும் வைணவப் புலவர் கம்பராமாயணத்தில் மிகுந்த தேர்ச்சியுள்ளவர் என்பதை யுணர்ந்தார். அவரிடஞ் சென்று சில பகுதிகளைப் பாடங் கேட்டார். இயற்றமிழ் ஆசிரியராக இலங்கிய விசாகப் பெருமாள் ஐயரிடஞ் சென்று நன்னூற் காண்டிகை உரை யையும் விருத்தியுரையையும் பாடங் கேட்டார். காஞ்சிபுரத் திலிருந்த பெரும் புலவர் சபாபதி முதலியார் என்பவரிட மும் அவருடைய மாணவராகிய புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார் என்பவரிடமுஞ் சில நூல்களைப் பாடங் கேட்டதன்றிப் பல ஐயங்களையும் கேட்டுப் போக்கிக் கொண்டார். யாழ்ப்பாணத்து ஆறுமுக நாவலரிடத்தில்

செட்டியாருக்குப் பேரன்பு உண்டு. நாவலர் சென்னையில் இருந்த பொழுதும் சிதம்பரத்தில் இருந்த பொழுதுஞ் சென்று சைவ நூல்களையுஞ் சித்தாந்த நூல்களையும் பாடங் கேட்டார். நாவலர் யாழ்ப்பாணத்திற்குச் சென்றபிறகு அங்குஞ் சென்று சிலகாலம் இருந்து சில நூல்களைப் பாடங் கேட்டார்.

**வன் தொண்டர்**

செட்டியார் சிவபிரானிடத்திலே பேரன்பு கொண்டவர். மிகவுங் கடுமையான நாட்கடன்களை மேற்கொண்டிருந்தார். ஒவ்வொரு நாளையிலும் நீராடலை முடிப்பார், ஆனைமுகக் கடவுளை நினைத்து ஆயிரத்தெட்டுக் குட்டுகள் குட்டிக்கொள்வார். பிறகு ஆயிரத்தெட்டுத் தோப்புக் கரணங்கள் போடுவார். அதன் பிறகு ஐந்தெழுத்து மறையை ஆயிரத்தெட்டு முறை ஓதுவார். அகத்தியர் தேவாரத்திரட்டைப் பதம் பதமாக நிறுத்திச் சொல்லி முழுவதையும் படிப்பார். ஐம்பெருஞ் சிவப்பதிகட்கும் உரிய தேவாரப் பதிகங்களையும் வேறு சிலவற்றையும் ஓதுவார்; திருமுருகாற்றுப்படையை ஆறுமுறை பாடுவார். ஐந்தெழுத்து மறையை ஆயிரத்தெட்டுமுறை இரவிலும் உருவேற்றுவார். இவைகளையெல்லாங் குறைவில்லாமற் செய்து முடித்தபிறகே உணவு கொள்வார். இவைகள் நண்பகலுக்குள் முடியாவிடின் தொடர்ந்து முடித்துவிட்டே சாப்பிடுவார். ஊர்ப்பயணஞ் செல்கையில் தம்முடைய விரதங்களைச் செய்து முடிக்க வேண்டிய சமயம் வந்துவிட்டால் உடனே பயணத்தை நிறுத்திவிட்டுத் தமது வழிபாட்டைத் தொடங்கிவிடுவார். நீண்டநேரம் ஐந்தெழுத்து மறையை உருவேற்றுவதிற் செட்டியாருக்கு மிகுந்த விருப்பமுண்டு.

திருவாவடுதுறையில் இருந்த அறிஞர்களும் பிறரும் செட்டியாருடைய கடுமையான விரதங்களையும் ஒழுக்கச்

சிறப்பையும் கடவுளன்பையும் பார்த்து மகிழ்ந்தார்கள். செட்டியாரைப் போல் மனவுறுதி படைத்தவர்களைக் காண்டல் அரிதென்றுணர்ந்த அவர்கள் செட்டியாருடைய தொண்டு வலிமையானதென்று முடிவு செய்து இவருக்கு "வன்தொண்டர்" என்று சிறப்புப் பெயர் வழங்கவேண்டும் என்று முடிவு செய்தார்கள். தங்களுடைய எண்ணத்தைப் பிள்ளையவர்கட்குத் தெரியப்படுத்தினார்கள், பிள்ளையவர்கள் செட்டியாருக்கு இப் பெயர், "தகும் தகும்" என்று உடன்பட்டுக் கூறியதுடன் செட்டியாருக்கு இப் பெயரை

"சத்திவாழ் வாமத்துச் சங்கரன் பொற் றாட்கமலப்
பத்தியால் தேவார பாராய—ணத்தினால்
வான்றோய் புகழ்மிகுத்த வன்தொண்டன் என்னும்பேர்
சான்றோய் நினக்குத் தகும்."

என்னும் வெண்பாவையும் பாடினார். அதுமுதல் நாராயண செட்டியாருக்கு வன்தொண்டர் என்னும் பெயர் நிலைத்து நாளடைவில் நாராயணன் என்னும் பெயர் மறைந்து போய் விட்டது.

மாணவர்கள்

பலபேரிடம் நன்றாகக் கல்வியைக் கற்ற வன்தொண்டரிடம் பலபேர் படிக்கத் தொடங்கினார்கள். வீர. லெ. சின்னைய செட்டியார், இராமசாமிச் செட்டியார், காரைக்குடி ராம. சொ. சொக்கலிங்கச் செட்டியார் ஆகியோர் வன்தொண்டர் மாணவர்களுள் மிகவுஞ் சிறந்தவர்கள். இவர்களில் சொக்கலிங்கச் செட்டியார் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களைப்போல் செய்யுளியற்றும் ஆற்றல் அமையப் பெற்றவராய் ஏறக்குறைய நூறு நூல்கள் வரையில் இயற்றிப் புகழோடு விளங்கியிருந்தார். வன்தொண்டரிடம் கல்வி கற்றுச் சிறப்படைந்தவர்கள் மற்றும் பலராவர்.

நண்பர்கள்

செட்டியார் பிள்ளையவர்களிடம் பாடங்கேட்டபோது, திருவாவடுதுறைச் சின்னப்பட்டம் நமச்சிவாய தேசிகர், மதுரை இராமசாமிப் பிள்ளை, உ. வே. சாமிநாதையர் முதலிய பலர் இவரோடு பாடங்கேட்டனர். மற்றும், சிங்க வனம் சுப்புப் பாரதியார், வேம்பத்தூர்ப் பிச்சுவையர், கரவேட்டங்குடிச் சுப்பிரமணிய பாரதியார், மணமேற் குடிக் கிருட்டிண ஐயர் முதலியோர் செட்டியாருக்கு நண்பர்களாக

ஆசிரியருக்கு

செட்டியார் பிள்ளையவர்களிடம் பேரன்பும் பெரு மதிப்புங் கொண்டிருந்தார். சில சமயங்களில் பிள்ளை யவர்கள் கடன் தொல்லையாலும் வறுமையாலும் வாடுதலை யுணர்ந்தார். பிள்ளையவர்கட்கு உதவி செய்ய வேண்டு மென்று எண்ணினார். நாட்டுக்கோட்டை நகரவட்டத்தி லுள்ள சில சிவப்பதிகட்குப் புராணம் பாடவேண்டுமென்று வேண்டிக் கொண்டார். பிள்ளையவர்கள் செட்டியாருடைய வேண்டுகோளின்மேல் சூரைமா (சூரைக்குடி) நகர்ப் புராணம், கோயிலூர்ப் புராணம், கண்டதேவிப் புராணம், சாக்கோட்டை என்னும் வீரவனப் புராணம் ஆகியவைகளை இயற்றினார். பிள்ளையவர்கள் பிறவிடங்களில் புராணம் பாடி அரங்கேற்றினால் அவ் விடங்களில் வருகிற வருவாய் செலவுக்குச் சரியாகப் போய்விடும். பிள்ளையவர்கள் சென்றது போலவே திரும்பி வெறுங்கையாகப் போய்ச் சேர்வது வழக்கம். அவ்வாறு ஆகவிடாமல் பொருளைப் பாதுகாத்துக்கொண்டு போய்ச் சேர்த்துத் தக்கவாறு பயன் படுத்துவதற்கு வழி யாது என்று ஆராய்ந்தார். ஒரு வழி யைக் கண்டுபிடித்தார்.

திருவாவடுதுறையில இருநது நூல் அரங்கேற்றமாகும் ஊருக்குப் போகுஞ் செலவைத் திருவாவடுதுறை ஆதினத் தார் ஏற்றுக் கொள்ளவேண்டும். அரங்கேற்றம் நடை பெறுங்காலங்களினும் திரும்பி வரும்பொழுதும் ஏற்படுஞ் செலவை நகரத்தார்கள் ஏற்றுக்கொள்ளுதல் வேண்டும். இதனையல்லாமல் ஒவ்வொரு புராணத்திற்கும் பாட்டு ஒன்றுக்கு ரூபா ஒன்றுவீதம் கணக்குச் செய்து கூடுத லாகுந்தொகைக்கு வேறிடத்தில் தொகை பெற்றுக்கொள் ளும்படி உண்டியல் கொடுத்துவிடுவது என்று முடிவு செய்தார். இவ்வாறு ஏற்பாடாகவே போகுஞ்செலவு வருஞ்செலவு அரங்கேற்றஞ் செய்யுங்காலச்செலவு முதலியன இல்லாதொழிந்தன. பெருந்தொகையைப் பிள்ளையவர்கள் பெற்றுக் களித்து இன்றியமையாத செல வுக்குப் பயன்படுத்தினார்கள். இதனால் செட்டியார் மீது பிள்ளையவர்கட்கு நன்றியுணர்ச்சியும், அன்பும் மிகுதியாக உண்டாயின. அவைகளை,

"பாடுவதெங் கேஇந்தப் பாண்டிநாட் டெல்லைவந்து
கூடுவதெங் கேயொருபாற் கோதையான்—நீடுபுகழ்ப்
பாரா யணனென்றிப் பார்முழுதுங் கொண்டாடும்
நாரா யணனிலையேல் நாம்."

என்னும் வெண்பாமூலம் வெளிப்படுத்தினார்கள்.

கலைப்பணி

இவர் நூல்களை இயற்றவில்லை. ஆயினும் கலையுலகிற் குத் தம்மால் இயன்ற வகையில் தொண்டுபுரிந்தார். தம் ஆசிரியராகிய பிள்ளையவர்களைக்கொண்டு சேக்கிழார்மீது பிள்ளைத்தமிழ் பாடச்செய்தார். அறுபத்துமூவர் குரு பூசை மான்மியம் என்னும் நூலை இயற்றச்செய்தது

நகரத்தார்களைக்கொண்டு அந்நூலை அரங்கேற்றவுஞ் செய்தார். திருத்தமற்ற நூல்களைச் செவ்வையாக ஆராய்ச்சி செய்து திருத்தமான பதிப்புக்களாக வெளியிடவேண்டும் என்று எண்ணினார். சிங்கைச்சிலேடைவெண்பா, திருவாப்பனூர்ப்புராணம் ஆகியவைகளை ஆராய்ந்து பதிப்பித்து வெளியிட்டார். தேவாரம்பெற்ற பாண்டிநாட்டுச் சிவப்பதிகள் பதினான்கின் புராணங்களையும் பதிப்பித்து வெளியிட எண்ணினார். பன்முறை படிப்பித்து ஆராய்ந்து வந்தார். மதுரை இராமசாமிப்பிள்ளை என்பவர் திருத்தணிகைப் புராணத்தை ஆராய்ந்து குறிப்புரையுடன் பதிப்பித்து வெளியிட விரும்பி ஆராய்ச்சி செய்துகொண்டிருந்தார். அப்பொழுது இவர், அவருடன் இருந்து கடினமான பகுதிகளையெல்லாம் நன்கு விளக்கினார். இவருடைய அறிவுத்திறமையைக் கண்டு இவரைப் பெரிதும் புகழ்ந்து பாராட்டினார், ஆனால் அக்குறிப்புரை வேறுகை மாறி வெளிவராமலே போய்விட்டது.

நினைவாற்றல்

இவருக்கு நினைவாற்றல் மிகுதியாக இருந்தது. ஒருவருக்கு ஒரு புலனில் ஒரு குறைவு ஏற்படுமாயின் அப்புலனின் திறமை வேறுபுலனோடு சேர்ந்து திறமை வெளிப்படுவது உலகத்தியற்கை. இவர் ஒருமுறை கேட்டதைப் பிறகு என்றும் மறவார். இவருடைய நினைவாற்றல் எல்லோருக்கும் மிகுந்த வியப்பை யுண்டாக்கியது. பாடங் கேட்கும்போது ஒருமுறை கேட்டதை மீண்டுங் கேட்க விரும்பினால், 'மறுத்து' என்று உரைப்பார். படித்தவைகளின் படல எண், பாட்டு எண் முதலியனவைகளை நன்றாக நினைவில் வைத்திருப்பார். "இவ்வளவு பாடல்கள் ஆயினபோதும்" என்று எண்ணைக் குறிப்பிட்டுச் சொல்லு

வார். ஒருமுறை மீனாட்சிசுந்தரம்பிள்ளை திருவாவடுதுறையில் பெரிய புராணத்தை பாடஞ் சொல்லிக் கொண்டிருந்தார். இருவரும் வேறுபலரும் பாடங்கேட்டுக் கொண்டிருந்தார்கள். படித்தவர் விரைவாகப் படித்துக் கொண்டு சென்றார். ஒரு பாட்டில் வன்தொண்டருக்கு ஐயமேற்பட்டது. படித்தவரோ அடுத்த பாட்டிற்குப் போய்விட்டார். வன்தொண்டர் படித்தவரை நிறுத்தச் சொன்னார். "விரைவாகப் படித்துக்கொண்டு போகிறீர்களே இதற்குப் பொருள் என்ன?" என்று தமக்கு ஐயமாக இருந்த பாட்டைக் குறிப்பிட்டுக் கேட்டார். படித்துக்கொண்டிருந்தவராலும் மற்றவர்களாலும் மறுமொழி கூற முடியவில்லை. உடனே அவர், "இச்செய்யுளில் எனக்கு நீண்ட நாட்களாகவே ஐயமேற்பட்டிருந்தது. இந்தச் செய்யுள் வருவதை எதிர்பார்த்துக்கொண்டே இருந்தேன். நீங்களோ விரைவாகப் படித்துக்கொண்டு போகிறீர்கள். பொருள்கேட்டாலோ விழிக்கிறீர்கள். போறிஞராகிய ஐயா அவர்கள் பக்கத்தில் இருக்கும்போது ஐயத்தைப் போக்கிக்கொள்ளாவிட்டாற் பிறகு எப்பொழுது போக்கிக் கொள்ளுகிறது?" என்று கண்டித்துரைத்துவிட்டு அச்செய்யுளின் பொருளை நன்கு விளக்கவேண்டுமென்று பிள்ளையவர்களை வேண்டிக்கொண்டார். பிள்ளையவர்களும் அவ்வாறே விளக்கியருளினார்கள்.

கந்தபுராணம்

பிள்ளையவர்கள் தம்மாணவர் சிலருக்குக் கந்தபுராணத்தைப் பாடஞ் சொல்லிக்கொண்டிருந்தார். அந்நூலின் கயமுகன்உற்பத்திப் படலத்தில் "மாண்டகுமவ்வலியகலன்" என்று தொடங்கும் செய்யுளின் பொருள் பிள்ளையவர்களுக்கு மறந்துபோய்விட்டது. அவர் தம் மாணவர்களைப்

பார்த்து, "முன்பு வன்றொண்டர் நம்மிடம் ஒரு பாடலைப் பாடங்கேட்டார். அவர் இப்பாட்டின் பொருளை நன்கு ஆராய்ந்து உள்ளத்தில் அமைத்து வைத்திருப்பார். அவரைப் பார்க்கும்போது கேட்கவேண்டும். நமக்கு மறந்து போய்விட்டது," என்று கூறினார். பிறகு வன் றொண்டரைப் பார்த்துப் பேசிக்கொண்டிருந்தபோது பிள்ளையவர்கள், "கந்தபுராணம் கயமுகன் உற்பத்திப் படலத்தில் ஓர் ஐயம்," என்று அதனைக் கேட்கத் தொடங்கினார். அவ்வளவில் வன்றொண்டர், "மாண்டகு மவ்வலியகலன் என்னுஞ் செய்யுளோ?" என்று கேட்டு அப்பாட்டினைச் சொல்லிப் பொருளையும் விரித்துரைத்தார். இதனைப் பார்த்தவர்கள் செட்டியாரின் அறிவாற்றலைப் புகழ்ந்து பாராட்டினார்கள்.

## இவருடைய இயல்பு

வன்றொண்டர் கடுமையான விரதங்களை மேற்கொண் டிருந்தபடியால் மெலிந்த உடலுடையவராக விளங்கினார். பழவினையின் பயனாய் இவருக்குச் சிறிது வயிற்றுவலி யுண்டு. அவ்வலி நேர்ந்தபோது இவர் மிகவும் வருந்துவார். இவருக்குத் திருமணம் நடைபெற்றுக் குழந்தையும் இருந் தது. பேசும்பொழுது அழுத்தந்திருத்தமாகப் பேசுவார். இவர் மறுமைக்கான செயலையே பயனுடையதாக எண்ணி மேற்கொண்டிருந்தாரேயன்றி இம்மைச் செயல்களை ஒரு பொருளாக என்றும் எண்ணியவரல்லர். இவர் எந்த ஊருக்குச் சென்றாலும் அபிஷிக்தர் ஒருவர் வீட்டிலே தங்குவார். சமையற்காரன் ஒருவன் எப்பொழுதுங் கூட இருப்பான். இவருடைய முன்னோர்கள் அறம்பல செய் திருந்தனர். அவ்வறங்களில் செட்டியார் முழுக்கருத்தை யுஞ்செலுத்தி நன்றாக நடத்திவந்தார்.

### பிள்ளையவர்கள் அன்பு

மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் தம் மாணவராகிய இவரிடத்திலே பேரன்பு கொண்டிருந்தார்கள். திருப்பெருந்துறைப்புராணம் இயற்றி அரங்கேற்றஞ் செய்த காலத்திலே, ஒருநாள் அரங்கேற்றத்திற்கு எல்லோரும் வந்து சேர்ந்தனர். வன்றொண்டர் வரச் சிறிது தாழ்த்தது. பிள்ளையவர்கள் வன்றொண்டர் வருகையை எதிர்பார்த்து அரங்கேற்றத்தை தொடங்காமலிருந்தார். புராணமியற்றச் செய்து அரங்கேற்ற ஏற்பாடுகளைச் செய்த கட்டளைத் தம்பிரான் நாம்வந்தும் அரங்கேற்றத்தைத் தொடங்காமல் ஒரு குருடரை எதிர்பார்த்திருந்தாரே என்று பெருஞ் சினங்கொண்டார். அரங்கேற்றுமிடத்தைவிட்டுப் புறப் பட்டுப் போய்விட்டார். அவருடைய சினந்தணியச் சில நாட்களாயின. செட்டியார்பால் பேரன்பு கொண்ட பிள்ளையவர்கள் தம்பிரானுடைய சினத்தைக்கூட ஒரு பொருளாக மதிக்கவில்லை.

### இறுதி

பூலோக சிவலோகம் என்று புகழப்பெறும் மதுரை யம்பதியில் தாம் காலமாகவேண்டுமென்பது செட்டியாருடைய எண்ணமாக இருந்தது. அவ்வாறே மதுரையை அடைந்து ஓர் அந்தணர் வீட்டுத் திண்ணையில் தங்கினார். ஆறு திங்களுக்கு முன்னரே இவர் தமது இறுதிநாளை உறுதியாக அறிந்திருந்தாராம். கீழே வைகை மணலைப் பரப்பி அதன்மேல் தருப்பைப்பாயை விரித்துப் படுத்துச் சிவபிரானை எண்ணிக்கொண்டிருந்து 1882-ஆம் ஆண்டு ஜூன் திங்கள் இருபத்தெட்டாம் நாள் (சித்திரபானு ஆண்டு ஆனித்திங்கள் பதினைன்றும் நாள்) இறைவன் திருவடிநீழலையடைந்தார். இவருடைய மாணவர்கள் இவர் மீது இரங்கற்பாக்கள் பாடி வருந்தினர்.

"பூதியும் அணிந்து கண்டிகை பூண்டு
புனிதவைந் தக்கரம் புகன்று
கோதிலா மயத்தால் திருமெழுக் கிட்டுக்
குளிர்புனல் வையைவா லுகத்தை
மீதுறப் பரப்பி அதன்மிசைத் தருப்பை
வெள்ளிய தூசதன் மேலும்
தீதற விரித்த சுத்ததா னத்தில்
திசைவடக் குறவிருந் தெந்தாய்."

என்பது இரங்கற்பாக்களில் ஒன்று.

## உ அ. திருச்சிற்றம்பலம் பிள்ளை

இவர் கோயமுத்தூரில் கார்காத்த சைவவேளாளர் மரபில் ஆலமுடையார் குடியில் தோன்றியவர். தந்தையார் பெயர் சந்திரசேகரன் பிள்ளை. தாயார் பெயர் பார்வதி யம்மையார்.

**கல்வி**

இவருடைய தந்தையாராகிய சந்திரசேகரன் பிள்ளை யிடந்தான் கந்தசாமி முதலியார் கல்வி கற்றார். திருச்சிற் றம்பலம் பிள்ளை தம் தந்தையாரின் மாணவராகிய கந்த சாமி முதலியாரிடம் இலக்கண இலக்கியங்களைப் பயின்றார்.

**ஆசிரியர்**

கல்வியில் நன்கு தேர்ச்சிபெற்றபின், கோயமுத்தூரில் இலண்டன் கிறித்துவ சங்க உயர்நிலைப்பள்ளியிலும், ரோமன் கத்தோலிக்க உயர்நிலைப்பள்ளியிலும் நீண்டகாலம் தமிழாசிரியராக வேலை பார்த்தார். தம்முடைய ஆசிரிய ரின் மகனாகிய சிவக்கவிமணி சுப்பிரமணிய முதலியா ருக்குக் கல்வி கற்பித்தார்.

சொற்பொழிவு

திருச்சிற்றம்பலம் பிள்ளை சொற்பொழிவு செய்வதில் வல்லவர். சொற்பொழிவு செய்வதற்குத் தொடங்கினுராஞல், ஒரு மணிநேரம் வரையில் அசையாமல் நின்று தங்குதடையில்லாமற் பேசுவார். இவருடைய சொற்பெருக்கைச் சுருக்கெழுத்து எடுத்து எழுதினுல் அப்படியே அச்சிட்டு வெளியிடலாம். இவர் ஒரு மணிநேரத்திற்கு மேல் பேசும் வழக்கமில்லை. புராணச் சொற்பொழிவுகளும் செய்வார். 1898-ஆம் ஆண்டில் சென்னை மாகாணக் கல்லூரியில் மாணிக்கவாசகரைப் பற்றி ஓர் அரிய ஆராய்ச்சிச் சொற்பொழிவு நிகழ்த்தினுர். அதில் அவருடைய கால முடிவைப்பற்றிச் செய்த ஆராய்ச்சி மிகச்சிறந்து விளங்கியது. அதில் மாணிக்க வாசகருடைய காலம் மூன்றுவது நூற்றுண்டு என்று முடிவுகட்டினுர். அதில் சங்க காலக் கல்லாடர் வேறு, கல்லாடம் இயற்றிய கல்லாடர் வேறு என்று இவர்தாம் முதன்முதலாக முடிவு செய்தார்.

நூல்கள் இயற்றல்

அன்னிபெசண்டு அம்மையார் இராமாயணச்சுருக்கமாகச்செய்த எட்டுச் சொற்பொழிவுகளை மொழிபெயர்த்து “இராமச்சந்திரர்” என்னும் பெயரால் வெளியிட்டார். எட்வர்டு அரசர் முடிசூட்டு விழாவின்போது அவ்வரசர் வரலாற்றை, “எட்வர்ட் அரசர்” என்னும் பெயரோடு வெளியிட்டார். பக்கிம்சந்தர சாட்டர்சி எழுதிய புதினக் கதைகளுள் “ஆனந்த மடம்,” “சந்திரசேகரர்,” “பனங்குளம்,” என்னும் கதைகளை மொழிபெயர்த்து வெளியிட்டார். இவர் எழுதுவதினும் பேசுவதினும் எளிய நடையைக் கையாள்வதில் வல்லவர்.

நூல்கள் எழுதுதல் மாணவர்களுக்குக் கல்வி பயிற்றல் முதலிய பணிகளில் ஈடுபட்டிருந்த இவர் மிகுந்த நோயுற்ற சமயத்தில் பழநிக்குச்சென்று பழநியாண்டவனைத் தொழுது வணங்கித் திரும்பும்போது 1904-ஆம் ஆண்டில் தாராபுரத்தில் ஆம்பிராவதி ஆற்றுக்கரையில் இறைவன் திருவடி நீழலையடைந்தார்.

வியத்தகு வழக்க நிகழ்ச்சி

இவருடைய குடும்பத்தில் வியக்கத்தக்க நிகழ்ச்சி ஒன்று உண்டு. அஃதாவது ஆண் பெண் ஒருவராவது தம் வீட்டில் இறக்கிறதில்லை. இவருடைய மனைவியார் பழநிக்கு இறைவழிபாட்டிற்குப் போயிருந்த இடத்தில் திடீரென்று காலமானார். இவருடைய தந்தையார் பாலக்காட்டிற்கு மருத்துவஞ்செய்து கொள்வதற்குப் போய்விட்டுத் திரும்பி வரும்போது வழியிற் காலமானார். இவருடைய இளவல் மருத்துவ சாலைக்குப்போய்த் திரும்புகையில் வழியிற் காலமானார். மற்றொரு செய்தி, இவர் குடும்பத்தில் எவரும் நாற்பது அகவைக்குமேல் உயிர்வாழ்ந்திருக்கிறதில்லை. இவருடைய இளவல் மகனார் சந்திரசேகரன் பிள்ளை என்பவர் மட்டும் இவ் வழக்கத்திற்கு மாறாக 65-ஆவது அகவையில், இப்பொழுது வாழ்ந்துகொண்டிருக்கிறார்.

## உ௬. மாதைத் திருவேங்கடநாதர்

தோற்றம்

திருவேங்கட நாதர் சோழவளநாட்டிலே திருவாமாத்தூர் என வழங்கும் மாதையிலே அந்தணர் குலத்திலே பிறந்தார். திருவேங்கடநாதர் அந்நாளில் அவ்வூருக்குத் தலைவராக விளங்கினார். இவருடைய தந்தையார் பெயர் பெருமாளையர். திருவேங்கட நாதருக்கு உடன் பிறந்தவர்களும் ஐவர் இருந்தனர். அவர்களுடைய பெயர் கிருட்டிண ஐயர், மணிவண்ணப்பெருமாளையர், இராசகோபால ஐயர், கனகசபாபதி ஐயர், வேங்கடராம ஐயர் என்பர்.

கல்வி

திருவேங்கடநாதர் மிக இளமைப் பருவத்தில்தானே இலக்கண இலக்கியங்களையும் வேதாந்த நூல்களையும் நன்கு கற்றுணர்ந்து சிறந்த அறிவாளியானார். அன்பு, அருள், அடக்கம், வாய்மை, மெய்ம்மை, இறையன்பு முதலிய நல்லியல்புகளும் இவரிடத்தில் மிகுதியாக அமைந்திருந்தன. இவருடைய முன்னோர்கள் சோழ நாடு, பாண்டிய நாடு முதலியவைகளை ஆண்ட அரசர்களால் பெருஞ்சிறப்பு அளிக்கப்பெற்றுப் பாராட்டப்பட்டவர்களாயும் தமது அரசியல் அலுவல்களில் வேலைக்கு அமர்த்தப்பெற்றவர்களாகவும்

அமைச்சுத்தொழில்

1682-ஆம் ஆண்டில் மதுரையில் பட்டம் பெற்று அரசாட்சியை மேற்கொண்டிருந்த அரங்ககிருட்டிண முத்துவீரப்ப நாயக்கர் என்பவர் திருவேங்கடநாதருடைய நல்லியல்புகளையும் கல்வியறிவுடைமையையும் அறிந்தார். திருவேங்கடநாதரைத் தமக்கு அமைச்சராக ஏற்படுத்திக்

கொள்ள விரும்பினார். தக்கார் வாயிலாகத் தமது கருத்தைத் திருவேங்கடநாதருக்குப் புலப்படுத்தினார். அரசியலில் தமக்குத் துணையாக நின்று உதவிபுரிய வேண்டுமென்று பிகுதியும் வேண்டிக்கொண்டார். திருவேங்கடநாதர் நாயக்கர் வேண்டுகோளுக்கு இணங்கினார். அமைச்சுத் தொழிலை மேற்கொண்டார். அரசியலில் இருந்த சீர்கேடுகளையெல்லாம் போக்கி அரசியலை ஒழுங்குபடுத்தினார். இவருடைய செயல்கள் நாயக்கருக்கும் மக்கட்கும் மிகுந்த மகிழ்ச்சியை அளித்தன. அப்பொழுது திருநெல்வேலி நாட்டிலே ஆட்சிமுறை ஒழுங்கின்றிக் கிடந்தது. ஆகவே அதனைத் திருத்திச் செம்மையாக அமைத்தற்கு இவரை அனுப்ப எண்ணினார். அரசராகவே அதிகாரங்கொடுத்து அனுப்பினார். திருவேங்கடநாதர் அங்குப் பல ஆண்டுகள் அமர்ந்து ஆட்சிமுறையை மாட்சிபெற நடத்தி மக்களுக்கு நலம் புரிந்தார்.

### திருவேங்கடநாதர் இயற்கை

இவர் திருமாலிடத்திலே பெருமால் கொண்டவராக இருந்தார். வேதாந்த நூல்களையும் இவர் கற்றுத்தேர்ந்து தெளிந்த அறிவு படைத்தவராக இருந்தமையால் உலக நடவடிக்கைகளினும் அரசியலினும் பற்றற்றவராய் யிருந்தார். எல்லோரும் இவரை

### ஆசிரியர் கட்டளை

திருவேங்கடநாதருக்கு அறிவு நூல்களைப் போதித்தவர் இராகவானந்தர் என்னும் பெரியார். அவர் திருவேங்கட நாதர் அரசியலில் ஈடுபட்டு நின்று உலக மக்களுக்கு நலம்பல புரிதலைக்கண்டார். திருவேங்கடநாதரைப்பார்த்து, " அன்பனே! நீ உலகிற்கு நன்றாகப் பயன்படுகிறாய். உன்

ஞல் மக்கள் அறம், பொருள், இன்பம் எனும் மூன்றையும் நன்ருகப் பெறுகிருர்கள். நான்காவதாகிய வீடுபேற்றை யும் அவர்கள் அடையவேண்டும். ஆகவே நீ வேதாந்த நூல்கள் சிலவற்றை இயற்றுவாயாக," என்று கட்டளை யிட்டார். திருவேங்கடநாதர் தம்முடைய ஆசிரியரைப் பார்த்து, "பெரியீர்! தேவரீரைப்போல் முற்றுந் துறந்த பேரறிவாளர்களே அறிவு நூல் செய்தல் முறை. உலக வாழ்க்கையில் கிடந்துழலும் என்போலியர் மெய்யறிவு நூல்களை இயற்றல் இயலுமோ? ஆகவே, அத்தகைய உயரிய பணிக்கு எளியேன் உரியன் அல்லன்," என்று உரைத்தார்.

தம் மாணவர் சாற்றிய மாற்றங்களைக்கேட்ட அப் பெரியார், "அன்பனே! உன்னிலும் சிறந்த மெய்யறிவு படைத்தவர்கள் எவரும் இலர். மெய்யறிவாளர்கள் இல் லத்தில் இருந்தால் என்ன? துறவிகளாய்த் திரிந்தால் என்ன? அதைப்பற்றி நன்மை தீமை ஒன்றுமில்லை. வேதாந்த நூல் செய்தற்கு நீயே தக்கவன். என் கட்டளை யைத் தட்டமாட்டாமல் செய்வாயாக," என்று கூறினர். திருவேங்கடநாதர் தம்முடைய ஆசிரியர் கட்டளைப்படி நூல் ஒன்று இயற்றத்தொடங்கினர். எல்லா வேதாந்த நூல்களினுடைய சாரமாகவும் கிருட்டிண மிசிரர் என்னும் வடமொழிப்புலவரால் செய்யப்பட்ட பிரபோத சந்திரோ தயம் என்னும் நூலை 2012 விருத்தப்பாக்களால் தமிழில் மொழிபெயர்த்தார். இந்நூல் வேதாந்தக் கருத்துக்களை மிக அழகாக விளக்குகிறது. இந்நூலைப் படிப்பதால் பிரமம், மாயை, மனம், பிரவிர்த்தி, நிவிர்த்தி, மோகம், அகங் காரம் முதலியவற்றின் இலக்கணங்களும் காமக்குரோதங் கள் உண்டாகும்போது உண்டாகும் மெய்ப்பாடுகளின்

தன்மைகளையும் மற்றும் வேதாந்தச்செய்திகள் பலவற்றை யும் நன்கு உணர்ந்துகொள்ளலாம்.

தமிழ் மரபு

திருவேங்கடநாதர் இந்நூலை வடமொழிப்போக்குப் படியே மட்டுஞ்செய்யாது நன்கு விரித்துச் சிறந்த முறை யிற் பாடியிருக்கிறார். இந்நூலின் சொன்னோக்கும் பொரு ணோக்கும் தொடைநோக்கும் நடைநோக்கும் கற்பவர்கட் குக் கழிபேருவகை யளிப்பதாகும். இலக்கண விளக்கம்

ய வைததியநாத நாவலா

ளிருந்து ஆகவேண்டிய உதவிகள் பலவற்றையும் புரிந் தார். இலக்கண விளக்கம் திருவேங்கடநாதருடைய வேண்டுகோளின்படி இயற்றப்பட்டதென்பர். இந்நூலை யன்றிக் கீதாசாரத்தாலாட்டு முதலிய வேறு சில நூல் களும் திருவேங்கடநாதர் பெயரால் வழங்குகின்றன.

---

## ௩௦. அநந்த பாரதி ஐயங்கார்

தோற்றம்

தஞ்சைமாவட்டத்தில் உள்ள உமையாள்புரம் என் னும் சிற்றூரில் அநந்த பாரதி ஐயங்கார் 1786-ஆம் ஆண்டில் பிறந்தார். இவர் தந்தையார் பெயர் சீநிவாச ஐயங்கார்.

கல்வி

இவர் ஐந்து ஆண்டுகள் நிரம்பப்பெற்றவுடன் கல்வி கற்றற்குப் பள்ளிக்கு அனுப்பப்பெற்றார். பழம்பிறப்பின் நல்வினையினால் கல்வியை எளிதிற் கற்றுக்கொண்டார். இவருடைய அறிவுத்திறனைப்பார்த்துப் பல்லரும் வியந்தனர். இவருக்கு அகவை பதின்மூன்று நடந்துகொண்டிருந்த போது தம்மூர்த் தெய்வமாகிய யானைமேலழகர்மீது நொண்டிச்சிந்து ஒன்று பாடினார்.

நாடகம் இயற்றல்

பிறகு இவர் தம்முடைய தந்தையாரோடு திருவாரூர்க்குச் சென்று அங்கே மூன்று ஆண்டுகள் உயர்நிலைப்பள்ளியிற் கல்வி கற்றார். பதினைந்தாம் ஆண்டில் தஞ்சைக் கோயில்களுக்குக் காரணஞ் சம்பிரதி என்னும் பெயருடைய அலுவலில் அமர்ந்தார். இருபத்தைந்தாம் அகவையில் திருவிடைமருதூருக்குச் சென்றார். அங்குள்ள கோயிலின் மேல் ஒரு நாடகம் இயற்றி அரங்கேற்றினார். அப்பொழுது அங்குக் கோயில் காரியங்களை நடத்திக்கொண்டிருந்த ஐயாறப்ப தம்பிரான் என்பவர் நாடகத்தின் சிறப்பைக் கண்டு மிகுந்த மகிழ்ச்சியடைந்தார். இவருக்குக் கவிராய சுவாமி என்னுஞ் சிறப்புப்பெயர் கொடுத்துப் பெருமைப் படுத்தினார். ஒரு தோட்டத்தையும் வீட்டையும் நன்கொடையாக வழங்கினார். இவரைத் தமக்கு அண்மையிலேயே வாழ்ந்திருக்கச் செய்தார்.

நூல்கள் இயற்றல்

ஐயங்கார் அங்கிருந்துகொண்டே,

1. உத்தரராமாயணக் கீர்த்தனை
2. தேசிகப்பிரபந்தம்
3. பாகவத சமஸ்தகந்த நாடகம்
4. மருதூர் வெண்பா
5. மூப்பால் திரட்டு

முதலிய நூல்களைச் செய்தார்.

இவர் 1846-ஆம் ஆண்டில் தமது அறுபதாவது அகவையில் இவ்வுலக வாழ்வைத் துறந்தார்.

## ௩௧. பூசை நமசிவாயப்புலவர்

### தோற்றம்

இவர் காஞ்சிபுரம் பிள்ளையார்பாளையம் மண்டபத் தெருவில் வாழ்ந்திருந்தவர். செங்குந்த மரபில் தோன்றியவர். சிவஞானமுனிவருடைய மாணவர் வழிமுறையில் கல்வி பயின்ற அறிஞர்களுள் முதன்மையானவர் இவர்.

### கல்வியுந்தொண்டும்

கலைநெய்தலாகிய குலத்தொழிலோடு கலை கற்றலாகிய உயர்தொழிலையும் மேற்கொண்டு செந்தமிழ் நூல்கள் பலவற்றை ஐயந்திரிபறக் கற்றுச் சீர்த்தியடைந்தார். கற்றுச் சிறப்படைந்ததோடு அமையாமல் தாம் கற்ற கல்வியைப் பலருக்கும் போதித்துப் பயன்படுத்துதலாகிய உயர்நெறியையும் மேற்கொண்டார். இவரிடம் பலர் கற்றுச் சிறப்படைந்தார்கள். பாடஞ்சொல்லும்போது நூலைப் பாராமலே சொல்லும் அளவிற்குப் பாடல்களை மனப்பாடஞ் செய்தும் தெளிவாகக் கற்றுந் தேர்ந்திருந்தார்.

### மாணவர்கள்

காஞ்சி நகரத்திலிருந்தும் வெளியூர்களில் இருந்தும் பலபேர் வந்து இவரிடம் தமிழ் பயின்றார்கள். இவர்பால் தமிழ் பயின்ற மாணவர்கள் எண்ணற்றவர்கள். சைவசித்தாந்தம், வேதாந்தம் ஆகிய இரு சமய நூல்களிலும் இவர் மிகுந்த தேர்ச்சியுடையவராக விளங்கினார். ஆயினும் இவரது அழுத்தமான சமயக்கொள்கை சைவசித்தாந்தமாகவே விளங்கியது. இவரிடம் நற்குணங்களெல்லாம் நன்கு அமைந்து விளங்கின. இவர் தாம் பாடஞ்சொல்வதற்கென்று தனியே நேரம் வகுத்துக்கொள்வதில்லை. தமக்குரிய நெசவுத்தொழிலின் சார்பாகப் பல தொழில்களை மேற்கொண்டு செய்யுங்காலத்திலும் பாடஞ்சொல்லு

தலை மேற்கொண்டிருந்தார். இவர் செல்வம்படைத்தவ ரல்லர். வறிய குடும்பத்தினர். ஆயினும் பாடஞ்சொல்லு தற்காக மாணவர்களிடமிருந்து எத்தகைய கைம்மாறை யும் எதிர்பார்க்கமாட்டார். இவருடைய பெருந்தன்மை யான இச்செயலைக்கண்ட பெருஞ்செல்வர்கள் சிலர் இவருக் குத் தக்க உதவிசெய்தனர்.

நன்மதிப்பு

இவரிடம் எல்லோரும் நன்மதிப்புக்கொண்டிருந்தார் கள். இவர் தாம் நெய்த ஆடையினை விற்கும்பொருட்டு எடுத்துக்கொண்டு வெளியேசென்றால், இவரை முதன் முதலாக எந்தத் துணிவணிகர் பார்த்தாலும் இவரை யழைத்து இவர் நெய்துள்ள ஆடையின் உயர்வு தாழ்வைப் பார்க்காமல் வாங்கிக்கொண்டு ஆடைக்குரிய பொருளைக் கொடுத்துவிடுவர்.

திருவருட்பிரகாச வள்ளலார் தொடர்பு

திருவருட்பிரகாச வள்ளலார் என்னும் சிதம்பரம் இராமலிங்க அடிகட்கும் இவருக்கும் நெருங்கிய தொடர்பு இருந்தது. அடிகளார் கல்விகற்கக்கூடிய மாணவர்களை இவரிடம் அனுப்புவார். இருவரும் கடிதம் எழுதிக் கொள்ளுதலும் உண்டு.

பாடங்கேட்டலில் பற்று

இப்புலவர் கல்விகற்றுச் சிறப்படைந்து, ஆசிரியநிலை யில் இருந்து பலருக்குக் கல்வி போதித்தாராயினும், தாம் மேன்மேலும் கல்வி கற்பதிலும் ஊக்கம் உடையவராக இருந்தார். ஒருவரிடம் ஒன்றைக்கேட்கத் தொடங்கினால் புதிய செய்திகள் பலவற்றைக் கேட்கலாம் என்பது இவ ருடைய முடிபு. அருணையில் இருந்த ஒரு பெரியார் காஞ்சிக்கு வழிப்பயணமாக வந்திருந்தார். அவர்

வேதாந்த நூல்களைப் பாடஞ்சொல்வதில் வல்லவர். அப்பெரியாரிடம் நமசிவாயப்புலவர் கைவல்யநவநீதத்தைப் பாடங்கேட்கத் தொடங்கினார். கைவல்யநூல் முற்றுப் பெறுவதற்குமுன் அப்பெரியார் திருவருணைக்குத் திரும்பினார். நமசிவாயப்புலவர் ஆசிரிய நிலையிலுள்ள அப்பெரியாரின் வழிச்செலவுக்கு மாறு பேசவில்லை. அப்பெரியார் சிவிகையிலேறிப் புறப்பட்டார். நமசிவாயப்புலவர் கைவல்ய நவநீதத்தைக் கையிலெடுத்துக்கொண்டு, பல்லக்கிற்செல்லும் பெரியாரின் முகத்தைப்பார்த்தபடியே பின்புறமாகவே நடந்து பாடங்கேட்டுக்கொண்டு சென்றார். காஞ்சிபுரத்திற்குத் தெற்கே 25 கல் தொலைவில் உள்ள வந்தவாசி என்னும் ஊரையடைந்ததும் கைவல்யம் முற்றுப்பெற்றது. பிறகு நமசிவாயப்புலவர் அப்பெரியாரிடம் விடைபெற்றுக்கொண்டு காஞ்சிபுரத்திற்குத் திரும்பினார். இந்நிகழ்ச்சியில் இருந்து இப்பெரியார் கல்விகற்பதில் எவ்வளவு ஊக்கம் உடையவராக இருந்தார் என்பதை நாம் அறிந்துகொள்ளலாம்.

## ௩௨. பூசை கந்தசாமி முதலியார்

"மகனறிவு தந்தையறிவு" என்று நாலடியார் கூறுகிறது. இம்மொழி மெய்ம்மையாதலைச் சிலரிடத்திலும் பொய்ம்மையாதலைச் சிலரிடத்திலும் காணலாம். நமசிவாய புலவரிடத்திலும் அவருடைய மைந்தரிடத்திலும், மேற்கூறிய நாலடிமொழி மெய்ம்மொழியாகிவிட்டது. நமசிவாய முதலியாருடைய அருமைத் திருமகனாகத் தோன்றிய கந்தசாமி முதலியார் நல்லொழுக்கம் நற்குணம் உடையவராக இருந்தார். மிக இளமைப்

பருவந்தொடங்கியே தந்தையாரிடத்தில் பல நூல்களையுங் கற்கத்தொடங்கினார். நாளடைவிற் சிறந்த புலவராகவும் ஆனார். இவரைப் பெரும்புலவர் (மகாவித்துவான்) என்று பலரும் கூறி வந்தனர்.

கலைத்தொண்டு

பாடஞ் சொல்லுவதில் தம்முடைய தந்தையாரின் முறையையே பின் பற்றி வந்தார். தந்தையாராகிய நமசிவாய முதலியாருக்கிருந்த பெருமையுஞ் சிறப்பும் அப்படியே இவருக்கும் இருந்தது. பெரிய புராண உரையெழுதிய மகாலிங்க ஐயர் தமக்குத் தோன்றும் ஐயங்களை அப்போதைக்கப்போது கந்தசாமி முதலியாரிடம் வந்து தீர்த்துக்கொள்வது வழக்கம். கந்தசாமி முதலியார் காலத்தில் காஞ்சிபுரம் மண்டபத்தெரு வாசிகளுள் பெரும்பாலார் புலவர்களாகவே விளங்கியிருந்தனர். ஆகவே அத்தெரு தமிழ்மணங் கமழ்ந்து சிறந்து விளங்கியது. வெளியூர்ப் புலவர்கள் யாரும் வந்தால் அத்தெருவுக்குத் தான் செல்லுவார்கள். முதலியார் நெசவுத்தொழில் செய்யும் இடத்தை அடுத்த மேல் தரையும் தெருத் திண்ணையும் பலபேர் அமர்ந்து பாடங்கேட்டுப் புலமைபெற்ற இடங்களாக விளங்கின.

ஆறுமுக நாவலர்

ஆறுமுக நாவலர் கந்தசாமி முதலியாருடைய பெரும் புலமையையும் அறிவு நலத்தையும் பலர் வாயிலாகக் கேட்டுணர்ந்தார். ஒரு முறை காஞ்சிபுரத்தையடைந்து ஒரு திங்கள்வரை தங்கியிருந்து கந்தசாமி முதலியாரிடத்தில் ஐயங்கள் பலவற்றைக்கேட்டுத் தெளிந்தார்.

அருட்பா மருட்பாப் போர்

இவருடைய காலத்தில்தான் அருட்பா மருட்பாப் போர் நிகழ்ந்தது. இவருடைய தந்தையாராகிய நமசி

வாயப் புலவரும் இராமலிங்க அடிகளும் நெருங்கிய நண்பர்கள். பெரும்புலவர்கள் எல்லோரும் இராமலிங்க அடிகளின் பாடலை அருட்பா என்றல் தகும் என்று முடிவு செய்து இராமலிங்க அடிகளாரின் சார்பிலேயே இருந்தனர். கந்தசாமி முதலியார் இராமலிங்க அடிகளின் கட்சியில் இருந்தார். ஆகவே காஞ்சியில் இருந்த அறிஞர்களிற் பெரும்பாலார் இவர் கட்சியைச் சார்ந்து நின்றனர்.

மாணவர்கள்

கந்தசாமி முதலியாரிடத்தில் பல பேர் கல்வி கற்றுச் சிறப்படைந்து நல்ல பதவிகளில் அமர்ந்து விளங்கினர். சின்னக் காஞ்சிபுரம் சீநிவாசச் செட்டியார், ஆமூர் சாமிநாத முதலியார், சிவசங்கரதேசிகர், பி. செ. முருகேச முதலியார் முதலியோர் முதன்மையாகக் குறிப்பிடத்தக்கவர்களாவர்.

வழி முறையினர்

கந்தசாமி முதலியாருடைய வழி முறையினரும் புலவர்களாக விளங்குகின்றனர். நெய்தல் தொழிலை மேற்கொண்டிருந்த திருவள்ளுவர் பெரும் புலவராக விளங்கியிருந்ததைப் போன்று இவர்களும் புலவர்களாக விளங்கியிருந்தமையும் விளங்குதலும் போற்றத்தக்க தாகும்.

"செய்யுந் தொழிலெல்லாஞ் சீர்தூக்கி நோக்குங்கால்
நெய்யுந் தொழிற்கில்லை நேர்.

## ௩௩. பண்டித நடேச சாத்திரியார்

*பிறப்பு*

திருச்சி மாவட்டத்திலே 1859-ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்களிலே நடேச சாத்திரியார் பிறந்தார். தந்தையார் பெயர் மகாலிங்க ஐயர். தாயார் பெயர் அகிலாண்டே சுவரி. இவருடைய தாயார் இவர் சிறு குழந்தையாயிருக் கும்போதே இவருக்குத் துணையாகப் பெண் குழந்தை ஒன்றையும் பெற்றுவிட்டு விண்ணுலகெய்தினர். தந்தை யாராகிய மகாலிங்க ஐயர் செல்லம்மாள் என்னும் பெயரு டைய மற்றொரு பெண்ணை இரண்டாம் மனைவியாகத் திருமணஞ் செய்துகொண்டார். அந்த மனைவியிடம் சங்கரன் என்னும் பெயருடைய ஓராண் குழந்தையும் மீனாட்சி, சங்கரி என்னும் பெயருடைய இரண்டு பெண் குழந்தைகளும் பிறந்தார்கள்.

*கல்வி*

மகாலிங்கஐயர், மாவட்டத்தலைவர் அலுவலகத்தில் தலைமை எழுத்தாளராக அலுவல் பார்த்துக்கொண்டிருந் தார். சாத்திரியார் இளமைப் பருவத்தில் வீட்டு ஆசிரி யரிடத்திலே, தமிழ், வடமொழி, ஆங்கிலம், கணக்கு முதலியவைகளைக் கற்றார். பிறகு தகப்பனார் வேலை பார்த் துக்கொண்டிருக்கும் ஊர்களில் இருந்த பள்ளிக்கூடங் களிற் படித்தார். இவருடைய தகப்பனார் மிகவுங் கண்டிப் பான கட்டுப்பாடுடையவர். அவர் அதிகாலையில் நான்கு மணிக்கே எழுந்து ஆகவேண்டிய வேலைகளைப் பார்ப்பார். தம்முடைய பிள்ளையையும் நான்கு மணிக்கே எழுந்து படிக்கச் செய்வார். தாயில்லாக் குழந்தையாகிய இவரிடம் ஊரில் உள்ள பாட்டிமார்கள் மிகுந்த அன்பு காட்டுவார் கள். இவரும் அவர்களிடம் பணிவாகவும் அன்பாகவும்

நடந்துகொள்வார். பெரியோர் சிறியோர் ஆகிய எல்லோரிடமும் இவர் பணிவாகச் சிறு பிள்ளையிலேயே நடக்கப் பழகிக்கொண்டார். இப் பழக்கம் இவருக்கு இறுதிநாள் வரையில்

பழங் கதைகள்

பாட்டிமார்கள் இவருக்குப் பழங் கதைகளையும் புராண இதிகாசக் கதைகளையும் சொல்லுவார்கள். இவர் களையெல்லாம் மனதில் நன்றாகப் பதியச் செய்துகொண்டு தம்முடைய நண்பர்கட்குச் சொல்லலானார். இந்தப் பழக்கம் இவர் பிற்காலத்தில் கதைகள் எழுதிச் சிறப்படைவதற்குக் காரணமாக இருந்தது.

கல்லூரிப் படிப்பு

மெட்ரிகுலேஷன் தேர்வில் தேறிய பிறகு கும்பகோணத்திற்குப்போய்க் கல்லூரியிற் சேர்ந்து படித்தார். அப்பொழுது அங்கே கோபாலராயர், போர்ட்டர்துரை யோா ஆசிரியராக நதனா. கலலூரியில இவர் முதல் மாணவராக இல்லா நல்ல அறிவாளி என்று பெயர் வாங்கினார். கும்பகோணத்தில் குடித்தனம் வைத்தால் செலவு அதிகமாகுமென்று எண்ணிக் கும்பகோணத்திற்கு ஐந்துமைல் தொலைவிலுள்ள ஒரு சிற்றூரில் ஒரு சிறு வீட்டை ஏற்பாடு செய்து இவருடைய அத்தையையுங் கூட வைத்துப் படிப்பதற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். நடுவே காவிரியாறு குறுக்கிட்டது. சாத்திரியாருக்கு ஆறு ஒரு பெரிதாகத் தோன்றவில்லை. தமது சட்டை துணி மணி புத்தகம் முதலியவைகளைத் தலையின்மேல் வைத்துக் கொண்டு ஒரு கையால் பிடித்துக்கொள்ளுவார். மற்றொரு கையால் ஆற்றை நீந்திச் செல்வார். இவர் இளமையிலே உடல் திடமும் உள்ளத்திடமும் பெற்றிருந்தார். பிறகு

சென்னை மாகாணக் கல்லூரியிற்சேர்ந்து படித்து, பி. ஏ. பட்டம் பெற்றார்.

### திருமணம்

நடேச சாத்திரியாருக்குத் தஞ்சை மாவட்டத்திலே திருமணம் நடைபெற்றது. வாழ்க்கைத் துணைவியாக வாய்த்த மாது நல்லாரின் பெயர் நாகலட்சுமி. நாகம்மாள் என்றே பெரும்பாலும் மற்றவர்கள் கூப்பிடுவார்கள். அம் மடமாது கற்பிற் சிறந்த காரிகையாக விளங்கினார். கணவனைத் தவிர வேறு தெய்வத்தை அறியார். ஒருநாள் அம் மாது தம்முடைய கணவரைப் பார்த்து, "ஏதாவது நோன்புகள் நோற்று நல்வினை தேடவேண்டும்," என்று கூறினார். சாத்திரியார் தம்முடைய மனைவியைப் பார்த்து, "நீ நாள் தோறும் இரண்டு வேளையும் என்னை வணங்குகிறாயே அதுவே உனக்கு எல்லா நன்மைகளையும் கொடுக்கும்," என்று நவின்றார். இவர்கட்கு எட்டு ஆண் குழந்தைகளும் நான்கு பெண் குழந்தைகளும் பிறந்தார்கள். இவ் வம்மையார் இறுதி வரையில், "என்னுடைய கணவனே எனக்குக் கண்கண்ட தெய்வம்," என்று கூறிக்கொண்டு நாளைக் கழித்தார்.

### அலுவல்

இவர் இருபத்திரண்டாவது அகவையில் 1881-ஆம் ஆண்டு பிப்ரவரித்திங்கள் இருபத்தாறும் நாள், இந்திய சாசன சிற்ப ஆராய்ச்சி இலாகாவில் மிஸ்டர் ராபர்ட்சிவல் ஐ. வி. எஸ். துரையிடம் வேலைக்கு அமர்ந்தார். அப்போது இவருக்குத் திங்கள் ஊதியம் ரூபா முப்பது. இவருடைய மொழியறிவையும் வடமொழிப் புலமையை யுங்கண்டு அரசினருக்கு எழுதி இவருடைய திங்கள் ஊதியத்தை இவருடைய மேலதிகாரியாக இருந்த துரை ரூபா

எழுபத்தைந்துக்கு உயர்த்தச் செய்தார். இவர் இந்த அலுவலில் இருந்தபோது சென்னை மாகாணம் எங்கும் யிலுஞ் சுற்றினர். பம்பாய் மாகாணத்தின் சில பகுதிகளிலும் சுற்றினர். பிறகு இ. பி. ஹூவல் துரையுடன் பல கோயில்களுக்கும் மலைக்குகைகளுக்குஞ் சென்று கல்வெட்டு முறிகளை ஆராய்ந்தார். இவருக்குப் பதினெட்டு மொழிகள் வரையிலுந்தெரியும். இவருடைய மொழியறிவைப் புகழ்ந்து பாராட்டிய துரை மேலதிகாரிகளுக்கு எழுதிப் 'பண்டிதர்' என்னுஞ் சிறப்புப் பெயரை வாங்கிக் கொடுத்தார்.

மைசூரில் வேலை

பிறகு இரண்டு ஆண்டுகள் மைசூர் அரசாங்க சாஸன சிற்ப ஆராய்ச்சிப் பிரிவில் வேலை பார்த்தார்.

உதகமண்டலத்தில் வேலை

1888-ஆம் ஆண்டில் உதகமண்டலத்தில் சிறைகளின் கண்காணிப்பாளர் அலுவலகத்தில் தலைமை எழுத்தாளராக அலுவல் பார்க்கத்தொடங்கினர். இங்கு இவருக்குத் தலைவராக இருந்த ஏ. ஜி. கார்டியூ ஐ. ஸி. எஸ் இவரிடம் அன்பாகவும் ஆதரவாகவும் நடந்துகொண்டார். அவருடைய தூண்டுதலின் பேரில் அரசாங்கச் செயலகத்திற்கு மாற்றப்பட்டார். பிறகு 1900-ஆம் ஆண்டில் பதிவுப் பிரிவுக்கு (ரிஜிஸ்திரேஷன் இலாகா) மாற்றப்பட்டார். திருவள்ளூரிலும் ஆர்க்காட்டிலும் சிறிது காலம் உதவிப் பதிவாளராக இருந்து பிறகு பதிவுப் பிரிவுப் பொதுக்கண்காணிப்பாளர் அலுவலகத்தின் மேலாளராக (ரிஜிஸ்திரேஷன் இலாகா இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஆபீஸ் மானேஜர்) வந்தார். 1906-ஆம் ஆண்டு வரையில் அந்த அலுவலை மேற்கொண்டிருந்தார்.

றுவருடைய அந்திய நாளுக்கு முந்திய நாள் இவருக்குக் கொடுக்கபடவேண்டிய மேல்பதவியை அரசியலார் வேறொருவருக்குக் கொடுத்துவிட்டார்கள். அதனால் மனம் வருந்தி வீட்டிற்கு வந்த சாத்திரியார் தம்முடைய மனைவியைப் பார்த்து நடந்த செய்திகளைச் சொன்னார். நாம் இனிமேல் அலுவலகத்திற்கு (ஆபீசுக்கு)ச் செல்லப் போவதில்லையென்று உரைத்தார். அவர் வாக்குப் பலித்து விட்டது. அன்று இரவு இவர் சாப்பிட்டுவிட்டு வெளியே சென்றார். திருவல்லிக்கேணியில் பார்த்தசாரதிக்குத் திருவிழா நடந்துகொண்டிருந்தது. அதிர்வெடிகள் பலமாகப் போடப்பட்டன. அதிர்வெடியின் பேரொலியைக் கேட்டு மிரண்டு ஓடிய ஒரு குதிரை இவரைக் கீழே தள்ளி விட்டது. அதனால் பலமான அடி ஏற்பட்டுவிட்டது. வண்டியில் போடப்பட்டு வீட்டிற்குக்கொண்டு வரப்பட்டார். செய்யத்தக்க மருத்துவங்கள் செய்யப்பட்டன. ஆனால் எத்தகைய பயனும் ஏற்படவில்லை. அன்றிரவு (1906-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 11-ஆம் நாள் இரவு நான்கு மணிக்கு) இறைவன் திருவடி நீழலையடைந்தார். "நெருநல் உளனொருவன் இன்றில்லை யென்னும், பெருமை உடைத்திவ் வுலகு" என்னும் தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார் திருவாய்மொழி பலித்துவிட்டது. முதல் நாள் தம்முடைய மனைவியிடம் கூறியவாறு மறுநாள் அவர் தமது அலுவலகத்திற்குப் போகவில்லை.

## வாழ்க்கைக் குறிப்புக்கள்

*மாற்றுந் தாயின் பேரவா*

சாத்திரியார் வேதாந்தக்கொள்கையில் அழுத்தமான பற்றுடையவர். பகவத்கீதையை நன்கு கற்றவர். கற்றதற்

கேற்ப ஒழுகும் மனப்பான்மை அமையப்பெற்றவர். இவரு டைய இருபத்தைந்தாவது அகவையில் தந்தையார் சங் கேந்தி என்னுஞ் சிற்றூரில் காலமானார். அப்போது சாத் திரியார் உதகமண்டலத்தில் இருந்தார். சாத்திரியார் ஊருக்கு வந்து சேருவதற்குள் இவருடைய மாற்றுந் தாய் சிலருடைய வஞ்சகச் சொற்களைக் கேட்டுக்கொண்டு பொய்க் கணக்குகளை எழுதினாள். இரண்டு இலட்ச ரூபாய் மதிப்புள்ள பொருள்கள் இருக்க, ஐம்பதினாயிரம் ரூபாயே எஞ்சுவதாகக் கூறினாள். சாத்திரியார் ஊருக்கு வந்ததும் தந்தையின் இறுதிக் கடன்களை
அப்போது அவருடைய மாற்றுந்தாய்,
களைப் பார்த்தால் நல்லது" என்றாள். மிகுந்த சினம் சாத்திரியாருக்கு உண்டாயிற்று. ஆயினும் தமக்கு வந்த சினத்தை அடக்கிக்கொண்டார். "அதற்கு இப்பொழுது என்ன? மெதுவாகப் பார்த்துக்கொள்ளுவோம்." என்றார். மாற்றுந் தாய், "கடன் மிகுதியாகிவிட்டது. எங்களுக்கு ஒருவழி செய்யவேண்டாமா? நீயோ அரசாங்க அலுவலில் இருக்கிறாய். உன் தகப்பனாருடைய பொருள்களை உன் தம்பிக்கும் தங்கைகளுக்கும் விட்டுக்கொடுத்துவிட்டதாக வாக்குக்கொடு," என்றாள். சாத்திரியாருக்கு அப்போது திங்கள் ஊதியம் 75 ரூபா தான். குழந்தைகள் ஆறு. மேலும் இரண்டு மூன்று அகவை முதிர்ந்த உறவினர்கள்
னார்கள். சாத்திரியாருடைய
மனைவி எச்செயலையும் எண்ணிப் பார்த்துச் செய்யுமாறு

சாத்திரியார் வஞ்சகநெஞ்சம் படைத்த தம்முடைய
ியைப் பார்த்து, "சித்தி! என்னுடைய தகப்பனாரோ இறந்துபோய்விட்டார். அவரைவிட அவருடைய பொருள் பெரிதாக எனக்குத் தோன்றவில்லை. நீங்களே வைத்துக்

கொள்ளுங்கள். கடவுள் என்னைக் காப்பாற்றுவார்," என்று கூறிவிட்டார்.

புகை வண்டியில்

சாத்திரியார் உதகமண்டலத்தில் வேலையேற்றுக் கொள்வதற்காகப் புறப்பட்டார். முதல் வகுப்புப் பயணச் சீட்டு வாங்கிக்கொண்டால் வண்டியில் நன்றாக உறங்கலாம் என்னும் எண்ணத்துடன் சீட்டுப் பெற்றுக்கொண்டு வண்டியில் ஏறினார். சிறிது நேரத்தில் குறட்டைவிட்டு உறங்கத்தொடங்கிவிட்டார். அவ்வகுப்பில் இருந்த துரை ஒருவருக்குச் சாத்திரியாருடைய குறட்டையொலி தலை வேதனையை உண்டாக்கிற்று. அவர் சாத்திரியாரைத் தட்டி யெழுப்பினார். சாத்திரியார் எழுந்தார். துரை சாத்திரி யாரைப் பார்த்து, "நீ வேறு வண்டியிற் போய்ப்படுத்துக் கொள். உன்னுடைய குறட்டையொலி எனக்கு மிகுந்த தொல்லையை உண்டாக்குகிறது," என்று கூறினார். சாத்திரியார் துரையின் சொல்லுக்கு இணங்கவில்லை. "அஃதெல்லாம் இங்கு சரிப்படாது. நான் குறட்டை விடுவது உமக்குத் தொல்லையாக இருந்தால் நீர் வேறு வண்டி பார்த்துக்கொள்ளும்," என்று கூறிவிட்டார். இவரை அசைக்கமுடியாது என்று கண்ட துரை தாமே வேறு வண்டி தேடிப்போய் விட்டார்.

மறுநாள்

மறுநாள் வியக்கத்தக்க நிகழ்ச்சியொன்று ஏற் பட்டது. உதகமண்டலத்தை யடைந்த சாத்திரியார் வேலையை ஒப்புக்கொண்டு துரையைப் பார்க்கச் சென்றார். இவரைக் கண்டதும் துரை துள்ளிக் குதித்தார். அத் துரை வேறு யாருமல்லர். முதல் நாள் இரவு சாத்திரியார் புகைவண்டியில் போராட்டம் நடத்திய அந்த வெள்ளைத்

தோல் மனிதர்தாம். சாத்திரியாருக்கும் தூக்கிவாரிப் போட்டது. சரிதான். நமக்கு கிடைத்தவேலை ஒழிந்தது. துரை தடியைத் தூக்கப்போகிறார் என்று எண்ணினார். ஆனால் இவர் எண்ணியவாறு துரை தடியைத் தூக்கவில்லை. சாத்திரியாருடைய முதுகிலே தட்டிக்கொடுத்தார். "சாத்திரியாரே உம்முடைய அஞ்சாமையையும் தன் மானத்தைக் காப்பாற்றிக்கொள்ளும் உயரிய கொள்கையையும் நான் போற்றுகிறேன். உம்மை போன்ற ஆண்மையாளர்கள் தாம் பொறுப்பான வேலைகளுக்கு வேண்டும்," என்று கூறினார்.

புலிக்குக் கிலி

ஒரு சமயம் பம்பாய் மாகாணத்தில் சிவல் துரையுடன் சுற்றிக்கொண்டிருந்தார். மனித நடமாட்டம் இல்லாத ஒரு காட்டில் கூடாரம் அடித்து அதில் இவர்களும் இவர்களுடைய ஆட்களும் தங்கியிருந்தார்கள். சாத்திரியார் கூடார வாசற்படியை நோக்கி ஒருசிறிய பலகையைப் போட்டு எழுதிக்கொண்டிருந்தார். பலகையின்மீது இரண்டு மெழுகுவத்தி விளக்குகள் எரிந்துகொண்டிருந்தன. துரை சாய்வுநாற்காலியிற் படுத்துக்கொண்டு செய்திப்பத்திரிகை படித்துக்கொண்டிருந்தார். காலடியின் ஒலி மெதுவாகக் கேட்டது. கூடாரத்திற்குமுன்பு வேங்கைப்புலி ஒன்று வந்து நின்றது. அது திடீரென்று வந்து தோன்றியதால் துரைக்குத் துப்பாக்கியை எடுப்பதற்கு எழும்புவதற்குக்கூட முடியாமல் திகைப்பு உண்டாகிவிட்டது. சாத்திரியாருக்கும் யாது செய்வதென்று விளங்கவில்லை. திடீரென்று சாத்திரியார் இரண்டு மெழுகுவத்தி விளக்குகளையும் இரண்டு கைகளிலும் எடுத்துக்கொண்டு, "ஓம்" என்று உரக்கக்கத்திக்கொண்டு புலியை நோக்கி ஓடினார். புலிக்குக் கிலிபிடித்துவிட்

போது திகைத்துநின்ற புலி ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தோடி மறைந்துவிட்டது. தூங்கிக்கொண்டிருந்த ஆட்கள் விழித்தெழுந்து இந்நிகழ்ச்சியைத் தெரிந்து மிகுந்த வியப்படைந்தார்கள். சாத்திரியார் இவ்வாறு சமயத்திற் கேற்றவாறும் ஆண்மையுடனும் நடந்துகொண்டிராவிடில் அன்று புலியினால் சாத்திரியாருக்கும் துரைக்குந் தொல்லை நேர்ந்திருக்கலாம்.

முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டை

1887-ஆம் ஆண்டில் ராயல் பப்ளிக் சர்விஸ் கமிஷன் முன்பு சாத்திரியார் கரி ஒன்று கூறும்படியாக ஏற்பட்டது. அப்போது, "சென்னை மாகாணக் கல்லூரியில் மேனாட்டினர் ஒருவர் வடமொழிப் பிரிவுக்குத் தலைவராக இருப்பது கூடாதெனவும், அப்பகுதிக்கு இந்தியர்களையே ஏற்படுத்த வேண்டுமென்றும் ஆண்மையுடன் கூறினார். இவ்வாறே சாசனசிற்ப ஆராய்ச்சிப் பிரிவிலும் கரி பகர்ந்தார். இவர் இவ்வாறு இயம்பியதைக்கண்ட அரசினர் இவரிடம் வெறுப்புக்கொண்டதுடன் இவருடைய முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டையும் போட்டார்கள்.

குண நலன்கள்

சாத்திரியார் காலை நான்கு மணிக்கே எழுந்துவிடுவார். யோகம் பிராணாயாமம் ஆகியவைகள் செய்வார். வேதாந்தக்கொள்கைக்கேற்ப பற்றற்றவராய் விளங்கினார். ஏழை எளியவர்களிடம் இவருக்கு மிகுந்த அன்புண்டு. ஏழைகளைக் கடவுளாகவே எண்ணிப்போற்றுவார். இவருடைய இல்லத்தில் எப்பொழுது பார்த்தாலும் விருந்தினர்கள் இருந்துகொண்டேயிருப்பார்கள். இவருக்கு நடப்பதில் மிகுந்த விருப்பம் உண்டு. ஒரேயடியாக இருபது முப்பது மைல்கள்கூட நடப்பார். விவேகாநந்தர்

சென்னைக்கு வந்திருந்தபோது அவரோடு சிலநாள் வேதாந்த ஆராய்ச்சி செய்தார். ஆங்கிலங்கற்றவர்கள் தம் அலுவல்களைச் செய்துமுடித்தால் அதுவே பெருங் காரியம் என்று எண்ணுவார்கள். சாத்திரியாரோ எவ் வளவு கடினமான அரசியல் வேலையில் இருந்தாலும் வீட்டிக்குவந்த பிறகு இரவு ஒருமணி இரண்டுமணி வரை யில் கண்விழித்து நூல்கள் எழுதுவார்.

கலைத்தொண்டு

இவர் தமது அரசியல் அலுவலோடு நூல்கள் பல எழுதிச் சிறந்த கலைத்தொண்டு செய்தார். இவரால் எழு தப்பெற்ற நூல்கள் பல.

ஆங்கிலம்

1. இந்துமத விழாக்கள்
2. திராவிடகால இராக் கதைகள்
3. தென்னிந்தியநாட்டுக் கதைகள்
4. அரசனும் நான்கு மந்திரிகளும்
5. சூரியனுடைய கதைகள்
6. தெனாலிராமன் கதைகள்

வடமொழி

7. சாகுந்தல நாடக விமர்சனம்
8. ஹர்ஷ சரித்திர விமர்சனம்
9. ஆத்மவித்யா வித்தியாவிலாச மொழிபெயர்ப்பு
10. ரகுவம்சம்

தமிழ்

11. வால்மீகி ராமாயணம்
12. தீனதயாளு
13. கோமளம் குமரியானது
14. திக்கற்ற இரு குழந்தைகள்
15. மதிகெட்ட மனைவி
16. மாமி கொலுவிருக்கை

17. தலையணை மந்திரோபதேசம்
18. தானவன் (துப்பறியும் கதை)
19. தக்காணத்துப் பூர்வ கதைகள்
20. தக்காணத்து மத்யகாலக் கதைகள்
21. ஈஸாப் நீதிக்கதைகள்
22. தூக்குத் தூக்கி
23. நான்கு பக்கிரிகள் கதை
24. குமார சம்பவம்
25. வேணி சம்மாரம்
26. மிருச்சகடிகை
27. முத்திரா ராக்ஷஸம்
28. ஷேக்ஸ்பியர் நாடகக் கதைகள்
29. சிறுவர்களுக்கான கதைகள்
30. சம்ஸ்க்ருத கவிகளின் சரிதைகள்
31. சுகாதாரம்

## ௩௪. நாராயண ஐயர்

### தோற்றம்

நாராயண ஐயர் பாண்டிநாட்டிலே மானமதுரையிலே 1857-ஆம் ஆண்டு டிசம்பர்த்திங்கள் 31-ஆம் நாள் (பிங்கள ஆண்டு மார்கழித்திங்கள் பதினெட்டாம் நாள்) பிறந்தார். தந்தையார் பெயர் நாகுவையர். தாயார் பெயர் பர்வதம்.

### கல்வி

இவர் மானமதுரையிலே கல்வி கற்கத்தொடங்கினார். மதுரை முதலிய இடங்களில் கல்வி கற்றார். 1874-ஆம் ஆண்டில் மெட்ரிகுலேஷன் தேர்வில் முதலாவதாகத் தேறினார். அதனால் இவருக்கு விலையுயர்ந்த நூல்கள் பல நன்கொடையாகக் கிடைத்தன. எப். ஏ. தேர்வுக்குக் கும்பகோணத்தில் இரண்டு ஆண்டுகள் படித்து அதில் முதன்மையாகத் தேறினார். பிறகு சென்னையை அடைந்து

மாகாணக் கல்லூரியிற் படித்து 1879-ஆம் ஆண்டில் பி. ஏ. தேர்வில் வெற்றிபெற்றார். இரசாயன நூலிலும், பூத நூலிலும் சென்னை மாகாணத்திற்கே முதன்மையாகத் தேறியபடியால் ஆரணி பெருநிலக்கிழாரால் ஏற்படுத்தப் பெற்ற தங்கப்பதக்கத்தைப் பரிசாகப் பெற்றார்.

தொழில்

பிறகு சென்னையிற் புகழ்பெற்ற உயர்நீதிமன்ற வழக்கறிஞர் பாலாசிராயர் என்பவரிடம் வேலை கற்றுக்கொண்டார். பிறகு தம்மை வழக்கறிஞராகப் பதிவுசெய்து கொண்டு 1883-ஆம் ஆண்டுமுதல் தொழில்புரியத்தொடங்கினார். மதுரையைத் தமது இருப்பிடமாகக்கொண்டார். வழக்குவேலைபோக எஞ்சிய நேரங்களிலெல்லாம் புத்தகமும் கையுமாக இருந்து மேன்மேலும் கல்வி கற்றார். வழக்கறிஞராகத் தொழில்புரியத் தொடங்கியது முதல் தம்முடைய அறிவுக்கூர்மையாலும் ஊக்கத்தாலும் மிகு விரைவாகச் சிறந்த வழக்கறிஞர் என்று பெயர்பெற்றார். இவர் காலத்தில் இருந்த வழக்கறிஞர் எல்லோருக்குள்ளும் இவரே சிறந்து விளங்கினார். தம்முடைய ஊக்கக்குறைவால் எந்த வழக்கும் தோற்காதவாறு சொற்போரைத் திறமையாக நடத்தினார்.

குண நலங்கள்

இவர் மிகுந்த இரக்கம் உடையவர். பகைவர்களுக்குக் கூட இவர் தீமை செய்யமாட்டார். ஏழை எளியவர்கள் செல்வர்கள் எல்லோரிடத்திலும் ஒரே தன்மையாக நடந்துகொள்வார். எல்லோரும் பரப்பிரமத்தின் வடிவங்கள் என்னும் தெளிந்த அறிவுபடைத்தவர். இவருடைய இல்லம் உணவிடும் அறச்சாலையைப்போல் விளங்கியது. அந்தணர், அந்தணர் அல்லாதவர் என்று வேறுபாடு காட்

டாமல் எல்லோருக்கும் உணவிடுதலாகிய நல்லறத்தை நாள்தோறும் புரிந்துவந்தார்.

பொதுநலத்தொண்டு

பொதுநலத்தொண்டுகளிலும் இவர் மிகுதியாகப் பங்கெடுத்துக்கொண்டார். பிரமஞான மந்திரம் என்று மதுரையில் ஒரு சபையை ஏற்படுத்தினார். அதற்கு இடத்தையும் அமைத்தார். பலவகை நூல்களைத் தம் பொருட்செலவிலும், அன்பர்களுடைய ஆதரவிலும் வாங்கி நூல்நிலையம் ஒன்றை ஏற்படுத்தினார். மற்றும் பொது நன்மையான வேலைகள் பலவற்றில் ஈடுபட்டு உழைத்தார். மதுரைத் தாலுகாபோர்டு மெம்பராகவும் உதவித் தலைவராகவும் இருந்து பல ஆண்டுகள் நன்றாக உழைத்தார். புதிய பாதைகள் பலவற்றைப் போடச்செய்தார். புகைவண்டி நிலையத்திற்கு அண்மையில் உள்ள மங்கம்மாள் அறச்சாலைக்கட்டிட மாளிகைகள் இவருடைய முயற்சியால் கட்டப்பட்டவை என்று சொல்லுகின்றனர். பேரவைகள் பலவற்றிற் சொற்பொழிவுகள் செய்தலையும் மேற்கொண்டிருந்தார். இவருடைய அரியதொண்டுகளால் மதுரைமாநகர் மக்கள் பெரும்பயன் அடைந்தனர். எல்லாச் சமயங்களிடத்திலும் இவர் ஒப்பான நோக்கமுடையவர்.

உதவி

ஒரு சமயம் பாலசுப்பிரமணியபிள்ளை யென்பவர் மெயின் கார்டு தெருவில் சொற்பொழிவு செய்துகொண்டிருந்தார். அவர் கிறித்தவர்கட்குப் பகையுண்டாகுமாறு பேசிக் கலகம் உண்டாக்கினார் என்று போலீஸ்காரர்கள் அவரைக் கைதுசெய்து தொல்லைப்படுத்தினார்கள். அப்போது இவர் தலையிட்டு அவர் எத்தகைய தண்டனையையும் பெறாதவாறு உதவிசெய்து பாதுகாத்தார்.

நூல்கள்

தமிழ்மொழியிலும் தமிழ் நூல்களிலும் இவருக்கு மிகுந்த அன்புண்டு. தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி, திருக்குறள், திருமந்திரம் முதலிய நூல்களை நன்றாகக் கற்றுணர்ந்து அவைகளை நடைமுறைக்குங் கொண்டு வந்தார். மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் நடைமுறைக் கூட்டத்தில் ஒருவராக இருந்தார். தமிழ்ப்புலவர்களிடத்தில் பேரன்பு காட்டினர். ஆங்கிலத்தில் உள்ள நூல்கள் பலவற்றைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டார். வடமொழியினின்றும் பதஞ்சலி யோகசூத்திரம் என்னும் நூலைத் தமிழில் மொழிபெயர்த்து வெளிப்படுத்தினர். அடியில் வரும் நூல்களை இவர் ஆங்கிலத்தில் இருந்து மொழிபெயர்த்திருக்கிறார்.

1. சநாதன தர்மம்
2. பிராசீன தர்மங்களின் உயர்வும் இக்கால ஆசாரங்களும்
3. இந்துமத தாடணையின் பரிகாரம்
4. மனிதனின் வமிசாவளியின் உண்மை
5. அன்னிபெசன்ட் அம்மையார் சொற்பொழிவுகள்
6. ஒழுக்கமுறை நூல்
7. சர்வசமய ஐக்ய மத்ய சாரசங்கிரகம்
8. மௌன வாக்கு
9. சன்மார்க்க தீபம்
10. சன்மார்க்க முறையில் இதோபதேசம்

முதலியன.

பத்திரிகை

பூரண சந்திரோதயம் என்னும் பிரமஞான சபைத் தொடர்பான ஒரு பத்திரிகையையும் ஏற்படுத்தி அதற்கு ஆசிரியராக இருந்து பல கட்டுரைகள் எழுதி அந்தப் பத்திரிகையை மிகவுஞ் சிறப்பாக நடத்தினர்.

இவ்வாறு சிறந்து விளங்கிய இவர் 1914-ஆம் ஆண்டு சனவரித்திங்கள் இருபத்தைந்தாம்நாள் (பிரமாதீச ஆண்டு தைத்திங்கள் பன்னிரண்டாம்நாள்) இவ்வுலகவாழ்வைத் துறந்தார்.

---

## ௩௫. சீனி. கோவிந்தராசனார்

### தோற்றம்

சென்னை மாநகரில் மயிலாப்பூரிலே 1881-ஆம் ஆண்டில் கோவிந்தராசனார் பிறந்தார். தந்தையார் பெயர் வைத்தியர் சீனிவாச நாயகர். தாயார் பெயர் தாயார் அம்மாள்.

### கல்வி

கோவிந்தராசனார் செந்தோம் கல்லூரியில் ஆங்கிலத்தையும் தமிழையும் நன்கு பயின்றார். அக்கல்லூரியில் தமிழாசிரியராக இருந்த திருமலைப்புலவர் சண்முகம்பிள்ளையிடம் கல்லூரியிற் கல்விகற்றதன்றித் தனிப்பட்ட முறையில் இல்லத்திலுஞ் சென்று படித்தார். அந்நாளில் இவரோடு கா. நமச்சிவாயமுதலியார், சே. சிவஞானம்பிள்ளை ஆகியவர்களும் கல்வி பயின்றனர். சீனி. கோவிந்தராசனார் நுண்மாணுழைபுல மிக்காராக விளங்கினமையின் கல்விநலம் எளிதாகவுஞ் சிறப்பாகவும் கைவரப்பெற்றார். சங்கநூல்களையும் பிற்கால இலக்கியங்களையும் ஐயந்திரிபறக் கற்றுணர்ந்தார். பிறருக்குப் போதிக்குந் திறமும் இவரிடம் நன்கு அமைந்திருந்தது.

### கலைப்பணி

அந்நாளில் நடைபெற்ற கலாசிந்தாமணி என்னுந் திங்கள் வெளியீட்டில் பல கட்டுரைகளையுஞ் செய்யுட்களை

யும் எழுதினர். முல்லைகொடி, இளவேனிற்பத்து முதலிய கட்டுரைகள் பலராலும் போற்றப்பெற்றன. இவர் இயற்றிய நூல்கள் திருக்குறள் நாடகம், மயிலை நான்மணி மாலை முதலியன.

“நேயம் நின்கணே தோய வைத்திலேன்
நெஞ்சம் வஞ்சியர் தஞ்சம் மிக்குளேன்
தீய நாவினேன் தூய நல்லவர்த்
தீங்கு செய்துளேன் ஆங்கு மெய்யெலாம்
நோய தாயினேன் தாய நின்னலால்
நொய்ய யாரையும் ஐய என்றிலேன்
பாய வேலைசூழ் மயிலை எம்பிரான்
பாவி யேனையும் கூவிக் கொள்வையோ”

என்பது இவர் இயற்றிய மயிலை நான்மணிமாலையில் ஒரு செய்யுள்.

வ. உ. சி.க்கு வாழ்த்து

வ. உ. சிதம்பரம்பிள்ளை திருக்குறள் மணக்குடவர் உரையை அச்சிட்டு வெளிப்படுத்தியபோது இவர்,

“ஒப்புரவு செய்தொழுகும் உண்மைச் சிதம்பரனே!
இப்புவியிற் சால இசைபூண்டோய்—செப்புகதிர்
ஆயிரவன் போன்றுபல ஆண்டுநனி பூண்டுலகில்
வாழியரோ செல்வமெலாம் வாய்ந்து.”

என்னும் வாழ்த்துச் செய்யுளை எழுதியனுப்பினர்.

இறுதி

நூல் இயற்றும் ஆற்றல்வாய்ந்த இவர், நீணாள் இவ்வுலகில் வாழ்ந்திராமல், தமது முப்பத்தேழாவது அகவையிலேயே 1918-ஆம் ஆண்டில் இவ்வுலக வாழ்வைத் துறந்தார்.

## ௩௯௯. ஆலாலசுந்தரம் பிள்ளை

தோற்றம்

சித்தாந்த போதரத்நாகரம் ஆலாலசுந்திரம் பிள்ளை காஞ்சிபுரத்திலே 1853-ஆம் ஆண்டில் பிறந்தார். இவருடைய தந்தையார் அமிர்தாநந்தர்.

கல்வி

பள்ளிக் கல்வியைப் பயின்றபின் ஆலாலசுந்தரர், அச்சுதாநந்தர் என்பவரிடம் இலக்கண இலக்கியங்களைப் பயின்றார். இந்த அச்சுதாநந்தர் பிறந்த காலத்திலே ஏகாம்பர சிவயோகிகள் எனப் பெயர்பெற்று விளங்கினார். இவரிடம் ஆலாலசுந்தரர் வடமொழியையுந் தமிழ்மொழியையுங் கற்றதோடு சமய நூல்களையும் நன்கு கற்றார். இவரோடு வைதிக சைவ சித்தாந்த சண்டமாருதம் சோமசுந்தர நாயகரும் சமய நூல்களைக் கற்றார். ஆலாலசுந்தரரும் சோமசுந்தர நாயகரும் நெருங்கிய நண்பர்களாக

சமயத்தொண்டு

ஏகாம்பர சிவயோகிகள் காலஞ்சென்றபிறகு ஆலாலசுந்தரர் நாடெங்குஞ்சென்று சைவசமயச் சொற்பொழிவுகள் செய்தார். இவர் இந்தப் பணியைத் தமது வாணாள் முழுவதும் செய்தார். இதனால் சைவ நன்மக்களாலும் சைவ மடாதிபதிகளாலும் நன்கு மதிக்கப்பட்டார். சொற்பொழிவுகள் செய்ததன்றிச் சமயத்தொடர்புள்ள நூல்களையும் எழுதி வெளியிட்டார்.

செந்தமிழ்ப்பணி

இவர் தமது வாணாள் முழுமையையும் சமயப் பணிக்கும் தமிழ்ப்பணிக்குமே உரிமையாக்கினார். இவரால் உரை

யெழுதப்பட்ட நூல்களும் மொழிபெயர்க்கப்பட்ட நூல்களும் இயற்றப்பட்ட நூல்களும் பல.

இயற்றிய உரைகள்

1. பெரியபுராண விருத்தியுரை
2. காஞ்சிபுராண உரை
3. திருப்போரூர்ச் சந்நிதிமுறை உரை
4. திருவுந்தியார் உரை
5. திருக்களிற்றுப்படியார் உரை

மொழிபெயர்ப்பு நூல்கள்

6. தேவீ பாகவதம்
7. காமாட்சி லீலாப்பிரபாவம்
8. சாதாக்கியம் (வடமொழிக் காஞ்சிப்புராணம்)

இயற்றிய நூல்கள்

9. ஆசாரியப் பிரபாவம்
10. சிவஞானபோத நுட்பம்
11. பகவத் கீதாசாரம்
12. ஞானவாசிட்டத் தெளிவு
13. சிவஞானபோதக் கருத்துரை
14. காஞ்சி க்ஷேத்திரமஞ்சரி

முதலியன.

ஞானபானு

ஞானபானு என்னும் பத்திரிகையைத் தொடங்கி, அதிற் சைவ சமயக் கட்டுரைகள் பலவற்றை எழுதிப் பத்திரிகைத் தொண்டுஞ் செய்தார்.

இறுதி

இவர் சென்னை வேப்பேரி ரண்டால்ஸ் ரோட்டில் ஓர் இல்லத்தில் வாழ்ந்திருந்து 1923-ஆம் ஆண்டில் காலமானார். அப்பொழுது, திரு. வி. கலியாணசுந்தரர், யாழ்ப்

பாணம் சுவாமிநாத பண்டிதர். தூத்துக்குடி பொ. முத்தைய பிள்ளை, முத்தமிழ் ரத்நாகரம் பாநுகவிமணி, திருநாவுக்கரசு முதலியார் முதலிய பல அன்பர்கள் இரங்கற்பாப் பாடி வருந்தினர். இவருடைய உடல் திருவொற்றியூரில் அடக்கஞ்செய்யப்பட்டது. திரு. வி. க. இரங்கற்பாவில் ஒன்று:

"ஆலால சுந்தரனே அகன்றான் அம்மா!
அருணெறிக்குப் பலரிலையே அந்தோ! இங்கே,
பாலாறு வளஞ்சுரக்கும் பதியில் வந்தோய்!
பாழான நாத்திகமே பரவும் இந்நாள்
மாலாலும் உலகமென மதிக்க லாலோ
மாதேவன் திருவடியே மனத்திற் கொண்டு
நூலாயும் பெரியோனே நோக்கி நின்றோர்
நோயுணர்ந்தும் பிரிவுற்றாய் நுவல்வ தென்னே."

என்பதாகும்.

## ௧௭. பானுகவி அடிகள்

### தோற்றம்

மலையாள நாட்டிலே திருமலை என்னும் ஊரிலே மாலைகட்டிகள் என வழங்கும் சைவ மரபிலே அட்சய ஆண்டில் பானுகவியடிகளார் தோன்றினார். தந்தையார் பெயர் சிவஞானம். தாயார் பெயர் பார்வதியம்மையார்.

### தந்தையார்

பானுகவியார் பிறப்பதற்குச் சில தினங்களுக்கு முன்னர், தந்தையாராகிய சிவஞானம் கங்கையிற் படியவும் உலகநாதக்கடவுளைப் போற்றவும் எண்ணினார். புறப்பட்டு வடநாடு சென்றார். சென்றவர் காசியிலும் பிறவிடங்களிலும் அதிகநாள் சுற்றிக்கொண்டிருந்தமையால் ஆண்டுகள் பல சென்றுவிட்டன. "ஊரைவிட்டுப் புறப்பட்டுச் செல்ப

வர்கள் இவ்வளவு காலத்துக்குள் மீண்டும் ஊருக்கு வந்து சேர்தல் வேண்டும்; அவ்வாறு வராமல் கடந்துவந்தால் ஊரார்கள் அவரை ஏற்றுக்கொள்வதில்லை." என்னுங் கட்டுப்பாடு அந்நாளில் இருந்தது. சிவஞானம் குறிப்பிடப் பட்ட கால எல்லைக்குள் ஊருக்குவந்து சேர்ந்திலர். காலங் கடந்துவந்த அவர் ஊருக்குச் செல்லமுடியாத நிலைமை யேற்பட்டது. ஆகவே, அவர் மலையாள நாட்டிற்குச் செல் லாமல் தமிழ்நாட்டிற்கு வந்தார். தொண்டைநாட்டில் மலைபடுகடாத்தால் புகழப்பெற்ற சேயாற்றங்கரையில் உள்ளதும், திருஞானசம்பந்தப் பெருமானால் ஆண்பனை யைப் பெண்பனையாக்கப்பெற்ற பெருமை வாய்ந்ததும், இந் நாளில் வடஆர்க்காடு மாவட்டத்தில் செய்யாறு என்னும் தாலுகாவின் தலைநகராக விளங்குவதும் திருவத்திபுரம் என்னும் பெயர் கொண்டுள்ளதுமாகிய திருவோத்தூரை யடைந்தார். அங்கு அன்பர்களுடைய ஆதரவில் தங்கி யிருந்தார்.

### பானுகவியார்

தந்தையார் ஊரில் இல்லாதபோது பிறந்த பானுகவி யார் தாயாருடைய அன்பிலும் ஆதரவிலும் வளர்ந்தார். சில ஆண்டுகளில் தாயார் மறைந்தார். பிறகு பானுகவியார் தந்தையாரோடு பிறந்த அத்தையாரின் ஆதரவில் வளர்ந் தார். நாளடைவில் கங்கையாடச்சென்ற தந்தையார் திரும்பி வரவில்லையென்பதை உணர்ந்தார்.

### தந்தையைத் தேடிப்புறப்படுதல்

பானுகவியார் தம்முடைய பதினாறுவது அகவையில் தந்தையாரைத் தேடிப்புறப்பட்டார். பலவிடங்களினும் தேடிக்கொண்டு தமிழ் நாட்டிற்கு வந்தார். திருவண்ணா மலையை அடைந்து அங்குள்ள ஈசானமடத்தில் தங்கினார்.

அங்கு அப்பொழுது மகாதேவ அடிகள் என்னும் பெரியார் மடத்துத் தலைவராக அமர்ந்திருந்தார். இரண்டாண்டுகள் வரை அங்குத் தங்கி அப்பெரியாரிடம் வேதாந்த நூல்கள் பலவற்றைப் பாடங்கேட்டறிந்தார், திருவண்ணாமலைக்குக் கார்த்திகைத் திருவிழாவின்பொருட்டு வந்தவர்கள் மூல மாக மலையாளத்துச் சாமியார் ஒருவர் திருவோத்தூரில் இருக்கிறார் என்று உணர்ந்தார். உடனே புறப்பட்டுத் திருவோத்தூரை அடைந்தார். பானுகவியார் மலையாள நாட்டைவிட்டுப் புறப்பட்டுப் பத்து ஆண்டுகள் கழிந்

தந்தையும் மைந்தனும்

திருவோத்தூரையடைந்த பானுகவியார் மலையாளத் துச் சாமியாரைப் போய்ப்பார்த்தார். இருவரும் ஒருவரை யொருவர் உசாவி உணர்ந்துகொண்டனர். அப்பொழுது அவர்களிருவரும் அடைந்த மனநிலையை நாம் மனதினால் தான் ஊகித்துணர்ந்துகொள்ளுதல் வேண்டும். இருவரும் அவ்விடமே களிப்புடன் தங்கியிருந்தனர். தந்தையும் மைந்தனும் ஒன்றுகூடியிருக்குஞ் செய்தியைப் பானுகவி யாரின் அத்தையும் அத்தை கணவரும் அறிந்தனர். இவர் களை ஊருக்கு அழைத்துக்கொண்டுபோய்ச் சேர்க்க எண்ணித் திருவோத்தூருக்கு வந்தனர். இருவரையும் வற் புறுத்தி அழைத்தனர். இருவரும் மலையாளநாடு சேறலை விரும்பவில்லை. வரமுடியாதென்று மறுத்துவிட்டனர். திருவோத்தூரிலமைந்த திருநாவுக்கரசு சுவாமிகள் திரு மடத்திலேயே தங்கித் தமிழர்களாகவே வாழமுடிவுசெய்து விட்டனர். உறவினர்கள் இவர்கள் இனிமேல் மலையாள நாட்டிற்கு வாரார்கள் என்பதை அறிந்து மேலும் வற்புறுத் தாது விட்டுவிட்டனர்.

பானுகவியார் கல்வி

பானுகவியார்க்கு இலக்கண இலக்கிய அறிவு பெருக வேண்டுமென்று தந்தையாராகிய சிவஞான அடிகள் எண்ணினார். சில இலக்கியங்களைத் தாமே கற்பித்தார். சிதம்பரத்திற்கு அனுப்பி அங்கிருந்த ஓர் அறிஞரிடம் மேலுஞ் சில இலக்கண இலக்கியங்களைக் கற்றுணரச் செய்தார். பானுகவியார் தந்தையாரைப் பார்ப்பதற்கு முன்பே பொள்ளாச்சியில் சிவன் பிள்ளை என்னும் அறிஞர்பால் பிங்கல நிகண்டினைப் பிழையறக் கற்றிருந்தார். இத்தகைய கல்விப் பயிற்சியால் பானுகவியார் தமிழ்ப் புலமையைப் பெற்றார். திருவோத்தூருக் கடுத்த எச்சூர் என்னும் ஊரில் இருந்த வடமொழி அறிஞர் ஒருவரிடம் வடமொழி நூல்கள் பலவற்றையுங் கற்கச் செய்தார். கேசவ பிள்ளை என்பவரிடம் சிவப்பிரகாசத்தைக் கற்கச் செய்தார். இவ்வாறு பலவகையானுந் தந்தை மகற் காற்றவேண்டியதை யாற்றிய சிவஞான அடிகள் கீலக ஆண்டில் தைத் திங்கள் ஒன்பதாம் நாளில் இறைவன் திருவடிநீழலை யெய்தினார்.

தமிழ்த் தொண்டு

பானுகவியார் தந்தையின் உடலைச் சமாதி வைத்துப் போற்றி வழிபடலானார். மாணவர் பலரைச் சேர்த்து அவர்கட்கு இலக்கண இலக்கியங்களைப் போதித்து அவர்களுடைய மனவிருளைப் போக்கினார். இருளைப் போக்குதல் பானுவுக்கு இயற்கையன்றோ? மற்றும் பழந்தமிழ் நூல்கள் பலவற்றிற்குப் புத்துரை எழுதினார். புதிய செய்யுள் நூல்கள் சிலவற்றை இயற்றினார்.

சென்னையில்

பிறகு சென்னையை அடைந்து அங்குத் தங்கினார். அங்கு அப்பொழுது நடத்தப்பெற்ற பிரபஞ்சமித்திரன்

என்ற பத்திரிகையின் ஆசிரியராகப் பல ஆண்டுகள் பணி புரிந்தார். நா. கதிரைவேற் பிள்ளை, சோமசுந்தர நாயகர், சுப்பராய நாயகர், திரு. வி. கலியாணசுந்தரர், அப்பாவு செட்டியார், தங்கவேலுச் செட்டியார் முதலிய அறிஞர் களோடு தொடர்பு கொண்டார். அருட்பாவை மருட்பா வென்று கதிரையார் தொடங்கிய மருட் போரில் பங்கு கொண்டார்.

மீண்டும் திருவோத்தூரில்

சென்னையிற் சிலகாலம் வாழ்ந்திருந்த பானு கவியார் மீண்டுந் திருவோத்தூரை யடைந்தார். மாணவர்கட்குப் பாடஞ்சொல்லுதல் நூல்இயற்றல் முதலிய செயல்களை மேற்கொண்டார். இவருடைய பார்வையில் பதிப்பிக்கப் பட்ட நூல்கள் நல்ல முறையில் வெளியாயின.

மலையாள நாட்டில் தோன்றிய இவர் தமிழ்நா யடைந்து தமிழ்த்தொண்டு செய்து தமிழை வளர்த்த திறம் பெரிதும் போற்றத்தக்கது. இவ்வாறு தமிழ்த் தொண்டு செய்திருந்த இப் பெரியார் 1926-ஆம் ஆண்டில் (குரோதன ஆண்டு பங்குனித் திங்கள் ஏழாம்நாள்) வீடு பேற்றை யடைந்தார். பானுகவியாரின் உடல் அவருடைய தந்தையார் சமாதியை அடுத்து அடக்கம் செய்யப்பெற்றது.

இவர் இயற்றிய நூல்கள்

செய்யுள்

1. சக்தித் திருப்புகழ்
2. இளமுலையம்மை பிள்ளைத்தமிழ்
3. திருவோத்தூர் இரட்டைமணிமாலை
4. திருமாற்பேறு புராணம்
5. திருவோத்தூர் நான்மணிமாலை

6. திருவோத்தூர் மும்மணிக்கோவை
7. இராமாயண நங்கைப்பாட்டு

உரைநடை

ஞானவச்சிர குடாரம்
9. விநாயக பராக்கிரமம்
10. சிவ பராக்கிரமம்
11. அநுமத் பராக்கிரமம்
12. நியாய வச்சிரகுடாரம்
13. விடோபாசாமி சரிதம்
14. காம சாத்திரம்
15. பகவ;
16. கர்ப்ப சம்ரட்சணை

உரைகள்

17. கந்தபுராணம் கலாபூடண உரை
18. திருவிளையாடல் அரும்பதக் குறிப்புரை
19. மகாராசா துறவு உரை

முதலியன பானுகவியார் நூல்களாம். இவற்றுள் சில அச்சேறின. சில அச்சேறாமல் கையெழுத்துப் பிரதியாக உள்ளன.



கழக வெளியீடு: ௮௨௧

# தமிழ்ப் புலவர் வரிசை

[பன்னிரண்டாம் புத்தகம்]

யர் :

திரு. சு. அ. இராமசாமிப் புலவர்

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
:: சென்னை-1.

# பதிப்புரை

முன்னேற்றத்தை விரும்பும் நாடுகள் எல்லாம், தத்தம் நாட்டுப் புலவர்கள் செய்தருளிய தாய்மொழி நூல்களை விரும்பிப் படித்தலும் படிப்பித்தலும் செய்கின்றன.

அத்துடன், அப் புலவர்கள் வரலாற்றைச் செம்மையுடன் உணர்ந்து அவர்தம் அறிவு, ஆண்மை, அன்பு, ஒழுக்கம், தந்நலமின்மை, தாய்மொழிப் பற்று, எல்லாருக்கும் உதவுதல், விடா உழைப்பு, அஞ்சாமை, வாய்மை, கடமை முதலிய நற்பண்புகளை மேற்கொண்டு நடத்தி நற்பயன் பெறுகின்றன.

அம்முறையில் நம்நாட்டுப் புலவர் பெருமக்கள் வரலாறுகளையும், அவர்கள் செய்தருளிய நூல்களையும் மாணுக்கர் இளமையிலேயே கற்று அதன்படி ஒழுகுவது, நாட்டுக்கும், மொழிக்கும் செய்யும் நல்தொண்டாகும் எனக் கருதித் **தமிழ்ப் புலவர் வரிசையில்** இதுகாறும் பதினெரு நூல்கள் வெளியிட்டுள்ளோம். உங்கள் கையில் மலரும் இந்நூல், இவ்வரிசையில் பன்னிரண்டாம் புத்தகமாகும்.

இதன்கண் கோ. வடிவேல் செட்டியார் முதல் நூலியன் வின்சோன் ஈறாக உ௪ புலவர் பெருமக்கள் வரலாறுகளும், ஆங்காங்கு அவ்வப் புலவர் பெருமக்கள் யாத்த பாடல்களும், உள்ளுறை நயங்களுடன் செவ்விய இனிய எளிய நடையில் எழுதப்பெற்றிருக்கின்றன.

இதனை எங்கள் விருப்பத்தின்படி ஆக்கித்தந்த **திரு. சு. அ. இராமசாமிப் புலவர்** அவர்களுக்கு எங்கள் நன்றி உரித்தாகுக.

இதனையும் முதல் பதினெரு புத்தகங்கள் போலவே ஆசிரியர்களும், மாணுக்கர்களும், பொதுமக்களும் வாங்கிக் கற்றும் கற்பித்தும் புலவர் பெருமக்களுக்குச் செய்யும் கடப்பாட்டினைச் செய்து எங்களையும் ஊக்குவார்களாக.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# உள்ளுறை

# தமிழ்ப் புலவர் வரிசை

## [பன்னிரண்டாம் புத்தகம்]

### க. கோ. வடிவேல் செட்டியார்

தோற்றம்

இலக்கண இலக்கிய தருக்க வேதாந்த போதகாசிரியர் என்னுஞ் சிறப்புப் பெயருடன் விளங்கிய வடிவேல் செட்டியார் சென்னையிலுள்ள கோமளேசுவரன் பேட்டையில் 1863-ஆம் ஆண்டில் பிறந்தார். தந்தையார் பெயர் சுப்பராய செட்டியார், தாயார் பெயர் தனகோடி அம்மையார்.

கல்வி

வடிவேலர் ஐந்தாம் அகவையில் பள்ளியில் வைக்கப்பட்டார். பத்தாவது அகவைவரையில் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் கல்விபயின்றார். வாணிகம் கைத்தொழில் முதலிய தொழின்முறைக் கல்வியை ஒருவாறு கற்றுக் கொண்ட வடிவேலர் பன்னிரண்டாம் அகவை முதற் கொண்டு இருபத்தாறும் அகவை வரையில் குலத்தொழிலாகிய வாணிபத்தில் ஈடுபட்டார். பலசரக்குக் கடை வைத்து வாணிகம் நடத்தினர்.

புலமைக்கல்வி

வாணிபத்தில் ஈடுபட்டிருக்கும் நாளையில் புலமைக் கல்வியைக் கற்றுச் சிறப்படையவேண்டும் என்னும் எண்ணம் இவருக்குண்டாகியது. இராமானுச நாயகர் என்னும் அறிஞரிடம் கல்விகற்கத் தொடங்கினார். அவரிடம் ஏழு ஆண்டுகள்வரை இலக்கண இலக்கியங்களைக் கருத்துடன் பயின்றார். பிறகு பெரும்புலவர் காஞ்சி இராமசாமி நாயுடு, மயிலை அறிஞர் சண்முகம்பிள்ளை ஆகியவர்களிடம் பல நூல்களைக் கற்றார். அந்நாளில் சென்னையில் புகழ் பெற்று விளங்கியவரும் வேதாந்தம் தருக்கம் ஆகிய நூல்களிற் சிறந்த புலமை பெற்றவரும் சென்னை ரிப்பன் அச்சுக் கூடம் என்னும் பதிப்பகத்தைத் தொடங்கி நடத்தியவருமாகிய சாது இரத்தின செட்டியாரிடம், பன்னிரண்டு ஆண்டுகள்வரை கூடப்பழகி வேதாந்த நூல்களையும் தருக்க நூல்களையும் நன்கு கற்றுத் தேறினார்.

37 ஆண்டுகள் வேலை

சென்னையிற் புகழ்பெற்று விளங்கும் இந்து தியலாஜிகல் உயர்நிலைப்பள்ளியில் முப்பத்தேழு ஆண்டுகள் தமிழாசிரியராகத் தொழில் புரிந்தார். ஒரே இடத்தில் இவ்வளவு ஆண்டுகள் தொடர்ந்து வேலைசெய்தவர்களை நாம் காண்பது அருமை. செட்டியார் இவ்வாறு தொடர்ந்து ஆற்றிய பணியைப் பாராட்டிப் பள்ளியதிகாரிகள் அவருக்கு வாணாள்வரை உதவிப்பொருளும் வழங்கினர்.

கலைத்தொண்டு

செட்டியார் பள்ளிவேலையோடு தமது கடமை தீர்ந்த தென்று ஓய்ந்திருக்கவில்லை. பள்ளிக்கு வெளியிலே செட்டியார் செய்த வேலைதான் அரிய கலைத்தொண்டாகியது. திருக்குறள் பரிமேலழகர் உரைக்கு விளக்க

வுரை எழுதிப் பதிப்பித்து வெளியிட்டார். கைவல்ய நவநீதம், வேதாந்த சூடாமணி முதலிய வேதாந்த நூல்களை உரைநடையாக எழுதிப் பதிப்பித்து வெளியிட்டார். நாஞசிவவாதக் கட்டளை என்னும் நூலுக்குக் குறிப்புரை எழுதிப் பதிப்பித்தார். 'சிவப்பிரகாசப் பெருந்திரட்டு' என்னும் நூலுக்கு உரையெழுதினார். 'காரைக்காலம்மையார்' வரலாற்றைப் புனிதவதியார் என்னும் பெயரோடு ...ிய நாடகமாக எழுதி வெளியிட்டார்.

லோகோபகாரி

லோகோபகாரி என்னும் கிழமைப் பத்திரிகையை 1911-ஆம் ஆண்டு முதல் பத்தாண்டுகள் வரையில் சிறந்த முறையில் நடத்தினார். உலகச் செய்திகள் பலவும் லோகோபகாரியில் வெளியானதோடு செட்டியார் வேதாந்தக் கட்டுரைகள் பலவற்றையும் எழுதிவெளிப்படுத்தினார். பிறகு அக்கட்டுரைகள் நூல்வடிவமாக வெளிப்படுத்தப்பட்டன. சக்கரவர்த்தினி என்னுந் திங்கள் வெளியீட்டையும் ஐந்தாறு ஆண்டுகள்வரை நடத்தினார். சச்சிதானந்த அச்சுக்கூடம் என்னும் பெயரோடு அச்சுக்கூடம் ஒன்றை அமைத்திருந்தார். லோகோபகாரிப் பத்திரிகை அந்த அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டதன்றி வேதாந்த சித்தாந்த இலக்கண இலக்கிய நூல்கள் பலவும் செட்டியாருடைய பார்வையில் அழகாகவும் திருத்தமாகவும் வெளிப்படுத்தப் பட்டன.

பொதுத்தொண்டு

பல இடங்களில் செட்டியார் வேதாந்த சங்கங்களை அமைத்து அங்கு வேதாந்த பாடங்கள் நடத்தினார். வேதாந்தச் சொற்பொழிவுகளையும் அன்பர்கள் விரும்பிய இடங்களில் ஆற்றினார். செட்டியாரிடத்தில் வேதாந்த நூல்

களைப் பாடங்கேட்டுச் சிறந்தவர்கள் பலர். பேராசிரியர் தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர், புலவர் ச. கந்தசாமி முதலியார், மொ. க. துரையரங்கனுர் முதலியோர் செட்டியாரிடம் பாடங்கேட்டவர்களிற் சிலராவர்.

திருமணம்

தகுந்த காலத்தில் செட்டியாருக்குத் திருமணம் நடைபெற்றது. வாழ்க்கைத் துணைவியாக அமைந்த அம்மையாரின் பெயர் பூங்காவனம். நான்கு பெண் மக்களும் ஓர் ஆண்மகனும் செட்டியாருக்கு மக்கட்பேருக உண்டாயினர்.

தமிழ் ஞாயிறு

வடிவேல் செட்டியாரிடத்திலே, திரு. வி. கல்யாண சுந்தரனுர் அவர்கட்குப் பெருமதிப்புண்டு. செட்டியாரைத் தமிழ் ஞாயிறு என்று திரு. வி. க. குறிப்பிட்டுள்ளார். "இத்தமிழ் ஞாயிறு இலக்கியம், இலக்கணம், தருக்கம், வேதாந்தம், பொதுமை, ஒழுக்கம், ஒப்புரவு முதலிய கதிர்கள் கான்றிய வண்ணமாயிருந்தது. ஒருவிதக் கலையில் பலர் புலவர் ஆகலாம். பலவிதக் கலையில் பலர் புலவராதல் அருமை. மிகச்சிலரே பல்கலைப் புலவராகின்ருர். அப்பேறு அறிஞர் வடிவேல் செட்டியார்க்கு வாய்த்திருந்தது. செட்டியார் பலகலைப் புலவர். கலைகள் செட்டியார் உள்ளத்தில் ஒன்றி, அவர்தம் உள்ளமாய், ஊனுய், உடலாய்ப் பரிணமித்திருந்தது. கலைகளே செட்டியார்; செட்டியாரே கலைகள். செட்டியார் ஒரு பல்கலைக் கழகம்போல் விளங்கினர்." என்று திரு. வி. க. புகழ்ந்து போற்றியுள்ளார்.

சொற்போர்வீரர்

செட்டியார் காலத்தில் சென்னையில் இருந்த புலவர்கள் செட்டியாரையே தலைமைப் புலவராக மதித்திருந்தனர்.

செட்டியாரோடு சொற்போரிடுதற்கு எவருந் துணியார். துணிந்து சொற்போரிடுவாராயின் தோல்வியுறுவது திண்ணம். யாழ்ப்பாணம் நா. கதிரைவேற்பிள்ளை, திருவருட்பிரகாச வள்ளலார் இராமலிங்க அடிகளின் அருட்பாவை மருட்பா என்றிகழ்ந்து வீணுகத் தூற்றிக்கொண்டு திரிந்த காலத்தில், செட்டியார் பேரவையொன்று கூட்டினர். தம் எண்ணத்தை எடுத்துக் கூறுமாறு கதிரைவேலரை வடிவேலர் அழைத்தார். கதிரைவேலர் செட்டியாருடைய கண்ணுக்கு அகப்படாது மறைந்து போனர். வேறுபல புலவர்களுடைய அவையிலும் செட்டியார் சென்று அவர் தங் கூற்றைக் கண்டிப்பான் புகுந்தபோது அப்புலவர்கள் எதிர்த்துச் சொற்போரிடாது ஓடிப்போயினர்.

குண நலன்கள்

செட்டியார் தமது வாணுள் முழுமையும் செந்தமிழ்ப் பணிக்கே பயன்படுத்தினர். பெரும் புலவராக இவர் விளங்கியதற்கேற்பக் குணநலன்களும் பெருந்தன்மையமைந்தனவாகவே விளங்கின. எவரையும் வலியச் சென்று சொற்போருக்கு இழுக்கமாட்டார். பகைவர்களிடத்திலும் நட்பு முறையிலேயே நடந்து கொள்ளுவார். வேதாந்த நூற்கல்வியை ஏட்டளவில் வைத்திராமல் நடைமுறையிலுங் கடைப்பிடித்தார்.

இறுதி

சிறந்த செந்தமிழ் வாணராக விளங்கிய இப்பெரியார் தமது எழுபத்துமூன்றும் அகவையில் 1936-ஆம் ஆண்டில் வீடுபேற்றையடைந்தார்.

இவர் இயற்றிய நூல்கள்

1. திருக்குறள் பரிமேலழகர் உரை விளக்கம்
2. கைவல்ய நவநீத உரைநடை

3. வேதாந்த சூளாமணி உரைநடை
4. மகாராசா துறவு உரைநடை
5. வியாசபோதினி இரண்டுபகுதி
6. புனிதவதி நாடகம்
7. மெய்ஞ்ஞானபோதம்
8. பிரமஞானோபதேசம்
9. சிவப்பிரகாசப் பெருந்திரட்டு உரை
10. பகவத்கீதை வசனம்
11. நானுசிவவாதக் கட்டளைக் குறிப்புரை
12. கட்டளைச் சங்கை நிராகரணம்
13. குசேலோபாக்கியான வசனம்
14. சித்தாந்தபிந்து மொழிபெயர்ப்பு
15. தருக்கபரிபாடை
16. சிவஞானபோதம் உரை

மற்றும் பல.

இவர் உரையெழுதிய நூல்கள் சில இவருடைய மாணவர்கள் பெயராலும் வெளியாகியுள்ளன.

## உ. தில்லைநாயக முதலியார்

### தோற்றம்

தில்லைநாயக முதலியார் என்பவர் சிதம்பரம் என வழங்கும் திருத்தில்லையிலே, (1876-ஆம் ஆண்டு) தாது ௵ ஐப்பசி ௴ 30-ஆம்தேதி தோன்றினார். தந்தையார் பெயர் வெல்லப்பிறந்தான் முதலியார்.

இவர் பள்ளிக் கல்வியைப் பயின்று முடித்தபின் ஈசானிய மடம் இராமலிங்க அடிகளிடத்திலே இலக்கண இலக்கியங்களை வரன்முறையாகக் கற்றுத்தேறினார்.

தமிழ்த்தொண்டு

தமிழ்க்கல்வியை நன்கு கற்றுத்தேறிய இவர் சைவத்திற்குந் தமிழுக்குந், தக்கவாறு இளமையிலிருந்தே தொண்டு செய்தார். பல சங்கங்களினும் அவைகளினும் அரிய சொற்பொழிவுகள் பல செய்தார். திருத்தில்லையில் செந்தமிழ்ச் சங்கம் என்னும் பெயருடன் தமிழ்க்கழகம் ஒன்றை ஏற்படுத்தி, அதன் துணைத்தலைவராக இருந்து மாணவர் பலருக்குக் கல்வி போதித்தார். நாவலர் சைவப்பிரகாச வித்தியாசாலையில் புலவர் வகுப்பில் நாள்தோறும் இரண்டு மணி நேரம் வரையில் ஊதியம் பெறாமல் பாடஞ் சொல்லி வந்தார். சென்னை அரசினரால் ஏற்படுத்தப்பட்ட தமிழ் அகரவரிசைக் குழுவில் உறுப்பினராகவும் இருந்தார்.

மாணவர்கள்

இவரிடம் கல்விகற்றுத் தேறிய மாணவர்கள், திருநாரையூர் முத்துக்குமரபிள்ளை, வேலூர் ஊர்கீஸ் கல்லூரித் தமிழாசிரியர் சி. எஸ். இராசாப்பிள்ளை, காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் ஏகாம்பர ஐயர், நாவலர் கல்லூரி ஆசிரியர்களான வேங்கடாசலம்பிள்ளை, கிருட்டிணமூர்த்தி ஐயர், உடன்குடி, புகழ். முத்துச்சாமிப் பிள்ளை முதலிய பலராவர். தம் குடும்பத்து முன்னோர்களைப் போலவே தில்லைநாயக முதலியாரும் புலவர்களையும் அடியார்களையும் அன்போடு ஆதரித்து வள்ளன்மையையும் மேற்கொண்டு விளங்கினர்.

இவர் இயற்றிய நூல்

செய்யுள் செய்வதிலும் வல்லவராக விளங்கிய இவர் திருத்தில்லையில் எழுந்தருளிய முருகக்கடவுள்மீது, "குமரவேள் மும்மணிக்கோவை," என்னும் அரிய சித்தாந்தக்

கருத்துக்கள் அடங்கிய நூல் ஒன்றை இயற்றினர். இந் நூல், திருவாங்கூர் பொன்னம்பலம்பிள்ளை, உ. வே. சாமிநாதையர், திருப்பாதிரிப்புலியூர் ஞானியாரடிகள் முதலிய பலருடைய பாராட்டைப்பெற்றது.

"ஏற்றிவர் எம்மான் குமாரன் முருகன் எழிற்புலிசை
மாற்றுயர் பொன்னம் பலமிட மாஞேன் வளர்மொழியின்
பாற்றரு வள்ளி மணாளன் திருத்தகு பாதமலர்
போற்றி வணங்கிலெ நெஞ்சே உனக்கெவர் போதிப்பரே."

என்பது அந் நூலில் உள்ள ஒரு செய்யுளாகும்.

இறுதி

இவர், 1917-ஆம் ஆண்டு அக்டோபர்த்திங்கள் பத்தாம் நாள் (பிங்கள ஆண்டு புரட்டாசித்திங்கள் உ௫-ஆம் நாள்) தமது நாற்பத்தொன்றும் அகவையில் இவ் வுலக வாழ்வைத் துறந்து இறைவன் திருவடி நீழலை அடைந்தார்.

---

## ௩. சிவஞானம் பிள்ளை

பிறப்பு

சே. சிவஞானம் பிள்ளை 1871-ஆம் ஆண்டில் சென்னை மயிலாப்பூரிலே பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் வெள்ளியம்பல உபாத்தியாயர். வெள்ளியம்பல உபாத்தியாயர் திறமைவாய்ந்த புராணச் சொற்பொழிவாளராகவும் தமிழ்ப் புலவராகவும் விளங்கினர்.

கல்வி

சிவஞானம் பிள்ளை தமது இளமையிலேயே தமிழ் நூல்களையும் சமய நூல்களையும் தம் தந்தையாரிடம் ஓதி யுணர்ந்தார். இவரோடு இவர் தந்தையாரிடங் கல்வி கற்றவர்களில் கா. நமச்சிவாய முதலியாரும் ஒருவர். தந்தையா

ராகிய வெள்ளியம்பல உபாத்தியாயர் காலஞ்சென்றபின், சிவஞானம் பிள்ளையும் நமச்சிவாய முதலியாரும் திருமயிலை வித்துவான் சண்முகம் பிள்ளையிடத்திலும், பிறகு காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு இடத்திலும் பல நூல்களைப் பாடங்கேட்டார்கள்.

### அரசாங்க அலுவல்

பிறகு சிவஞானம் பிள்ளை அரசாங்கக் கல்விப் பிரிவில் எழுத்தாளராக அமைந்தார். 1926-ஆம் ஆண்டு வரையில் அவ் வேலையைத் திறமையாகப் பார்த்துப் பிறகு ஓய்வு பெற்றார்.

### நூல்கள் இயற்றுதல்

வேலையில் இருந்து ஓய்வு பெற்றபின் தமது முழுப் பொழுதையும் நூலாராய்ச்சியிலும் நூல்கள் எழுதுவதிலும் செலவிட்டார். இவர் இயற்றிய நூல்கள் பல. அவற்றுள் சில பெரிய தேர்வுகட்குப் பாடப்புத்தகங்களாகச் சென்னைப் பல்கலைக் கழகத்தினரால் வைக்கப்பட்டன. திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவர் வரலாறுகளையும் பற்பல ஆராய்ச்சிக் குறிப்புகளுடன் எழுதினார். கந்தபுராணம் முழுமையையும் நன்கு ஆராய்ந்து அரிய பாடல்களைத் திரட்டிக் கந்தபுராணச் சுருக்கம் என்னும் பெயரோடு வெளியிட்டார். பெரியபுராணக் கதைகளையும் தெளிவான முறையில் எழுதி வெளியிட்டார். கல்விகற்க விரும்பிய பலருக்குப் பெரியபுராணம். திருவிளையாடற் புராணம் முதலிய நூல்களை எளிய முறையில் விளக்கமாகப்

### இறுதி

இவ்வாறு தமிழ்த்தொண்டு செய்து கொண்டிருந்த இவர் 1933-ஆம் ஆண்டு ஆகஸ்டுத்திங்கள் பத்தொன்பதாம்

நாள் சனிக்கிழமை தமது அறுபத்து மூன்றும் அகவையின் தொடக்கத்தில் இறைவன் திருவடி நீழலை எய்தினர்.

தன்மை

இவர் நாள்தோறும் திருக்கோயில் வழிபாடு சிவபூசை முதலியவைகளை வழக்கமாகப் புரிதலை முறைமையாக மேற்கொண்டிருந்தார். தஞ்சை மாவட்டத்தில் வேலை பார்த்துக் கொண்டிருந்தபோது, தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் பலவற்றைப் போற்றி வழிபட்டார். சமய குரவர்கள் நால்வரின் வியக்கத்தக்க நிகழ்ச்சிகள் நிகழ்ந்த சிவப்பதிகட்குச் சென்று, ஆங்காங்குள்ள சான்றுகளை நேரிற் கண்டு தொகுப்பதில் இவர் மிகுந்த கருத்துச் செலுத்தினர்.

## ௬. இராசகோபாலையங்கார்

பிறப்பு

சோழவள நாட்டிலே திட்டாணி வட்டம் என்னும் ஊரிலே வைணவ அந்தணர் குலத்திலே 1882-ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் மூன்றும் நாள் (சித்திரபானு ஆண்டு ஆவணித்திங்கள் இருபதாம்நாள்) வே. இராசகோபாலையங்கார் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் வேங்கடேச ஐயங்கார். தாயார் பெயர் அரங்கநாயகியம்மாள்.

கல்விப் பயிற்சி

தொடக்கப்பள்ளியிற் கற்கவேண்டிய கல்வியைக் கற்ற பின் கும்பகோணஞ் சென்று ஆங்கிருந்த ஊர் உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்தார். ஆங்கிலக்கல்வியை மெட்ரிக்குலேஷன்வரை பயின்றார். அப்போது அப்பள்ளியில் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் தமிழாசிரியராக அமர்ந்திருந்

தார். அவர் தமிழ்மொழியைப் போதித்த திறம் இவருக்குத் தமிழினிடத்திலே மிகுந்த பற்றை உண்டாக்கியது. அவரிடம் தமிழ் நூல்களைப்படித்தார். இவருடைய ஏழாம் அகவையிலே தந்தையாரும் பதிமூன்றும் அகவையிலே தாயாரும் வைகுந்தஞ் சென்றார்கள். தமிழ்க் கல்வியை ஊக்கத்துடன் பயின்ற ஐயங்கார் சில ஆண்டு களில் தமிழ்மொழியில் வல்லவரானார்.

ஆசிரியத் தொழில்

தமிழ்மொழியில் புலமைபெற்ற இவர் கும்பகோணம் நேடிவ்-ஐஸ்கூலில் 1909-1910-ஆம் ஆண்டுகளில் தமிழாசிரி யராக அமர்ந்து வேலை பார்த்தார். பிறகு நெல்லூர் உயர் நிலைப்பள்ளியிலும் சில ஆண்டுகள் வேலை பார்த்தார். அந் நாளிலேயே நூலெழுதுந்தொழிலிலும் ஈடுபட்டார். முதன் முதலில் 'ஐவன்கோ' என்னும் ஆங்கில நாவலைத் தமிழில் மொழிபெயர்த்தார். கதைக்கொத்து முதலிய சிறு நூல் களையும் எழுதி வெளியிட்டார்.

சுதேசமித்திரன் உதவியாசிரியர்

1912-ஆம் ஆண்டில் ஐயங்கார் சென்னையை அடைந்து அவ்விடமே தங்கி வாழ்க்கையை நடத்தத் தொடங்கினார். அப்பொழுது சுதேசமித்திரன் பத்திரிகையில் உதவியாசிரி யராக அமர்த்தப்பெற்று அவ்வேலையை இரண்டு மூன்று ஆண்டுகள் பார்த்தார்.

நூல்கள் எழுதுதல்

பத்திரிகை வேலையைப் பார்த்துக்கொண்டிருக்கும் போதே பள்ளிச்சிறுவர்கள் படித்து மகிழுமாறு இனிய எளிய தமிழ்நடையில் சிறுகதைப் புத்தகங்கள் பலவற்றை எழுதினார். அவைகளைப் பள்ளியாசிரியர்களும் பிறரும நன்கு மதித்துப் போற்றினர். ஆசிரியர்கள் தத்தம் பாட

சாலைகளில் பாடப்புத்தகங்களாக வைத்து ஐயங்காருக்கு ஊக்கம் உண்டாக்கினர். சென்னைக் குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ் கம்பெனியார் ஐயங்காருடைய நூல்கள் சில வற்றை ஏற்றுப் பதிப்பித்து வெளியிட்டனர். நூல்கள் யாண்டும் பரவித் தக்க பயனை உண்டாக்கினமையால் தாம் மேற்கொண்டிருந்த சுதேசமித்திரன் உதவியாசிரியர் வேலையை விட்டுவிட்டுப் பாடநூல்கள் எழுதி வெளியிடு வதற்கே தமது முழுநேரத்தையும் செலவிட்டார். இத் தொழில் இவருக்கு மிகுந்த பயனையளித்தது.

கம்பர் விலாசம்

ஐயங்கார் பொருள்வருவாய் ஒன்றையே குறிக் கோளாகக்கொண்டு தமது தமிழறிவை அதற்கே உரிமை யாக்கிவிடவில்லை. தமிழ்நூல்கள் பலவற்றையும் நன்கு கற்று அருங்கலை விநோதராகப் பொழுதுபோக்குதலையும் மேற்கொண்டார். கம்பருடைய இராமாயணம் இவருக்கு மிகுந்த இன்பத்தை உண்டாக்கியது. அதனிடத்திலே மிகுதியாக ஈடுபட்டார். கம்பராமாயணச் சொற்பொழிவு கள் பல நிகழ்த்தினார். திருமயிலையில் தாம் கட்டிய இல்லத்திற்குக், "கம்பர் விலாசம்" என்று பெயரிட்டார். கம்பர் விலாசம் என்னும் இவருடைய இல்லப்பெயர் எங்கும் புகழ் பெற்றதாயிற்று.

சங்க நூற்பயிற்சி மிக்கவரான நாராயணசாமி ஐயரி டத்திலே கல்வி பயின்றமையின் இவருக்குஞ் சங்கநூற் பயிற்சியில் திறமும் அவாவும் மிகுதியாக இருந்தன. சங்க நூற் செய்யுட்கள் பலவற்றைப் பாராமல் ஒப்புவிக்கும் ஆற்றலைப் பெற்றிருந்தார். சங்ககாலத்து அரசர் புலவர் வரலாறுகளைச் சிறுவர் முதல் யாவரும் உணர்ந்துகொள்ள

வேண்டும் என்று விரும்பினார். அவ் வரலாறுகளைச் சிறு உரைநடை நூல்களாக எழுதிப் பரவச் செய்தார். நாலடியார், நான்மணிக்கடிகை முதலிய நூல்களை உரைகள், குறிப்புரைகள் முதலியவைகளுடன் வெளியிட்டார். எட்டுத்தொகையுள் ஒன்றான அகநானூற்றைப் பல சுவடிகளைக்கொண்டு ஆராய்ந்து பதிப்பித்துத் தமிழ் மக்கட்கு உதவினார். தாம் தகுந்த தமிழாராய்ச்சி அமையப்பெற்றவராக இருந்தும் அகநானூற்றின் பெருமையைக் கருதி அதனை முகவை ரா. இராகவ ஐயங்கார், மு. இராகவ ஐயங்கார் முதலிய அறிஞர்களுடைய மேற்பார்வையில் வெளியிட்டார்.

அகநானூற்றின் முதற்பதிப்பு முற்றுஞ் செலவானதும் இரண்டாம் பதிப்பைச் சிறந்த முறையில் வெளியிட எண்ணினார். நூல் முழுதிற்கும் உரை, ஆராய்ச்சிக் குறிப்பு, பொருட்குறிப்பு முதலியன எழுதிமுடித்தார். ஆயினும் இரண்டாம் பதிப்பை உரையுடன் வெளியிட்டுப் பார்க்கும் பேறு இவருக்குக் கிடைக்கவில்லை. இவரைப் பல ஆண்டுகளாக வருத்திநின்ற இருமல்நோய் மிகுதிப்பட்டது. தமது ஐம்பத்திரண்டாம் அகவையில் 1935-ஆம் ஆண்டு சூன் திங்கள் இருபத்துநான்காம் நாள் இவ்வுலகவாழ்வைத் துறந்து வைகுந்தஞ் சென்றார். இவர் நல்லொழுக்கமும் நற்குணமும் அமையப்பெற்றவர். உயர்குணங்கள் பல இவரிடம் குடிகொண்டிருந்தன. எத்தகைய இடையூறுகள் நேரினும் தாம் எடுத்துக்கொண்ட செயலை இவர் முடித்தே தீருவார். தமிழறிஞர்களிடத்திலும் தமிழ்மொழியிடத்திலும் இவருக்குப் பேரன்பு மிகுதியாக அமைந்திருந்தது. வடவேங்கடமலையில் எழுந்தருளிய வேங்கடேசப் பெருமாள் மீது ஆராக்காதல்கொண்டு விளங்கினார்.

இவர் இயற்றிய நூல்கள்

1. கதைக்கொத்து ஆறுபகுதி
2. தங்கக்கிளி
3. பொன்னாடு
4. சண்பகமொட்டு
5. உத்தம சேவகன்
6. மாம்பழ மங்கை
7. தங்கமோதிரம்
8. மயில்நர்த்தனம்
9. இராச வைத்தியன்
10. செங்கை வளவன்
11. சங்கச் சிந்தாமணி
12. சீலசம்பன்னன்
13. மல்லிகா
14. தமிழ் இலக்கணம் 3 பகுதிகள்
15. கதாமணி மகுடம்
16. தெனாலிராமன்
17. ஐவன்கோ
18. அன்புவல்லி

பதிப்பித்து வெளியிட்ட நூல்கள்

1. அகநானூறு குறிப்புரை
2. நாலடியார் பதுமனார் உரை
3. நான்மணிக்கடிகை பழையவுரை

## ரு. உமாமகேசுவரன் பிள்ளை

### தோற்றமுங் கல்வியும்

செந்தமிழ்ப் புரவலர் இராவ் சாகிப் த. வே. உமாமகேசுவரன் பிள்ளை சோழவள நாட்டிலே தஞ்சையிலே பிறந்தார். இவருடைய குலம் அகமுடைய வேளாளர் குலம். தந்தையார் பெயர் வேம்பப்பிள்ளை. அவர் தஞ்சைவள நாட்டிலே தாசில்தாராக வேலைபார்த்துக்கொண்டிருந்தவர். அவருடைய அருங்குணங்களை மக்கள் இந்நாளினும் பாராட்டிப் பேசுவார்கள். இந்த வேம்பப் பிள்ளை உமாமகேசுவரனுடைய இளம்பருவத்திலேயே காலமானார். பிறகு உமாமகேசுவரனார் தம் சிறிய தாயார், அவருடைய கணவன் ஆகியவர்களுடைய ஆதரவிலே வளர்ந்தார். கல்வியைத் தளராத ஊக்கத்துடன் கற்றார். தஞ்சையில் அப்போதிருந்த செயின்ட் பீட்டர்ஸ் கல்லூரியில் கல்வி பயின்று பி. ஏ. பட்டம் பெற்றார்.

### வழக்கறிஞர்

பி. ஏ. பட்டம் பெற்ற பிறகு சிலகாலம் மாவட்டக் கலெக்டர் அலுவலகத்தில் அலுவல் பார்த்தார். பிறகு சட்டக்கல்லூரியிற் பயின்று பி. எல். பட்டம் பெற்றுத் தஞ்சையில் வழக்கறிஞராக அமர்ந்தார்.

முப்பத்திரண்டு ஆண்டுகள் வரை வழக்கறிஞராக வேலை பார்த்தார். இவர் பொய்வழக்குகளை ஏற்றுக் கொண்டு வழக்காடார். உண்மை யென்று உணர்ந்த வழக்குகளை மட்டும் ஏற்று வாதிப்பார். அந்நாளில் நீதித் தலைவர்கள், பொதுமக்கள், கட்சிக்காரர்கள் முதலிய எல்லோருடைய நன்மதிப்பையும் பெற்றார்.

### பொதுநலத்தொண்டு

உமாமகேசுவரனுருடைய தகுதியை அறிந்த அரசாங்கத்தார் தஞ்சை நாட்டாண்மைக் கழகத் தலைவராக இவரை

ஏற்படுத்தினார்கள். பதினைந்தாண்டுகள் வரை இப் பதவியில் அமர்ந்து மக்கட்குப் பலவகையான நன்மைகளைச் செய்தார். திருவையாற்று அரசர் கல்லூரியில் தனித் தமிழ்ப் புலவர் வகுப்புக்கள் ஏற்படுவதற்கும், தமிழ் மாணவர்கள் பலர் சேர்ந்து படிப்பதற்கும் இவர் செய்த முயற்சிகளே காரணமாயின.

[illegible]யககம்

கூட்டுறவியக்கத்திற் சேர்ந்து மக்கட்குப் பெரும் பணி புரிந்தார். தஞ்சை திராவிட பாங்கு, நில அடமான பாங்கு, கூட்டுறவுப் பதிப்பகம் முதலியன இவருடைய முயற்சியால் [illegible]ன் றியனவாகும்.

கரந்தைத் தமிழ்ச்சங்கம்

சோழவள நாட்டிலே தமிழ்ச் சங்கம் ஒன்றை நிறுவ வேண்டும் என்று இ[illegible]நடைய [illegible]ளவல் [illegible]ருடையண பிள்ளை தஞ்சை கருந்திட்டைக் குடியில் "கரந்தைத்தமிழ்ச் சங்கம்" என்னும் பெயரோடு சங்கம் ஒன்றை நிறுவித் தண்டமிழ்த் தொண்டு செய்யத் தொடங்கினார். இத் தொண்டு சீரியதென்பதை யறிந்த இவர் அத் தொண்டில் பங்கு கொண்டு உழைக்கத் தொடங்கினார். உடல் பொருள் ஆவி ஆகியவைகளை அச்சங்கத்திற்கே உரிமையாக்கி உழைக்கத் தொடங்கினார். முப்பத்தைந்தாவது அகவையிலேயே வாழ்க்கைத் துணைவியை இழந்த இவர் மீண்டும் மறுமணஞ் செய்து கொள்ளாது தம் வாணாளைச் செந்தமிழ்ப் பணிக்கே உரிமையாக்கினார். கனவிலும் நனவிலும் சங்கத்தொண்டே அவருடையதாயிற்று. "கரந்தைத் தமிழ்ச் சங்கம் என்றால் உமாமகேசுவரன் பிள்ளை." "உமாமகேசுவரன் பிள்ளை என்றால் கரந்தைத் தமிழ்ச் சங்கம்." என்று சொல்லும் அளவிற்குத் தாம் சங்கத்தோடு ஒன்று பட்டுச் சங்கத்தைத்

தம்மோடு ஒன்று படுத்திவிட்டார். தமிழ்ச் சங்கத்தின் சார்பில் தொடக்கப்பள்ளி, உயர்நிலைப்பள்ளி, புலவர் பள்ளி, பதிப்பகம், பத்திரிகை முதலிய எல்லாவற்றையும் திறுவினர். புலவர் கல்லூரியில் எளிய மாணவர்கள் உணவு உறையுள் முதலியவைகளைப் பெற்றுக் கல்வி கற்றற்கு வேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் செய்தமைத்தார். சங்கம் போதிய பொருளாதாரம் பெறாது என்றும் தளர்ந்த நிலை யிலேயே தொண்டு செய்தது. சங்கத்திற்குப் பெரும் பொருள் தேடி மூலதனங்கள் அமைக்கவேண்டும் என்றும் சோழவள நாட்டுக் கரந்தைத் தமிழ்ச்சங்கத்தின் புகழ் எண்டிசையிலும் மண்டவேண்டும் என்றும் சலியா உழைப்பை மேற்கொண்டார். ஆண்டுவிழாக்களில் பெரும் புலவர்களும் குறுநில மன்னர்களும் கலந்து கொண்டு சங்கத்தை வளமுறச் செயதற்கு ஆவன பேசியும் செய்தும் வந்தார்கள். கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் புகழ் தமிழ் நாடு முழுவதும் பரவி மிளிர்ந்தது. சங்கத்தை எவ்வெவ் வகைகளில் சிறப்புடையதாக்கலாமென்று ஆராய்ந்தார்.

**வடநாடு செல்லுதல்**

வடநாட்டிற்குச் சென்று அங்குள்ள பல்கலைக் கழகங் களையும், மக்கள் முன்னேற்றம், மொழி முன்னேற்றம் முதலியவற்றைக் கருதி உழைத்துவரும் சங்கங்களையும் பார்த்துவர வேண்டுமென்று நீண்டகாலமாக எண்ணியிருந் தார். வடநாட்டுக் கலைக்கழகங்களில் நாட்டுமொழிகள் போற்றப்பெற்று வரும் வழிகளை நேரே தெரிந்து வர வேண்டுமென்பது அவருடைய நோக்கம். அதன்பொருட்டு வடநாடு நோக்கிப் புறப்பட்டார். சென்னையில் தங்கிச் சங்கப் புலவர் கல்லூரி, தொடக்கக் கல்லூரி முதலியவற் றின் உயர்வுக்காக வேண்டியவைகளை அங்குள்ள அதிகாரி களிடங் கலந்து பேசினர். கல்கத்தாவில் சில நாள்கள்

தங்கித் தண்டமிழ் அன்பர்களைக் கண்டுரையாடினார். தமிழ் விரிவுரைகள் சில நிகழ்த்தினார். பிறகு சாந்திநிகேதனத்திற்குச் சென்று கவியரசர் இரவீந்திரநாத தாகூரின் பணிகளைப்பார்த்து மகிழ்ந்தார். பிறகு காசிக்குச் சென்று கங்கையில் நீராடினார். விசுவநாதக் கடவுளைப் போற்றினார். [illegible] பல்கலைக் கழகத்தைக் கண்டார். பிறகு பிரயாகை சென்று நீராடி விட்டு மேலும் வடக்கு நோக்கிப் புறப்பட்டார்.

அயோத்தியில் இறுதி

அயோத்தியை அடைந்தார். சிறிது காய்ச்சல் நோய் கண்டது. அயோத்திக்கு அண்மையில் உள்ள பைசாபாத் என்னும் ஊரில் இறங்கினார். கணபதிப் பிள்ளை என்னும் அவர்தம் மைத்துனர் உமாமகேசுவரனாரோடு வழித்துணையாகச் சென்றிருந்தார். தமிழவேளுக்கு உடல்நலங் குறைந்ததைக்கண்டு அவர் உள்ளங் கலங்கினார். அங்கிருந்த மருத்துவசாலையொன்றுக்குக் கொண்டு போனார். சிலநாள் அங்கிருந்தார். மேற்கொண்டு செல்லவேண்டிய ஊர்களைப் பற்றியும் கணபதிப் பிள்ளையோடு உரையாடிக் கொண்டிருந்தார். 9-5-41 வெள்ளிக்கிழமை மாலை மூன்று மணிக்குச் சிறிது மருந்தும் பாலும் உண்டார். 3-30 மணிக்குத் திடீரென்று கண்மூடினார். அவருடைய ஆருயிர் இறைவன் திருவடி நீழலையடைந்து விட்டது. உடனிருந்த அன்பர் சரயு ஆற்றின் கரையில் தமிழவேளின் உடலைத் தீக்கடவுளுக்கு இரையாக்கிவிட்டுத் திரும்பினார்.

தமிழ்நாட்டினர் துன்பம்

கரந்தைத் தமிழ்ச்சங்கத் தலைவர் வடநாடு சென்றவர் ஒரேயடியாக வடநாடு சென்று விட்டார் என்னுஞ் செய்தி தமிழ்நாடு முற்றும் பரவியது. தமிழன்பர்கள் கண்கலங்கி

றனர். பாவாணர்கள் இரங்கற்பாக்களின் மூலம் தம் துன்பத்தை வெளியிட்டனர். அவரைக் குறித்துக் கூறிய இரங்கலுரைகள் 'துன்பமாலை' என்னும் பெயரால் தனி

* " தம்பியார் உளங்குளிர்ந்து வித்திடத்தோன்
றியகரந்தைத் தமிழ்ச்சங் கப்பேர்ப்
பைம்பயிரை வளர்த்துலகம் பயன்பெறற்கே
முயன்றனையப் பயனை முற்றும்
இம்பரிடைத் தமிழ்மக்கள் எய்துதல்கண்
டின்புறு தேகி ஞயவ்
வும்பருல கின்பிதனில் சிறந்ததென
எங்ஙனம்நீ உளங்கொண் டாயோ?

## சா. சிவானந்த யதீந்திரர்

### பிறப்பு

சோழவளநாட்டிலே தஞ்சைமாவட்டத்திலே திருத்துறைப்பூண்டிச் சிறு பிரிவிலே சிறந்து விளங்குவது வேதாரணியமென வழங்கும் திருமறைக்காடாகும். இந்தத் திருமறைக்காட்டிற்கு மேல்பால் ஏழுகல் தொலைவில் உள்ள ஆயக்காரன்புலம் என்னுஞ் சிற்றூரிலே அகமுடையார் குலத்திலே ஏறக்குறைய இற்றைக்கு எழுபத்தைந் தாண்டுகட்கு முன்னர்ச் சிவானந்த யதீந்திரர் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் சாமித்தேவர்; தாயார் பெயர் மதுரம்மாள், இவருக்கு இடப்பெற்ற பிள்ளைப் பெயர் கலியபெருமாள்.

### கல்வி

"ஐயாண்டளவிலே மையேடு கைபிடி," என்னும் பெரியார் முதுமொழிக்கிணங்கக் கலியபெருமாள் ஐந்தாம்

* பண்டிதமணி, மு. கதிரேசச் செட்டியார் பாட்டு.

அகவையில் பள்ளிக்கு அனுப்பப்பெற்றார். அக்காலத்திய பள்ளிகளிலே சிறு நூல்களில் இருந்து பெருநூல்கள்வரை ஒரு கணக்காயரே கற்பிப்பார். பள்ளி, திண்ணைப்பள்ளி யெனப் பெயர்பெறும். நிகண்டு, அருணாசல புராணம் முதலியவைகளைக் கற்கும் மாணவன் பள்ளிக்கூட இறுதி வகுப்பு மாணவனாக எண்ணப்பெறுவான். இத்தகைய பள்ளி யொன்றிலே கலியபெருமாள் சில ஆண்டுகள் கல்விகற்றார். பழம் பிறப்பின் நல்வினையினால் இவருக்குக் கல்வி எளிதாக உள்ளத்திற் பதிந்தது. அகவை பன்னிரண்டு முடிவதற் குள்ளேயே எல்லாவற்றையும் நன்கு கற்றுக்கொண்டு பள்ளிப் படிப்புக்குப் புள்ளி வைத்துவிட்டார்.

துறவியாதல்

> "எல்லார்க்குங் காலன் துறவீவன்
> ஈயாமுன், நல்லோர் துறப்பர்"
> "நரைவரும்என் றெண்ணி நல்லறி வாளர்
> குழவி யிடத்தே துறந்தார்."

என்னும் பெரியார் அருண்மொழிகள் கலியபெருமாள் உள்ளத்தில் நஸிவு செய்துகொண்டே இருந்தன. ஊரில் உள்ள மடங்கட்குச்சென்று அங்குள்ள பெரியோர்களைப் போற்றுதல் இறைவழிபாடு செய்தல் முதலியன கலிய பெருமாளுக்கு இயற்கையிலேயே அமைந்திருந்தன. அண் மையில் உள்ள ஒரு மடத்திற்கு ஒருநாள் சென்று அங்கி ருந்த பெரியார் ஒருவரைப் பணிந்து போற்றினார். அப் பெரியாருடைய பெயர் இராமையா அடிகள் என்பது. அப் பெரியார் இச் சிறுவருடைய பணிவு ஒழுக்கம் முதலியவை களைப் பார்த்து மகிழ்ந்தார். இவ்வளவு இளம் பருவத்தில் இவ்வளவு அடக்க ஒடுக்கத்துடன் ஒரு சிறுவன் இருப்பது அருமை என்று வியந்தார். கலியபெருமாளைப் பார்த்துத், "தம்பி! இவ்விடமே என்னோடு தங்கியிருக்கிறாயா?"

என்று உசாவினார். இத்தகைய சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்த கலியபெருமாள் உடனே அதற்கு இணங்கினார். அப் பெரியாரிடம் சோணசைலமாலை, பட்டினத்தார் பாடல், கீதாசாரத்தாலாட்டு, கட்டளை, மகாராசா துறவு என்னும் பல நூல்களைப் படித்துணர்ந்தார்.

மேலும் அதிகமாகச் சமய நூல்களைக் கற்க விரும்பிய கலியபெருமாள், இராமைய அடிகள் என்னும் அப் பெரியாருடைய உடன்பாடுபெற்றுக்கொண்டு பாண்டிமண்டலத்திலே சிறந்து விளங்கும் கோயிலூர் என்னும் சிவப்பதியை அடைந்தார். அங்கு வேதாந்தமடம் ஒன்று சிறந்து விளங்குகின்றது. அந்த மடத்தில் அந் நாளில் வீரசேகர ஞான தேசிகர் என்னும் பெரியார் மடாலயத் தலைவராகவும் ஞானாசிரியராகவும் எழுந்தருளியிருந்தார். கலிய பெருமாள் அப் பெரியாரைக் கண்டு போற்றி அம் மடத்தில் சில ஆண்டுகள் தங்கிக் கைவல்லியம் ஞானவாசிட்டம் முதலிய அறிவு நூல்களைக் கற்றுணர்ந்தார். பிறகு ஞான தேசிகர் இவருடைய பக்குவங்கண்டு கல்லாடை யீந்து துறவு நிலையை அருளித் தீக்கையும் வழங்கிச் சிவானந்தர் என்று தீக்கைப் பெயருங்கொடுத்தார்.

பிறகு சிவானந்தர் காசிமாநகரையடைந்து வடமொழி நூல்களைக் கற்றுணர விரும்பினார். தம்முடைய ஞானாசிரியரின் உடன்பாடு பெற்றுக்கொண்டு புறப்பட்டுக் காசியை அடைந்தார். அங்குப் பத்தாண்டுகள் வரையில் தங்கி வடமொழியில் உள்ள வேதாந்தம் தருக்கம் இலக்கணம் முதலிய எல்லா நூல்களையும் ஐயந்திரிபற நன்கு கற்றுத்

நூல்கள் இயற்றல்

காசியில் வடமொழி இலக்கணம், இலக்கியம், தருக்கம், பூர்வமீமாம்சை, உத்தரமீமாம்சை, சாங்கியம், யோகம் முதலிய எல்லா நூல்களையும் நன்குணர்ந்த இவர், அவ்விடமே தங்கித் துறவிகட்கு வேதாந்த நூல்களை ஓதி வைத்துக்கொண்டு தங்கியிருந்தார். இச் சமயத்தில் ஆசிரியராகிய வீரசேகரஞானதேசிகர் வீடுபேற்றையடைந்தார். இச் செய்தியைக்கேட்ட சிவானந்தர் தம் ஆசிரியரின் திருவுடல் சமாதி வைக்கப்பெற்ற திருக்களரையடைந்து சிவலிங்கரூபமாக எழுந்தருளியிருக்கும் ஆசிரியரைப் போற்றிப் பரவினார். கோவிலூர் நான்மணிமாலை, திருக்களராண்டவர் புராணம், புராண உரைநடை முதலிய நூல்களை இயற்றி ஆசிரியர் திருவடிகளில் வைத்து வணங்கினார்.

வேத மொழிபெயர்ப்பு

பிறகு சிவானந்தர் பல இடங்களிலுஞ் சுற்றிக்கொண்டு சென்னைமாநகரை அடைந்தார், அப்பொழுது அங்கு த. ப. ராமசாமிப்பிள்ளை யென்னுஞ் செல்வர் ஒருவர் வள்ளலாகவும் நல்லறிவாளராகவும் விளங்கியிருந்தார். முக்தாநந்த அடிகள் என்னும் பெரியார் ஒருவரால் மேற்படி இராசாமிப் பிள்ளை என்பவருக்கும் சிவானந்தருக்கும் அறிமுகம் உண்டாயிற்று. "வேதத்தைத் தமிழிலே பெயர்த்துத் தமிழ் நாட்டில் விளங்குமாறு செய்யலாமா? அந்தணர் அம் மறையின் ஒலிதானும் நஞ்செவிகளில் கேட்கக் கூடாது என்கின்றனரே, அடிகள் மறையைத் தமிழில் மொழிபெயர்த்தருள்வீர்களா?" என்று இராமசாமிப் பிள்ளை இவரைப் பார்த்து உசாவினார். சிவானந்தர், "அவ்வாறே மொழிபெயர்த்து வெளியிடலாமென்றும், அதனால் தவறொன்றும் இல்லை" யென்றுஞ் சாற்றினார்.

உடனே வேத மொழிபெயர்ப்பு வேலை தொடங்கப் பட்டது. இராமசாமிப் பிள்ளை மொழிபெயர்ப்பளராகிய சிவானந்த அடிகளார்க்கு இருப்பிடம், உணவு வசதி, வேண்டிய புத்தகங்கள் முதலியன அமைத்துக்கொடுத்தார். வடமொழி வேதங்களையும், மற்றும் வேதாங்கங்களையும், மற்றும் பல நிருத்தம், நிகண்டு, அகராதி முதலிய நூல்களையும் ஆயிரக்கணக்கான ரூபாய்கட்கு வாங்கிக்கொடுத்தார்.

சிவானந்தர் இரண்டு மூன்று ஆண்டுகளுக்குள் சாம வேதம் முழுவதையும் தமிழில் இனிய நடையில், பதவுரை கருத்துரை, குறிப்புரை ஆகியவைகளுடன் மொழிபெயர்த்தார். பிறகு எசுர் வேதத்தையும் மொழிபெயர்த்து முடித்தார். இவ் வேத மொழிபெயர்ப்புக்களை த. ப. இராம சாமிப்பிள்ளை உடனுக்குடன் அச்சிற் பதிப்பித்து வெளிப் படுத்தினார்.

வேத மொழிப்பெயர்ப்போடு வேறு பல நூல்களையும் இயற்றித் தமிழ்த்தொண்டு செய்துகொண்டிருந்த இவர் தாரண ஆண்டு ஐப்பசித் திங்கள் பதினைந்தாம் நாள் பரணி விண்மீனில் வீடுபேற்றையடைந்தார்.

இவரால் இயற்றப்பெற்ற நூல்கள்

1. கோயிலூர் நான்மணிமாலை
2. வீரசேகரபுராணம் (தமிழ்ச்செய்யுள்)
3. வச்சிரசூசிகை யுபநிடதம் (மொழிபெயர்ப்பு)
4. சாமவேத மொழிபெயர்ப்பு
5. எசுர்வேத மொழிபெயர்ப்பு
6. இருக்குவேத ருத்திரி
7. சாமவேத ருத்திரி
8. சங்கர திக்குவிசயம் (உரை நடை)
9. இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம்

10. தாயுமானவர் நன்னிலைத் தீர்ப்பு
11. சைவத் தெளிவு
12. அத்வைதத் தீர்ப்பு
13. சிவஞானபோத சாரம்
14. திருவொற்றியூர் மான்மியம்
15. கரபாத்திர சிவப்பிரகாச சுவாமிகள் வரலாறு
16. வேலூர் தோபா சுவாமிகள் வரலாறு
17. திருமண விளக்கம்
18. இருட்டிஞேபநிடதம்

முதலியன.

## எ. கன்னைய நாயுடு

### தோற்றம்

தொண்டைவளநாட்டிலே உள்ள சென்னை மாநகரில் 1884-ஆம் ஆண்டு (சுபானு ஆண்டு மாசித்திங்கள் இருபத்தொன்பதாம் நாள்) ஆ. வீ. கன்னையநாயுடு தோன்றினர். தந்தையார் பெயர் வீராச்சாமிநாயுடு. தாயார் பெயர் மங்கையம்மாள்.

### தந்தையார்

தந்தையார் வீராச்சாமிநாயுடு ஆரணியைச்சேர்ந்தவர். நாயுடு வகுப்பில் பலிச குலத்தைச் சேர்ந்தவர் இவர் வாணிபத்தின் பொருட்டுச் சென்னைமாநகருக்கு 1882-ஆம் ஆண்டில் குடியேறினர்.

### கல்வி கற்றல்

கன்னையர் கல்விகற்கத் தகுந்த பருவத்தையடைந்ததும் பெற்றோர்கள் இவரைப் பள்ளிக்கு அனுப்பினர். இவர் கல்வியை மிகுந்த விருப்பத்தோடும் ஊக்கத்தோடும் கற்கலானர். 1899-ஆம் ஆண்டில் அக் காலத்து லோயர்

செகண்டரி படிப்பிலும், 1911-ஆம் ஆண்டில் தொடக்கப் பள்ளி ஆசிரியர் உயர்தரக்கல்வியிலும் தேர்ச்சி பெற்றார். பிறகு எஸ். எஸ். எல். சி. வரை ஆங்கில அறிவை வளர்த்துக்கொண்டார். தாய்மொழியாகிய தெலுங்கையும் ஒருவாறு கற்றுக்கொண்டார். தமிழ்மொழியின் இலக்கண இலக்கியங்களைக் கா. ர. கோவிந்தராச முதலியார், ஜூளா வேலுமுதலியார் முதலியவர்களிடஞ் சிறிது பயின்றார். இவர் ஆசிரியரிடம் பாடங்கேட்டுக் கற்றுணர்ந்த இலக்கண இலக்கிய நூல்கள் மிகச் சிலவேயாம். பெரும்பாலும் தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்களையும் சங்க நூல்களையும் தாமாகவே நன்கு கற்று ஆராய்ந்து அவைகளில் தெளிந்த அறிவைப்பெற்றார். மேலும் தம்முடைய வைணவ சமயத்திற்குரிய நூல்களையும் நன்கு ஆராய்ந்து அவைகளினுந் தெளிந்த புலமை பெற்றார்.

மணமும் மக்கட்பேறும்

இவர் 1904-ஆம் ஆண்டில் கோதை என்னும் மாதைக் கடிமணம் புரிந்து ஆண்மக்கள் நால்வரையும் பெண்மக்கள் அறுவரையும் பெற்றார். இவர் தம்முடைய முன்னோர்களைப்போல் தம் குலத்திற்குரிய தொழிலைச் சிறிதுகாலஞ் செய்தார். பிறகு வாணிபத்தில் வெறுப்புக்கொண்டு அத்தொழில் செய்வதை நிறுத்தினார்.

தமிழாசிரியர்

இவருடைய நோக்கம் தமிழ்ப்பணியை மேற்கொள்ள வேண்டும் என்னும் கருத்துடையதாக இருந்தது. முதன் முதலில் ஜூளா இந்து யூனியன் கமிட்டி செகண்டரி பள்ளியில் ஆசிரியராக அமர்ந்தார். அதன்பிறகு 1912-ஆம் ஆண்டில் பிரம்பூரில் இருந்த ஆங்கிலோ வெர்னகுலர் பாடசாலையில் ஆசிரியராக அமர்ந்தார். அப்பள்ளியில் எட்டாண்டு

கள் பணிபுரிந்தார். அதன்பின் 1919-ஆம் ஆண்டில் பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளியில் ஆசிரியராக அமர்ந்தார். அப் பள்ளியில் இருபத்திரண்டு ஆண்டுகள் இடையறு துழைத்து அரும்பணி புரிந்தார். 1941-ஆம் ஆண்டில் வேலையில் இருந்து ஒய்வுபெற்றார்.

சொல்லாற்றல்

இவருக்குச் சொல்லாற்றல் நன்றாக அமைந்திருந்தது. இவருடைய போதனாமுறையை மாணவர்கள் பெரிதும் விரும்பினர். பள்ளிக்கூடத்தில் கல்விகற்ற மாணவர்களை யன்றித் தனிப்பட்ட முறையிலும் பலர் வீட்டிலே கல்வி கற்றார்கள். அவ்வாறு கற்ற மாணவர்கள் பலரும் நன்னிலையை எய்தினர். அத்தகையாருள் திரு. ரா. நடேச நாயகர் என்பவர் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக அமர்ந்திருக்கிறார்.

தொழிலாளர் சங்கம்

தம் மைத்துனர் ஜி. செல்வபதி செட்டியார் ஏற்படுத்திய வேங்கடேச குணாம்ருத வர்ஷணி சபையில் சமய சம்பந்தமான சொற்பொழிவுகளாற்றினர். இவர் 1917-ஆம் ஆண்டுமுதல் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரோடு நெருங்கிய தொடர்புகொள்வதற்கும் இச்சபையே காரணமாக இருந்தது. சபைக்கு வருந் தொழிலாளர்களுடைய எண்ணிக்கை மிகுதிப்பட்டுக்கொண்டே வந்தது. பிறகு இச்சபையே தொழிலாளர் சங்கமாக உருமாறியது. இந்தியாவிலேயே முதன்முதலாக ஏற்பட்ட தொழிலாளர் சங்கம் இதுவேயாகும். பொதுமறையாகிய திருக்குறளைத் தொழிலாளர்களிடையே பரப்புவதற்குத் திருக்குறள் வகுப்பைச் சிறிது காலம் நடத்தினர். இவர் சொற்பொழிவாற்றும் முறையும் செயலாற்றுந்திறனும் நன்கு உணர்ந்த

வராக இருந்தபடியினுல் தொழிலாளர் கூட்டம் இவரைப் பெரிதும் விரும்பியது.

சமய வெறுப்பு அற்றவர்

இவர் வைணவ சமயத்தைச் சார்ந்தவராயினும் பிற சமயத்தினை இழித்துக்கூறும் புன்மையுடையவரல்லர். மற்றைச் சமய நூல்களையும் விரும்பிக்கற்று அவைகளின் உண்மையையும் ஆய்ந்தறியும் இயல்புடையவர். எச் சமயத்தையும் ஒரே தன்மையுடன் நோக்கும் பரந்த மனப் பான்மை இவரிடம் குடிகொண்டிருந்தது. வெளிப்பகட் டான வாழ்க்கையை வெறுத்து எளிய வாழ்க்கையையே மேற்கொண்டிருந்தார்.

தமிழ்த்தொண்டு

இவர் பள்ளி வேலையோடு தம் கடமை தீர்ந்ததென்று ஓய்ந்திருக்கவில்லை. தமிழ்த்தாய்க்குத் தம்மாலாந் தொண் டினைப் புரியவேண்டும் என்னும் தணியா வேட்கைகொண்டு நூல்கள் பலவற்றை எழுதினுர். இவருடைய திருவேங் கடச் செய்யுட்கோவை என்னும் செய்யுள் நூல், நால் வகைப்பாக்களும் அவைகளின் இனங்களும், அகப்பொருள் துறைகளும் தன்கண் செறியப்பெற்றுக் கற்பவர்கட்குக் கழிபேருவகையளிப்பதாகச் சிறந்து விளங்குகின்றது.

கலிங்கத்துப்பரணியுரை

கலிங்கத்துப்பரணி என்னும் நூலுக்கு முதன்முத லாக உரையெழுதியவர் இவரே. இந்தக் கலிங்கத்துப் பரணியின் உரையருமையைக்கொண்டே இவருடைய அறி வாற்றலை நாம் ஒருவாறு உணர்ந்துகொள்ளலாம். இந் நூலில் வரும் அணிகளையும் இலக்கணக் குறிப்புக்களையும், வரலாற்றின் கால ஆராய்ச்சியையும் ஆங்காங்கு நன்கு அல்லாமலும் தற்கால உரையாசி

ரியர்கள் எடுத்துக்காட்டாத ஒன்பதுவகைச் சுவைகளையும் புறப்பொருள் துறைகளையும் இவர் தமது உரையில் விளக்கியிருக்கிறார். கலிங்கத்துப்பரணி நூலாராய்ச்சி ஒன்றையும் எழுதியிருக்கிறார்

இவரால் எழுதப்பட்ட நூல்கள்

1. கலிங்கத்துப்பரணி உரை
2. கலிங்கத்துப்பரணி நூலாராய்ச்சி
3. மேகவிடு தூது உரை
4. அழகர் பிள்ளைத்தமிழ் உரை
5. இளைஞர் சிற்றிலக்கணம்
6. தமிழைப் பிழையின்றி எழுதும் முறை
7. சங்ககாலப்புலவர்கள் சரிதை
8. மணிமேகலை சரிதை
9. சீவகன் சரிதை
10. அரிச்சந்திரன் சரிதை
11. கர்ணன் சரிதை
12. நந்தனார் சரிதை
13. மூன்று பால பக்தர்கள் சரிதை
14. மூன்று பெண்மணிகள் சரிதை
15. நீதிக் கதைக்கொத்து
16. செய்யுட்கொத்து முதல்பாகம்
17. மாணவர் தமிழ் வாசகங்கள்
18. திருவேங்கடச் செய்யுட்கோவை

—

இப் புலவருடைய இறுதி புதுமையான முறையில் முடிவுபெறுகிறது. தமிழுக்கும் தமிழ்நாட்டிற்கும் தனிப் பெருந்தொண்டு செய்துகொண்டிருந்த இவர் 1945-ஆம் ஆண்டு டிசம்பர்த்திங்கள் முப்பத்தொன்றாம் நாள், சென்னைக் குயப்பேட்டை படவேட்டம்மன் நகராண்மைக் கழகப்பள்ளியில் 'ஆண்டாள் திருக்கலியாணம்' என்னும் பொருள்பற்றிச் சொற்பொழிவு செய்துவிட்டு, வழக்கம்

போல் உலாவுதற்கு மக்கள் காட்சிச்சாலை உள்ள தோட்
ற்குச் சென்றவர், இதுவரையிலும் திருமட
யாம். இவருடைய வருகையை உறவினர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்களாம்.

## அ. சுவாமி ஞானப்பிரகாசர்

### ஞானப்பிரகாசர்

தமிழ் நாட்டிலே கமலைஞானப்பிரகாசர், கச்சிஞானப்பிரகாசர், திருவொற்றியூர் ஞானப்பிரகாசர், யாழ்ப்பாணம் ஞானப்பிரகாசர் எனப் பல ஞானப்பிரகாசர்கள் இருந்தனர். அவர்களெல்லாரும் சைவ ஞானப்பிரகாசர்கள். இங்கு கூறப்பெறுபவர் கிறித்துவ ஞானப்பிரகாசர்.

### தோற்றம்

ஈழவள நாட்டிலே யாழ்ப்பாண நகருக்கு வடக்கேயுள்ள மானிப்பாய் என்னுஞ் சிற்றூரிலே சைவ வேளாளர் குலத்திலே 1875-ஆம் ஆண்டு ஆகஸ்டுத்திங்கள் முப்பதாம் நாள் சுவாமி ஞானப்பிரகாசர் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் இராசசிங்கம் சுவாமிநாதபிள்ளை. தாயார் பெயர் தங்கமுத்து அம்மையார்.

### தந்தையார்

இராசசிங்கம் சுவாமிநாதபிள்ளை மானிப்பாயில் இருந்த தொடக்கப்பள்ளியில் ஆசிரியராக வேலைபார்த்துக் கொண்டிருந்தார். அவர் சைவ சமயத்தில் அழுந்திய பற்றுடையவர். இலக்கண இலக்கியங்களையுஞ் சிறிது கற்றுத் தேறியவர். பள்ளிக்கூடத்துக் கணக்காயராக இருந்த அவர் தம்மிடம் படித்த பிள்ளைகளுடைய படிப்பிலும் ஒழுக்கத்திலும் மிகுந்த கருத்துச் செலுத்தியவராய் மாண

வர்களின் முன்னேற்றத்தில் கண்ணுங்கருத்துமாக இருந்தார். அவருடைய மனைவியாரும் கணவனுக்கேற்ற மனைவியாய் இல்லறத்தைச் சிறப்புடன் நடத்திக்கொண்டிருந்தார்.

தந்தையார் முடிவு

சுவாமி ஞானப்பிரகாசருக்கு இடப்பட்ட பிள்ளைப் பெயர் வைத்தியலிங்கம் என்பது. வைத்தியலிங்கம் சிறு குழந்தையாக இருந்தபோது தந்தையார் இராசசிங்கம் சுவாமிநாதபிள்ளை விண்ணுலகம் ஏகினார்.

தாயார் மறுமணம்

கணவனையிழந்த தங்கமுத்து அம்மையார் உள்ளம் அல்லலுற்றது. அவர்களுடைய குடும்பம் மிக எளிய நிலைமையை உடையது. மைந்தனை வளர்த்தற்கும் கல்விகற்பித்தற்கும் யாது செய்வதென்று அம்மையார் திண்டாடினார். ஆதரிக்கக்கூடிய தக்க உறவினர்களும் இல்லை. அந்நாளிலே யாழ்ப்பாணம் அச்சுவேலி என்னுஞ் சிற்றூரில் தம்பி முத்துப்பிள்ளை என்பவர் ஒருவர் இருந்தார். அவர் கத்தோலிக்குச் சமயத்தைச் சேர்ந்தவர். சிறந்த அறிஞர். 'ஞானப்பிரகாச அச்சகம்' என்னும் பெயருடன் அச்சகம் ஒன்றை அமைத்து, 'சன்மார்க்கபோதினி' என்னுங் கிழமைத்தாளை வெளியிட்டுக்கொண்டிருந்தார். அவர் தங்கமுத்து அம்மையாரின் திக்கற்ற நிலைமையைக்கண்டு உள்ளம் இரங்கினார். அம்மையாரின் உடன்பாடு பெற்று அவரைக் கைம்மை மணஞ் செய்துகொண்டார்.

ஞானப்பிரகாசர்

அம்மையாரின் புதல்வராகிய வைத்தியலிங்கத்திற்குச் சமய முறைப்படி ஞானநீராட்டினார். ஞானப்பிரகாசம் என்று பெயரிட்டுத் தம் வளர்ப்புமகனாக ஏற்றுக்கொண்டார்.

வளர்ப்புமகனுகிய ஞானப்பிரகாசத்தின் கல்விப்பயிற்சியில் தம்பிமுத்து மிகுந்த கருத்துச் செலுத்தினுர். உரிய பருவத்தில் தொடக்கப்பள்ளியிற் சேர்த்தார். ஞானப்பிரகாசர் இயற்கையாகவே மதிநலமும் சுறுசுறுப்பும் அமையப்பெற்றவராக இருந்தபடியால் கல்வியைக் கருத்துடன் கற்ருர். ஆசிரியரிடம் பள்ளிக்கூடத்தில் படித்ததேயல்லாமல் வீட்டில் தம் சிறிய தந்தையாகிய தம்பிமுத்துப்பிள்ளையிடமும் சிறிய அறநூல்களைக் கற்றுணர்ந்தார். பள்ளிக்கூடத்து வகுப்புத் தேர்வுகளில் எல்லாம் முதன்மையாகத் தேறி எல்லோராலும் போற்றப்பெற்ருர். கல்வியை அரைகுறையாக நிறுத்திவிட விரும்பவில்லை. தொடர்ந்து கற்க விரும்பினுர். ஆங்கிலங் கற்க வேண்டும் என்னும் அவா இவருக்கு மிகுதியாக இருந்தது. அக்காலத்தில் அரசினரால் நடத்தப்பெற்ற ஆங்கிலப் பள்ளிக்கூடங்கள் இல்லை. கிறித்தவ சங்கத்தினர் பல இடங்களில் ஆங்கிலக் கல்விச்சாலைகளை அமைத்து மக்களுக்கு ஆங்கிலங் கற்பித்தனர். வட்டுக்கோட்டையில் அத்தகைய ஆங்கிலக்கல்விச்சாலை ஒன்று இருந்தது. ஞானப்பிரகாசர் அந்தக் கல்விச்சாலையிற் சேர்ந்து கற்க விரும்பினுர். தம்பி முத்துப்பிள்ளை அவ்வாறே சேர்ந்து கற்கச் செய்தார். அப் பள்ளியில் உயர்நிலைப்பள்ளிப் படிப்பை முடித்தார். பிறகு புனித பத்திரிசிரியார் கல்லூரியிற் சேர்ந்து கல்விகற்கத் தொடங்கினுர். கல்லூரிக் கல்வியையும் அவர் நன்ருகக்கற்று யாவராலும் சிறப்பாகப் போற்றப்பட்டார்.

அலுவல்

அந்நாளில் இலங்கைப் புகைவண்டி நிலையத்தார் புகைவண்டி நிலையத் தலைவர்களைத் தேர்ந்தெடுக்குமாறு தேர்வு

ஒன்று நடத்தினார்கள். கல்லூரிப்படிப்பை முடித்திருந்த ஞானப்பிரகாசர், அத்தேர்வில் எழுதி முதன்மையாளராக வெற்றிபெற்றார். இவருடைய நுண்ணறிவைப் பார்த்து அதிகாரிகள் பாராட்டினார்கள். கொழும்புக்கோட்டைப் புகைவண்டி நிலையத்துக்குத் தலைவராக அமர்த்தினார்கள். ஞானப்பிரகாசர் அவ் வேலையைப் பொறுப்புடனும் சிறப்புடனும் செய்தார்.

துறவியாதல்

ஞானப்பிரகாசருடைய உள்ளம் இல்லற வாழ்க்கையை விரும்பவில்லை. கிறித்தவத் துறவியாக இருக்க வேண்டும் என்றும் சமயத்தொண்டும் கலைத்தொண்டும் செய்யவேண்டும் என்றும் எண்ணினார். தமது வாணாள் முழுவதையும் பிறருக்கு உதவி செய்வதிலே கழிக்கவேண்டும் என்று உறுதிகொண்டார். தமது கருத்தைத் தம்முடைய வளர்ப்புத் தந்தையாகிய தம்பி முத்துப்பிள்ளையிடஞ் சாற்றினார். இதனைக்கேட்ட தம்பி முத்துப்பிள்ளை முன்னர் இணங்கவில்லை. பிறகு எல்லாம் பரமன் செயல் என்று தேறி உடன்பாடு கொடுத்தார். ஞானப்பிரகாசர் யாழ்ப்பாணத்தில் பரிசுத்த மார்ட்டீன் குருமடத்திற் சேர்ந்து மதபோதகராவதற்குப் பயிற்சி பெற்றார். சமயக் கல்வியைக் கற்றபின் 1901-ஆம் ஆண்டின் டிசம்பர்த்திங்களில் தமது இருபத்தாறுவது அகவையில் குருப்பட்டம் பெற்றார். அன்றுமுதல் அவருடைய பெயர் சுவாமி ஞானப்பிரகாசர் எனவும் ஞானப்பிரகாச அடிகள் எனவும் மக்களால் வழங்கப்படலாயிற்று.

சமயத்தொண்டு

ஊர்க்காவல்துறை என்பது யாழ்ப்பாணத்திலே ஓர் ஊர். அவ்வூர் மக்களிற் பெரும்பாலனவர்கள் கிறித்தவ

மதத்தைத் தழுவியவர்கள். அவ்வூரில் இருந்த குரு சிறந்த பண்புகள் அமையப்பெற்றவராக இருந்தார். அவர் முதுமை மிக்கவராக இருந்தமையின் அவர் தமது வேலையைத் தொடர்ந்து செய்யமுடியாதவராக இருந்தார். ஆகவே, ஞானப்பிரகாசர் அந்தக் குருவுக்கு உதவிக்குருவாக அனுப்பப்பட்டார். ஞானப்பிரகாசர் அந்தக் குருவுக்கு ஆகவேண்டிய உதவிகளைச் செய்துகொண்டு அவரோடு தங்கியிருந்தார். தமக்குக் கொடுக்கப்பட்ட சிறு தொகையைச் சிக்கனமாகச் செலவுசெய்தார். எஞ்சிய தொகையைக்கொண்டு எளிய மக்களுக்கு உதவிபுரிந்தார். எந்தச் சமயத்திலும் சிறிது நேரங்கூடச் சோம்பியிராமல் மக்களுக்குப் பணிசெய்வதிலும் நூல்களை ஆராய்ச்சி செய்வதிலும் தமது பொழுதைச் செலவிட்டார்,

### யாழ்ப்பாணத்தில்

மேற்குறிப்பிட்டவாறு ஞானப்பிரகாசர் ஊர்க்காவல் துறையில் இருந்துகொண்டிருக்கும்போது, யாழ்ப்பாண அத்தியட்ச குருவால், யாழ்ப்பாண மேற்றிராசனக்கோவில் பங்குக் குருவுக்கு உதவியாக அனுப்பப்பட்டார். யாழ்ப்பாணத்திலேயும் ஞானப்பிரகாசர் தம் கடமைகளைச் செவ்வனே ஆற்றி அரும்பெருந்தொண்டு செய்தார். இளைஞர்களோடு கலந்து பழகி அவர்களை நன்னெறிப்படுத்தினர். யாழ்ப்பாணமக்களுக்கு ஞானப்பிரகாசர் செய்த உதவிகள் பல. பிறகு நல்லூர் முதலிய இடங்களிலும் அரிய தொண்டுகள் செய்தார்.

### கல்வித்தொண்டு

அக்காலத்திய மக்கள், அதிலும் நாட்டுப்புற மக்கள், கல்வியின் அருமைபெருமைகளைச் சிறிதும் அறியாதவர்களாக இருந்தார்கள். ஞானப்பிரகாசர் மக்களுக்குக் கல்வி

யின் அருமைபெருமைகளைக் குறித்துப் பல சொற்பொழிவுகள் செய்தார். இவருடைய சொற்பொழிவுகளைக்கேட்ட மக்கள் கல்வியின் அருமைபெருமைகளை நன்கு அறிந்து கொண்டார்கள். மேலும் சிற்றூரில் வாழ்ந்த மக்களின் பொருட்டு ஆங்காங்குப் பல பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தினார். மிகு விரைவில் பெரும்பாலான மக்கள் கல்வி மணம் பெற்றவர்களானார்கள். கல்வியறிவு இல்லாத மக்களின் உள்ளத்தில் சமயக்கோட்பாடுகள் உரமபெற்று நில்லா என்பதை ஞானப்பிரகாசர் உணர்ந்தே கல்வித் தொண்டில் கருத்தை மிகுதியாகச் செலுத்தினார்.

கோயில்

ஞானப்பிரகாசர் மானிப்பாயில் கோவில் ஒன்று கட்ட விரும்பினார். கோயில் கட்டும் முறையை நன்றாக அறிந்திருந்த சிற்பிகளிடம் கோயிலுக்குரிய படம் ஒன்று எழுதித் தருமாறு கேட்டார். அவர்களும அவ்வாறே எழுதிக்கொடுத்தார்கள். பிறகு ஈழநாட்டிலும் தமிழ் நாட்டிலும் பெரும்பொருள் திரட்டி ஞானப்பிரகாசர் அந்தக் கோயிலைக்கட்டி முடித்தார்.

தமிழாராய்ச்சி

ஞானப்பிரகாசருக்குத் தாய்மொழி தமிழ்மொழியாதலின், தமிழ்மொழிமீது தணியாப் பெருங்காதல் கொண்டார். ஆங்கிலம் முதலிய பல்வேறு மொழிகளைப் பயின்றாலும் முழுக்கருத்துந் தமிழ் மொழியிடமே பதிந்திருந்தது. எச்சமயத்திலும் ஐய்ப்பூாலகளக கற்றுக் கொண்டேயிருந்தார். முதல் தடவை பார்கும்போது விளங்காமலிருக்கும் ஒரு செய்திமறு முறைபார்க்கும் போது சிறிது விளக்கமாகும். மேலும் மேலும் அதனைப் பன்முறை பார்த்தாலோ பார்க்கப் பார்க்கப் பெருஞ்செய்தி

களில் இருந்து பல புதுச்செய்திகளும் கருத்துக்களும் வெளிப்படும். இதனையே அறிஞர் ஆராய்ச்சி என்பர். இவ்வாறு ஆராய்ச்சி செய்து நூல்களைப் பயில்வோர் அந்நூல்களில் பெரும்புலமை பெறுவதும் மற்றவர்கள் வியக்குமாறு புதுப்புதுப் பொருள்களைப் புகல்வதும் இயற்கையாகும். ஞானப்பிரகாசர் தாம் படித்த பல நூல்களையும் ஆராய்ச்சி முறையிலேயே ஆழ்ந்து கற்ருர். இதனுல் இவருடைய தமிழ்ப்புலமை வளம்பெற்றதாயிற்று. தமிழ்மொழிச் சொற்களோடு ஏனைய மொழிச் சொற்களை ஒப்புநோக்கிச் சிறந்த முறையிற் பல உண்மைகளைக் கண்டுபிடித்தார். இவர் தாம் கண்டு பிடித்த உண்மைகளைப் பத்திரிகைகளின் வாயிலாக வெளியுலகிற்குத் தெரியப்படுத்திஞர். அறிந்தவர்கள் ஞானப்பிரகாசரின் ஆராய்ச்சி முறையைப் போற்றித் தக்கவாறு ஊக்கம் அளித்தனர்.

சொற்பிறப்பு ஒப்பியல் அகரவரிசை

சொல்லடிகள் மூலம் தமிழ்மொழிச் சொற்கள் வளர்ச்சி பெற்றுப் பிறமொழிச்சொற்களின் கருத்துக்களைப் பெறுகின்றன என்று ஆராய்ச்சி மூலம் உறுதிசெய்து முதன் முதலாக வெளிப்படுத்தியவர் ஞானப்பிரகாசரே யாவர். இவருடைய ஆராய்ச்சி தமிழ்மொழியின் தொன்மையையும் பெருமையையும் உலகெங்கும் பரப்புவதற்கு ஏதுவாயிற்று. ஞானப்பிரகாசர் தமது ஆராய்ச்சி நூலை அச்சிற்பதிப்பித்து வெளியிடுவதற்கு எண்ணிஞர். தமிழ் நாட்டின் உதவியை நாடித் தமிழ் நாட்டிற் சுற்றுப்பயணஞ் செய்தார். சென்னை, புதுச்சேரி, கும்பகோணம், தஞ்சை, திருச்சி, திண்டுக்கல், மதுரை, தூத்துக்குடி முதலிய இடங்களுக்குச் சென்ருர். மதுரையில் செந்தமிழ்ப் பத்திராசிரியராக இருந்த நாராயண ஐயங்கார் தலைமையிலும், சிதம்பரத்தில் பெரும்பேராசாஞக விளங்கிய

தண்டபாணி தீட்சிதர் தலைமையிலும் சொற்பொழிவுகள் செய்தார். ஆதீனத் தலைவர்களையும் பெருஞ்செல்வர்களையும் பார்த்துப் பேசினார். திருவாவடுதுறையாதீனத் தலைவர், திருப்பனந்தாள் காசிமடத் தலைவர், இராமநாதபுரம் அரசர் முதலியோர் தக்கவாறு நல்லுதவி செய்தார்கள். ஞானப்பிரகாசர் சொற்பிறப்பு ஒப்பியல் அகரவரிசையின் முதல் மடலின் ஆறு பகுதிகளையும் அச்சிட்டு முடித்தார். ஒரு பல்கலைக் கழகம் பெருமுயற்சி செய்து முடிக்கவேண்டிய வேலையை ஞானப்பிரகாசர் ஒருவரே செய்து முடித்தது வியக்கத்தக்க செயலாகும்.

இவர் இயற்றிய நூல்கள்

இவர் தாம் மேற்கொண்ட பெருநூல் ஒன்றுமே தமது தமிழ்ப்பணியை முடித்துக்கொண்டாரல்லர். வேறு பல நூல்களையும் எழுதினார்.

தமிழ்

1. தமிழரின் பூர்வசரித்திரமும் சமயமும்
2. யாழ்ப்பாணச் சரித்திர ஆராய்ச்சி
3. போர்த்துககீசர் ஒல்லாந்தர்கால யாழ்ப்பாண சரிதை
4. தமிழ் அமைப்புற்ற வரலாறு
5. தருக்கம்
6. துறவி ஞானம்
7. திருச்சபைச் சரித்திரம்
8. தேவ ஆராதனை முறை
9. ஆண்டவர் சரித்திரம்
10. இறித்துநாதர் சரித்திர ஆராய்ச்சி
11. கத்தோலிக்குத் திருச்சபையும் அதன் போதகங்களும்

ஆங்கிலம்

1. யாழ்ப்பாண அரசர்
2. பண்டைய இந்திய சரிதையும் ஆண்டு வரிசையும்
3. தமிழரின் சாதி உற்பத்தி

என்பன, சொற்பிறப்பு ஒப்பியல் ஆராய்ச்சியைத் தவிரப் பிற நூல்களாம்.

பன்மொழி அறிஞர்

ஞானப்பிரகாசருக்குப் பல மொழிகளினும் பயிற்சியுண்டு. ஆங்கிலம், இலத்தீன், கிரேக்கம், போர்த்துக்கீஸ், டச்சு, செர்மன், இத்தாலி, பிரஞ்சு, தெலுங்கு, மலையாளம், கன்னடம், சமஸ்க்ருதம் முதலிய பதினெட்டு மொழிகளில் பேசவும் எழுதவும் திறமை வாய்ந்திருந்தார். தென்னாட்டு மொழிகள், வடநாட்டு மொழிகள், பிறநாட்டு மொழிகள் எல்லாம் சேர்ந்து ஏறக்குறைய எழுபது மொழிகளில் பயிற்சி பெற்றிருந்தார் என்று தெரிகிறது.

பத்திரிகைத் தொண்டு

இவர் தம்முடைய ஆராய்ச்சிக் கட்டுரைகள் இலக்கியக் கட்டுரைகள் முதலியவற்றை, லோகோபகாரி, சத்திய நேசன், ஈழகேசரி, சத்தியவேதபாதுகாவலன், சர்வவியாபி முதலிய பல பத்திரிகைகளில் வெளியிட்டுப் பத்திரிகைத் தொண்டு செய்ததுடன், கத்தோலிக்குச் சமய மக்களுக்குச் சமயக்கொள்கைகளைப் போதிப்பதற்காகவும் அவர்களுடைய அறிவை வளர்ப்பதற்காகவும் குடும்ப வாசகம் என்னும் பத்திரிகையைத் தாம் ஆசிரியராக இருந்தும் நடத்தினர்.

குண நலன்கள்

இவர் பெரும்புலவராக விளங்கியிருந்தும் பெருமிதத்தை வெளிப்படுத்தாமல் அடக்கத்தை மேற்கொண்டிருந்தார். இவருடைய அடக்கத்தைக் கண்டவர்கள் மிகுந்த வியப்படைந்தனர். இவர் தாம் பெரியரென்று ஆணவங்கொண்டு தனித்திராமல் ஏழை எளியவர் பணக்காரர் முதலிய எல்லோரிடமும் ஒரே தன்மையாகப்

பழகித் தம்முடைய குணநலத்தைப் புலப்படுத்தினர். கையில் ஒரு பொருளை வைத்துக்கொண்டு இல்லையென்று இயம்பமாட்டார். கூடிய வரையில் தமது செலவைக் குறைத்துக்கொண்டு பிறருக்கு உதவி செய்வதிலேயே கண்ணுங்கருத்துமாக இருந்தார். "என்கடன் பணி செய்து கிடப்பதே" என்னும் பொன்மொழி ஒரு சமயத்திற்கு மட்டும் உரியதன்று. இம்மொழியை எல்லாச் சமயத்தினரும் பின் பற்றலாம். ஞானப்பிரகாசர் இப் பொன்மொழியைக் கடைப்பிடித்துப் பிறருக்குத் தொண்டு செய்வதையே தமது வாழ்க்கைக் குறிக்கோளாகப் பற்றியிருந்தார். இவருடைய புகழ், யாழ்ப்பாணத்தில் மட்டுமன்றி இந்தியா, மலேயா, ஐரோப்பா முதலிய வெளிநாடுகளிலும் பரவியிருந்தது. ஒருமுறை இவர் செர்மனிக்குச் சென்றார். இவரது புலமைத் திறத்தைப் பாராட்டுவதற்காக இவருடைய உருவந்தாங்கிய தபால் தலைகளை அரசியலார் வெளியிட்டு ஞானப்பிரகாசரைப் பெருமைப்படுத்தினர்கள்.

வாணாள் முழுவதையுந் தமிழ்த் தொண்டிற்கும் சமயத் தொண்டிற்குமே செலவிட்ட இவர் தமது எழுபத்திரண்டாவது அகவையில் 1947-ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 22-ஆம் நாள் மண்ணுலக வாழ்வைத் துறந்தார்.

## ௬௯. கந்தசாமியார்

### பிறப்பு

ஈண்டிய புகழ்சேர் பாண்டிமாநாட்டில் வத்திராயிருப்பு என்னும் பேரூர்க்கு அண்மையில் உள்ள கூமாப்பட்டி என்னுஞ் சிற்றூரிலே, சர்வசித்து ஆண்டு கார்த்திகைத்திங்கள் பதினாறும்நாள் ரா. கந்தசாமியார் பிறந்தார். தந்தையார் பெயர் இராமசாமித்தேவர். தாயார் பெயர் வேலம்மாள். தோன்றிய குலம் மறவர்குலம்.

கந்தசாமியார் இளம்பருவத்தில், ஐந்தாண்டளவில் உள்ளூரில் இருந்த திண்ணைப் பள்ளிக்கூடத்தில் சேர்க்கப் பட்டுச் சில ஆண்டுகள் கல்வி கற்றார். இவருடைய தந்தை கந்தசாமியார் ஐந்தாண்டுச் சிறுவராக இருக்கும்போதே காலமானார். ஆகவே கந்தசாமியார், பத்துப் பன்னிரண்டு ஆண்டுச் சிறுவராக இருக்கும்போதே குடும்பத்தொழிலில் ஈடுபட நேர்ந்தது.

### மூக்குப்பொடி

இக்காலத்திலே ஏழாண்டு நிரம்பப்பெற்ற சிறுவர்கள் பலர் மறைமுகமாக மூக்குப்பொடி போட்டுக் கொள்ளுதலைக் காண்கிறோம். கந்தசாமியாரும் பன்னிரண்டு பதின் மூன்று ஆண்டுச் சிறுவராக இருக்கும்போதே மூக்குத் தூள் போடும் வழக்கத்தைப் பழகிவிட்டார். உடன் பிறந்தார்களோடு கந்தசாமியார் உழவுத்தொழிலை மேற் கொண்டார். வயலுக்கு நீர் பாய்ச்சும் பொருட்டு ஏற்றம் ஓட்டுதல் வேண்டும். கந்தசாமியார் இவ்வேலையை மிகுந்த விருப்பத்துடன் பார்த்துக்கொண்டிருந்தார். ஒருநாள் மூக்குப்பொடி வாங்கும் பொருட்டுக் கந்தசாமியார் தம் பாட்டியாராகிய நாச்சியாரம்மாளிடம் தானியங்கேட்டார்.

அந்த அம்மையார் சிறிது சோளங்கொடுத்தார். அதனைக் கொண்டுபோய்க் கடையிலே போட்டுவிட்டுப் பொடி வாங்கினார். பொடி விரைவாகத் தீர்ந்துபோய்விட்டது. மேலே பொடி வாங்கவேண்டுமே என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தார். இந்தச் சமயத்தில் தமையனார் பழனிச் சாமித்தேவர் வயலுக்குத் தண்ணீர் இறைக்கக் கூப்பிட்டார். கந்தசாமியார் விரைவாகப் புறப்படவில்லை. காலந்தாழ்த்திக் கொண்டிருந்தார். தமையனார் கடிந்து பேசியதுடன் ஓர் அடியுங் கொடுத்துவிட்டார். கந்தசாமியார் மீண்டுந் தம்முடைய பாட்டியாரிடஞ்சென்று பொடி வாங்கவேண்டும் என்றார். பாட்டியாருக்குச் சினம் உண்டாகியது. "ஒரு நாளைக்கு எத்தனைமுறை பொடி வாங்குவது? இருக்கிற தானியங்களெல்லாம் உனக்குப் பொடி வாங்குவதற்கே தீர்ந்து போகும்போல் இருக்கிறதே," என்று வைது கொண்டே மீண்டுஞ் சிறிது சோளம் கொடுத்தார். தமையன் கடிந்து பேசியடித்ததும், பாட்டியார் வைததும் கந்தசாமியாருடைய உள்ளத்தை மாற்றிவிட்டன. உறவினர் யாவரிடத்தினும் அவருக்கு மிகுந்த வெறுப்பு ஏற்பட்டது. உறவினரையும் குடும்பத்தையும் வெறுத்து வீட்டைவிட்டு வெளியேறிவிடுவதென்று முடிவுசெய்தார். எவ்விதமான முடிவுஞ் செய்துகொள்ளாமலும் எவருக்குஞ் சொல்லாமலும் வெளிப்பட்டு வழிநடந்தார். மதுரைக்கு அண்மையில் உள்ள சோழவந்தான் என்னும் ஊரையடைந்தார். அப்பொழுது இவருக்கு அகவை பதினாறு. வீட்டைவிட்டு வெளியேறிய காலம் 1903-ஆம் ஆண்டு மார்ச்சுத்திங்கள்.

துறவியாகிக் கல்விகற்றல்

சோழவந்தானில் 'கிண்ணிமடம்' என்னும் பெயருடைய மடம் ஒன்று இருக்கிறது. அந்நாளில் அம்மடத்தில் சிவப்பிரகாச அடிகள் என்னும் பெரியார் ஒருவர் தங்கி

யிருந்தார். அவர் தமிழ் இலக்கண இலக்கியங்களிலும் சோதிடத்திலும் மிகுந்த புலமையுடையவர். துறவற வாழ்க்கையை மேற்கொண்டொழுகியவர். ஒருபொழுதே உண்ணும் வழக்கம் உடையவர். அரசஞ் சண்முகனார் முதலிய பலருக்குக் கல்விகற்பித்தவர். சோழவந்தானை யடைந்த கந்தசாமியார் அந்த மடத்திற்குச் சென்று சிவப்பிரகாச அடிகளாரின் ஆதரவில் தங்கினார். அங்கிருந்த துறவிகள் முதலியோர்களோடு கல்வி கற்கவேண்டும் என்று எண்ணினார்.

முதலியார்

அங்கு அப்பொழுது சுப்புமுதலியார் என்னும் பெயருடைய முதலியார் ஒருவர் இருந்தார். அவர் பெருஞ் செல்வர். வண்மையில் சிறந்தவர். அம்முதலியார் கந்தசாமியாருடைய இளம்பருவத் தோற்றத்தையும் எளிய நிலைமையையுங் கண்டார். வரலாற்றைக் கேட்டார். கந்தசாமியார் தமக்குக் கல்வி கற்றலில் உள்ள விருப்பத்தையும் கிண்ணிமடத்திலுள்ள அடிகளாரிடம் கல்விகற்க விரும்புவதையுந் தெரியப்படுத்தினார். முதலியார் கந்தசாமியாருடைய விருப்பத்தை நிறைவேற்ற எண்ணினார். இரண்டு புதிய வேட்டிகள் வாங்கிக்கொடுத்தார். தம்முடைய இல்லத்திலேயே சாப்பிட்டுக்கொண்டு அடிகளாரிடம் படிக்கலாம் என்றார். கந்தசாமியார் முதலியாருடைய அன்புக்கும் ஆதரவுக்கும் நன்றி செலுத்தினார். முதலியார் வீட்டிற் சாப்பிட்டுக்கொண்டு சிவப்பிரகாச அடிகளாரிடம் சில சிற்றிலக்கியங்களையும் நன்னூலையும் பாடங்கேட்டார். அரசஞ் சண்முகனாருடைய நட்பும் வேறு சில துறவிகளுடைய பழக்கமும் கந்தசாமியாருக்கு ஏற்பட்டன.

### தமையனார் வருகை

கந்தசாமியாருடைய உறவினர்கள் கந்தசாமியாரைப் பல இடங்களிலுந் தேடினார்கள். இவரைப்பற்றிய செய்தி வெகுநாள் தெரியாமல் இருந்தது. பிறகு சோழவந்தான் திண்ணிமடத்தில் இருத்தலை அறிந்தார்கள். கந்தசாமியாருடைய தமையனார் பழநிச்சாமித்தேவர் கந்தசாமியாரை ஊருக்கு அழைத்துக்கொண்டு போகும் பொருட்டுச் சோழவந்தானுக்கு வந்தார்.

### மதுரைக்குச் செல்லுதல்

தமையனார் வந்திருத்தலைக் கந்தசாமியார் அறிந்தார். உடனே புறப்பட்டு மதுரைக்குப் போய்விடுவதென்று முடிவு செய்தார். புகைவண்டி நிலையத்தையடைந்து மதுரைக்குச் சீட்டு வாங்கிக்கொண்டு வண்டியிலேறினார். தமையனாரும் இவரைப் பின்தொடர்ந்து புகைவண்டியிலேறினார். மதுரையை அடைந்து இறங்கிய கந்தசாமியார் தமையனாருடைய கண்களுக்குத் தோன்றாமல் சந்து பொந்துகளில் நுழைந்து அகப்படாமலே போய்விட்டார்.

### தமிழ்ச்சங்கத்தில் கல்விகற்றல்

[illegible] தோற்றுவிக்கப்பட்ட மதுரைத் தமிழ்ச்சங்கம் அறிஞர்களைத் தோற்றுவிக்கும் பணியில் ஈடுபட்டிருந்தது. தமிழ்ச்சங்கத்தில் மாணவர்கள் பலர் சேர்ந்து கல்விபயின்றனர். நாராயண ஐயங்கார் முதலிய நல்லாசிரியர்கள் மாணவர்களுக்கு இலக்கண இலக்கியங்களைச் சீர்பெறக் கற்பித்தனர். ஆண்டுகள்தோறுந் தேர்வுகள் நடத்தித் தேர்ச்சிபெற்றவர்களுக்குப் பட்டமும் பரிசும் வழங்கப்பெற்றன. மதுரையை அடைந்த கந்தசாமியார் தமிழ்ச்சங்கத்திற் சேர்ந்து கல்விகற்கத் தொடங்கினார். 1907-ஆம் ஆண்டிற் புகுமுக வகுப்புத் தேர்வில் இரண்

டாவதாகத் தேர்ச்சியடைந்தார். பாலபண்டித வகுப்புத் தேர்வில் முதன்மையாகத் தேர்ச்சிபெற்றுப் புதுக்கோட்டை மன்னரால் கொடுக்கப்பெற்ற மெடலைப்பெற்றார். பாண்டித்துரைத்தேவர் தமிழ்ச்சங்கத்திற்கு வரும்போது அவரிடம் அளவளாவி அவருடைய நன்மதிப்பையும் கந்தசாமியார் பெற்றார்.

ஆசிரியத் தொழில்

மதுரைத் தமிழ்ச்சங்கத்திற்கு ஆசிரியர் ஒருவர் தேவைப்பட்டார். பாண்டித்துரைத்தேவர் கந்தசாமியாரையே ஆசிரியராக இருத்தினார். தமிழ்ச்சங்க ஆசிரியராகச் சில ஆண்டுகள் பணிபுரிந்தார். அப்பொழுது இவரிடம் பலபேர் கற்றுத் தேறினார்கள். காலஞ்சென்ற பூவராகன் பிள்ளை, தற்காலத்தில் சென்னைப் பல்கலைக்கழகத்தில் ஆராய்ச்சித்துறையில் பணிபுரியும் திரு. புருஷோத்தம நாயுடு ஆகியோர் கந்தசாமியாரிடம் கற்றுத் தேர்ந்த மாணவர்களே. பிறகு மேலைச்சிவபுரியில் கணேசர் செந்தமிழ்க் கலாசாலையில் ஆசிரியராக அமர்ந்து பல ஆண்டுகள் பணியாற்றினார். அப்பொழுது பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் முதலிய பல அறிஞர்கள் கந்தசாமியாருக்குப் பழக்கமாயினர்.

மண வெறுப்பு

இவர் மேலைச்சிவபுரியில் ஆசிரியராக இருக்கும்போது புதுக்கோட்டைப் பக்கத்தில் இருந்த மறவர்குலச் செல்வர் ஒருவர் தம்மகளை இவருக்கு மணஞ்செய்விக்க எண்ணினார். இவ்வாறு அவர் எண்ணங்கொண்டதற்குக் காரணம் கந்தசாமியாருடைய அறிவு மாட்சியையும் பெருமையையும் நன்குணர்ந்ததே. ஆனால் கந்தசாமியார் தமக்கு மணஞ் செய்துகொள்ளும் நோக்கமில்லையென்று மறுத்துவிட்டார்.

சோழவந்தானில் தமிழாசிரியர்

பிறகு சோழவந்தான் போர்டு உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராக அமர்ந்தார். கந்தசாமியாருடைய அறிவாற்றலுக்கு ஏற்ற வேலை அப் பள்ளியில் இல்லை. ஆயினும் மாணவர்கள் தமிழ்மொழியிடத்தில் பற்றுக்கொண்டு பயிலும் வகையில் இவர் எளிதாகவும் இனிதாகவும் தமிழ்ப் பாடங்களைக் கற்பித்தார். இதனால் மாணவர்கள் தமிழ்ச் சுவையை நன்குணர்ந்து களித்தனர்.

மீனாட்சி கல்லூரியில் வேலை

அரசர் அண்ணாமலைச் செட்டியார் சிதம்பரத்திலே மீனாட்சி கல்லூரியை அமைத்தார். அதற்கு உ. வே. சாமிநாதையர் தலைமைப் பேராசிரியராக அமர்ந்தார். அவரோடு பொன்னோதுவார், வித்துவான் வேங்கடராசுலு ரெட்டியார், வித்துவான் அருணாசல தேசிகர் முதலியோர் ஆசிரியர்களாக அமர்ந்திருந்தனர். உ. வே. சாமிநாதையர் கல்லூரியைவிட்டு நீங்கியவுடன் பொன்னோதுவார் தலைமைப் பேராசிரியரானார். வேங்கடராசுலு ரெட்டியார் சென்னைப் பல்கலைக் கழகத்திற்குச் சென்றபிறகு அவருக்குப் பதிலாகத் தக்க புலவர் ஒருவரை ஏற்படுத்தவேண்டிய வேலை ஏற்பட்டது. புலவர் வகுப்பிற்குப் பாடஞ் சொல்லத்தக்க அறிஞர்கள் அகப்படுவது அருமையாக இருந்தது. பொன்னோதுவார், சர்க்கரை இராமசாமிப் புலவர் ஆகியோருடைய முயற்சியினால் கந்தசாமியார் அந்த வேலையில் அமர்ந்தார். புலவர் வகுப்பிற்குத் தொல்காப்பியம் புறநானூறு திருக்குறள் முதலிய நூல்களைக் கற்பித்தார். மேலும் தமிழாசிரியர் பயிற்சி வகுப்பில் தொல்காப்பியம் சேனாவரையம் முதலிய இலக்கண நூல்களையும் கற்பித்தார்.

அண்ணுமலைப் பல்கலைக்கழகத்தில்

அரசர் அண்ணுமலைச் செட்டியார் அண்ணுமலைப் பல் கலைக் கழகத்தை அமைத்தார். மீனுட்சி தமிழ்க் கல்லூரி அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தோடு இணைக்கப்பட்டது. புலவர் புகுமுக வகுப்பொன்று தனியாகச் சிதம்பரத்தில் அமைக்கப்பட்டது. கந்தசாமியார் அவ் வகுப்பின் பொறுப்பை யேற்றுக்கொண்டு ஓர் ஆண்டு திறம்பெற நடத்தினர். பிறகு அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் விரி வுரையாளராக அமர்ந்து தொடர்ந்தாற்போல் பல ஆண்டு கள் பணியாற்றினர். விபுலாநந்த அடிகள், சோமசுந்தர பாரதியார், பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் முதலிய பேராசிரியர்களின் தலைமையில் நடைபெற்ற தமிழ்த்துறையில் நன்றுகப் பணியாற்றினர். தொல்காப் பியம் யாப்பருங்கலம் முதலிய பெரிய தமிழ் இலக்கண நூல் களையும், அகநானூறு புறநானூறு முதலிய சங்க நூல்களை யும், தேவாரம் முதலிய திருமுறைகளையும் நன்கு ஆராய்ந்து மாணவர்கட்கு நன்றுகக் கற்பித்தார். எத்தகைய தமிழ் நூல்களையும் நன்றுகக் கற்பிக்கக்கூடிய ஆற்றல் அமையப் பெற்றவர் என்று இவரைப் பலரும் ஒருமுகமாகப் போற் றினர்.

ஆழ்ந்தகன்ற கல்வி

இவர் ஆழ்ந்து அகன்ற கல்வியறிவு அமையப் பெற்ற வர். கிண்ணிமடம் அடிகளாரிடத்தும் மதுரைத் தமிழ்ச் சங்கத்திலும் கற்றதோடு அமையவில்லை. பல புலவர்களி டத்திலும் அரிய நூல்கள் பலவற்றைக் கற்றுணர்ந்திருந் தார். தஞ்சையில் இருந்த ஒரு புலவரிடம் தருக்க நூலைக் கற்றுணர்ந்தார். தாம் அரிதாகச் சேர்த்துவைத்திருந்த இருநூறு வெண்பொற்காசுகளை நன்கொடையாக வழங்கிச் சேற்றூர்ச் சுப்பிரமணியக் கவிராயரிடம் தணிகைப் புராணத்

தைப் பாடங்கேட்டார். திருப்பாதிரிப்புலியூர் ஞானியாரடிகளிடம் பிரபுலிங்க லீலையைக் கற்றார். அந் நூலைக் கற்கும் போது அடிகளார் இவருடைய உணவிற்காக வண்டிப்பாளையத்தில் செல்வராயிருந்த ஒரு செங்குந்த முதலியாரிடம் நாள்தோறும் மூன்றணாக் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்திருந்தார். கந்தசாமியார் அந்த மூன்றணாவுக்குங் கோயிற் சோறு வாங்கிச் சாப்பிட்டுக்கொண்டிருந்தார்.

தொல்காப்பிய இலக்கண நூலை நன்றாக ஆராய்ச்சி செய்து கற்றிருந்தார். எழுத்ததிகாரத்திற்கு நச்சினார்க்கினியர் உரையையும், சொல்லதிகாரத்திற்குச் சேனாவரையர் உரையையும் நன்கு கற்றுத் திருத்தஞ் செய்து வைத்திருந்தார். தொல்காப்பியச் சேனாவரையர் உரை இவருடைய திருத்தத்தோடு சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினரால் வெளியிடப்பட்டது.

சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய காப்பியங்களினும், புறநானூறு, அகநானூறு, கலித்தொகை, பத்துப்பாட்டு முதலிய சங்க நூல்களினும், திருக்கோவையார், பெரியபுராணம் முதலிய திருமுறைகளினும் நல்ல பழக்கம் உடையவர். தணிகைப் புராணத்தைப் படிப்பதிலும் அந்நூற் செய்யுளின் சுவையைப் பிறரிடங் கூறுவதிலும் இவருக்குத் தனி இன்பம் உண்டு. இந் நூலுக்குப் பல ஆண்டுகள் முயற்சி செய்து உரை யெழுதி வந்தார். சமயம் நேரும் போது அவ் வுரையைத் தக்க புலவர்களிடம் படித்துக்காட்டி அவர்களுடைய கருத்தை அறிந்து வந்தார்.

### பாடஞ் சொல்லுதல்

பாடஞ் சொல்லுங்கால் இடையில் மாணவர்கள் குறுக்கிட்டுக் கேள்விகள் கேட்டுத் தடை செய்யாமல் இருப்பார்

களாயின் தங்கு தடையின்றி ஆற்றொழுக்கைப் போல் தொடர்ந்து சொல்லிக்கொண்டே செல்வார். வேண்டிய இடங்களில் மேற்கோள் உரைப்பார். விளக்க வேண்டிய இடங்களில் நன்றாக விளக்குவார். மேற்கோள் கூறும் போது கையில் உள்ள பொருளை எடுத்துச் செலவழிப்பது போல் நன்றாகச் சொல்லுவார். ஆத்திசூடி முதல் பெருங் காப்பியம் வரையில் எல்லா நூல்களையும் நினைவில் வைத் திருந்து கையாள்வார். உரைகளில் மறுப்புக்களை எடுத்துக் கூறும் போது இவர் மறுப்புரை யாசிரியர் பக்கத்தில் சேர்ந்து கொண்டு, "இவர் மண்டையில் அடித்து வீழ்த்தி னர்" என்று கூறுவார் தமிழ் நூல்களில் வரும், சைவம், வைணவம், சமணம், பௌத்தம் முதலிய சமயக் கொள்கை களை நன்றாக விளக்கிச் சொல்லுவார். பழைய தமிழ் நாட்டுப் பழக்க வழக்கங்களையும், தாம் பிறர்பால் கேட் டறிந்த செய்திகளையும் சொல்ல வேண்டிய இடத்திற் சொல்லுவார். மாணவர்கள் கேள்வி கேட்டுத் தம்முடைய புலமையை ஆராய்ச்சி செய்கிறார்கள் என்று எண்ணிவிடுவா ரானால் பிறகு அவரிடம் இருந்து மாணவர்கள் மிகுந்த பயனை எதிர்பார்க்க முடியாது அவருக்குள்ள ஊக்கம் தடைப்பட்டு நின்றுவிடும். தாம் சொல்வதில் ஐயங்கொள் பவர்களைப் பார்த்துக், "குடலைப் பிடுங்கிக் காட்டினாலும் வாழைமட்டை என்று கூறுபவர்களிடம் நாம் செய்யக் கூடியது யாது?" என்று சொல்லி இரக்கங் கொள்வார்.

குண நலன்கள்

தமமைக் காணவருபவர்களிடம் இன்முகத்தோடும் புன்னகையோடும் உரையாடுவார். பழைய நண்பர்களைப் பார்ப்பதினும் தமக்குத் தெரிந்தவர்களுடைய நலன்களை உசாவியறிவதினும் மிகுந்த விருப்பம் உடையவர். தாம் பிறந்த பாண்டி நாட்டின் பெருமையையும் பழஞ்சிறப்பை

யும் பாராட்டிப் பேசுவார். தம்மினும் பெரியோரிடம் மிகப் பணிவாக நடந்து கொள்வார். தமக்கு உதவி செய்தவர்களை, "இவருக்கு என்னால் என்ன உதவி செய்யக்கூடும்? இந்நிலையில் எனக்கு உதவி புரிந்தாரே," என்று மற்றவர்களிடம் கூறுவார். இவருடைய உள்ளத்திலுள்ள மறைமுகமான செய்திகளை நெருங்கிய நண்பர்களால் கூட அறிந்து கொள்ள இயலாது. தாம் பிறந்த ஊர் குலம் முதலியவைகளை எவரிடமும் கூறார். தம்முடைய உறவினர்களை இவர் மதித்துப் பாராட்டியதில்லை. உறவினரல்லாத மற்றையோர்களைப் பார்ப்பதைப் போன்றே உறவினரையும் பார்த்தார். உறவினர்கள் இவரிடம் இருந்து உதவியை எதிர்பார்த்தனர். துறவிக்கோலத்துடன் விளங்கும் தமது பொருள் அவர்கட்குப் பெருக்கத்தினையளியாமற் போவதன்றி, ஏதத்தினை அளிக்குமோ எனும் எண்ணத்தால் இவர் அவர்கட்கு உதவி செய்வதில்லை. தம்மிடம் அன்பு பூண்டொழுகிய மாணவர்களைத் தம் மக்களைப் போலவே கருதி அவர்க்கு ஆவன செய்யத் தாமே முற்படுவார். எவரையும் அளவுக்குமேல் புகழ்ந்து பேசமாட்டார். மிகுந்த பொறுமை யுடையவர். சிறியோர்களால் தமக்கு ஏதேனும் தொல்லை நேருமோ என்னும் அச்சம் இவருக்கு எப்பொழுதும் உண்டு.

பழம் புலவர்களைப் பாராட்டுதல்

பழம் புலவர்கள் எவரையும் இவர் குறைவாகப் பேசமாட்டார். கொள்கைபற்றி ஒருவரை இகழ்ந்துரைத்தலும் புகழ்ந்துரைத்தலும் இவரிடம் இல்லை. உரையாசிரியர்களில் சேனாவரையர், நச்சினார்க்கினியர், பரிமேலழகர், பேராசிரியர் இவர்களைப் பாராட்டிப் பேசுவார். பிற்கால உரையாசிரியர்களில் சிவஞான முனிவர், திருத்தணிகை சரவணப் பெருமாள் ஐயர், விசாகப் பெருமாளையர் ஆகியவர்களைப்

புகழ்ந்து பேசுவார். தம்முடன் பழகி வந்த அரசஞ் சண்முகனாருடைய இலக்கணப் புலமையையும் அவர் திருக்குறளுக்கும் தொல்காப்பியச் சூத்திரங்களுக்கும் கூறும் நுட்பமான உரைகளையும் போற்றிப்பேசுவார். மேலும் அவர் மறைமலையடிகள், அம்பலவாணநாவலர் முதலிய புலவர்களோடு சொற்போர் புரிந்த திறமையையும் அடிக்கடி கூறுவார். சேற்றூர் சுப்பிரமணியக் கவிராயருடைய இலக்கியப் பேரறிவினை மிகுதியாகப் போற்றுவார். அவரை "நடமாடும் அகராதி" என்று பாண்டித்துரைத்தேவர் புகழ்வார் என்றும், தேவர் மதித்த புலவர்கள் மூவர். அவர்களில் இவர் ஒருவர் என்றுஞ்சொல்லுவார். மறைமலையடிகளாருடைய ஆராய்ச்சித்திறன், செய்யுளியற்றுந் திறன், உரைநடையெழுதுந்திறன், சொற்பெருக்காற்றுந் திறன் ஆகியவைகளை நன்கு புகழ்வார். மற்றும் பண்டித மணி, மு. கதிரேசச்செட்டியார், ரா. பி. சேதுப்பிள்ளை, ரா. இராகவ ஐயங்கார், விபுலாநந்த அடிகள் ஆகியோர்களையும் பாராட்டிப்பேசுவார். காலைக்கடன்களை முடித்தவுடன் நீர் உணவு அருந்துவார். மண்பானைச் சமையலையே பெரும்பாலும் விரும்புவார். மிகுந்த புளிப்பும் காரமுங் கூடா. இரவு உணவுக்குப்பின் பாலும் பழமுஞ் சாப்பிடுவார். பெரும்பாலும் நாள்தோறும் கோவிலுக்குச்சென்று கூத்தப்பிரானைப் போற்றுவார்.

கந்தசாமியார்

கந்தசாமியாரைப் புறக்கண்ணாற் பார்க்காதவர்கள் அகக்கண்ணாற் பார்க்குமாறு அவருடைய உருவ இயற்கையை இங்கு இயம்புவோம். இவர் மாநிறம் உடையவர். உடல் தகுந்த அளவாக அமைந்திருந்தது. அஃதாவது, பார்ப்பவர்கள் மெலிந்தவர் என்றோ தடித்தவர் என்றோ உரைக்கமுடியாது. முகம்பொலிவுடன் விளங்கியது. சிவக்

கண்மணி (உருத்திராக்கம்) ஒன்றைப் பட் [illegible] ல் [illegible] ந்திருப்பார். நெற்றியில் [illegible] யணிந்து சந்தனப்பொட்டு வைத்துக்கொள்வார். மடியில் திருநீற்றுப்பையும் பொடி டப்பியும் எப்பொழுதும் இருந்துகொண்டேயிருக்கும். இடையில் எட்டுமுழ வெள்ளை வேட்டியைக் கட்டிக்கொள்வார். பள்ளிக்குச் செல்லுங் கால் மூலைக்கச்சமாகக் கட்டிக்கொள்வார். நீண்ட சட்டையும் தலைப்பாகையும் மேலாடையும் அணிந்துகொள்வார். பள்ளிக்கூட நேரமல்லாதபோது வேட்டி கட்டியிருப்பதோடு துண்டு ஒன்றை மேலே போட்டிருப்பார்.

ஓய்வு பெற்றபின்

விடுமுறைக்காலங்களில் சோழவந்தானுக்குச் சென்று திண்ணி மடத்தில் தங்குவது இவருடைய பழக்கம். மடத்தில் நடைபெறுஞ் செயல்களையும் பார்ப்பார். பிற்காலத்தில் இவரை அம்மடத்திற்குத் தலைவராகச் செய்யவேண்டும் என்று பலரும் எண்ணியிருந்தனர். அவ்வாறு தங்குவதற்கு இவரும் விருப்பமுடையவராக இருந்தார். மேலும் அவ்வூர் மக்களுக்குத் தம்முடைய பொருளைக்கொண்டு கல்வித்தொண்டு செய்யவேண்டுமென்றும் எண்ணியிருந்தார். ஆனல் அவ்வெண்ணம் பிறகு மாறிவிட்டது. தாம் பிறந்த கூமாப்பட்டிக்கே சென்று அவ்வூர் மக்களின் முன்னேற்றத்தின்பொருட்டுக் கல்வித்தொண்டு செய்தல்வேண்டும் என்று முடிவுசெய்தார். அண்ணுமலைநகரில் இருந்தபோதே கூமாப்பட்டியில் நிலம் வாங்கினர். சிதம்பரத்தில் இருந்த தம் நூல்களையும் கூமாப்பட்டிக்கே கொண்டு போய்ச் சேர்த்தார்.

1942-ஆம் ஆண்டு டிசம்பர்த்திங்களில் அண்ணுமலைப் பல்கலைக்கழகத்தின் அலுவலில் இருந்து ஓய்வு பெற்ருர்.

சோழவந்தானையடைந்து கிண்ணிமடத்தில் சிலநாள் தங்கியிருந்தார். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தார் அளித்த உதவித்தொகை முதலிய பொருள்கள் அப்பொழுது கந்தசாமியாரிடம் இருந்தனவாம். அவ்வாறாகக் கந்தசாமியார் 1943-ஆம் ஆண்டு சனவரித்திங்கள் ஆறாம் நாள் இரவு மூன்றுமணிக்குத் திடீரென்று இவ்வுலக வாழ்வைத் துறந்தார். கீழே விழுந்து உடலில் காயம் உண்டானமையினால் சாதல் நேர்ந்ததென்று சிலரும், மார்படைப்பினால் மாண்டார் என்று சிலரும் செய்தியறிவித்தார்கள். உடல் அவ்விடமே அடக்கஞ் செய்யப்பட்டது.

## கo. நடேச முதலியார்

### தோற்றம்

திரிசிரபுரம் மலைக்கோட்டையில் 1891-ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் முப்பதாம் நாள் மு. நடேசமுதலியார் பிறந்தார். தந்தையார் பெயர் முனிசாமிமுதலியார். முனிசாமி முதலியார் தென்னார்க்காடு மாவட்டத்தில் வாழ்ந்திருந்து திரிசிரபுரத்தில் குடியேறியவர்.

இளமையில் கல்விகற்கத்தொடங்கி மெட்ரிகுலேஷன் வரையில் படித்துத் தேறினார். மெட்ரிகுலேஷன் தேர்வில் தேறியபின் திருச்சி மாவட்ட நீதிமன்றத்தில் வேலை பார்த்துவந்தார். ஓய்வுள்ள பொழுதுகளில் தமிழில் உள்ள சிறு நூல்களைப் படிப்பதினும் மற்றவர்கட்குப் பாடஞ்சொல்வதினும் கருத்துச் செலுத்தினார். தமிழ் நாட்டிற் சிறந்து விளங்கிய தமிழறிஞர்களிடத்திலும் திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் அடிகளிடத்திலும் அவ்வப்போது சென்று பல தமிழ் நூல்களைப் பயின்றுவந்தார்.

தமிழாசிரியர்

நீதிமன்றத்தில் வேலைபார்த்துவந்த இவர் தமிழ் நூல்கள் பலவற்றைப்பயின்று தேறியமையால் தமிழாசிரியராகத் தொழில்புரியத் தகுதிவாய்ந்தவரானார். 1919-ஆம் ஆண்டில் கல்லூரியில் தமிழ் ஆசிரியராக அமர்த்தப்பட்டார். தமிழாசிரியத்தொழிலை மகிழ்ச்சியுடன் பார்த்து வந்தார். உறையூர் வெஸ்லி கிறித்துவ சங்கப்பள்ளியில் சில சமயங்களிற் பாடம் போதித்துவந்தார். திருச்சியில் தனித் தமிழ்ச்சங்கம் ஒன்றை நிறுவி அதிற் பல அறிஞர்களைக்கொண்டு சொற்பொழிவு நடத்திவந்தார்.

சோசப் கல்லூரியில்

1927-ஆம் ஆண்டில் செயிண்ட் சோசப் கல்லூரியில் தமிழ் ஆசிரியராக ஏற்படுத்தப்பட்டார். ஹோலி கிராஸ் பெண் பள்ளிக்கூடத்திலும் தமிழ்ப்பாடம் கற்பித்துவந்தார். ஒருவர் தமது வாணாள் முழுவதும் நூல்களைப் படித்துக்கொண்டிருந்தாலுங்கூடக் கல்விக்கடலின் கரையைக்காண இயலாது. நடேசமுதலியார் கல்லூரிக்குச் சென்றபின் இடைவிடா ஊக்கத்துடன் மேலும் பல தமிழ் நூல்களைப் பயிலத்தொடங்கினார். மற்றவர்களையுந் தமிழ் படிக்குமாறு அடிக்கடி ஊக்கப்படுத்திக்கொண்டிருந்தார்.

கலைத்தொண்டு

அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சென்னைப் பல்கலைக் கழகம் ஆகியவைகளில் உறுப்பினரானார். பல தமிழ்த் தேர்வுகட்கும், புலவர் தேர்வுக்கும், மதுரைத் தமிழ்ச் சங்கத்தேர்வுக்கும் தேர்வு நடத்துபவராக இருந்தார். தமிழ்க் கலையை வளர்க்கும்பொருட்டு நூல்கள் எழுதும் பணியிலும் ஈடுபட்டார். தமிழ் இலவச வகுப்பு ஒன்றை ஏற்படுத்தினார். அதில் மாணவர்களுக்கும் மற்றவர்களுக்

கும் சங்க நூல்களைப் பாடஞ்சொன்னார். திருச்சி வா
யில் அவ்வப்போது இலக்
பல ஊர்களினும் உள்ள கழகங்கட(
பொழிவாற்றும் பணியையும் மேற்கொண்டிருந்தார்.

சிறு பருவத்தில் நல்ல உடற்கட்டு உடைய
விளங்கினார். உதைப்பந்தாட்டத்தில் மிகுந்த விருப்பம
உடையவர். எந்தக் கடினமான நூற்செய்திகளையும் கேட்
போர் மனதில் பதியுமாறு மிக எளிமையாகப் போதிக்குந்
தன்மை அமையப்பெற்றவர். சொற்பொழிவில் தளர்
வில்லாதவர். பேச்சுவன்மையும் எழுத்துவன்மையும்
உடையவர். எண்ணியவற்றை எண்ணியவாறே முடிக்குந்
திண்ணிய மனவலிமையுடையவர். நகைச்சுவை ததும்பப்
பேசும் நாவன்மையுடையவர். தம்முடைய உழைப்பினு
லேயே முன்னுக்கு வந்தவர்களில் இவரும் ஒருவர்.

இறுதி

இவர் 1942-ஆம் ஆண்டு டிசம்பர்த்திங்கள் பதின்
மூன்றும் நாள் தமது ஐம்பத்தொன்றும் அகவையில் இறை
வன் திருவடிநீழலை யெய்தினார்.

இயற்றிய நூல்கள்

1. திலகவதியார்
2. புனிதவதியார்
3. மேல் நாட்டுப் பேரறிஞர்
4. சிறுவர் கடமை

முதலியன இவரால் எழுதப்பெற்ற நூல்கள்.

## கக. இராகவையங்கார்

### பிறப்பு

பாஷாகவிசேகரர் ரா. இராகவ ஐயங்கார் தென்னவ ராயன் புதுக்கோட்டை என்னும் ஊரிலே நயித்துருவ காசிபகோத்திரத்திலே பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் இராமாநுச ஐயங்கார்.

### கல்வி

—— சமத்தானத்திலே அநநாளில் சிறந்த புலவராக விளங்கிய சதாவதானம் முத்துச்சாமி ஐயங்காருக்கு இராகவ ஐயங்கார் உடன்பிறந்தாளின் மகனுவர். இராகவ ஐயங்கார் தம்மாதுலரிடம் தமிழ்க் கல்வியை நன்கு பயின்று செய்யுள் பாடுந்திறமை கைவரப்பெற்று விளங்கினர். வடமொழி ஆங்கிலம் முதலியவைகளையும் நன்கு கற்றுணர்ந்தார்.

### அவைக்களப் புலவர்

புலவராக மிளிர்ந்த இவர் பாஸ்கரசேதுபதி, அவர் மைந்தரான இராசராசேசுவர முத்து ராமலிங்க சேதுபதி, அவர் மைந்தரான சண்முக ராசேசுவர நாக நாத சேதுபதி ஆகிய மூன்று அரசர்களுடைய காலத்திலும் சமத்தானப் புலவராக வீற்றிருந்து அவர்களுடைய அவையைப் பெருமைப்படுத்தினர்.

### செந்தமிழ் ஆசிரியர்

பாண்டித்துரைத் தேவரால் மதுரைத் தமிழ்ச்சங்கம் அமைக்கப்பட்டபொழுது அச்சங்கத்தில் இருந்து 'செந்தமிழ்' என்னும் பெயருடன் பத்திரிகை ஒன்றும் வெளிப்படுத்துவதென்று முடிவாகியது. அப்பத்திரிகைக்கு முதலாவது ஆசிரியராக அமர்ந்து அதனைச் சிறந்த முறையில் நடத்தினர். அப்பத்திரிகையிற் சிறந்த ஆராய்ச்சிக் கட்டுரைகள் பலவற்றை எழுதி வெளிப்படுத்தினர்.

செந்தமிழ்ப் பத்திரிகையின் பிற்சேர்க்கையாக நூல்கள் பலவற்றை ஆராய்ந்து பதிப்பித்து வெளிப்படுத்தினார்.

பலவகைத் தொண்டுகள்

தம் ஆயுட்காலம் முழுவதும் தமிழ்ச்சங்கத்தின் செயல்முறைக் குழுவினருள் ஒருவராக அமர்ந்து தக்கவாறு செயலாற்றற்கு உதவி செய்தார். சங்கத்தின் தனித் தமிழ்த் தேர்வுகளுக்குத் தேர்வாளராக இருந்தார். பல ஆண்டுகள் சென்னைப் பல்கலைக் கழகத்துத் தேர்வாளராகவும் பாடப் புத்தகக் குழுவினருள் ஒருவராகவும் இருந்தார். அரசர் அண்ணாமலைச் செட்டியார் அமைத்த அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் தமிழாராய்ச்சித் துறைத்தலைவராகவும் தேர்வாளராகவும் அமர்ந்து தமிழ் வளர்ச்சிக்குத் தம்மால் இயன்ற தொண்டு புரிந்தார்.

கலைத்தொண்டு

வடமொழியில் உள்ள பகவத்கீதையையும் சாகுந்தல நாடகத்தையும் தமிழ்ச் சந்தப்பாக்களால் பாடினார். பாரி காதையை இனிய வெண்பாவாகப் பாடிப் பெரும்புலவர் பலரும் வியந்து பாராட்டுமாறு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் அரங்கேற்றினார். இதன்பொருட்டு அண்ணாமலைச் செட்டியார் ஐயங்காருக்கு ஆயிரம் வெண்பொற் காசுகள் நன்கொடை வழங்கினார். மற்றும் இராமாயண சாரம், புல்லையந்தாதி முதலிய நூல்களை இயற்றினார். இவர் பழந்தமிழ் இலக்கண இலக்கியங்களில் சிறந்த ஆராய்ச்சியுடைய இவர் தாஞ்சொல்ல எடுத்துக்கொண்ட செய்தியைக் கேட்டார்ப் பிணிக்குந்தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழிவதில் சிறந்த நாநலம் படைத்தவர்.

சிறப்புப் பெயர்கள்

இவருடைய பெரும்புலமையினை நன்குணர்ந்த மேலைச்சிவபுரி சன்மார்க்க சபையினர் இவருக்கு "மகா

வித்துவான்" என்னும் பட்டத்தை வழங்கினர். சென்னை வடமொழிப் பல்கலைக் கழகத்தார், "பாஷா கவிசேகரர்" என்னும் பட்டத்தைக் கொடுத்தனர்.

சிறப்பியல்பு

ஐயங்கார் பெரும்புலமைத் திறம் உடையவராகலின் அவையிலுள்ளோர் எப்பொருளைப் பற்றிப் பேசவிரும்பினும் அப்பொருளைப் பற்றி உடனே விரிவாகச் சொற்பொழிவாற்றும் ஆற்றல் அமையப்பெற்றவர். தாம் உண்மையென்று கண்டதை அஞ்சாது கூறி நிலைநாட்டும் மனவலியும் அறிவாற்றலும் அமையப்பெற்றவர். நூலாசிரியர்களின் ஆழ்ந்த எண்ணங்களை எளிதிலறிந்து மிகச் சுவைபெறப் பேசும் திறமையுடையவர். தமிழிற் கண்ட நயங்களை ஆங்கில நூலோடும் வடமொழிக்கருத்துக் களோடும் பொருத்தி அறிவுடையோர் வியக்கத்தக்கவாறு பேசுவார். தமிழில் செய்யுளியற்றல் உரைநடை எழுதுதல், ஆராய்ச்சி செய்தல், சொற்பொழிவாற்றல் ஆகிய எல்லாத்துறைகளினும் வல்லவர். சந்தப்பாக்களை இயற்றுவதினும் இவர் மிகவல்லவர். அறிஞர்கள் ஐயங்காரைப் பார்க்கச் சென்றால், ஐயங்கார் தமிழ் இலக்கண இலக்கிய நயங்களையும் தமிழின் பெருமையையுந்தான் மிகுதியாகப் பேசுவார். பொதுவான உலகியற் பேச்சுகளை ஐயங்கார் பேசுவது இல்லை. எவ்வளவு நேரமாயினுஞ் சரி இலக்கண இலக்கிய நயங்களைப் பற்றிப் பேசுவதற்கு இவர் சளைக்கவே மாட்டார்.

சிறந்த நூலாசிரியராகவும், உரையாசிரியராகவும், பத்திராசிரியராகவும், போதகாசிரியராகவும், பதிப்பாசிரியராகவும், ஆராய்ச்சியாளராகவும், சமய நூலறிஞராகவும்

சொற்பொழிவாளராகவும், பாவாணராகவும், மொழி பெயர்ப்பாளராகவும் எல்லாவகையானும் சிறந்து விளங்கிய இவர் 1946-ஆம் ஆண்டு ஜூலைத்திங்கள் பதினொன்றாம் நாள் வைகுந்த பதவியடைந்தார்.

1. புவியெழுபது
2. புல்லை யமகவந்தாதி
3. இராச ராசேசுவரக்கோவை
4. இராமாயண சாரம்
5. பகவத்கீதை தமிழ் மொழிபெயர்ப்பு
6. சாகுந்தல நாடகம் தமிழ் மொழிபெயர்ப்பு
7. பெரும்பாணாற்றுப்படை ஆராய்ச்சியும் உரையும்
8. கோசர்
9.
10. சேதுநாடுந் தமிழும்
11. பாரிகாதை
12. குறுந்தொகையுரை
13. தமிழாராய்ச்சித் தொகுதி
14. வஞ்சிமாநகர்

இன்னும் பல.

இவர் பதிப்பித்த நூல்கள்.

1. தொல்காப்பியப் பொருளதிகாரம் செய்யுளியல் நச்சினார்க்கினியர் உரையுடன்
2. ஐந்திணை ஐம்பது
3. கணு நூல்
4. இனியவை நாற்பது
5. நேமிநாதம்
6. பன்னிரு பாட்டியல்
7. திருநூற்றந்தாதி

முதலியன.

---

## கஉ. திரு. நாராயண ஐயங்கார்

*பிறப்பு*

திக்கெலாம் புகழுந் தென்பாண்டி நாட்டிலே மின்னார் தடமதில்சூழ் வில்லிபுத்தூருக்குத் தென்கிழக்கே ஏறக் குறையப் பத்துக்கல் தொலைவில் உள்ள எதிர்க்கோட்டை என்னுஞ் சிற்றூரிலே, பாரத்துவாச கோத்திரத்திலே ஆபத் தம்ப சூத்திரத்திலே, திருமாளிகையார் குடியிலே திரு. நாராயண ஐயங்கார் 1861-ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் முப்பத்தொன்றாம் நாள் வியாழக்கிழமை தோன் றினர். தந்தையார் பெயர் அப்பனையங்கார். தாயார் பெயர் செங்கமலவல்லியம்மையார்.

கல்வி

இளமைப்பருவச் சடங்குகள் யாவும் இவருக்குச் சிறப் பாக நடைபெற்றன. முறைப்படி கல்விப்பயிற்சியுந் தொடங்கப்பெற்றது. வடமொழி தென்மொழி இரண் டையுஞ் சிறிது கற்றார். மேலுங் கல்விகற்க விரும்பினர். அதற்கேற்ற நிலைமை அச்சிற்றூரிலே இல்லை. முகவையில் கல்விகற்றற்கு வாய்ப்பிருக்கிறதென்பதை அகவையிற் சிறியராக இருக்கும்போதே அறிந்தார். அங்குச்சென்று கல்விகற்க விரும்பினர். புறப்பட்டு இராமநாதபுரம் என இயம்பும் முகவையை அடைந்தார். அங்கு அப்பொழுது சதாவதானம் முத்துச்சாமி ஐயங்கார் என்பவர் புலவர் திலகராய் நிலவி நின்றார். அவரைக்கண்டு தந்நோக்கத் தைச் சாற்றினர். முத்துச்சாமி ஐயங்கார் நாராயண ஐயங் காருக்கு வேண்டிய உதவிகளையெல்லாஞ் செய்தார். அங்கு அப்பொழுது குறுநில மன்னராய் இலகிநின்ற பாற்கர சேதுபதிமன்னர், பாண்டித்துரைத் தேவர், கோட்டைச் சாமித்தேவர் முதலியவர்களையும் அறிமுகஞ் செய்துவைத்

தார். ஐயங்கார் மேற்கூறியவர்களுடைய உதவியைப் பெற்று அவர்களுடைய ஆதரவிலே கல்விகற்கத் தொடங்கினர். முத்துச்சாமி ஐயங்காரிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றார். பந்தல்குடி உப. வே. வித்துவான் வேங்கடாசாரியாரிடம் வடமொழி வியாகரணம் முதலியவைகளைக் கற்றார். முகவையில் இருந்த சித்தாந்திகோடு உப. வே. வித்துவான் சீனிவாசாச்சாரியரிடம் ஸ்ரீ பாஷ்யம், பகவத்விஷயம் முதலிய வைணவ சமய நூல்களைக் கற்றுத் தேறினர். வடமொழியை இவர் கற்றபோது சாமி ஐயங்கார் என்பவர் இவரோடு ஒருங்கு கற்றார். மற்றும் நாராயண ஐயங்கார் மந்திரம், மருத்துவம், காலக்கணிதம், தருக்கம் முதலிய எல்லாக் கலைகளையும் ஒருங்கு கற்றுத் தேறினர்.

ஆத்தானப்புலவர்

நாராயண ஐயங்காருடைய பலகலைப்புலமையையும் இருமொழித் தேர்ச்சியையும் நல்லொழுக்கம் முதலிய உயர் குணங்களையும் கண்டவர்கள் மிகவும் போற்றிப் பாராட்டினர்கள். சேதுமன்னரும் நாட்டு அதிகாரிகளும் இவரை மதித்தனர். பாலவனத்தம் பெருநிலக் கிழாராக விளங்கிய பாண்டித்துரைத்தேவர் இவரைத்தம்முடைய ஆத்தானப்புலவராக ஏற்றுக்கொண்டார்.

பாட்டு

ஆத்தானப்புலவரானபின் ஐயங்கார் பெரும்பாலும் பாண்டித்துரைத் தேவருடனேயே இருந்தார். ஒருநாள் வடமொழி வாணர் ஒருவர் பாண்டித்துரைத்தேவரிடம் வந்தார். வடமொழிச் சுலோகம் ஒன்றைக்கூறி அதன் பொருள், நயன் முதலியவைகளை விளக்கினர். ஐயங்கார் உடனே அச் சுலோகத்தைத் தமிழில்,

"வெங்களிறு பொங்கரவு மீப்பறவை யாப்புறலும்
செங்கதிர்வெண் திங்களாத் தீண்டுதலும்—தங்குபுகழ்
மிக்க வறிஞர் மிகவறிஞர் ஆதலுங்காண்
தக்க விதிவலிக்கண் சான்று"

என்னும் வெண்பாவாக விரைந்தியற்றிக் கூறினார். இதனைக் கேட்ட தேவர் ஐயங்காருடைய புலமையை வியந்து பாராட்டினார்.

சாதக சந்திரிகை

சாதக சந்திரிகை என்பது வடமொழியிற் சிறந்த ஒரு காலக்கணிதநூல். அதனைத் தமிழில் பெயர்த்து வெண்பாவாகப் பாடுமாறு பாண்டித்துரைத்தேவர் கூறினார். ஐயங்காரும் அவ்வாறே பாடிமுடித்தார். பிறகு அந்நூல் அறிஞர்கள் குழுமிய பேரவைக்கண் அரங்கேற்றப்பெற்றது. புலவர்கள் ஐயங்காருடைய மொழிபெயர்ப்புத் திறமையைப் பாராட்டினார்கள். பிறகு அந்நூல் பாண்டித்துரைத்தேவரால் அச்சியற்றி வெளிப்படுத்தப்பட்டது.

பன்னூற்றிரட்டிற்கு உதவி

பாண்டித்துரைத்தேவர் செந்தமிழ் இலக்கியங்களிலுள்ள அறநெறிப்பாடல்களையெல்லாம் ஒன்றுபடுத்திப் பொருட்கோவைசெய்து ஒரு நூலாக வெளியிட எண்ணினார். இதற்கு ஐயங்காருடைய துணை பேருதவியாக

கல்லூரி ஆசிரியர்

பாண்டித்துரைத்தேவர் 1901-ஆம் ஆண்டில் மதுரைத் தமிழ்ச்சங்கத்தை அமைத்தார். சங்கத்தின் சார்பாகக் கல்லூரியொன்றும் நிறுவப்பட்டது. அக்கல்லூரிக்குத் தலைமையாசிரியராக இருத்தற்குத் தகுதிவாய்ந்தவர் ஐயங்காரே என்று முடிவுசெய்த தேவர் இவரைத் தலைமையாசி

ரியராக ஏற்படுத்தினர். ஐயங்கார் அக்கல்லூரியில் தமது இறுதி நாள்வரை ஏறக்குறைய நாற்பத்தாறு யாண்டுகள் தலைமையாசிரியராக இருந்து எண்ணற்ற தமிழ்ப்புலவர் களை உண்டாக்கினர். இவர்பாற் கல்விகற்ற மாணவர்கள் சிறந்த ஆசிரியராகத் திகழ்ந்து புகழுடன் விளங்குகின் றனர்கள்.

சங்க மேலாளர்

ஐயங்கார் தமிழ்ச்சங்கக் கல்லூரியின் தலைமையாசிரிய ராக இருந்ததுடன் தேவருடைய கட்டளைப்படி சில ஆண் டுகள் சங்கத்தின் மேலாளராகவும் அமர்ந்து சங்கச் செயல் களைச் சீரியமுறையில் நடத்தினர்.

செந்தமிழாசிரியர்

1910-ஆம் ஆண்டுமுதல் செந்தமிழ்ப் பத்திரிகையின் ஆசிரியர் பணியையும் மேற்கொண்டு செந்தமிழ்ப் பத்திரி கையை நன்முறையில் நடத்தினர். அக்காலத்தில் இவர் எழுதிய கட்டுரைகள் பல. அக் கட்டுரைகள் செந்தமிழ்ச் சிறப்பு, இலக்கண இலக்கியமாண்பு, தருக்கம், காலக்கணி தம், வரலாறு ஆகியவைகளின் வளர்ச்சி முதலியவைகளை அடிப்படையாகக்கொண்டு விளங்கின. இவருடைய கட்டு ரைகள் இனிய நடையில் அமைந்து எல்லோருக்கும் எளி தில் விளங்கும் தன்மையுடையனவாக விளங்கின. சொற் போர் முறையில் எழுதப்பட்ட கட்டுரைகள் ஆசிரியருடைய பல்கலைத்தேர்ச்சியையும், நடுநிலை பிறழாத சொற்போர் நேர்மையையும், உண்மையினை எவர்க்கும் அஞ்சாது எடுத் துரைக்கும் திண்மையையும் நன்கு விளக்கின. சொற் போர் முறையில் இவர் நுழைவின் வெற்றி தோல்விகளை ஒரு பொருட்படுத்தார். உண்மையை உள்ளவாறு உல கிற்கு உணர்த்தவேண்டும் என்பதே இவருடைய உயரிய

நோக்கமாக விளங்கும். சொற்போர் முறையில் ஈடுபட்டு எழுதுங்கால் மற்றையோர்க்குத் தாழ்வும் மனவருத்தமும் ஏற்படத்தக்க வகையில் எழுதமாட்டார்.

நூற்பணி

இவர் நூல்களை ஆராய்ந்து திருத்திச் சீரிய முறையிற் பதிப்பிக்கும் தமிழ்நூற்பணியையும் மேற்கொண்டிருந்தார். அநுமானவிளக்கம், பாண்டியம், மாறனலங்காரம், பழமொழி முதல் இருநூறு உரையுடன், அண்டகோள விருத்தி, அமிருத ரஞ்சினி முதலிய நூல்களைத் தக்கவாறு ஆராய்ந்து குறிப்புரை முதலிய சிறப்புரைகளுடன் செந்தமிழ் வெளியீடாக வெளிப்படுத்தினர். இந் நூல்கள் நந்தமிழ் மொழிக்கு அணிசெய்வன வாயின.

சிறப்புப் பெறுதல்

தமிழ்ச் சங்கக் கல்லூரி ஆசிரியத்தொழில், செந்தமிழ் ஆசிரியத்தொழில், பதிப்பாசிரியத்தொழில் ஆகியவைகளால் தமிழ்மொழிக்கு ஐயங்கார் அரும்பெருந்தொண்டு செய்துகொண்டு வருதலைச் செந்தமிழ் உலகம் கருத்தூன்றிக் கவனித்துக்கொண்டேயிருந்தது. ஐயங்கார்க்குத் தக்கவாறு கைம்மாறு செய்யமுடியாமற் போயினும் ஏதேனும் ஒரு சிறிதாயினும் உதவி செய்யவேண்டுமென்று எண்ணமிட்டுக்கொண்டிருந்தது. 1922-ஆம் ஆண்டில் சனவரித் திங்கள் பதின்மூன்றும் நாளில் வேல்ஸ் இளவரசர் சென்னைக்கு வந்தபோது அவருடைய கையால் சென்னை அரசாங்கம் இரண்டு சால்வைகளும் சிங்கமுகத்தோடாவும் பதக்கமும் பரிசளிக்கச் செய்து மேன்மைப்படுத்தியது. பவ ஆண்டு ஆடித்திங்கள் முப்பத்தொன்றும் நாள் நிகழ்ந்த சங்கத்தின் முப்பத்து மூன்றும் ஆண்டு விழாவில் மதுரைத் தமிழ்ச் சங்கத்தார்

ஆயிரத்தைந்நூறு வெண்பொற்காசுகளடங்கிய பணமுடிப்பும் வழங்கிப் பெருமைப்படுத்தினர். தமிழ்ச் சங்கத்தின் தலைவரும் சேதுவேந்தருமான பெருமை தங்கிய சண்முக ராசேசுவரநாகநாத சேதுபதியவர்கள் தம் முப்பத்தேழாம் ஆண்டு நிறைவு விழாவில் பொற்பதக்கமும் பட்டும் பரிசு கொடுத்துப் பாராட்டினார்கள். பாண்டித்துரைத் தேவரின் உடன்பிறந்தவராகிய கோட்டைச்சாமி தேவரின் மகனாகிய இராமச்சந்திரதேவர் ஒருசமயம் இரண்டு சால்வைகளும் இருநூறு வெண்பொற் காசுகளும் வழங்கினார்.

சங்கத்தில் பற்று

இவர் விரும்பியிருந்தால் மிக உயர்ந்த ஊதியத்தில் பிற கல்லூரிகட்கு ஆசிரியராகச் சென்று சிறப்புப் பெற்றிருக்கலாம். தமிழ்ச் சங்கத்தினிடத்தில்கொண்ட பற்றுக் காரணமாக இறுதிவரை தமிழ்ச் சங்கத்திலேயே தொண்டு செய்துகொண்டிருந்தார். இவர் மதுரைத் தமிழ்ச் சங்கத் தேர்வுகட்குப் பொறுப்பாளராக இருந்ததோடு பிறகல்லூரிகளின் தேர்வுக்காரியங்களிலும் ஈடுபட்டு உதவி செய்தார். இவருடைய அருமைத் திருமகன். டி. என். அப்பனையங்காரும் சிறந்த புலவராக விளங்குகிறார்.

இறுதி

நீண்டகாலம் தண்டமிழ்த் தொண்டு செய்திருந்த இப்பெரியார் தமது எண்பத்தாறும் அகவையில் 1947-ஆம் ஆண்டு ஜூலைத்திங்கள் இருபத்தொன்பதாம் நாள் செங்கண்மாலின் திருவுலகப் பேறுற்றார்.

---

# கந. இரமண மகரிஷி

*பிறப்பு*

மதுரை மாவட்டத்திலே உள்ள திருச்சுழி என்னும் சிற்றூரில், 1879-ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் இருபத்தொன்பதாம் நாள் இரவு ஒரு மணிக்கு இரமண மகரிஷி பிறந்தார். தந்தையார் பெயர் சுந்தரம் ஐயர். தாயார் அழகம்மையார். இரமண மகரிஷிக்கு இடப்பட்ட பிள்ளைப் பெயர் வேங்கடராமன்.

வேங்கடராமன் உள்ளூர்ப் பள்ளிக்கூடத்தில் சில காலம் படித்தார். பிறகு திண்டுக்கல் சென்று அங்கு ஓராண்டு ஐந்தாவது வகுப்பிற் படித்தார். பிறகு மதுரையை அடைந்து ஸ்காட்ஸ் மிடில் பள்ளியிலும், இறித்துவ சங்க உயர்நிலைப் பள்ளியிலும் படித்தார். பள்ளியிற் படித்தகாலத்தில் மற்றைய மாணவர்களைப் போலவே வேங்கடராமனும் பொதுவான நிலையில் இருந்தார். அகவை பதினாறு நிரம்பும் வரையில் படிப்பில் கழிந்தது.

*அருணையை அறிதல்*

1895-ஆம் ஆண்டில் வேங்கடராமனுடைய உறவினர் ஒருவர் மதுரைக்கு வந்தார். அவரைப் பார்த்த வேங்கடராமன், "எங்கிருந்து வருகிறீர்?" என்று உசாவினர். அவர், "அருணாசலத்தில் இருந்து வருகிறேன்," என்று மறுமொழி கூறினார். அருணாசலம் என்னுஞ்சொல் வேங்கடராமனுக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. பெரியபுராணம் முதலிய நூல்களை வேங்கடராமன் படித்தார். அதனாலும் உள்ளத்திலே சிறிது மாறுதல் ஏற்பட்டது. அவருடைய மனம் மெய்ஞ்ஞானியின் உள்ளத்தைப்போல் மாறத்தொடங்கியது.

ஆன்ம உணர்ச்சி

வேங்கடராமருக்கு நாள் தோறும் ஆன்ம உணர்ச்சி முற்பிறப்பின் நல்வினைப் பயனால் வளர்ந்துகொண்டு வந்தது. வேங்கடராமனுடைய மாறுதலை உறவினர்கள் கண்டார்கள். இப்படி ஞானியைப் போல் காணப்படு ன என்று கவலைபபட்டுகெகாண்டிருந்தனர். படித்துக் கொண்டிருந்த வேங்கடராமன் ஒருநாள் புத்தகங்களை மூலையில் வீசிவிட்டு திட்டையில் அமர்ந்துவிட்டார். வேங்கடராமனுக்கு அண்ணனும் தம்பியும் இருந்தனர். அண்ணனுடைய பெயர் நாகசாமி. தம்பியாகிய வேங்கடராமன் திட்டையில் இருப்பதைப் பார்த்த நாகசாமி சினங்கொண்டார். தம்பியைப் பார்த்து, "என்னடா பெரிய ஞானியைப் போல் இருக்கிறாய்? இப்படி இருப்பவனுக்குப் படிப்பெல்லாம் எதற்கு?" என்று கடிந்துகொண்டார்.

அருணையைப் பற்றிக் கேள்விப்பட்டது முதல் வேங்கடராமனுடைய உள்ளம் அருணையையே பற்றிக்கொண்டிருந்தது. வீட்டைவிட்டு வெளியேறி அருணைக்குச் சென்று விடுவதென்று முடிவுசெய்தார். "பள்ளிக்கூடத்தில் இன்று தனி வகுப்புக்குப் போய்விட்டு வருகிறேன்," என்றார். தமையனார். "போய்வா. என்னுடைய பள்ளிக்கூடச் சம்பளத்தையும் கட்டிவிட்டுவா; பெட்டியில் பணம் இருக்கிறது ஐந்து ரூபா எடுத்துக்கொண்டு போ," என்றார். வேங்கடராமன் தேசப்படத்தை எடுத்துத் திருவண்ணாமலை எங்கிருக்கிறது என்று பார்த்தார். திண்டிவனத்திற்கு மேற்கே இருக்கிறது. திண்டிவனத்தில் புகை வண்டியைவிட்டு இறங்கி நடந்துசெல்லுதல் வேண்டும், மூன்றுரூபா போதும் என்று முடிவுசெய்தார். அதற்குள் பணம் இவரிடம் வந்து சேர்ந்தது. தாம் வீட்டைவிட்டுப்

புறப்படுஞ் செய்தியை ஒரு கடிதத்தில் எழுதினர். இரண்டு ரூபாயையும் கடிதத்தையும் கண்பார்வைக்கு எளிதாக அகப்படக்கூடிய இடத்தில் வைத்துவிட்டு வீட்டைவிட்டுப் புறப்பட்டார்.

### திண்டிவனத்திற்குச் சீட்டு

திண்டிவனத்திற்குப் புகைவண்டிச் சீட்டுப்பெற்றுக் கொண்டு வண்டியில் ஏறினர். வெகுதொலை சென்ற பிறகு வண்டியில் இருந்த ஒருவர் வேங்கடராமனிடம் பேச்சுக் கொடுத்தார். அவரோடு உரையாடிக்கொண்டிருந்த வேங் கடராமன் "திண்டிவனம் புகைவண்டி நிலையத்தில் இருந்து திருவண்ணமலை எத்தனைகல் தொலைவு இருக்கும்?" என்று உசாவினர். அந்த நண்பர், "திருவண்ணமலைக்குச் செல் வதற்குத் திண்டிவனஞ் செல்லவேண்டியது இல்லை என்றும், விழுப்புரத்தில் இருந்து புகைவண்டியிலேயே திருவண்ணமலைக்குப் போகலாம்," என்றுந் தெரியப்படுத் தினர். பிறகு வேங்கடராமன் விழுப்புரத்தில் இறங்கினர். கால் நடையாகவே நடந்துபோய்விடலாம் என்று முடிவு செய்தார். சிலதொலை நடந்து சென்றார். பிறகு ஓர் ஊரில் தமது காதில் அணிந்திருந்த கடுக்கனைக் காமக்கி ஒருவரிடத்தில் அடகுவைத்துச் சிறிதுதொகை கடன் பெற்றுக்கொண்டு புகைவண்டியேறித் திருவண்ணமலையை அடைந்தார்.

### அருணையில் தவம்

திருவருணையை அடைந்த வேங்கடராமன் அருண சலப் பெருமானைக் கண்டு போற்றிப் பணிந்தார். கோவிலை விட்டு வெளியே வந்தார். நாவிதன் ஒருவன் எதிர்ப் பட்டான். "தலையை மொட்டையடித்துவிடவா?" என் றான். எல்லாம் அருணசலப்பெருமான் திருவிளையாடல்

என்று எண்ணிக்கொண்டே வேங்கடராமன் தலையை மயிர்களைந்து மொட்டையடித்துக்கொண்டார். இடையில் கட்டியிருந்த வேட்டியை அவிழ்த்து ஒரு கோவணங் கிழித்துக்கட்டிக்கொண்டார். எஞ்சியிருந்த பொருளைத் துணியில் முடிந்து தொலையில் வீசினார். ஆன்மாவுக்குத் தீட்டில்லை. அஃது எங்கும் நிறைந்துள்ளது. இவ்வுடலோ மண்ணில் இருந்து உண்டாகிறது. மண், நீர், தீ, காற்று, வான் என்பவைகள் எங்குமுள்ளதாய்த் தீட்டற்றபொருள் களாய் விளங்கும்போது இவ்வுடலுக்குமட்டும் எவ்வாறு தீட்டு ஏற்படும் என்று முடிவுசெய்து நீராடலையும் விட்டார். கோயில் மண்டபம், தோப்பு, மலை முதலிய விருப்ப மான இடங்களில் அமர்ந்து பல ஆண்டுகள் தவம் புரிந்தார். பழம்பிறப்பின் தவக்குறைவால் தோன்றிய இவர் எந்த ஆசிரியரையும் அடுத்ததாகவும் அருளுரை பெற்றதாகவும் தெரியவில்லை. அருணாசலக் கடவுளையே ஆசிரியராகவும் மற்ற எல்லாமாகவுங் கொண்டார். சில ஆண்டுகளில் இவருடைய தவம் சிறந்து விளங்கி மெய்யறிவாகிய பயனை வழங்கத்தொடங்கிவிட்டது.

மாணவர் குழாம்

வேங்கடராமனின் தவப்பெருமை நாளடைவிற் சிறிது சிறிதாக எங்கும் பரவத்தொடங்கிவிட்டது. இவருடைய இருப்பிடத்தை யறிந்த உறவினர்களும் இவரை வந்து பார்த்துச் சென்றனர். காவியகண்ட கணபதிசாத்திரி, சேஷையர், உத்தண்டிநயினார் முதலிய பலர் இவரை வணங்கித் தங்கள் ஐயங்களைப் போக்கி மெய்யறிவு பெற்றனர் காவியகண்ட கணபதிசாத்திரி வேங்கடராமனுக்கு "இரமண மகரிஷி" என்று பெயர் சூட்டினர். அதுமுதல் "இரமண மகரிஷிகள்" என்னும் பெயரே யாண்டும் வழங்கத்தொடங்கியது. இவர் அடியார்கட்கு அருளிய மெய்

யறிவுரைகள் ஒன்று திரட்டப்பட்டு நூல் வடிவாக்கப் பட்டன. தவத்தாற் சிறப்புற்ற இவரிடம் மக்கள் கூட்டம் மிகுதியாக வந்து அருள்பெற்றதன்றி மலையிலும் மலைப் பக்கங்களிலும் வாழ்ந்திருந்த அஃறிணைக் கூட்டங்களாகிய குரங்கு முதலியவைகள்கூட அருள்பெற்றுச் சிறப்படைந் தனி.

ஆசிரமம்

இரமணரின் தாயாராகிய அழகம்மையார் இளவலாகிய நிரஞ்சனானந்தர் முதலியோர் இவரையே பற்றுக் கோடாக அடைந்து பணிபுரிந்தனர். தாயார் காலமானவுடன் அவ்வம்மையார் உடலை மலைக்குத் தென்பால் உள்ள ஓர் இடத்தில் அடக்கஞ்செய்து இரமண மகாரிஷிகளும அவ்விடமே தங்கலானார். அதுமுதல் அந்த இடம் பெருஞ் சிறப்புடன் விரிவடைந்து ஒரு சிற்றூராகவே மாறிவிட்டது. சென்னைக் கவர்னராக இருந்த பவநகர் மன்னர், இராசேந்திரபிரசாத், இராசகோபாலாச்சாரியார், மேல் நாட்டினர் பலர் ஆகியோர் இரமணரின் பெருமையை உணர்ந்துவந்து போற்றி அருள்பெற்றனர். மேல்நாட்டினர் இரமணரின் பெருமையைப் பத்திரிகைகளின் வாயிலாகவும் நூல்களின் வாயிலாகவும் தம் நாடுகளினும் பரவச் செய்தனர். சில மேனாட்டினர் இரமணரின் மாணவர்களாகி ஆசிரமத்திலேயே தங்கியும் விட்டனர். இரமண மகரிஷியை உள்ளன்புடன் போற்றிய சிலர் மெய்யறிவு பெற்றனர். சிலர் நோய் நீங்கப்பெற்றனர்.

இரமணரின் மெய்யறிவு

முற்பிறப்பின் நல்வினையினால் இரமண மகாரிஷிகளுக்கு மெய்யறிவு இளம் பருவத்திலேயே உண்டாகிவிட்டது. இவருடைய உரைகள் ஒவ்வொன்றும் மெய்யறிவுக்கு வழி

காட்டியாயின. மக்களிடமும் மாக்களிடமும் இவர் மாறுபாடு காட்டவில்லை. ஆசிரமத்தில் புகுந்த கள்ளர்களிடமும் இவர் நல்லருளுடன் நடந்து கொண்டார். ஆசிரமத்தில் இருந்தவைகளில் வேண்டியவைகளை எடுத்துக்கொண்டு போகுமாறும் அன்புடன் மொழிந்தார். அறிவற்றவர்களாகிய அவர்கள் இவருடைய பெருமையை உணர்ந்து கொள்ளாமல் தடிப்பூசையும் வழங்கிவிட்டுச் சென்றனர். இரமணரைத் தடியால் தாக்கியவன் கை அன்றே நோய்க்குள்ளாகி அவன் வருந்திக் கதறும்படியாக ஆகிவிட்டது.

**நூல்கள்**

உலகப் புகழ்பெற்ற மெய்யறிவாளராக விளங்கிய இவர் அருள் நூல்கள் சிலவற்றையும் ஆக்கினார். அருணாசலப் பெருமான் மீது வணக்கச் செய்யுள்கள் பல பாடினார். விவேக சூடாமணி என்னும் நூலை எளிய உரைநடையில் எழுதினார். இவர் வெண்பா முதலிய பாக்களின் இலக்கணங் எங்நாள் உணர்ந்தனரோ தெரியவில்லை. ஆசிரமத்தில் இலக்குமி என்னும் பசு வீடு பேற்றை யடைந்த போது இரமணர்,

"சருவதா ரிப்பேர்கொள் சம்வச் சரத்து
வருமானி யைந்துசனு வாரம்—மருவுமுற்
பக்கத் துவாதசிவி சாகம் பசுவாமி
லக்குமிவி முக்தநா ளாம்."

என்னும் வெண்பாவைப் பாடினார். இவ் வெண்பாவை அப் பசுவின் சமாதியிலும் எழுதிவைத்துள்ளனர்.

1. அருணாசல சிவத்துதி
2. அருணாசல அட்சரமண மாலை
3. நான் யார்?
4. உபதேச நூன்மாலை
5. அநுவாத நூன்மாலை

6. விவேக சூடாமணி உரைநடை
7. அருண்மொழித் தொகுப்பு
8. ஆன்ம போதம்
9. இரமண கீதை

முதலியன இப் பெரியாரால் இயற்றியருளப் பெற்ற நூல்கள்.

இறுதி

இப் பெரியார், தம் தாயாரை அடக்கஞ் செய்த விடத்தில், திருக்கோயில் முதலியன அன்பர்கள் அமைத்தமையின் அவ்விடமே தங்கியிருந்து 1950-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் பதினன்காம் நாள் வெள்ளிக்கிழமை தமது எழுபதாவது அகவையில் வீடு பேற்றை யடைந்தார்.

## கூசு. சீநிவாச ஐயங்கார்

பிறப்பு

மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் துணைத் தலைவராகவும் புலவராகவும் வள்ளலாகவும் விளங்கியிருந்த தி. செ. சீநிவாச ஐயங்கார் சேது நாட்டிலே சிறந்து விளங்கும் திருப்புல்லாணி என்னும் ஊரிலே 1876-ஆம் ஆண்டு மேத் திங்கள் எட்டாம் நாள் [தாது ஆண்டு சித்திரைத் திங்கள் எட்டாம் நாள்] பிறந்தார். தந்தையார் பெயர் செல்லம் ஐயங்கார்.

கல்வி

இவர் இளம் பருவத்திலேயே தந்தையை இழந்தார். தொடக்கப் பள்ளியிற் சிறிது கல்வி கற்றபின் ஒன்பதாம் அகவையிலே இராமநாதபுரத்தை அடைந்தார். சேது மன்னர் உதவிபெற்றுக் கல்வி கற்கத் தொடங்கினர். இலக்குமி நரசிம்மபாரதியார் என்பவரிடத்தில் சில நாள்

பயின்றார். பிறகு சுவார்ட்ஸ் உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்து கற்றார். 1891-ஆம் ஆண்டில் மெட்ரிகுலேஷன் தேர்வில் தேறினார். பிறகு மேற்படிப்புப் படிக்கும் பொருட்டு மதுரைமாநகரை யடைந்து மதுரைக் கல்லூரியில் எப். ஏ. வகுப்பிற் சேர்ந்தார். நன்கு கற்று எப். ஏ. த் தேர்வில் தேறிப் பொற் பதக்கம் பரிசு பெற்றார்.

### தேர்வில் தவறுதல்

அந்நாளில் மதுரையில் பி. ஏ. படிப்புக்கு வாய்ப்பில்லாமல் இருந்தபடியால் திருச்சிராப்பள்ளியை அடைந்து செயின்ட் சோசப் கல்லூரியில் பி. ஏ. வகுப்பில் 1904-ஆம் ஆண்டிற் சேர்ந்தார். 1905-ஆம் ஆண்டில் தேர்விற்குச் சென்று எழுதினார். தமிழ்ப்பாடப் பிரிவில் மதிப்பீட்டெண் குறைந்தபடியால் தேறவில்லை.

### பாண்டித்துரையிடம் படித்தல்

பி. ஏ. தேர்வில் தோல்வியடைந்த இவர் மீண்டும் படித்துத் தேர்வு எழுத முடியாத நிலையில் இருந்தார். ஏதேனும் அலுவலை மேற்கொண்டு குடும்பத்தை நடத்தலாம் என்று முடிவு செய்தார். திருமணமும் ஆகியிருந்தது. ஆகவே தாலுகா அலுவல் நிலையத்தில் காலியாயிருந்த அலுவல் ஒன்றுக்கு விண்ணப்பம் போட்டார். அஃது எழுத்தாளர் வேலை. அப்போது பாண்டித்துரைத் தேவர் தாலுகா போர்டின் துணைத்தலைவராக இருந்தார். விண்ணப்பத்தைக் கண்ணுற்ற அவர் சீநிவாச ஐயங்காரை நேரில் அழைத்துப் பார்த்தார். உதவி செய்தால் உயர்ந்த நிலைக்கு வரக்கூடியவர் என்று உணர்ந்தார். மேலும் படிக்கும்படியும் தாம் உதவி செய்வதாகவும் கூறி உதவியளித்து ஊக்கினார். அன்றியும் தமிழில் நல்ல பயிற்சி யுண்டாகுமாறு பல நூல்களையும், பி. ஏ. தேர்விற்குரிய தமிழ்ப் பாடங்

களையுந் தாமே கற்பித்தார். பிறகு பி. ஏ. தேர்விற்குச் சென்று வெற்றி பெற்றார். மேலும் பாண்டித்துரையின் பொருளுதவி பெற்றுச் சென்னைமாகாணக் கல்லூரியிற் சேர்ந்து படித்துச் சட்டத் தேர்விலும் தேறினார்.

### வழக்கறிஞர்

பிறகு மதுரையை அடைந்து தம் உறவினரான கோபால ஐயங்கார் என்பவரை யடுத்து அவரோடு சேர்ந்து வழக்கறிஞர் தொழிற் பயிற்சி பெற்றார். பிறகு 1900-ஆம் ஆண்டு முதல் தாமே தனித்து வழக்கறிஞர் தொழிலை நடத்தி வந்தார். இவர் தம்முடைய நுண்ணறிவாலும் சட்ட நூற்பயிற்சியாலும் நீதிமன்றங்களில் திறமையாகச் சொற்போரிட்டு நீதித்தலைவர்கள் பொதுமக்கள் முதலி யோருடைய நன்மதிப்பைப் பெற்றார். தமிழ்நாட்டிலுள்ள நீதிமன்றங்களிலெல்லாம் இவருடைய பெயர் புகழ்பெற்று விட்டது. எனவே இவருடைய செல்வமும் வாழ்க்கைச் சிறப்பும் பெருகின.

### சங்கப்பணி

பாண்டித்துரைத் தேவர் 1901-ஆம் ஆண்டில் மதுரைத் தமிழ்ச்சங்கத்தை நிறுவினார். பாண்டித்துரைத் தேவர் தமக்குச் செய்த பேருதவிகளால் அவரிடத்திலே மிகுந்த பற்றுக்கொண்ட இவர் தமிழச்சங்க வளர்ச்சிக்கு உழைத்தலைத் தமது கடமையாகக் கொண்டார். முப்பது ஆண்டு களுக்கு மேல் சங்கத்தின் சிறப்புச் செயலாளராகவும், 1935-ஆம் ஆண்டுமுதல் தம் வாணாள் முழுவதும் சங்கத் துணைத்தலைவராகவும் இருந்து சங்கப் பணிகளை யெல்லாம் நன்றாகச் செய்தார். பாண்டித்துரைத் தேவருக்குப்பின் அச் சங்க வளர்ச்சியிலே கண்ணுங் கருத்துமாக இருந்து ஆவனபுரிந்தார்.

மாணவர்கட்கு உதவி

தம் முயற்சியால் பொருளீட்டிய இவர் எளியார் பலருக்கு உதவி செய்தார். மாணவர்கட்கு உண்டியும் உடையும் உறையுளும் புத்தகமும் பள்ளிக்கூடக் கட்டணமும் உதவினர். அவரவர் தகுதிக்கேற்றவாறு உதவி புரிந்தார். இவருடைய உதவியாற் பலர் வழக்கறிஞரானர்கள். பலர் பள்ளிகளில் ஆசிரியரானர்கள். பலர் பலவகையில் முன்னுக்கு வந்தார்கள்.

நூல் இயற்றல்

பாண்டித்துரைத் தேவர்பால் தமிழ் பயின்ற இவர் சிறந்த தமிழ்ப்புலமையுடையவராக விளங்கினர். வடமொழியில் உள்ள திருப்புல்லாணி மான்மியத்தைத் தெள்ளிய தமிழ் உரைநடையாக மொழிபெயர்த்து அச்சிட்டு வெளிப்படுத்தினர், கம்பராமாயணம் திருக்குறள் முதலிய நூல்களை நன்கு ஆராய்ந்து அவற்றின் சிறப்புக்களைக் குறித்து அவைகளிற் சொற்பொழிவு நிகழ்த்தினர். சிறந்த நூல்களைப் படித்துப் பத்திரிகைகளில் மதிப்புரை எழுதினர்.

புலவர் புகழ்ச்சி

புலவராகவும் புரவலராகவும் விளங்கிய இவர்மீது புலவர்கள் பலர் அவ்வக்காலங்களில் பலவகையான செய்யுட்களை இயற்றிவந்து பரிசில் பெற்றுச் சென்றனர். இவர்மீது இயற்றப்பெற்ற சித்திரகவிகளும் தனிப்பாடல்களும் பல. அன்றியும் நான்மணிமாலை, இரட்டைமணிமாலை, உலா முதலிய தனி நூல்களும் உள்ளன. அந்தணாளர்கள் வாங்குதலையன்றி வழங்குதலையுஞ் செய்யக்கூடியவர்கள் என்பதை உலகம் இவர்பால் கண்டுமகிழ்ந்தது.

பலவகைப் பணிகள்

இவர் தமிழ்நாட்டில் இருந்த சங்கங்கள் பலவற்றினும் இடம் பெற்றிருந்தார். இராமநாதபுரம் தாலுகா போர்டு, ஜில்லா போர்டு முதலியன இவருடைய தொண்டைப் பெற்றுச் சிறப்பெய்தின. மதுரை வழக்கறிஞர் சங்கத் தலைவராக இருந்தார். கலைக்கழகத்தின் தலைவராக இருந்தார். மதுரைநகர மன்ற நிருவாகிகளில் ஒருவராக இருந்தார். சென்னைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், திருப்பதி வேங்கடேசுரர் கோயில் நிருவாகக்குழு, கீழைத் திசைக்கழகம ஆகியவைகளில் உறுப்பினராக இருந்தார். 1920-ஆம் ஆண்டுமுதல் 1940-ஆம் ஆண்டுவரை மும்முறை சென்னை சட்டசபை உறுப்பினராயிருந்து அரசியற்பணியும் புரிந்தார். மதுரைத் தமிழ்ச்சங்கக் கலாசாலை மாணவர்க்கு 1914-ஆம் ஆண்டுமுதல் 1950-ஆம் ஆண்டுமுடிய 36 ஆண்டுகள் தீபாவளிக்கு உடை வாங்கிக் கொடுத்தார். 1918-ஆம் ஆண்டுமுதல் 1946-ஆம் ஆண்டு வரை சங்கக் கலாசாலையிற் கற்ற மாணவருள் ஒருவருக்கு உண்டி உடை முதலிய எல்லாச் செலவுக்கும் பெரும் பொருள் வழங்கினார். தமிழ்ச்சங்கத்திலுள்ள பாண்டியன் புத்தகசாலைக்கு 1123 புத்தகங்கள் வழங்கினார்.

இறுதி

இவ்வாறு சிறந்த தமிழ்த்தொண்டு புரிந்திருந்த இவர் தமது எழுபத்தைந்தாம் அகவையில் 1951-ஆம் ஆண்டு டிசம்பர்த்திங்கள் ஒன்பதாம் நாள் மண்ணுலக வாழ்வை நீத்து விண்ணுலக வாழ்வைப்பெற்றார். இவருடைய மறைவு பலருக்கும் பெருவருத்தத்தை யளித்தது.

---

## ௯. கரந்தைக் கவியரசு வேங்கடாசலம்பிள்ளை

### பிறப்பு

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச்சங்கத்தை வளர்ப்பதிற் கண்ணுங்கருத்துமாக இருந்த கரந்தைக் கவியரசு வேங்கடாசலம்பிள்ளை 1888-ஆம் ஆண்டில்-விய ஆண்டு மார்கழித் திங்கள் ஐந்தாம்நாள், கந்தருவ கோட்டைக்கு அண்மையில் உள்ள மோகனூர் என்னும் சிற்றூரில் யாதவகுலத்தில் தோன்றினார். தந்தையார் பெயர் அரங்கசாமிப்பிள்ளை.

### கல்வி

இளமைக்காலத்தில் கரந்தையில் இருந்த தூய பேதுரு பள்ளிக்கூடத்தில் கல்விபயின்றார். வேங்கடாசலம்பிள்ளை யோடு அந்நாளில் உடன்பயின்றவர்கள் பிற்காலத்தில் கரந்தைத் தமிழ்ச்சங்கத்தை ஏற்படுத்திய இராதா கிருட்டிணபிள்ளை, தட்சிணாமூர்த்திபிள்ளை முதலியோ ராவர். அந்நாளில் கரந்தையில் தமிழ்ப்புலமை வாய்ந்து விளங்கிய வேங்கடராமபிள்ளை என்பவரிடம் தமிழ்ப் பயின்றார். தந்தையார் காலமாகவே குடும்பத்தைப் பாதுகாக் கும் பொறுப்பு வேங்கடாசலம்பிள்ளைக்கு உண்டாகியது. தம் குடும்பத்தவர் மேற்கொண்டிருந்த உழவுத்தொழிலை மேற்கொண்டதுடன் ஊரின் கணக்கப்பிள்ளையாகவும், மணியக்காரராகவும் இருந்து பணியாற்றினார். ஆயினும் அடிக்கடி கரந்தைக்குச்சென்று நண்பர்களைக்கண்டு அளா வளாவிவந்தார். தூயபேதுரு கல்லூரியில் தமிழ்ப்புலவராக இருந்த சுப்பிரமணியஐயர் என்பவரிடம் தமிழ் பயின்றார். அவர்மீது, "ஆசாறுற்றுப்படை" என்னும் நூலையும் இயற்றி னார். அந்நாளில் கந்தர்வகோட்டையில், மன்னார்குடி ம. நா. சோமசுந்தரம்பிள்ளை போலீஸ் சப் இன்ஸ்பெக்டராக வேலைபார்த்துக் கொண்டிருந்தார். வேங்கடாசலம்பிள்ளைக்

கும், சோமசுந்தரம்பிள்ளைக்கும் பழக்கமும், நட்பும் ஏற்பட்டது. சோமசுந்தரம்பிள்ளை இலக்கணப்புலமை அமையப் பெற்றவர். அவருடைய பழக்கம் இவருடைய இலக்கண அறிவு வளர்வதற்குக் காரணமாயிற்று.

தமிழாசிரியர்

இலக்கண இலக்கிய அறிவு நன்கு அமையப்பெற்றவுடன் கணக்கப்பிள்ளை வேலை முதலியவைகளை விட்டார். தமிழாசிரியராக வேலைபார்க்கத் தொடங்கினார். இப்பொழுது கோநகர் எனவழங்கும் கோனுபட்டில் (கோனூர் பற்று) இருந்த கல்விநிலையம் ஒன்றில் வேலைபார்க்கத் தொடங்கினார். அங்குச் சில ஆண்டுகள் தங்கியிருந்தார். அப்பொழுது பண்டிதமணியின் நட்பும் இவருக்கு ஏற்பட்டது. மேலைச்சிவபுரி சன்மார்க்க சபையின் தொடர்பும் ஏற்பட்டது. உ. வே. சாமிநாதையர், ரா. இராகவஐயங்கார், அரசஞ் சண்முகனார், மு. இராகவஐயங்கார், அநந்தராமையர் ஆகியோர்போன்ற பெரும் புலவர்களின் பழக்கமும் ஏற்பட்டது. கவியரசரின் புகழ் சிறிது சிறிதாக எல்லா இடங்கட்கும் பரவத்தொடங்கியது.

கரந்தைக்கு வருதல்

கரந்தையில் தமிழ்ச்சங்கம் அமைக்கப்பட்டது. முதன் முறையாகக் கவியரசர் தமிழ்ச்சங்கச் சார்பில் அமைக்கப்பட்ட கல்விநிலையத்தில் ஆசிரியராகஅமர்ந்து சிலகாலம் வேலைபார்த்தார். இச்சமயத்தில் பண்டித. ந. மு. வேங்கடசாமிநாட்டாருக்கும் இவருக்கும் தொடர்பு ஏற்பட்டது.

பீட்டர்ஸ் உயர்நிலைப்பள்ளியில்

1922-ஆம் ஆண்டில் பீட்டர்ஸ் உயர்நிலைப்பள்ளி அதிகாரிகள் இவரைத் தம்பள்ளியில் ஆசிரியராக

அமர்த்தலாமா என்று எண்ணமிட்டார்கள். அதற்குரிய தகுதி இவரிடம் உண்டா இல்லையா என்பதை அவர்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆகவே அவர்கள் கவியரசரைப் பார்த்து, "தாங்கள் பண்டிதர், வித்துவான் முதலிய தேர்வுகளுக்கு எழுதித் தேர்வடைந்திருக்கிறீர்களா?" என்று உசாவினார்கள். உடனே கவியரசர் "நான் அப்படித் தேர்வு எதற்கும் எழுதித் தேர்ந்ததாக எனக்கு நினைப்பில்லை. எனக்கு இவ்வேலையை ஏற்கத் தகுதியுண்டா என்பதை நீங்கள் மதுரைத் தமிழ்ச்சங்கத்திற்கு எழுதித் தெரிந்து கொள்ளுங்கள்," என்று கூறிவிட்டுத் திரும்பினார். பள்ளி யதிகாரிகள், "கரந்தையில் உள்ள வேங்கடாசலம்பிள்ளை மதுரைத் தமிழ்ச்சங்கத் தேர்வுகளில் எழுதித் தேர்ச்சி பெற்றிருக்கிறாரா? அவர் பீட்டர்ஸ் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராக இருப்பதற்கு தகுதியுடையவரா?" என்று எழுதிக் கேட்டார்கள். மதுரைத் தமிழ்ச்சங்கத்தார், "வேங்கடாசலம்பிள்ளை தமிழ்ச் சங்கத் தேர்வுகள் எதிலும் எழுதவில்லை. ஆனால் ஒரு பெரும் புலவர். தமிழ்ச்சங்கத் தேர்வாளர் தலைவராக இருக்கிறார்," என்று மறுமொழி யனுப்பினார்கள். மறுமொழியைப்பார்த்த பள்ளியதிகாரி கள், ஆள் பெரிய ஆளாக இருக்கிறார். இதனை முன்னரே அறியாமற்போனோமே என்று எண்ணி அவரைத் தமிழாசிரியராக ஏற்படுத்தினார்கள். இவர் வேலையற்ற சமயத்தில் அங்கு வேலைபார்த்துக்கொண்டிருந்த பொன் னன்ன களத்தில்வென்றார் என்ற பெரும் புலவர் "நான் தலைமைத் தமிழாசிரியனாக இருக்கத்தக்க தகுதிவாய்ந்தவ னல்லன். வேங்கடாசலம்பிள்ளையே தலைமைத்தமிழாசிரிய ராக இருக்கத்தக்க தகுதி வாய்ந்தவர்" என்றுகூறித் தாம் கவியரசரின் கீழே வேலைபார்க்கத் தொடங்கினார்.

தெய்வச்சிலையார் உரை வெளியீடு

தொல்காப்பியம் சொல்லதிகாரத்திற்குத் தெய்வச் சிலையார் என்பவர் எழுதிய உரையொன்று இருந்தது. அதன் பிரதியை உ. வே. சாமிநாதையரிடம் இருந்து பெற்றுப் பரிசோதித்துக் கரந்தை தமிழ்ச்சங்க வெளியீடாக வெளிப்படுத்தினர்.

அரசர் கல்லூரியில்

1932-ஆம் ஆண்டில் கவியரசர் திருவையாற்றில் உள்ள அரசர் கல்லூரிக்குத் தமிழாசிரியராகச் சென்று அங்குப் பத்து ஆண்டுகள் வரை வேலைபார்த்தார். அரசர் கல்லூரியில் கல்விகற்ற மாணவர்கட்குக் கவியரசரின் பேரறிவு நல்விருந்தாக அமைந்தது. அங்கு வேலை பார்த்துக்கொண்டிருந்தபோதும் தஞ்சைக்கு வந்து கரந்தைத் தமிழ்ச்சங்கப்பணி, நாட்டாரோடு உரையெழுதும் பணி ஆகியவைகளையுஞ் செய்தார்.

அறுபதாம் ஆண்டுவிழா

1942-ஆம் ஆண்டில் திருவையாற்று அரசர் கல்லூரியினின்றும் ஓய்வுபெற்ற பிறகு கரந்தையில் தங்கிச் சங்கச் சார்பில் நிகழும் புலவர் கல்லூரியில் தொண்டு செய்யலானர். நாட்டார் தலைவராகவும் கவியரசர் துணைத்தலைவராகவும் இருந்து தமிழ்ப்பணி புரிந்தனர். பின்னர்த் தலைவராகவும் இருந்து பணிசெய்தார். அப்பொழுது இவருக்கு அகவை அறுபது நிரம்பியது. அறுபதாம் ஆண்டு நிறைவு விழாவைச் சிறப்பாகக்கொண்டாட வேண்டுமென்று நண்பர்கள் முயற்சி செய்தனர். அப்போது சங்கத்தலைவராக இருந்த ஆ. யா. அருளானந்தசாமி நாடார், சங்க அமைச்சர் நீ. கந்தசாமிப்பிள்ளை, திரு. அ. கணபதிப் பிள்ளை, திரு. அ. பொன்னண்ணு களத்தில்வென்றார்,

திரு. தட்சிணாமூர்த்திப்பிள்ளை முதலியோர் பெருமுயற்சி செய்து விழாவைச் சிறப்பாக நடத்தினார்கள். அப்பொழுது கவியரசருக்கு ஆறாயிரம் வெண்பொற் காசுகள் அன்பர்களிடமிருந்து திரட்டி வழங்கினர். கவியரசருக்குக், "கரந்தைக் கவியரசு" என்னும் சிறப்புப்பெயர் சங்க வெள்ளி விழாக் கூட்டத்தில் வழங்கப்பட்டது. அக்கூட்டத்திற்கு ஞானியாரடிகள் தலைமை தாங்கினார். பண்டிதமணி, கதிரேசன் செட்டியார் கவியரசுப் பட்டத்தை வழங்கினார்.

நகைச்சுவை

கவியரசர் மாணவர்கட்குப் பாடம் போதிப்பதில் பெருந்திறமைபெற்று விளங்கினார். மாணவர்கட்கு எளிதில் விளங்காத இலக்கணங்களையெல்லாம் கதைகளின் மூலம் விளக்கிவிடுவார். இவரிடம் நகைச்சுவை மிகுதியாக இருந்தது. எச்செய்தியுள்ளும் நகைச்சுவையைப் புகுத்திக் கேட்பவர்களை நகைக்கச் செய்துவிடுவார். இவர் கல்லூரிகளில் வேலைபார்த்தபோது மாணவர்கள் கருத்து முழுவதையுஞ் செலுத்தி இவர் கூறுவதைக் கேட்பார்கள். முதன்முதலாக இவர் வேலைபார்க்கச்சென்ற உயர்நிலைப் பள்ளி மாணவர்கள், இவர் வகுப்பில் பகடிசெய்து விளையாடிக் காலம்போக்கலாம் என்று எண்ணினார்கள். ஆனால் கவியரசர் தொடக்கத்திலேயே மாணவர்களுடைய அறிவை அறிவு வழியிலே திருப்பிவிட்டார்.

தெற்கத்தியான்

பள்ளி மாணவர்கள் கவியரசரின் ஊரைப்பற்றி ஆராயத் தொடங்கினார்கள். தெற்கேயுள்ள மோகனூர் என்று தெரியவே அவரைத் தெற்கத்தியான் என்று கேலிசெய்ய எண்ணினார்கள். ஒரு மாணவன் எழுந்து, "இவன் என்னைத் தெற்கத்தியான் என்று சொல்லுகிறான்" என்று

சொன்னான். கவியரசர் செய்தியை உணர்ந்துகொண்டார். அவர் உடனே பாடஞ் சொல்வதை நிறுத்திவிட்டு, "இங்குள்ள எல்லோருமே தெற்கத்தியார்கள்தாம். அஃது எப்படியெனில் தஞ்சைக்கு வடக்கேயுள்ள ஊர்க்காரர்கள் தஞ்சையில் இருப்பவர்களைத் தெற்கத்தியார் என்று தானே சொல்வார்கள். சென்னையில் இருப்பவர்களை அதற்கு வடக்கேயுள்ளவர்கள் தெற்கத்தியார்கள் என்று சொல்லலாமல்லவா? இப்படியே பார்த்துக்கொண்டு சென்றால் வடதுருவக்கோடியில் இருப்பவர்களைத் தவிர மற்ற எல்லோரும் தெற்கத்தியார்கள்தாம். உன்னைத் தெற்கத்தியான் என்று சொன்னவனும் ஒரு தெற்கத்தியான்தான். ஆகையால் அதுபற்றி நீ கவலைப்படவேண்டாம்," என்று கூறினார். மாணவர்கள் தங்கள் வாலை மடக்கிக்கொண்டார்கள்.

கருஞாயிறு

திருவையாற்று அரசர் கல்லூரியிலே ஆண்டுவிழா ஒன்று நடந்தது. அதில் பேச்சாளராக இருந்த ரெட்டியார் ஒருவர் தமிழ்மொழியை இன்று 'செந்தமிழ்' என்று வழங்குவதால் ஒரு காலத்தில் இத்தமிழ் கொடுந்தமிழாகத் தான் இருந்திருக்கவேண்டும். மலையாளம், கன்னடம், தெலுங்கு முதலிய மொழிகளால்தான் தமிழுக்குச் சிறப்புண்டாகிறது" என்று பேசினார். இக்கூற்று கவியரசருக்குப் பிடிக்கவில்லை. இறுதியில் இவர் எழுந்து, "சூரியனை இன்று 'செஞ்ஞாயிறு' என்று நாம் கூறுவதால் அஃது ஒரு காலத்தில் கருஞாயிறாகத்தான் இருந்திருக்கவேண்டும் என்று ரெட்டியார் அவர்களுடைய பேச்சால் உணர்ந்து கொண்டேன்," என்று கூறினார். அவையில் பலமான கைதட்டலும ஆரவாரமும் உண்டாயின.

*கரந்தையில் சாகை*

ஒரு நண்பர் கவியரசரைப் பார்த்துத் தங்கள் இருப்பிடம் எங்கே என்று கேட்க எண்ணினார். ஆனால் இவ்வாறு கேளாமல், "தங்களுடைய சாகை எங்கே?" என்று கேட்டார். சாகை என்றால் இறப்பு என்றும் இருப்பிடம் என்றும் பொருள்படும். இதனை எண்ணிய கவியரசர் "எனது சாகை கரந்தையில்தான்" என்று கூறினார். கரந்தைத் தமிழ்ச்சங்கத்திடத்தில் பெரும்பற்றுக்கொண்டிருந்த கவியரசர் வேறு எங்கும் சென்று சாதலை விரும்பவில்லை. அவர் விருப்பப்படியே கரந்தையில்தான் காலஞ்

சூட்டுப்போடுதல்

முதியவர் ஒருவர் கவியரசரிடம் நெருங்கிப் பழகிக் கொண்டிருந்தார். அவர் ஆங்கிலச் சொற்களையும் கலந்து பேசும் வழக்கமுடையவர். தமக்குப் பணங்கொடுக்க வேண்டிய ஒருவர் அதனைக்கேட்டதும் கொடாதபடியால் அவர்மீது வழக்குப்போட எண்ணினார். இதனைக் கவியரசரிடம் சொல்லியபோது நான் சூட்டுப்போடப் போகிறேன் என்றார். [சூட்டு என்றால் வழக்கு என்றும் காற்சட்டை என்றும் பொருள்படும்.] இதனைக்கேட்ட கவியரசர் அந்த நண்பரைப்பார்த்து, "நீங்கள் இவ்வளவு முதியவராக இருந்துகொண்டு சூட்டுப்போட்டால் அது பார்வைக்கு நன்றாக இராது. சூட்டுப்போடுதல் இளைஞர்கட்குத்தான் நன்றாக இருக்கும்." என்று கூறினார். உடனிருந்த கவியரசரின் மாணவர்கள் விழுந்து விழுந்து நகைக்கத் தொடங்கிவிட்டார்கள். முதியவருக்கோ அவர்கள் நகைப்பதன் காரணம் விளங்கவில்லை. ஒருவர் விளக்கிய பிறகுதான் விளங்கியது. அதன் பிறகு அவரும் விழுந்து விழுந்து நகைக்கத்தொடங்கினார்.

பணமுடையேன்

கவியரசர் எப்பொழுதும், அஃதாவது பணம் தாராளமாக இருக்கும்பொழுதும், செலவுக்கு இல்லாமல் இருக்கும் போதும், "பணமுடையேன், பணமுடையேன்," என்றே சொல்லிக்கொண்டிருப்பார். ஒரு நாள் ஒரு நண்பர், "உங்களுக்குப் பணம் இல்லையா? முடையாக இருக்கிறதா? நான் ஏதாவது செலவுக்குத் தரட்டுமா?" என்று கேட்டார். அதற்குக் கவியரசர், "வேண்டாம்; நான் இப்பொழுது பணம் உடையேனாகத்தான் இருக்கிறேன் வேண்டாம்," என்றார். வேறொரு சமயம், "பணமுடையேன்-பணத்திற்கு முடைப்படுபவனாக இருக்கிறேன்." என்று விரித்தார்.

கவியரசு

ஒருநாள் கவியரசர் சிலரோடு உரையாடிக்கொண்டிருந்தார். அவர்களைப்பார்த்து,"எனக்குக் கவியரசு என்று பட்டப்பெயர் கொடுத்திருப்பதைப் பார்த்து நான் கவி பாடுவதில் சிறந்தவன் என்று நீங்கள் எண்ணிவிடாதீர்கள். கரந்தைத் தமிழ்ச் சங்கத்தார் எனக்குக் கவியரசு என்று பட்டப்பெயர் கொடுத்ததற்கு இரண்டு காரணங்கள் இருக்கின்றன. முதலாவது காரணம்: எங்களுடைய மோகனூரில் கவிந்த அரசமரம் ஒன்று இருக்கிறது. நான் சிறு பையனாக இருந்தபோது அடிக்கடி அந்த மரத்தின் நிழலிற் சென்று அமர்ந்து படிப்பது வழக்கம். இதனைப் பார்த்திருந்த யாரோ கரந்தைத் தமிழ்ச்சங்கத்தினரிடம் இச்செய்தியைச் சொல்லிவிட்டார்கள். தமிழ்ச் சங்கத்தார், கவிந்த அரசு என்கிற அந்தப் பெயரையே எனக்குப் பட்டப்பெயராகக் கொடுத்துவிட்டார்கள். மற்றொரு காரணம் என்ன என்பீர்களாயின்: என் வகுப்பு மாணவர்கள் அடிக்கடி என்னைக் குரங்கு என்று கேலிசெய்வது வழக்கம். (கவி= குரங்கு) இதனை உணர்ந்திருந்த சங்கத்தார் பொதுவாகக்

குரங்கு என்று சொல்வது நன்றாக இராது; குரங்குகளுக் கெல்லாம் அரசு என்று சொன்னால்தான் நன்றாக இருக் கும் என்று முடிவு செய்து இப் பட்டத்தை வழங்கினார் கள்,'' என்பார். இதனைக் கேட்பவர்கள் விழுந்து விழுந்து நகைப்பார்கள். கவியரசரின் உரையாடல் பெரும்பாலும் இவ்வாறு நகைச்சுவை மிக்கதாகவே இருக்கும். வீட்டில் தம் வாழ்க்கைத் துணைவியுடன் உரையாடும்போதும் நகைச்சுவை ததும்புமாறே பேசுவது வழக்கம்.

பாடல்

கவியரசர் எளிதாகவும் இனிமையாகவும் விரைவாக வும் பாடுவார். இவருடைய தனிப்பாடல்கள் கேட்பதற்கு நன்றாக இருக்கும். கவியரசர் திருவையாற்றில் இருக்கும் போது கோபாலன் என்னும் மாணவன் ஒருவன் காவிரி யில் நீந்தி விளையாடித் திரிகையில் தண்ணீரில் அமிழ்ந்தி இறந்தொழிந்தான். அவனுக்கு இரங்கற்பாவாகவும் மாண வர்கட்கு அறிவுரையாகவும் கவியரசர்,

"நீரிலே தாவிமூழ்கி நீந்தியோ டித்திரிதல்
சீரிலாச் செய்கையெனச் செப்புங்கள்—பாரிலே
முன்னவன் சொல்லென்றே முந்துங்கள் என்றுமக்கே
சொன்னவன்கோ பாலனந் தோ"

என்னும் வெண்பாவைப் பாடினார்.

இல்லறம்

கவியரசர் செகதாம்பாள் என்னும் பெண்மணியைத் திருமணம்புரிந்து, "அன்பும் அறனும் உடைத்தாயின் இல் வாழ்க்கை, பண்பும் பயனும் அது,'' என்னும் திருவள்ளு வர் திருக்குறளுக்கோர் எடுத்துக்காட்டாக இல்லறத்தை இனிது நடத்திக் காட்டினார். இவருக்குச் சுப்பிரமணியன் என்னும் அருமைத் திருமகன் ஒருவன் தோன்றினான்.

இயற்றிய நூல்கள்

தமிழ்ப்பொழிலில் கவியரசர் அரிய கட்டுரைகள் பல எழுதினார். இவரால் எழுதப்பெற்ற நூல்கள்,

1. ஆசாற்றுப்படை
2. சிலப்பதிகார நாடகம்
3. மணிமேகலை நாடகம்
4. அகநானூறு உரை

முதலியன.

கவியரசர் தமது அறுபத்தேழாம் அகவையில் 1953-ஆம் ஆண்டு டிசம்பர்த்திங்கள் 16-ஆம் நாள் இவ்வுலக வாழ்வைத் துறந்தார். இக் கவியரசரிடங் கல்விகற்றவர்கள் பலர் இன்று சிறந்த நிலையில் உயர்ந்து விளங்குகின்றார்கள்.

## கசா. சிவகுருநாத பிள்ளை

தோற்றம்

ஈண்டிய புகழ்சேர் பாண்டிநன் னாட்டிலே, மட்டிலாப் புகழ்சேர் எட்டையபுரத்தில் சித்தாந்தப் பேராசிரியர் ந. சிவகுருநாத பிள்ளை 1873-ஆம் ஆண்டிற் பிறந்தார். தந்தையார் பெயர் நமசிவாயம் பிள்ளை. தாயார் பெயர் மகாலட்சுமியம்மை. இவர் தோன்றிய குடி வேளாண்குடி. இக் குடியினர் எட்டையபுரத்துக் குறுநில மன்னர்தம் அரண்மனையில் சித்த மருத்துவத் தொண்டு செய்யுந் [illegible]னர்.

கல்விப் பயிற்சி

சிவகுருநாதர் அகவை எட்டு நிரம்பும் வரையில் எட்டையபுரத்தில் தமிழ்க் கல்வி கற்றார். பிறகு ஒட்டப்

பிடாரம் என்னும் ஊரையடைந்து அங்குத் தம் உறவின ராகிய அறம் வளர்த்தநாத பிள்ளை என்பவர் நடத்திய ஆங்கிலக் கல்லூரியில் ஆங்கிலக் கல்வி கற்றார். அந்நாளில் இவரோடு ஒரே வகுப்பில் உடன் பயின்ற மாணவர்களுள் கப்பலோட்டிய தமிழன் என்று இப் பாரில் ஒப்பிலாச் சீர்த்திபெற்ற வ. உ. சிதம்பரனாரும் ஒருவராவர்.

தொழில்

1889, 1890, 1891-ஆம் ஆண்டுகளில் தூத்துக்குடியில் எஸ். ஏ. வி. பாடசாலையில் ஆசிரியராக அமர்ந்து தொண்டாற்றினார். நுண்மாணுழைபுலம் மிக்க இவருடைய அறிவாற்றல் அந் நாளிலேயே பல்லோராலும் புகழ்ந்து கொண்டாடப்பட்டது.

சமயக் கல்வி

சிவகுருநாதருடைய உள்ளம் சிவபெருமான்பால் அழுந்திய பற்றுடையதாக விளங்கியது. தந்தையார் பெயரோ நமசிவாயம். தம் பெயரோ சிவகுருநாதர். இவ் வாறாகவும் இவர் மனம் இறைவன்பால் ஏகாதிருக்குமோ? இறைவழிபாட்டை மிகுதியாகக்கொண்டார். தக்கார்பால் சமயதீக்கை சிவபூசை முதலியவைகளை வரன்முறையாகப் பெற்றார். தக்கார்பால் சிவப்பிரகாசம், சித்தியார் முதலிய சைவ சித்தாந்த நூல்களை முறைமையாகப் பயின்றார். ஒருமுறைக்குப் பன்முறை பயின்றார். உலகநூல் கல்வியால் ஏற்படும் பலன் மறுமைக்குப் பயன்படமாட்டாது. அறிவுநூற்கல்வியோ உயிரோடியைந்து மேன்மேலும் மேன்மையை அளிக்கும் விழுமிய பெருமை வாய்ந்தது. இதனை நன்குணர்ந்த சிவகுருநாதர் அறிவுநூற்கல்வியை நன்கு கற்றார்.

அச்சகத்தொண்டு

1892-ஆம் ஆண்டில் தூத்துக்குடியில் "சைவப் பிரகாசம் பிரசு" என்னும் அச்சகத்தை ஏற்படுத்தினர். 1944-ஆம் ஆண்டுவரை அதன் செயலாளராக இருந்து தொண்டு செய்தார்.

சோமசுந்தர நாயகர் தொடர்பு

சித்தாந்தத்தில் பற்றுக்கொண்ட சிவகுருநாதர் 1889-ஆம் ஆண்டுமுதல் தூத்துக்குடி சைவ சித்தாந்த சபையின் உறுப்பினராக அமர்ந்து தக்க பணிபுரிந்தார். சைவ சித்தாந்த சபையின் வளர்ச்சிக்கு இவர் புரிந்த தொண்டுகள் பல. இவருடைய உழைப்பினால்தான் அச் சபை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தோங்கிச் சிறப்படைந்தது. சென்னை சூளையில் சைவ சித்தாந்த சண்டமாருதமாக விளங்கிய சோமசுந்தர நாயகர் 1887-ஆம் ஆண்டில் சைவசித்தாந்த சபையின் ஆண்டு விழாவுக்குத் தலைவராக வந்து சைவசித்தாந்தப் பேருரை நிகழ்த்தினர். அந்தப் பேருரையைக் கேட்ட பிறகுதான் சிவகுருநாதர் சைவசித்தாந்தத்தைப் பற்றத் தொடங்கினர். சைவசித்தாந்த நூல்களைச் சிவகுருநாதர் கற்றுணர்ந்ததும் சோமசுந்தர நாயகரிடமே. சோமசுந்தர நாயகர் திருநீறு அணிந்து கண்மணிமாலை புனைந்து பழுத்த சிவக்கோலத்தினராகக் காட்சியளிப்பார். அக்கோலமே சிவகுருநாதருக்கும் அமைவதாயிற்று. நாயகர் சைவசித்தாந்தத்தில் பெரு வன்மையுடையவர். அவ் வன்மை சிவகுருநாதருக்கும் அமைந்ததில் வியப்பொன்றுமில்லை.

சித்தாந்தப் பேராசிரியர்

சைவ சித்தாந்த நூல்களில் தக்கவாறு பயிற்சி பெற்ற சிவகுருநாதர் தக்கார்க்குச் சைவ சித்தாந்த நூல்களைக்

கற்பிக்கும் ஆசிரியராகவும் மாறினர். சைவ சித்தாந்தம் நாடெங்கும் பரவவேண்டும்; மக்கள் சிவநெறியைக் கடைப் பிடித்தல் வேண்டும்; நம் சைவ நூல்களைத் தக்காங்கு போதித்து மக்களை விழிப்படையச் செய்யாமையால்தான் புறச் சமயத்தினர் நம் நாட்டுக்குள் நுழைந்து தம் சமயத்தைப் பரப்பிச் சைவ சமயத்தினை அழிக்கின்றனர் என்னும் செய்தியை நன்குணர்ந்த சிவகுருநாதர் மற்றைய சித்தாந்த ஆசிரியர்களைப் போலின்றிப் பரந்த நோக்கமுடையராய்ச் சமயத் தொண்டு புரிந்தார். சைவ நூற்பயிற்சிக்கு முன்னர் இலக்கண இலக்கியப் பயிற்சி இன்றியமையாததெனக் கொண்டு முதற்கண் பொதுஅறிவு வளர்தற்கான நூல்களைக் கற்பித்தார். பிறகு சிவஞானபோதம், சிவஞான சித்தியார், சிவப்பிரகாசம் முதலிய சைவ நூல்களையும் ஆண் பெண் என்னும் மாறுபாடின்றி இரு பாலார்க்கும் பயிற்றிவந்தார். நூல் முடியும் போது தக்கவாறு விழா முதலியன நடத்தி நூலின் பெருமையை எல்லோரும் உணர்ந்து கொள்ளுமாறுஞ் செய்தார்.

### சிறப்புப் பெயர்

சிவகுருநாதரின் சிந்தாந்தப் புலமையையும் போதிக்கும் முறைமையினையும் உணர்ந்த அன்பர்கள் சிவகுருநாதருக்குச் சிறப்புப் பெயர் வழங்க வேண்டுமென்று எண்ணினர். நெல்லை, மா. வே. நெல்லையப்ப பிள்ளை தலைமையில் தூத்துக்குடியில் கூடிய பேரவையில், “சித்தாந்த ஆசிரியர்” என்னும் பட்டம் வழங்கப்பெற்றது. சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கத்தார், “சித்தாந்தப் பேராசிரியர்” என்னும் பட்டத்தை வழங்கினர்.

### கழகத்தொண்டு

திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் நிறைவேற்றுக் கழக உறுப்பினராகப்

பத்தாண்டுகள் வரை அமர்ந்து நல்ல தொண்டுகள் செய்தார்.

சொற்பொழிவுத்தொண்டு

சிவகுருநாதர் தமது வாணாளில் நிகழ்த்திய சைவ சித்தாந்த விரிவுரைகட்குக் கணக்கு வழக்கே இல்லை. எவ்வெவ் விடங்களில் சைவப் பேரவைகள் உள்ளனவோ அங்கங்கெல்லாஞ் சென்று சொற்பொழிவாற்றித் தொண்டு செய்தார். இவருடைய பணியைப் பெறாத சைவப் பேரவை தமிழ் நாட்டில் இல்லை. 1936-ஆம் ஆண்டில் காஞ்சிமா நகரில் நடந்த சைவ சித்தாந்த மகாசமாசத்தின் முப்பத்தொன்றாம் ஆண்டு விழாவில் தலைமை தாங்கிச் சொற்பொழிவு நிகழ்த்தினார். பூவாளூர்ச் சைவ சித்தாந்த சங்கத்து இருபத்தேழாம் ஆண்டுவிழாவில் தலைமைதாங்கிச் சொற்பொழிவு நிகழ்த்தினார். 1938-ஆம் ஆண்டில் கொழும்புமாநகர் விவேகாநந்த சபையின் 25, 26-ஆம் ஆண்டுவிழாக்களில் தலைமைதாங்கிச் சொற்பொழிவாற்றினார். 1939-ஆம் ஆண்டில் காரைக்கால் சைவ சித்தாந்த ஆசிரமத்தின் ஐந்தாம் ஆண்டு விழாவில் தலைமை தாங்கிச் சொற்பொழிவு நிகழ்த்தினார்.

ஆராய்ச்சி

சிவகுருநாதர் சென்ற நாற்பது ஆண்டுகளில் பாடஞ் சொல்லிய காலங்களில் எழுதிவைத்த குறிப்புக்களைத் துணையாகக் கொண்டு 1941-ஆம் ஆண்டு மேத் திங்களில் திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் அறநிலையங்களுள் ஒன்றான தென்னிந்திய சைவ சித்தாந்த சங்கத்தின் சார்பில் நடந்த மெய்கண்ட சாத்திர மாநாட்டில், "சிவஞான சித்தியார் ஆராய்ச்சி" என்னும் பெயருடன் சொற்பொழிவு ஒன்று நிகழ்த்தினார். அச்

சொற்பொழிவு கழக அமைச்சர் திருவரங்கம் பிள்ளை முதலிய நல்லோர் பல்லோராலும் போற்றிப் பாராட்டப் பெற்றது. அதனை நூல்வடிவில் வெளிப்படுத்துதல் வேண்டும் என்றும் முடிவு செய்தனர். பிறகு 1949-ஆம் ஆண்டில் அச் சொற்பொழிவு நூல் வடிவாக வெளிவந்து சைவப் பெருமக்கள் பலராலும் போற்றப் பெறுகின்றது. சிவகுருநாதரிடம் இலக்கண இலக்கிய நூல்கள் சைவ சித்தாந்த நூல்கள் முதலியவைகளைப் பயின்ற மாணவர்கள் பலராவர்.

கட்டுரை

சிவகுருநாதர் கட்டுரை எழுதும் வன்மையும் அமையப் பெற்றவர். இவர் தாம் கண்ட புலவர்களைக் குறித்து ஓர் அரிய கட்டுரை எழுதிச் செந்தமிழ்ச் செல்வியில் வெளிப்படுத்தியதுடன் வேறு பத்திரிகைகளினும் கட்டுரைகள் வரைந்துள்ளார். இவருடைய உரைநடை இனிமையும் எளிமையும் அமையப் பெற்றது. மாதிரிக்குச் சிறிது காட்டுவாம்:

> "ஓரறிவுடைய தாவரமுதல் ஆறறிவுடைய மனிதன் ஈறாக எல்லா உயிர்களும் இன்பந்தரும் பொருளை அடைவதில் அவாவுடையனவாகக் காண்கின்றோம். அவற்றினுள்ளும் மனிதனே அதன்கண் மிக நாட்டமுடையவனாயிருத்தலையும் அறிகின்றோம். துன்பத்தினின்றும் நீங்கி இன்பத்தை யடைய விரும்புதல் ஏற்றதொன்றேயாம். ஆயினும் இன்பம் தரும் பொருள் எதுவெனவும், துன்பந் தரும் பொருள் எதுவெனவும் அறிந்து கொள்ளும் ஆற்றல் எல்லா உயிர்களிடத்தும் வாய்க்கக் காண்கின்றிலேம். தக்க தின்ன தகாதன இன்ன எனப் பகுத்துணரும் ஆராய்ச்சியாளரே அவ் விரண்டினையும் பகுத்துணர்தல் கூடும்."

"கடவுளையொத்த பொருள் வேறு ஒன்றுமில்லை. நாமும் அறிவுடைப் பொருள். கடவுளும் அறிவுடைப் பொருள். நாமும் (உயிரும்) நிலையுடைப் பொருள், கடவுளும் நிலை

யுடைப் பொருள். நாமும் நிறையுடைப் பொருள், கடவுளும் நிறையுடைப் பொருள். நாம் இன்பத்தில் அவாவுடையோம். கடவுள் பேரின்ப வடிவினராய்ப் பேரின்பத்தை அளிக்கும் பொருளாயிருக்கின்றார்."

இவ்வாறே இப் பெரியாருடைய கட்டுரை சிறப்புமிக் குடையதாய்த் திகழும்.

கடல்புடை சூழ்ந்த இப் பேருலகில் சைவமுந் தமிழுந் தழைத்தினிதோங்க அரும் பெருந் தொண்டுகள் செய்து கொண்டிருந்த இப் பெரியார் 1953-ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் முப்பதாம் நாள் தம் எண்பத்தோராவது அகவையிலே மூன்று நாட்கள் காய்ச்சலால் பீடிக்கப் பட்டுச், சிவபெருமானுடைய திருவடி நீழலைச் சேர்ந்தார்.

## கஎ. பூவராகம்பிள்ளை

### தோற்றம்

திருத்தில்லையில் வேளாளர் குலத்தில் வைணவசமயத் தில் ஆ. பூவராகம்பிள்ளை 1899-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் இருபத்தேழாம் நாள் பிறந்தார். தந்தையார் பெயர் ஆதிமூலம் பிள்ளை.

### கல்வி

இளமையில் தில்லையில் உள்ள ஆறுமுகநாவலர் பள்ளி யிலும், நடுநிலைப்பள்ளியிலும் தொடக்கக் கல்வியோடு சிறிது ஆங்கிலமுங் கற்றார். பிறகு பெருங்காலூர் என்னும் சிற்றாருக்குச்சென்று திண்ணைப் பள்ளியிற் சிறிதுகாலம் பயின்றார். பிறகு திருத்தில்லையை அடைந்து இராமாநுச தரிசன வித்தியாசாலையில் சேர்ந்து மிகுந்த ஊக்கத்துடன் பயின்றார். கல்வி பயிலும் மாணவர்கள் எல்லோரினும்

சிறந்தவராய்த் தலைமாணுக்கராக விளங்கினார். மேன் மேலும் கல்விகற்கும் ஊக்கம் மிகுதிப்பட்டது.

மதுரைத் தமிழ்ச்சங்கத்தில்

1917-ஆம் ஆண்டில் மதுரைத் தமிழ்ச்சங்கத்தை அடைந்து அதிற்சேர்ந்து கல்வி கற்கலானார். அப்பொழுது திரு. நாராயண ஐயங்கார் அங்கு ஆசிரியராக அமர்ந்திருந் தார். ஐயங்கார் விரிந்து பரந்த பேரறிவும் பெரும் புலமை யும் உடையவர். அவரிடம் கல்வி கற்றமையின் பூவராகனா ருடைய புலமை நிலையும் தலைமை நிலையை அடையத் தொடங்கியது. பாலபண்டிதத் தேர்வில் தேர்வு எழுதி இரண்டாமவராகவும் வெற்றிபெற்றார். நோய்கள் சில இவரைப் பற்றிநின்றமையானே இவர் முதல்வராகத் தேறாது போயினர் என்ப.

ஆசிரியத்தொழில்

இவருடைய குடும்பம் ஏழ்மைநிலையில் இருந்ததால் மேலும் படிக்க இயலாதவராய் வேலைபார்த்துப் பொருள் தேடும் முயற்சியில் இறங்கினார். முதன்முதலாகத் திருப்பா திரிப்புலியூர் நகரசபை உயர்நிலைப்பள்ளியில் ஆறு திங்கள் தமிழாசிரியராக வேலைபார்த்தார். வேலை பார்க்குங்கால் இவருடைய புலமைத்திறன் தலைமையாசிரியர் முதலியவர் களுக்கு மிகுந்த களிப்பை யுண்டாக்கியது. பிறகு மேலைச் சிவபுரியை அடைந்து கணேசர் செந்தமிழ்க் கலாசாலையில் ஆசிரியராக அமர்ந்தார். அந்நாளில் பண்டிதமணி மு. கதிரேசச்செட்டியார் முதலிய அறிஞர்கள் பூவராகனாருக்கு நெருங்கிய நண்பர்களானார்கள்.

தமிழவேள் தொடர்பு

தமிழவேள் உமாமகேசுவரன்பிள்ளை, பூவராகனா ருடைய அறிவாற்றல் சொல்வன்மை முதலியவைகளை நன்

குணர்ந்து மிகுந்த பற்றுக்கொண்டார். இருவருக்கும் நண்புண்டாகி நாளும் வளர்ந்தோங்கியது. கரந்தைத் தமிழ்ச் சங்கப்பணிகளிலும் பூவராகனார் பங்குகொண்டார். கரந்தைத் தமிழ்ச்சங்க ஆண்டு விழாக்கள் எல்லாவற்றிலும் பூவராகனாருடைய சொற்பொழிவு இடம்பெறும்.

**புலவர்பயிற்சிக்கல்லூரியில்**

மேலைச் சிவபுரியை நீங்கித் தில்லையை அடைந்தார். புலவர் பயிற்சிக் கல்லூரியிற் சேர்ந்து பயிற்சி பெற்றுத் [illegible]

**படிப்பும், ஆசிரியத்தொழிலும்**

பிறகு தந்தையாருடைய விருப்பப்படி சிதம்பரம் இராமசாமி செட்டியார் உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராக அமர்ந்து ஆசிரியத் தொழில்புரிந்து வந்ததோடு கல்விகற்றலையும் மேற்கொண்டு தமிழ் வித்துவான் தேர்வுக்குரிய நூல்களையும் பயின்றார். 1928-ஆம் ஆண்டில் வித்துவான் முதல்நிலைத் தேர்வுக்கு எழுதித் தேர்ச்சிபெற்றார். பிறகு 1930-ஆம் ஆண்டில் வித்துவான் இறுதிநிலைத் தேர்வுக்குச் சென்று முதல்வராகத் தேறினார். அதனால் திருப்பனந்தாள் காசிமடத்தார் வழங்கும் ஆயிரம் வெண்பொற்காசுகளையும் அடைந்தார்.

**அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில்**

1929-ஆம் ஆண்டில் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் உருப்பெற்றது. அக் கழகத்தின் புலவர் பயிற்சிக் கல்லூரியும் புகுமுக வகுப்பும் தில்லையில் இருந்தன. 1930-ஆம் ஆண்டில் பூவராகனார், இக் கல்லூரிகளின் ஆசிரியராக அமர்ந்து திறமையாகப் போதனைபுரிந்தார். பிறகு 1938-ஆம் ஆண்டில் புலவர் வகுப்புகட்கு ஆசிரியரானார். இவருடைய போதனை மிகுந்த திறமை வாய்ந்தது. ஒரு

முறை ஒரு செய்தியைக் கூறுவாராயின் கேட்பவர் மறு முறை அதனைக் கேட்கவேண்டாத முறையில் விளக்கமாக உணர்ந்துவிடுவர். இவரிடம் பாடங்கேட்ட மாணவர்கள் பலர் சொல்லாற்றலும் அறிவுநலமும் மிக்கமைந்தவர்களாய் இன்று உயர்ந்த நிலையிற் சிறந்து விளங்குகின்றனர்.

எத்துறையிலுஞ்சிறந்தவர்

இவர் போதனைத்திறம் ஒன்றுமட்டுமன்றிக் கேட்டார்ப் பிணிக்குந்தகையவாகவும் கேளாரும் வேட்பவும் பேசுதல் வல்லவராகவும் உரைநடைகள் எழுதும் திறமை மிக்கவராகவும் ஆராய்ந்து நூல்களைப் பதிப்பித்தலில் வல்லவராகவும் உரைகளைச் சீரிய முறையில் விளக்கமாக எழுதத்தக்கவராகவும் விளங்கினார்.

குணநலம்

பூவராகனார் சிறந்த அறிவாளியாக விளங்கினும் பெருமிதத்தை மேற்கொண்டவரல்லர். அடக்கத்தையும் அமைதியையும் அணிகலனாகக்கொண்டிருந்தார். எப்பொழுதும் நூல்களைப் படிப்பதே இவருக்கு இனிமையான பொழுதுபோக்கு. மாணவர்கள் பலவகையாக இருப்பர். சிலர் ஆசிரியர்களைக் கேலிசெய்பவர்களாகி விளங்குதலும் உண்டு. பூவராகனாருடைய மாணவர்கள் அவருடைய பெயரைத் தமிழில் மொழிபெயர்த்து "நிலப்பன்றி" என்று கூறுதலும் உண்டு. பூவராகனார் பொறுமையிற் சிறந்தவராதலின் அதற்குஞ் சினங்கொள்ளாதிருப்பர்.

இவர் இயற்றிய நூல்

இவர் கட்டுரைகள் பல எழுதியதோடு தொல்காப்பியச் சொல்லதிகாரச் சேனாவரைய உரைக்கு விளக்கவுரையும் எழுதி வெளியிட்டார். மற்றும் இவர் செய்த நூல்கள் சில.

இறுதி

இவ்வாறு சிறந்து விளங்கிய இவர் 1953-ஆம் ஆண்டு மேத்திங்கள் இருபத்தேழாம்நாள் இவ்வுலக வாழ்வைத் துறந்து வைகுந்த பதவிபெற்றார்.

---

## கரு. செவ்வந்திநாத தேசிகர்

தோற்றம்

செவ்வந்திநாத தேசிகர் என்பவர் ஈழவள நாட்டிலே கரணவாய் என்னும் ஊரிலே 1907-ஆம் ஆண்டு (பிலவங்க ஆண்டு ஆனித்திங்கள் இருபத்து மூன்றாம்நாள்) பிறந்தார். தந்தையார்பெயர் திருஞான சம்பந்த தேசிகர். தாயார் பெயர் சிவபாக்கியம் அம்மையார். இவர் தோன்றிய மரபு சைவ ஆசாரிய மரபு.

கல்வி

செவ்வந்திநாத தேசிகர் பிறந்த ஒன்றரையாண்டுக்குள் தந்தையார் சிவகதி அடைந்தனர். பிறகு செவ்வந்திநாத தேசிகர் தம் தந்தையாருடன் பிறந்தவராகிய நமசிவாய தேசிகர் என்பவரால் வளர்க்கப்பெற்றார். சிறிய தந்தையராகிய நமசிவாய தேசிகர் செவ்வந்திநாத தேசிகருடைய கல்வியிலே மிகுந்த கருத்துச் செலுத்தினார். தொடக்கத்தில் தாமே கல்விகற்பித்தார். பிறகு சுன்னாகத்திலே ஏற்படுத்தப்பட்ட கல்விநிலையத்திற்குச் சென்று வடமொழி தென்மொழிஎனும் இருமொழியையுந் திடமுடன் கற்றுப் புலமைத் தேர்விலும் தேறினார். அப்பாடசாலையில் சிதம்பர சாத்திரி என்னும் வடமொழி வல்லுநர் வடமொழி ஆசிரியராக இருந்தார். சி. கணேச ஐயர் என்னுஞ் செந்தமிழ் அறிஞர் தென்மொழியாசிரியராக இருந்தார். செய்யுளியற்றல்

உரைநடை எழுதல் முதலியவைகளில் தேசிகர் திறம் மிகுதியும் அமையப்பெற்றிருந்தார். பள்ளியிற் கற்குங்காலத்திலேயே இவருடைய திறமையை உடன்கற்கும் மாணவரும் பிறரும் பாராட்டி இவரை நக்கீரரெனச் சிறப்பித்துரைத்தனர். தேசிகர் பள்ளிப்படிப்போடு மனநிறைவு கொண்டு நின்றுவிடாமல் மீமாம்சை, சித்தாந்தம் முதலியவைகளையும் நன்கு கற்றுத் தேறினார்.

### கலைத்தொண்டு

பலருக்குங் கல்விகற்பிக்க வேண்டுமென்னும் பேரவா இவருடைய உள்ளத்திலே தோன்றி வலுப்பெற்றது. சிலருடைய உதவியைக்கொண்டு 1929-ஆம் ஆண்டில், "காரணவாய் வேதாரணியேசுர வித்தியாலயம்" என்னும் கல்விச்சாலை தொடங்கப்பட்டது. அதன் உறுப்பாக, "வித்தியாபிவிருத்திச்சங்கம்" படிப்பகம் முதலியனவும் அமைக்கப்பட்டன. மேலும் தேசிகர் சங்கங்கள் பலவற்றினும் விரிவுரைகளாற்றினார். பத்திரிகைகட்குக் கட்டுரைகள் வரைந்தார். நூல்கள் எழுதினார். உயர்நிலைப்பள்ளிகளில் இலக்கியம் பயில்வார்கட்குத் துணை செய்யும்பொருட்டுத் தமிழில் இலக்கியக் குறிப்புகளையெழுதி தமிழாசிரிய உலகுக்கு முதன்முதல் உதவிய பெருமை இவரையே சாரும். நல்லைச் சின்னத்தம்பிப்புலவரால் இயற்றப்பட்ட கரவை வேலன் கோவையை அச்சிடுதற்குச் செப்பஞ் செய்து கொடுத்தார்.

### நூல்கள் வெளியிடல்

தாம் இயற்றிய சில நூல்களைப் பதிப்பித்து வெளியிட்டதுடன், உடுப்பிட்டிச் சிவசம்புப் புலவரின் நூல்களையும் அச் சேற்றினார்.

திருமணம்

1932-ஆம் ஆண்டில் பவானியம்மை என்னும் மாதைத் திருமணம்புரிந்தார். அம்மாதிடம் சேயொன்று தோன்றியதாயினும் தாயுஞ்சேயுஞ் சிவகதியடைந்தனர்.

நூல்கள்

1. தமிழ்மொழி ஆராய்ச்சி
2. முருகன் மும்மணிக் கோவை
3. முருகன் கோவை (நல்லைக்கோவை)

முதலிய நூல்களை இவர் இயற்றினர். இரண்டு அச்சேறின. ஒன்று அச்சேறவில்லை.

இறுதி

இப்பெரியார் தமது முப்பதாம் அகவையிலேயே 1937-ஆம் ஆண்டு (ஈசுவர ஆண்டு ஆவணித்திங்கள் பதினேழாம் நாள்) இறைவன் திருவடி நீழலையடைந்தார். இவருடைய மறைவு குறித்துப்பலர் இரங்கற்பாப் பாடி வருந்தினர்.

சி. கணேசையர்

"வடமொழி தென்மொழி யாய்ந்திடும் பண்டித மாமணியாய்த்
திடமொடுஞ் செந்தமிழ் நாட்டினுக் கோர்பெருந் தீபமெனச்
சுடர்குவை என்றிவ் வுலகோர் இருக்கச் சுவர்க்கமுற்றே
அடர்பெருந் துன்பத்தை ஆக்கினை செல்வந்தி யார்மணியே."

க. கந்தையா

"அச்சூரு மாவையின் மும்மணிக் கோவை அதிருணுக்கம் |
வைச்சூர் தமிழ்வா லாறிவை யாக்கிநல் வையகத்தோர்
மெச்சூர் தலைக்கொள்ளு நல்லையிற்கோவை விளம்பியுன்றன்
கைச்சாத் துடன்தரு செல்வந்தி நாதக் கலைக்கடலே."

## ௯௪. முத்துசிவன்

### தோற்றம்

காரைக்குடி அழகப்பா கல்லூரியில் பேராசிரியராக விளங்கியிருந்த அ. முத்துசிவன் 1910-ஆம் ஆண்டு நவம்பர்த்திங்கள் பதினைந்தாம் நாள் திக்கெலாம் புகழும் தென் பாண்டிநாட்டிலே திருநெல்வேலியிலே தோன்றினார்.

### கல்வி

தொடக்கப் படிப்பு முதலியவைகளைப் படித்து முடித்தபின் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்சேர்ந்து கல்வி கற்று 1935-ஆம் ஆண்டில் பி. ஏ. ஆனாசுத் தேர்வில் தேறினார். இவர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் கல்வி கற்ற நாளையில் அங்கே பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார், ந. மு. வேங்கடசாமி நாட்டார், நாவலர் ச. சோமசுந்தர பாரதியார், சொல்லின் செல்வர் ரா. பி. சேதுப்பிள்ளை முதலிய பேரறிஞர்கள் தமிழாசிரியர்களாக அமர்ந்திருந்தனர். இத்தகைய அறிஞர்களிடம் கல்வி கற்றுத்தேறிய முத்துசிவன் பெரும்புகழடைந்து விளங்கியது இயற்கையே.

### ஆசிரியத் தொழில்

கல்வியைக் கற்றுத்தேறிய முத்துசிவன் வாழ்க்கைத் துறையில் இறங்கினார். வாழ்க்கையைச் செலுத்துவதற்குப் பொருள் இன்றியமையாதது வேண்டப்படுவதொன்றன்றோ? முத்துசிவன் ஆசிரியத்தொழிலில் இறங்கினார். திருநெல்வேலியில் உள்ள மதுரைத் திரவியம் தாயுமானார் இந்துக் கல்லூரி, புதுவயலில் உள்ள சரசுவதி வித்தியாசாலை முதலியவைகளில் ஆசிரியராயிருந்தார். பிறகு காரைக்குடியில் அழகப்பா கல்லூரி ஏற்பட்டபின், அதில் தமிழ்ப் பேராசிரியராக அமர்ந்து இறுதி வரையில் பணிபுரிந்தார்.

தமிழ் வளர்ச்சிக்குத் தொண்டு

முத்துசிவன் தமிழ் வளர்ச்சிக்குத் தக்க ஆக்கவேலை புரிந்தார். எல்லா மொழிகளின் இலக்கியங்களும் நன்கு வளர்ந்து சிறப்படைந்திருக்க நமது தமிழ் இலக்கியம் மட்டும் போதிய வளர்ச்சிபெறாமல் குன்றியிருக்கிறதே என்று உளம்நைந்தார். வியக்கத்தக்கவாறு பெருவளர்ச்சி பெற்றுள்ள ஆங்கிலம் முதலிய மொழிகளின் துணையைக் கொண்டு தமிழ்மொழியை நன்றாக வளர்க்கவேண்டும் என்பது இவருடைய உயரிய நோக்கமாக இருந்தது. தமிழாசிரியர்கள் மதிப்புக் குறைந்தவர்களாகப் பிறரால் எண்ணப்பெறுவதினின்றும் தடுத்துத் தமிழாசிரியர்களை யும் தமிழ்மொழியையும் ஆங்கிலமொழிக்கு நிகராக்க வேண்டுமென்று அதற்குத்தக்க முயற்சிகளை இறுதி வரையிற் செய்துகொண்டேயிருந்தார். தமிழ் மொழியை யும் தமிழ் கற்பவர்களையும் தமிழாசிரியர்களையும் எவரே னும் சிறுமைப்பட எண்ணுகிறார்கள் என்று உணர்ந்தால் அவர்களுக்குத் தக்கவாறு சூடுகொடுப்பதற்கு இவர் சிறி தும் தயங்கமாட்டார். புதிய முறையில் நூல்கள் பல வற்றை எழுதி வெளிப்படுத்தினார்.

சொல்லாற்றல்

கல்வியை நன்கு கற்றவர்கள் எல்லோருமே சொல் லாற்றல் மிக்கவர்களாக அமைந்து விடுவதில்லை. சிலர், "வழவழ" வென்று பேசித் தமது கருத்தை நன்கு வெளிப்படுத்தமுடியாமல் திணறுவர். சிலர் பிறருக்கு விளங்காத வகையிற் பேசுவர். சிலர் பேசுவது பிறர் செவிக்கு இன்னாதனவாகவும் இருக்கும். முத்துசிவன் நன்கு சொல்லாற்றல் அமையப் பெற்றவராக விளங்கினார். பொதுமக்கள் கூடிய பேரவையிற் சொற்பொழிவு செய்யத் தொடங்கினும், கல்லூரியில் மாணவர்கட்குப் பாடம்

போதிக்கத்தொடங்கினும் கேட்டார்ப் பிணிக்குந்தகைய வாகவும் கேளாரும் வேட்பவும் மொழியும் பண்பாடும் இவரிடத்தில் நன்ருக அமைந்திருந்தன. எத்தகைய கடுமை யான செய்தியையும் இனிமையாகச் சொல்லி முடித்துக் கேட்பவர் மகிழ்ச்சியடையுமாறு செய்து விடுவார்.

பொதுவான பண்பு

தமிழ் கற்றவர்களை மற்றவர்கள் இழிவாக எண்ணு தல் கூடாது என்னும் எண்ணத்தோடு இவர் தமது நடை யுடை பாவனை முதலியவைகளைச் சிறப்பாகக்கொண்டு ஒழு கினர். பிறர், தமக்குச் சிறுமையுண்டாகுமாறு பேசிவிடி னும், இவர் அவ்வாறு பேசியவர்களுடைய மனம் நோகு மாறு உரையாடமாட்டார். எத்தகையாரோடும் அன்புட னேயே பழகுவார். மாணவர்களிடத்தில் மிகுந்த பற்றுக் கொண்டு அவர்கள் கல்வியில் முன்னேறுவதில் தமது முழுக்கருத்தையுஞ் செலுத்தினர். மற்றவர்களிடம் பேசும் போது தமது கருத்துவெளிப்படுவதற்காகவேண்டிய அளவு மட்டும் பேசுவார். நீண்ட உரைநடையமையப் பேசுபவர் களைக் கண்டால் "தங்களுடைய திருவாய்மொழி தென் குமரிக்கும் திருவேங்கடத்திற்குமாக நீண்டு விளங்குகிறது; பிற்பகுதியைக் கேட்பதற்குள் முற்பகுதி மறந்துபோய் விடுகிறதே. முன்பு என்ன சொன்னீர்கள்?" என்று நகைச் சுவையுடன் பேசுவார். பேசுபவர் கருத்தமைந்த சிறிய சிறிய உரைநடைகளாகப் பேசவேண்டுமென்பது இவருடைய எண்ணமே தவிர மற்றவர்களை இகழ்ந்துரைப் பது இவருடைய நோக்கமன்று. பாடஞ்சொல்லும் வகுப் பிலும் மாணவர்கள் மகிழுமாறு பேசித் தமிழை நன்கு கற்றுக்கொள்ளுமாறு செய்துவிடுவார். இவருடைய சொற் றிறத்தின் இனிமையைக் கண்டே ஈழநாட்டினர் இரண்டு

மூன்றுமுறை ஆங்கழைத்துச் சொற்பொழிவாற்றச் செய்தனர்.

பா இயற்றல்

பா இயற்றுதலிலும் இவர் தேர்ந்து விளங்கினர். பாரதியார் பாடல்கள் சிலவற்றை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துப் பாடினர். புத்தகச் சில செய்யுட்களை இயற்றினர். மழையைக் குறித்து இவர் இயற்றிய செய்யுட்களில் இரண்டைக் கீழே காண்க.

"பன்னரு நலங்கள் கோடி உலகிடைப்பரப்பி னாலும்
உன்னிடங் குறைகள் உண்டு உரைக்குவன் அவற்றைக் கேட்டி
நன்னய மான சேவை நலத்தினில் ஆர்வம் மிக்காய்
இன்னமும் சேவைக் குற்ற இரகசியம் தெரிய வில்லாய்."

"வேண்டிய இடத்து பெய்யாய் விரும்பிய போதும் பெய்யாய்
யாண்டும்நீ மாந்தர் நாட்டம் ஏற்றிடேந் தன்மை இல்லாய்
ஆண்டுதோ றுன்னோ டுற்ற அவத்தைகள் கொஞ்சம் அல்ல
பூண்டநின் நெறியில் உள்ள புரையினைப் புகலக் கேளாய்."

நூல்கள் இயற்றல்

தமிழ் வளர்ச்சியிற் பேரூக்கங்கொண்ட இவர், நூல்கள் சிலவற்றை எழுதினர். இவருடைய இலக்கியங்கள் புதுமையும் பண்பும் அமைந்தனவாக மிளிர்கின்றன. "நூல்களை எழுதியவுடன் வெளியிட்டு விடுதல்கூடாது. ஓர் ஆறுதிங்களுக்காவது அந்நூலை எழுத்துப் படியாகவே வைத்திருந்து பிறகு எடுத்துப் படித்துப் பார்த்துச் செய்யவேண்டிய திருத்தங்களைச் செய்த பிறகே பதிப்பித்தல் வேண்டும்," என்பது இவருடைய கொள்கை. இக்கொள்கை போற்றிப் பாராட்டத்தக்கது என்பதை நூலாசிரியர்கள் அனைவரும் ஒரே மனதுடன் ஒத்துக்கொள்வர். ஆறுதிங்கள் வரை இலக்கியம் அடைந்துள்ள வளர்ச்சிச் செய்தி, புதுச்செய்தி முதலியன நூலிற்சேர்ந்து நூல்

அழகு பெறுமென்பது உறுதி. இதனை நூலாசிரியர் பலரும் தமது நடைமுறை வழக்கத்திலும் நன்றாகக் கண்டிருக்கலாம்.

1. அசோகவனம்
2. கவிதையும் வாழ்க்கையும்
3. அசலும் நகலும்
4. மின்னற் கீற்று
5. மேடைக்கலை
6. கவிதை
7. அமரகவி பாரதி
8. மதம் வேண்டுமா?
9. நடராச தத்துவம்

என்பன வெளிப்படுத்தப்பட்ட நூல்கள். வெளிப்படாமலும் சில நூல்கள் இருப்பதாகத் தெரிகிறது.

இறுதி

நாற்பதாண்டுகளே நிறையப்பெற்றவராகிய இவர் 1954-ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் இருபத்து மூன்றாம நாள் காரைக்குடியில் மார்படைப்பினால காலமானார். இவருக்கு இருபதாவது அகவையில் திருமணம் நடைபெற்றது. ஆண் பெண் மக்கள் எண்மர் மக்கட் செல்வமாக அமைந்துள்ளனர்.

## ௨௦. சங்கர சிந்தாமணிப் புலவர்

### தோற்றம்

பாண்டிவளநாட்டிலே மதுரைக்குப் பக்கத்திலே ஒரு சிற்றூரிலே சங்கர சிந்தாமணிப் புலவர் தோன்றிக் கல்வி கற்றுச் சிறந்த புலவராக விளங்கியிருந்தார். கல்விச் சிறப்பினால் சிறந்து விளங்கினரேனும் செல்வச் சிறப்பாற் சிறந்து விளங்கவில்லை. வறுமை அவரைப் பற்றிக் ...

### வாழ்க்கை

பரிசில் வாழ்க்கையையே மேற்கொண்டு காலங்கழித்தார். பக்கத்து ஊரிலே இருந்த ஒரு செல்வன்மீது பல பாடல்களை இயற்றிக் கொண்டுபோய்ப் பாடினார். அச் செல்வனுக்குப் பணம் இருந்ததே தவிர அறிவு கிடையாது. விலைமாதர் மோகத்திலே மூழ்கி, அவன் விலைமாதர்களையே பெரிதும் போற்றிப் பாராட்டிக்கொண்டிருந்தான். அவனுடைய தன்மையைக் கண்ட இவர்,

"குணமிருந்தாலும் குலமிருந் தாலுங் கொழுந்தமிழின்
மணமிருந்தாலும் மதியிருந் தாலும் வழுத்திடவங்
கணமிருந்தாலும் ஓர்காசும் பெறுதுசிங் காரவரைப்
பணமிருந் தாலவர்க் கெல்லாரும் அஞ்சலி பண்ணுவரே."

என்று இகழ்ந்து பாடிவிட்டுத் திரும்பினார்.

### போடிக்குச் செல்லுதல்

அக்காலத்தில் போடிநாய்க்கனூரில் இருந்த பெருநிலக்கிழார் புலவர்கட்குப் பொருளுதவி செய்து, அவர்களுடைய அல்லலைப் போக்கும் வள்ளலாக இருந்தார். சிலர் சிந்தாமணிப் புலவரைப்பார்த்து, "நீங்கள் இவ்வாறு ஏன் தொல்லைப்படுகிறீர்கள்? எவ்வளவு நாளைக்கு இப்படி அல்லற்பட முடியும்? போடிநாய்க்கனூர் துரையவர்கள்

புலவர்க்குப் பொருள் வழங்கி வறுமையைப் போக்கு கிறார்கள். நீங்கள் ஒருமுறை போடிநாய்க்கனூர்க்குப் போய் அவர்களைப் பார்த்தால் உங்கள் வறுமைப்பிணி இருந்த இடங்கூடத் தெரியாமல் தொலைந்துபோகும். ஆகையால் ஒருமுறை போய்ப்பார்த்துவிட்டு வாருங்கள்," என்று சொல்லி வற்புறுத்தினார்கள். புலவர் முதலில் இணங்கவில்லை. பிறகு போய்த்தான் பார்த்துவிட்டு வருவோமே என்று முடிவு செய்து புறப்பட்டுப் போடிநாய்க்கனூரையடைந்தார். வழியில் உணவு யாதுங் கிடைக்காமல் பட்டினியும் பசியுமாகச் சென்றார். புலவர் சென்றபோது சமீன்தார் ஊரில் இல்லை. பழநியாண்டவனைக் கண்டு வணங்கும் பொருட்டுப் பழநிக்குச் சென்றிருந்தார். புலவர் அவர் திரும்பிவரும் வரையில் காத்திருப்பதென்று முடிவு செய்து காத்திருந்தார். ஊரார்களிடம் சமீன்தாருடைய குணநலங்களைக் குறித்து உசாவினார். எல்லோரும், "எங்களுடைய சமீன்தார் கன்னனுக்குப் பின்பு நிலவுலகில் தோன்றிய கொடையாளி இவர்தாம். உங்களுடைய வறுமை இனிமேல் அடியோடு ஒழிந்துபோகும். உங்களுடைய நல்ல காலந்தான் இங்குவந்து சேர்ந்தீர்கள்," என்று பலவாறு புகழ்ந்து கூறினார்கள்.

சூழ்ச்சியும், எதிர்ச்சூழ்ச்சியும்

புலவா சமீன்தாா வருகையை எதிர்பா
காத்திருந்தார். இன்னுஞ்சில நாட்களில் சமீன்தார் வந்து சேரப்போகிறார் என்று செய்தி தெரிந்தது. சமீன்தார் அறிவாளியாகவும் வள்ளலாகவும் இருப்பதால் தமது வறுமையைத் திறமையாகக் கூறவேண்டும் என்று முடிவு செய்துகொண்டு, சமீன்தார் வரும் வழியில் எதிர்நோக்கிச் சென்றார். வெகு தொலைக்கு அப்பால் காடாக உள்ள ஓர்

இடத்தைப் பார்த்து நின்றுகொண்டிருந்தார். சமீன்தார் தம்முடைய கூட்டத்தார்களோடு பல்லக்கிலே வந்து கொண்டிருந்தார். சமீன்தாரைக் கண்டதும் புலவர், "புலி! புலி!! ஐயோ பாரும் புலி என்னைத் துரத்துகிறது! காப்பாற்றுங்கள்! காப்பாற்றுங்கள்!" என்று அலறிக் கொண்டு எதிரே ஓடினார். இவருடைய நிலையைக் கண்டதும் சமீன்தாரும் அவரோடிருந்த பணியாளர்களும் ஒரு கணப்பொழுது திகைத்துப்போனார்கள். சமீன்தார், "எங்கே? எங்கே?" என்று கேட்டார். உடனே புலவர்,

"பையா டரவணி சொக்கேசர் கூடல் பதியைவிட்டு
வையா புரிக்கு வரும்வழி யேவழி தான்மறித்து
மெய்யா வறுமைப் புலிதான் மிகவும் வெருட்டுகின்ற(து)
ஐயாதென் போடை அதிபா புலவர்க் கருள்நிதியே."

என்னுஞ் செய்யுள் ஒன்றைப் பாடினார். சமீன்தார் தமது திறமையைப் பாராட்டுவார் என்பது புலவர் எண்ணம். புலவருடைய சூழ்ச்சியைக் கண்ட சமீன்தார் தாமும் ஒரு எதிர்ச்சூழ்ச்சியைக் கையாள்வதென்று ஒரு கணத்தில் முடிவு செய்துவிட்டார். பக்கத்திலிருந்த ஓர் ஆளைப் பார்த்துப், "பிடி இந்த மனிதனை," என்று கட்டளையிட்டார். அவன் அவ்வாறே பிடித்துக்கொண்டான். "கொண்டு போய் நமது காவல் கூடத்திலே போட்டுப் பூட்டிவை. நாம் சொல்லுகிறபொழுது அழைத்துவா; வறுமைப் புலிக்குத் தகுந்த பாடங்கற்பிக்கிறேன்," என்று சொல்லிச் சென்றார்.

### புலவர் அச்சம்

சமீன்தார் சொல்லிய மாதிரியைப் பார்த்துப் புலவர் கிடுகிடென்று நடுங்கிவிட்டார். அந்தோ நம் சூழ்ச்சி வீழ்ச்சியாகிவிட்டதே. "அகலா தணுகாது தீக்காய்வார்

போல்க, இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்," என்று திருவள்ளுவதேவர் கூறியிருப்பதை நன்குணர்ந்தும் அதனைக் கடைப்பிடிக்கத் தவறி இவரிடம் நெருங்கிவந்து அகப்பட்டுக்கொண்டோமே, "அரசனும் பாம்புஞ்சரி," என்பது உண்மையாகிவிட்டதே. இவர் பார்த்து நம்மை என்னவேண்டுமானலுஞ் செய்யலாம் அன்ருே? இவர் ஒரே அடியாக நம்மைக் கொன்ருல்கூடக் கேள்வி முறை யேது? இவர் அரண்மனையில் இருக்கும்போது நாம் இவ் வாறு நடந்திருந்தால் ஒருவேளை நம்மை இவர் பாராட்டி யிருந்தாலும் இருக்கலாம். வழிப்பயணத்தில் களைப் படைந்து காட்டு வழியாக வந்துகொண்டிருக்கும்போது நாம் வந்து மாட்டிக்கொண்டதுதான் தவருக முடிந்து விட்டது," என்று பலவாறு எண்ணமிட்டுக்கொண் டிருந்தார்.

புலவரைப் போற்றுதல்

நாட்கள் சில சென்றன. சமீன்தார் பார்க்கவேண்டிய அலுவல்களையெல்லாம் கவனித்துவிட்டு ஒருநாள் புலவ ரைத் தமக்குமுன் அழைத்துக்கொண்டு வருமாறு கட்டளை யிட்டார். அப்பொழுது அவருடைய அவைகூடிப் பலருங் குழுமியிருந்தனர். புலவரை அழைத்துக்கொண்டுவந்தவன் சமீன்தாருக்குமுன் நிறுத்தினன். சமீன்தார் தம் பக்கத் தில் நின்ற வேலைக்காரனைப் பார்த்து, "நாம் பழநியில் இருந்து வந்துகொண்டிருந்தபோது வழியில் ஓடிவந்து, "புலி புலி" என்றுகூறி நம்மையும் நம்கூட இருந்தவர் களையும் அச்சுறுத்தி நடுங்கச் செய்தவர் இந்த மனிதர் தாமா?" என்று கேட்டார். அவ் வேலைக்காரன், "ஆம்; இவர்தாம்," என்று மறுமொழி கூறினன். உடனே சமீன்தார் புலவரைப் பார்த்து. "நீர் ஏன் அவ்வாறு வந்து

அச்சுறுத்தினீர்?" என்று கேட்டார். புலவர் சமீன்தாரைப் பார்த்து, "நான் மிக வறியவன். வறுமையினால் பெருந் துன்பத்தையடைந்தேன். வறுமையின் கொடுமை தாங்க முடியவில்லை. அச்சத்தை விளைவித்து என்னை வாட்டி வருத்தி எப்பொழுதும் அச்சுறுத்திக்கொண்டிருந்த வறுமையையே புலி என்று குறிப்பிட்டேன். துரையவர்கள் தவறாக எண்ணிவிட்டீர்கள். இவ்வாறு வறுமையை நான் புலியாக உருவகப்படுத்திக் கூறினால் துரையவர்கள் மகிழ்வீர்களென்றே கூறினேன். அடியேன் செய்த தவற்றினைப் பொறுத்தருளவேண்டும்," என்று சொல்லி வேண்டிக் கொண்டார்.

சமீன்தார் புலவரைப் பார்த்து, "செய்ததையும் செய்துவிட்டுப் பொறுத்தருளவேண்டுமென்று சொல்லுகிறீர்?" என்றுகூறி அதட்டினார். ஓர் ஆளைப்பார்த்து, "அவருடைய இடுப்புத்துணியைப் பிடுங்கு." என்று கூறினார். அந்த ஆள் அப்படியே பிடுங்கினான். அது பல தையல்களையும் பொத்தல்களையும் உடையதாக இருந்தது. அதைப் பந்துபோற் சுருட்டித் தமக்கு முன்னுள்ள பலகைமீது வைக்கச் சொன்னார். ஆள் அப்படியே வைத்தான். சமீன்தார் துப்பாக்கியைக் கையில் எடுத்தார். புலவர் நம்மைத்தான் சமீன்தார் சுடப்போகிறார்போலும் என்று எண்ணி நடுங்கினார். மறுகணம், "டுமீல்" என்று ஒலியுண்டாயிற்று. அந்தக் கந்தைதான் சுடப்பட்டது.

சமீன்தார் எழுந்தார்; புலவர் கையைப் பிடித்துத் தழுவிக்கொண்டார். பக்கத்தில் வைக்கப்பட்டிருந்த இருசரிகை ஆடைகளை எடுத்துக்கொடுத்துக் கட்டிக்கொள்ளச் சொன்னார். புலவர் அவ்வாறே கட்டிக்கொண்டார். பிறகு அவரை ஒரு நாற்காலியில் உட்காரவைத்து உரையாடினார்.

"புலவரே! உமக்கு மட்டுந்தான் அறிவுஞ் சூழ்ச்சியும் இருக்கிறதென்று எண்ணிக்கொள்ளாதீர். எனக்கும் அறிவுஞ் சூழ்ச்சியும் இருக்கிறதென்பதை அறிந்துகொண்டீரா?" என்று கேட்டார். புலவர் அங்குத் தங்கியிருந்த வரையில் நல்விருந்தளித்தார். பிறகு ஊருக்குப் புறப்பட்டபோது வேண்டிய அளவு பொருளும் ஆடையணிகலன்களும் வழங்கினார். அவைகளைப்பெற்ற புலவர் பிறகு என்றுமே வறுமைப்புலிக்கு இலக்காகாமல் இனிது வாழ்ந்திருந்தார்.

### இறுதி

இவர் நூல்கள் யாதுஞ் செய்யவில்லை. இவரியற்றிய தனிப்பாடல்களிலுஞ் சிலவே அகப்படுகின்றன. சமீன்தாரிடம் பொருள்பெற்றபின் பல பாடல்கள் அவர்மீது பாடியிருக்கலாம். அவைகள் ஒன்றும் அகப்படவில்லை. இவர் வாழ்ந்திருந்த காலம் முதலியவைகளும் நன்கு விளக்கமாகவில்லை.

## உக. சொக்கநாதப் புலவர்

### தோற்றம்

சொக்கநாதப் புலவர் சோழவளநாட்டிலே திருவாரூரிலே தோன்றினார். உரிய காலத்திலே கல்வி கற்றுச் சிறந்து விளங்கினார். கல்வியறிவு, சொல்வன்மை, அடக்கம், அமைதி, பொறுமை முதலிய நல்லியல்புகளெல்லாம் இவரிடத்தில் ஒருங்கே அமைந்து விளங்கின.

### வறுமை

புலவர்கட்குரிய வறுமை சொக்கநாதரையும் பற்றியது. அதனால் இவர் பலவகைத் தொல்லைகளை யடைந்தார்.

வறுமையின் தொல்லைகளை நுகர்தல் அழகே தவிரப் பிறரிடஞ் சென்று கூறிப் பல்லெலாந்தெரியக்காட்டி இரத்தல் அழகன்று என்னும் முடிவுக்கு வந்தார். பட்டினியும் பசியுமாகக் காலத்தைப் போக்கினார். ஒருநாள் ஆரூர் இறைவனைத்தொழச் சென்றபோது, "இறைவனே! உம்மிடத்தில் நேர்மை சிறிதையுங் காணேம். கல்லால் அடிப்பவர்க்கும், செருப்பால் உதைப்பவர்க்கும், வில்லால் புடைப்பவர்க்கும் நல்லருள் செய்கிறீரேயல்லாமல், எல்லாம் உம்முடைய செயல் என்று உம்மைநம்பி இருப்பவர்கட்கு யாதுங்கொடுக்கமாட்டேன் என்கிறீரே," என்னும் பொருளை அமைத்து,

"நல்லாளை இடமருவும் தியாகையா
உமதிடத்தில் நியாயம் காணேம்
கல்லாலே எறிந்தோர்க்கும் செருப்படியால்
உதைத்தோர்க்கும் கடிந்து போரில்
வில்லாலே அடித்தோர்க்கும் கொடுத்தீரே
அல்லாமல் விழிநீர் சோர
எல்லாமஉம் செயலென்றே இருப்போர்க்கு
யாதொன்றும் ஈகி லீரே."

என்னுஞ் செய்யுள் ஒன்றைப் பாடினார்.

### கறுப்ப முதலியாரிடஞ் செல்லுதல்

அந்நாளில் கறுப்ப முதலியார் என்பவர் தொண்டை வளநாட்டிலே சிறந்த செல்வராகவும் வள்ளலாவும் திலவியிருந்தார். "அவரிடஞ் சென்றால் வறுமை தொலையும். அம்முதலியார் வறுமைப் பிணிக்கு மருத்துவன்," என்று தக்கோர்களால் அறிந்தார்.

"திணம்போதத் தள்ளிப் பெரும்பூதம்
போலப்பின் னேற்றுச்செத்த,
பிணம்போற் கிடந்து புரளுவர்
காண்பிறர்க் கீட்டிவைத்த,

பணம்போன பின்பு விவேகமுண்
டாகும்அப் பஞ்சைகள்வங்
கணம்போதும் போதுங் கறுப்பாதென்
மாவையில் காவலனே.'

"ஏவைக்குங் கூன்சிலை தொட்டான்
அநங்கன் இருவிசும்பில்
தீவைக்குந் திங்கட் குடையெடுத்
தான்தென்றல் தேருகைத்தான்
காவைக்குங் கண்மணி கத்தூரி
ஈன்ற கறுப்பன்வரை
மாவைக்கும் பாவைக்கும் பூவைக்கும்
போது வடுவைக்குமே."

என்பன முதலிய பாடல்களைப் பாடிக்கொண்டுபோய் அச் செல்வரைக் கண்டார். இவருடைய புலமை நிலையை நன்குணர்ந்த அவர் தக்கவாறு நன்கொடைகள் வழங்கினார். மேலும் அவரைப் பல பாக்களாற் புகழ்ந்து பாடித் தம் முடைய ஊருக்கு மீண்டார். கறுப்ப முதலியார் வழங்கிய பொருளைக்கொண்டு சில காலம் நலமாக வாழ்ந்திருந்தார். பொருள் விரைவிற் செலவாகியது. மீண்டும் வறுமை வந்து தொடர்ந்தது. திப்பையராயன் என்னுஞ் செல்வன் ஒருவன் வள்ளலாக விளங்குகிறான் என்று உணர்ந்தார். புறப்பட்டுச் சென்று அவனைப் பார்த்தார். இவருடைய அறிவு நலத்தை அவன் எளிதில் உணர்ந்தான். இவரைப் பார்த்து, "உங்களுக்கென்ன குறைவு? 'அறிவுடையார் எல்லாம் உடையார்,' என்று பெரியோர்கள் சொல்லி யிருக்கிறார். பூவேந்தர்களைப் போலப் பாவேந்தர்களும் சிறப்பு மிக்கவர்கள். கற்றோர்க்குச் சென்றவிடமெல்லாஞ் சிறப்பு," என்று புலவரைப் பலவாறு புகழ்ந்து உரையாடத்தொடங்கினான். அவனுடைய புகழ்ச்சி வஞ்சகப் புகழ்ச்சியாக இருந்தது. அதனைக்கேட்டுப் புலவர் ஏமாந்து

போகவில்லை. "ஆம்! ஆம்!! நீங்கள் கூறும் புகழ்ச்சி உண்மையானது தான். இந்திரனே எனக்கு ஆடையாக இருக்கிறான். தீக்கடவுளோ என்னுடைய வயிற்றைவிட்டு அகலுவதே இல்லை. நான் சிவபிரான் என்று நினைத்து நமன் என்பால் நெருங்குவதே இல்லை. வருணனே என்னுடைய இருகண்களையும்விட்டு எப்பொழுதும் நீங்கமாட்டான். என்னுடைய இல்லத்திலே என் மக்களும் நானும் காற்றுக் கடவுளைச் சாப்பிடுவோம். இத்தகைய பெருவாழ்வுடைய எனக்கு உலகில் எவர் ஒப்பாவர்? எப்பொழுதும இந்த மேன்மையைப்பெற்று வறுமைக் கடவுளை வணங்கித் திகழும் எம்மைச் சாளுவகோப்பையனுடைய அருமைத் திருமகனாகியவனும் மந்தரமலையைப் போன்ற தோள்களையுடையவனுமாகிய திப்பையராயன் தன்னுடைய வாய்மொழியினாலே என்னைக் குபேரனாக்கினான். அவனை இறைவனென்றே கூறவேண்டும்," என்னும் பொருளை அமைத்து,

"இந்திரன் கலையாய் என்மருங் கிருந்தான்
அக்கினி உதரம்விட் டகலான்
எமனெனைக் கருதான் அரனெனக் கருதி
நிருதியுந் தென்னையென் செய்வான்,
அந்தமாம் வருணன் இருகண்விட் டகலான்
அகத்தினில் மக்களும் யானும்
அநிலம தாகும் அமுதினைக் கொள்வோம்
யாரெதிர் எமக்குளார் உலகில்,
சந்ததம் இந்த வரிசையைப் பெற்றுத்
தரித்திர ராசனை வணங்கித்
தலைசெயும் எம்மை நிலைசெய் சற்கீர்த்தி
சாளுவ கோப்பையன் உதவும்
மந்தர புயத்தான் திப்பைய ராயன்
மகிழ்வொடு விலையிலா அன்றோன்
வாக்கினால் குபேரன் ஆக்கினான் அவனே
மாசில்ஈ சானபூ பதியே."

என்று செய்யுள் ஒன்றைப் பாடினார். திப்பையராயன் பெரும் பொருள் வழங்கியனுப்பினான். மேலும் இவர் அடிக்கடி பரிசின்மேற் சென்று பொருள் பெற்றே தமது வாழ்க்கையை நடத்தினார்.

அரிகரபுத்திரன்

சொக்கநாதப் புலவர் பல்லக்கிலேறி ஒருமுறை வேறோர் ஊருக்குச் சென்று கொண்டிருந்தார். அப்பொழுது வெற்றிச் சின்னங்கள் பல இவரிடம் இருந்தன. சொக்கநாதப் புலவர் சென்றுகொண்டிருக்கும்போது தட்டார வகுப்பில் தோன்றிய அரிகரபுத்திரன் என்னும் புலவர் ஒருவர் சொக்கநாதப் புலவருக்குமுன்னே வந்து தோன்றினார். அப்புலவர் சொக்கநாதப் புலவரிடம் தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்களில் இருந்தும் வேறு பல நூல்களில் இருந்தும் பல கேள்விகளைக் கேட்டார். அட்டாவதானஞ்செய்து காட்டவேண்டுமென்று வற்புறுத்தினார். அரிகரபுத்திரன் திடீரென்று வந்து தோன்றிச் சொற்போரிடத் தொடங்கியபடியால் சொக்கநாதப் புலவர் திணறினார். பல கேள்விகட்கு விடையளிக்காமல் விழித்தார். அவ்வளவில் அரிகரபுத்திரனுக்கு மிகுந்த சினம் உண்டாகிவிட்டது. கேட்பதற்குத் தக்கவாறு மறுமொழி கூறத்தெரியாத உனக்குப் பல்லக்கும் வெற்றிச் சின்னங்களும் எதற்கு என்று கூறிப் பல்லக்குக்கொம்பைப் பிடித்து முறித்தெறிந்துவிட்டுப் போய்விட்டார். அரிகரபுத்திரனுடைய இச்செயல் சொக்கநாதப் புலவருக்கு மிகுந்த மனவருத்தத்தை அளித்தது:

“அட்டாவ தானமுந் தொல்காப்
　பியமும் அகப்பொருளும்
தொட்டாதி தொட்டப்ர பந்தமெல்லாம்
　நம்மைச் சொல்லச்சொல்லி

ஒட்டாரங் காட்டிநம் பல்லக்குக்
கொம்பை ஒடித்தெறிந்த
தட்டாரப் பையல் அரிகர
புத்ரனைச் சண்ணினனே."

என்று பாடினார். நிகழ்ந்ததை ஒரு செல்வன் உணர்ந்து புலவருடைய பல்லக்கு முதலியவைகளை ஒழுங்குசெய்து

ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு குறை

சொக்கநாதப் புலவர் பாண்டி நாட்டில் உள்ள சில வள்ளல்களைக் கண்டு பரிசு பெற்றுவரலாம் என்னும் நோக்கத்தோடு புறப்பட்டு மதுரைக்குச் சென்றார். சொக்கநாதப் பெருமானைப் போற்றி வழிபட்டுவிட்டுக் கோயிலிலே ஓரிடத்தில் உட்கார்ந்திருந்தார். அப்பொழுது அங்கு உண்பதற்குக்கூட அவரிடத்தில் காசில்லை. அப்பொழுது இறைவழிபாட்டிற்கு வந்த ஒரு மனிதனைப் பார்த்துச் "சிறிது பொருள் கொடு; உணவுச் செலவுக்கு வேண்டும்," என்று கேட்டார். அவன் இவரை நன்கு உசாவினான். "தாங்கள் எந்த ஊர்? இங்குவரக் காரணம் யாது?" என்று விளக்கமாகக் கேட்டான். புலவர் தமது வரலாற்றைக் கூறினார். கேட்ட அவன், "தாங்கள் பலரிடத்திலும் பெரும்பொருள் பெற்றும் இவ்வாறு அடிக்கடி வறுமையால் வருந்துவானேன்? வறுமைப் பிணி உங்கட்கு உரிமைப் பிணியோ?" என்று கேட்டான். உடனே இவர், "நான் வறுமைப் பிணியால் வாடுவது ஒரு வியப்பா? தேவர்கட்குக்கூட ஏதேனும் குறை இருந்துகொண்டே இருக்கிறதே; திங்கட்கு உடல்குறை, குபேரனுக்கோ கண்ணிற் பழுது; தேவேந்திரனுக்கோ உடலெல்லாம் பெண்குறி; இயமனுக்கோ புழுக் கால்; கதிரவன் மைந்தனாகிய சனிக்கோ கால் நொண்டி; நான்முகனுக்கோ ஒரு தலை

குறைந்துபோய்விட்டது. தேவர்களே இவ்வாறு இருப்பார்களாயின் மனிதர்கள் குறையுடையவர்களாக இருப்பது ஒரு வியப்பா?" என்று கூறியதுடன் இச்செய்திகளை, ஒரு பாட்டில் அமைத்து இறைவனை முன்னிலைப்படுத்தி,

"சந்திரனுக் குடல்ஊனம் தனதனுக்கோர்
　　கண்ணூனம் தருவி னீழல்,
இந்திரற்கோ பகக்குறியாம் இயமனுக்கோ
　　புழுக்காலாம் இரவி ஈன்ற,
மைந்தனுக்கோ கான்முடமாம் வனசனுக்கோர்
　　தலைகுறையாய் வாழ்வ ராயின்,
பந்தமுள மானிடரை விதிவிடுமோ
　　ஆலவாய்ப் பதியு ளானே."

என்று செய்யுள் ஒன்றையும் பாடினார்.

பலசரக்குப் பாட்டு

முருகனைப் போற்றி வழிபடும் பொருட்டுத் திருவேரகத்துக்குச் சென்றிருந்தபோது,

"வெங்காயஞ் சுக்கானால் வெந்தயத்தால் ஆவதென்ன
இங்கார் சுமந்திருப்பார் இச்சரக்கை—மங்காத
சீரகத்தைத் தந்தீரேல், தேடேன் பெருங்காயம்
ஏரகத்துச செட்டியா ரே."

என்று ஒரு வெண்பாவைப் பாடினார். இச் செய்யுளில் பொருள் வேறாயிருக்கவும், வெங்காயம், சுக்கு, வெந்தயம், சீரகம், பெருங்காயம் முதலிய பலசரக்குப் பெயர்கள் வந்திருத்தலைக்கண்டு பாட்டைக் கேட்டவர்கள் பாராட்டினார்கள். முருகனுக்குச் செட்டி என்றும் பெயருண்டு. செட்டியார்கள் பலசரக்கு வாணிகஞ் செய்பவர்கள். அதைக் கருதியே புலவர் இவ்வாறு பாடினார். இதன்பொருள், "திருவேரகத்தில் இருக்கும் செட்டியார் எனப்பெறும் திருப்பெயரையுடைய முருகப் பெருமானே! வெம்மை

பொருந்திய இவ்வுடம்பு தவத்தினால் காய்ந்தால் கொடிய தீவினையினால் வரக்கூடிய தீங்கு யாதிருக்கின்றது? இந்த உடலாகிய சரக்கை யார் சுமந்துகொண்டிருப்பார்கள்? அழியாத சிறந்த வீட்டினைக் கொடுப்பீரானால், இனிமேற் பெரிய உடம்பினை நான் தேடமாட்டேன்" என்பதாம்.

வேடிக்கைப் பாடல்கள்

வேடிக்கையாகச் செய்யுள் இயற்றுவதில் இவரும் திறமுடையவர் :

"பண்காணுந் தமிழ்ப்புலவீர் இனத்தோடே
இனஞ்சேரும் பரிசே போலத்,
தண்காவி மலர்த்தடஞ்சூழ் காவிரிநாட்
டொருபுதுமை சாற்றக் கேளீர்,
கண்காண நரையான்மேல் வெண்காடை
வீற்றிருக்கக் கண்டோம் அந்த
வெண்காடை இடப்புறத்தே பச்சையன்னம்
கலந்திருக்கும் விதங்கண் டோமே."

[நரையான் - வெள்ளிய காளை, ஒரு பறவை. வெண்காடை - வெள்ளிய நிறமுடைய காடை என்னும் பறவை, திருவெண்காட்டிலே எழுந்தருளிய இறைவன். பச்சையன்னம் - உமாதேவி.]

"மன்னுநரை யானை வனப்பினுக் கொக்கானை
மாந்தியஉச் சிட்டனை மங்கைதங் காக்கையனை
பன்னரிய வலியானைத் தோல்விலங் காடையனைப்
பஞ்சரங்க ளமைப்பானைப் பகருமணி யானை
உன்னுதலி லாநெஞ்ச மடையானைப் புகழ்ந்தே
யோதினர்க் கருளுகவு தாரியெமுள் ளானைத்
தன்னிகரி லாக்கிழவிக் காட்காட்டி னானைத்
தமிழ்சேர் வெண் காடையருட் கருடனையேத் துவமே"

இச் செய்யுளில் நரையான், கொக்கு, உச்சிட்டன், காக்கை, வலியான், காடை, பஞ்சரம், மடையான், கவுதாரி, உள்ளான், கருடன் முதலிய பறவைப் பெயர்கள் வந்து பொருள் வேறுபடுதலைக் காண்க.

**தனிப்பாடல்கள்**

இவர் நூல்கள் செய்ததாகத் தெரியவில்லை. தனிப் பாடல்கள் பல பாடியிருக்கிறார். அவைகள் அருமையும் பெருமையுந் தங்கியவை. ஏறக்குறைய நாற்பது பாடல்கள் வரை தனிச் செய்யுட் சிந்தாமணி, தனிப்பாடல் திரட்டு முதலிய நூல்களிலே சேர்க்கப்பெற்றிருக்கின்றன.

**இறுதி**

இவர் தோன்றிய மறைந்த காலங்கள் தெளிவாக வில்லை.

## உஉ. பொன்னம்பலக் கவிராயர்

**தோற்றம்**

ஈண்டிய புகழ்சேர் பாண்டிமாநாட்டில், வரம்பிலாப் பெருமை நிரம்பிய பரம்பக்குடியெனும் ஊரில், பொன்னம் பலக் கவிராயர் தோன்றினார். இலக்கண இலக்கியங்களை வழுவறப் பயின்று விழுமிய புலமைத் திறம் பெற்றார்.

**வாழ்க்கை**

புலமைத் திறம் எவ்வளவு மிகுதியாக அமைந்ததோ அவ்வளவு மிகுதியாக வறுமைக் கொடுமையும் மூடுகின்றது. தந்தை வழியால் வந்த சிறுநிலப் பகுதியைக் கொண்டு சிறிது காலம் குடும்பத்தைப் பாதுகாத்தார். பிறகு குடும்பத்தைக் காப்பதற்கு நில வருவாய் போத வில்லை. ஆகவே, மற்றைய புலவர்களைப்போல் இவரும் பரிசில் வாழ்க்கையை மேற்கொண்டார். சில செல்வர்கள் மேல் செய்யுட்கள் பாடிக்கொண்டு சென்றார் அச் செல்வர்கள் இவர் பாட்டைக் கேட்கவுமில்லை. இவரைக் கண்ணெடுத் துப் பார்க்கவுமில்லை. அதனால் இவருடைய மனம் புண்

பட்டது. மதுரைமாநகரை அடைந்தார். மீனாட்சி அம்மை திரு முன்பு நின்று,

"காசும் பொன்னும் கனத்திட்ட பேர்க்கிரு
காதுங் கேட்கில கண்ணுந் தெரிகில,
பேசும் பேச்சுமென் பேய்க்கோல மூங்கண்டால்
பேயென் றாலும் இரங்கும் இரங்குமே,
பூசும் பூச்சும் சந்தன விருட்சத்தின்
போதும் வையை கொழிக்குந் துறையெலாம்,
வீசுங் கூந்தல் பிடியே சவுந்தர
மீனவன் பங்கின் மீனாட்சி யம்மையே."

"எட்டைக் கட்டி எழுத்தோ டெழுத்தைவைத்
திணைத்துக் கட்டி இசைகட்டி லோபர்மேல்,
பாட்டைக் கட்டியென் தொண்டையுங் கட்டிய
பாவந்தான் இனி என்றைக்குத் தீருமோ,
தோட்டைக் கட்டுங் குழலே நினதடித்
துணையைக் கட்டிய பேர்க்குப் பரகதி
வீட்டைக் கட்டிய தாயே சவுந்தர
மீனவன் பங்கின் மீனாட்சி யம்மையே."

என்னும் பாடல்களைப்பாடி நெஞ்சுருகினார்.

வறுமையின் கொடுமை

வறுமையின் கொடுமை இவரை நாளும் மிகுதியாகவே வருத்தியது. இவருடைய ஆடையோ பல ஓட்டை. ஒரு நாள் இவருக்குச் சிறிது பணங் கிடைத்தது அதனைக் கொண்டுபோய்க் கடைத்தெருவில் அரிசி வாங்கிக்கொண்டு வர எண்ணினார். மேலே துண்டுபோட்டிருந்தார். ஆயினும் அதில் அரிசியை மூடிய முடியாது. வேறு ஏனந்தேடிக் கொண்டு அரிசி வாங்குவதற்குச் சென்றார் அதற்குள் அரிசி விற்றுப்போய்விட்டது. காசிருந்தும் அரிசியகப்படாமல் வருந்தித் திரும்பினார். அப்போது அவ்வூர்ச் சொக்கநாதர்மீது பாட்டு ஒன்று எழுந்தது.

“சந்தியிலே மூத்தமகன் தன்னைவைத்துப்
பயித்தியங்கொள் சாமியே வெள்
ளந்தியிலே பவனிவரும் தென்பரம்பைச்
சொக்கேசா நவிலக் கேண்மோ
அந்தியிலே உந்திதனக் காதரவாம்
அங்காடி அரிசி வாங்க
முந்தியிலேன் சந்திரனோ இந்திரனாய்
இருந்ததனால் முடியொண்ணாதே.”

என்று பாடிக்கொண்டு திரும்பினார்.

[உந்தி - வயிறு, அங்காடி - கடைத்தெரு, சந்திரன் - கலை வேட்டி. இந்திரன் - ஆயிரங்கண்ணன் - வேட்டி. பல ஓட்டை, புடையதாக இருந்தது என்க.]

**இறுதி**

நன்கு கல்வியைக் கற்றிருந்தும் ஆதரிப்பாரைப் பெறாதபடியினால் இறுதிவரை வறுமைப் பிணியால் வாடியிருந்த இவர் தனிப்பாடல்கள் பல பாடியிருத்தலைத் தவிர நூல்கள் செய்திருப்பதாகத் தெரியவில்லை. மற்றும் பிறந்த காலம் மறைந்த காலம் முதலியவைகளும் விளக்கமாக வில்லை.

---

## உ௩. மதுரைச் சிதம்பரம் பிள்ளை

**தோற்றம்**

பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் தந்தையாராகிய சிதம்பரம் பிள்ளை என்பவர் ஏறக்குறைய இருநூறு ஆண்டுகட்குமுன் மதுரையம் பதியிலே தோன்றினார். இவருடைய முன்னோர்கள் மீனாட்சி கோயில் பணியில் அமர்ந்திருந்தார்கள். சிதம்பரம் பிள்ளை சிறிது காலம் அப்பணியில் ஈடுபட்டிருந்தார். பிறகு மதுரையை விட்டுப் புறப்பட்டுப் பல ஊர்களுக்குஞ் சென்றார்.

கல்வி

மதுரை மாநகரில் தோன்றிய இவர் கல்வி கேள்விகளிற் சிறந்தவராய்ச் செய்யுள் செய்யும் திறமை அமையப் பெற்றவராக விளங்கினார்.

ஆசிரியர்

மதுரையைவிட்டுப் புறப்பட்டவர் பலவூர்களையுங் கடந்து திரிசிரபுரத்திற்கு மேற்கே காவிரியின் தென்கரையில் உள்ள எண்ணெய்க்கிராமம் என்னுஞ் சிற்றூரையடைந்தார். அவ்வூரினர் சிதம்பரம்பிள்ளையின் கல்வித் திறமையை அறிந்தனர். அவ்விடமே தங்கச் செய்ய வேண்டுமென்னும் எண்ணமுடையவர்களாய் இருத்தற்கு இல்லம் வாழ்க்கைக்குரிய பொருள்கள் முதலியவைகளை அமைத்துக்கொடுத்துத் தங்கச் செய்து அவரிடம் பல நூல்களைப் பாடங்கேட்டனர். அதனால் அவ்வூரார் நல்லறிவு மிக்கவர்களாய்ச் சிறந்து விளங்கினார்கள்.

மழைபொழியப் பாட்டு

அந்நாளில் அப்பகுதியில் நன்றாக மழைபெய்யவில்லை. அதனால் நாடு வளங்குன்றியதாய் அலக்கணுற்றிருந்தது. சிதம்பரம் பிள்ளை கடவுளன்பிலும் கல்வியறிவிலும் தலை சிறந்தவராக விளங்கியபடியால் மக்கள் சிதம்பரம் பிள்ளையைப் பார்த்து, "மழைபெய்யுமாறு தாங்கள் ஒரு செய்யுள் இயற்றவேண்டும்," என்று வேண்டிக்கொண்டனர். சிதம்பரம் பிள்ளை இறைவனை உள்ளத்தில் எண்ணி,

"சோகங்கள் உற்றவுயிர்த் துன்பகல வேணியிடை
மேகங் களைத்தாங்கும் வித்தகனே—போகங்கள்
பாலித் தருளும் பரமனே கார்மழையை
ஆலித்துப் பெய்ய அருள்.

என்னும் வெண்பாவைப் பாடினார். சில நாட்களில் நல்ல மழை பொழிந்து நாடு செழித்தது. இவருடைய பெருமை யும் சிறந்து விளங்கியது.

அதவத்தூர்

சிதம்பரம் பிள்ளையைப் பற்றிப் பக்கத்து ஊரார் களும் உணர்ந்தனர். அதவத்தூர் என்னும் ஊரிலிருந்த அன்பர்கள் வேண்டுகோட்கிணங்கி அவ்வூரை யடைந்து அவ்வூரார்கட்குத் தமிழ் விருந்து அளித்துக்கொண்டிருந் தார் பிறகு அவ்வூரில் பள்ளிக்கூடம் அமைத்துக் கணக்காய ராக இருந்து சிறுவர்கட்குங் கல்வி கற்பித்தார். இவரு டைய போதனையால் சிறுவர்கள் கல்வி யறிவிற் சிறந்தவர் களாய் விளங்கினர்.

மதுரைக்கேகி மீளல்

மதுரையில் எழுந்தருளிய சோமசுந்தரப் பெருமான் மீதும் அங்கயற்கண்ணிமீதும் பேரன்புகொண்டிருந்த இவர், ஆண்டு தோறும் மதுரையை அடைந்து வழிபாடு செய்து சிலநாள் தங்கியிருந்து பிறகு தம்மிருப்பிடத்திற்குத் நம்புவார்.

பிள்ளைப்பேறு

இவ்வாறு இவர் கணக்காயராக அமர்ந்து வாழ்க் கையை நடத்திக்கொண்டிருந்த காலத்தில் 1815-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் ஆறும்நாள் இவருக்கு ஆண் குழந்தை ஒன்று பிறந்தது. மதுரையம்பதிப் பெருமானி டத்தும் பிராட்டியிடத்தும் பேரன்புடைய இவர், அக் குழந்தைக்கு மீனாட்சிசுந்தரம் என்று பெயரிட்டார். பின் னாளில் பெரும்புலவராகிப் புகழ்பெற்ற மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களே இக்குழந்தை.

சோமரசம்பேட்டை

பிறகு சிதம்பரம் பிள்ளை சோமரசம்பேட்டை என்னும் ஊரிலிருந்த அன்பர்களுடைய வேண்டுகோட்படி அங்குச் சென்று அவ்வூரார்கட்குக் கல்வி போதித்துக் கொண்டு அங்கே தங்கியிருந்தார். அப்போது இவருக்கு மேலும் ஓர் ஆண் குழந்தையும் பெண் குழந்தையும் பிறந்தன. ஆண் குழந்தைக்குச் சொக்கலிங்கம் என்றும், பெண் குழந்தைக்கு மீனாட்சி என்றும் பெயரிட்டார்.

தந்தை மகற்காற்றும் நன்றி

"தந்தை மகற்காற்று நன்றி அவையத்து, முந்தி யிருப்பச் செயல்," என்று தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார் திருவாய்மலர்ந்தருளினார். அதற்கேற்பச் சிதம்பரம் பிள்ளை தம் மகற்குக் கல்வியைத் தக்கவாறு போதிக்கலானார். மற்றைப் பிள்ளைகளோடு சேர்ந்து அக்கால முறைப் படியே நெடுங்கணக்கு ஆத்திசூடி, நல்வழி, நன்னெறி முதலிய நீதிநூல்களையும் எளிய நடையில் உள்ள அருணகிரியந்தாதி, முதலிய அந்தாதி நூல்களையும் மற்றும் பல இலக்கியங்களையும் நன்கு கற்பித்தார். "மகனறிவு தந்தை யறிவு," என்பது எல்லா இடங்களினும் உண்மையாகா மற்போயினும் சில இடங்களிலாவது உண்மையாவது கண்கூடு. மீனாட்சிசுந்தரமும் தந்தையாரைப் போலவே நுண் மாணுழை புலமுடையவராய்ச் சிறந்து விளங்கினார். சிதம்பரம் பிள்ளை தம் மகனுக்குப் புலமையுண்டாகுமாறு கல்வியை நன்கு கற்பித்ததோடு செய்யுள் இயற்றுதல், உடன் கற்கும் மாணவர்கட்குப் பாடஞ்சொல்லுதல் முதலிய வழிகளினும் நன்கு பயிற்றினார்.

இறுதி

கல்வி கேள்விகளினும் தெய்வ வழிபாட்டினுஞ் சிறந்து விளங்கிய இவர் தம்முடைய மகனாகிய மீனாட்சி

சுந்தரம் பதினேந்தாண்டுப் பருவத்தில் வளர்ந்து கொண்டிருக்கும்போது 1830-ஆம் ஆண்டில், இவ்வுலக வாழ்வைத் துறந்து இறைவன் திருவடிநீழலை யடைந்தார். சிதம்பரம் பிள்ளையின் மனைவியாராகிய அன்னத்தாச்சியம்மையாரும் மக்களும் பெரிதும் வருந்திக் கலங்கினர். மீனாட்சிசுந்தரம் பிள்ளை,

"மூந்தை அறிஞர் மொழிநூல் பலகவிற்றும்
தந்தை எனைப்பிரியத் தான்செய்த—நிந்தைமிகும்
ஆண்டே விரோதியெனும் அப்பெயர்நிற் கேதகுமால்
ஈண்டேது செய்யாய் இனி."

என்பது போன்ற பல இரங்கற் பாக்களைப்பாடி உள்ளம் வருந்தினார்.

"தந்தை மகற்காற்று நன்றி அவையத்து
முந்தி இருப்பச் செயல்."

"மகன்தந்தைக் காற்றும் உதவி இவன்தந்தை
என்னோற்றான் கொல்லெனுஞ் சொல்."

என்னும் இருதிருக்குறள்கட்கும் இவர்கள் இருவரும் (தந்தையும் மகனும்) எடுத்துக்காட்டாயினமையை நாம் நன்குணரலாம்.

---

## உச. வெண்பாப்புலி வீரகவிராயர்

### தோற்றம்

வெண்பாப்புலி வீரகவிராயர் என்பவர் மதுரை மாவட்டம் மேலூர்க் கூற்றத்தைச் சேர்ந்த மணப்பச்சேரி என்னும் சிற்றூரில் பாடுவார் முத்தப்ப செட்டியார் காலத்திலே வாழ்ந்திருந்தவர். சைவப் பண்டார மரபினர். மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயர் வழிமுறையினர் இவருக்கு உறவினர். மிதிலைப்பட்டியைச் சேர்ந்த வேலுக் கவிராயர் என்பவர் இவருக்கு மருகனவர்.

வாழ்க்கை முறை

வீரன் என்பது இப் புலவருக்கு இடப்பட்ட பெயர். கல்வியை நன்கு கற்றுச் செய்யுள் பாடுந் திறமடைந்த பின் கவிராயர் என்னுஞ் சிறப்புப் பெயர் பெயரை ஒட்டியது. வெண்பாக்களை மிக விரைவாகப் பாடுவதில் இவர் வல்லவர். ஆகவே வெண்பாப்புலி என்னுஞ் சிறப்புப் பெயரும் பெயருக்கு முன் கூடியது. இவரிடம் தெய்வத் திருவருளும் நன்கு அமைந்திருந்தது. இவர் ஒருவர்மீது இசையோ வசையோ பாடுவாரானால் அஃது அவ்வாறே பலிக்கும். இவர் அக் காலத்திலே இருந்த புலவர்களை யெல்லாம் வெற்றிகொண்டு தமக்கு நிகர் தாமே என்று எங்கும் உலவினர்.

விருதுகள்

புதுக்கோட்டையரசர், சேதுமன்னர், சிவகங்கை யரசர், நத்தம் சிற்றரசர், இம்முடி சிங்கேந்திரர் முதலியோர் வீர கவிராயரை ஆதரித்துப் பல சிறப்புக்கள் செய்தனர். பல்லக்கு வெற்றிச் சின்னங்கள் முதலியன வழங்கினர். இவர் எங்கேனுஞ் செல்லப் புறப்பட்டால் பல்லக்கிலேறி விருதுகளுடன் பேராரவாரமாகச் செல்வர். புலவர்கள் கண்டால் அஞ்சிப் பதுங்கி விடுவர். அல்லது போற்றிப் பணிந்து தாழ்ந்துவிடுவர். புலவர்கள் நிலையே இவ்வாறு என்றால் பொது மக்களைப்பற்றிக் கேட்க வேண்டுமோ? "வில்லேருழவர் பகை கொளினுங் கொள்ளற்க, சொல்லேருழவர் பகை" என்று தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனர் திருவாய் மலர்ந்தார். பொதுவான மக்களில் இருந்து பெருநிலக் கிழவர்களாகிய சிற்றரசர்கள் வரை இவரிடம் பகையேற்பட்டுவிடாமல் மிக விழிப்பாக நடந்து கொண்டனர்.

*வீராச்சாமிமீது வசை*

அந்நாளில் வீராச்சாமி என்பவன் ஒருவன் வீரகவிராயருடைய பகையை எவ்வாறே தேடிக்கொண்டான். புலவர் தமது கணையை எடுத்து வீசத் தொடங்கி,

" கந்தனே நீயானல் கற்றவனே நானனல்
இந்தவரு டம்போய் எதிராண்டில்—வந்தவினை
தீரா வினையாய்த் திரும்பா வியாதியாய்
வீராச்சா மிக்கே விதி."

என்று வசைபபா ஒன்றைப் பாடிவிட்டார். மறு ஆண்டில் வீராச்சாமி நோய்கண்டு மாண்டு முடிந்து போனன்.

முத்தப்பரோடு பகை

அந்நாளில் ராசநகரம் என்னும் ஊரில் இம்முடி சிங்கேந்திர துரை என்னும் பெருஞ் செல்வன் ஒருவன் இருந்தான் அவன் தீமைகள் செய்வதில் பேர் பெற்றவன். ஆனல், வெண்பாப்புலி வீரகவிராயரிடம் ஒழுங்காக நடந்து நன்கொடைகள் வழங்கி இவருடைய அருளைப்பெற்றிருந்தான். அந்த இம்முடிசிங்கேந்திரனிடம் தொப்பை வீரன் என்னும் ஏவலன் ஒருவன் இருந்தான். அவன் ஏதோ சிறு தவறு ஒன்றைச் செய்துவிட்டான். அதனல் சினங்கொண்டு பொங்கியெழுந்த இம்முடி சிங்கேந்திரன் பிற ஆட்களைக்கொண்டு தொப்பை வீரனை வேலை தீர்த்துவிட்டான் தனக்கு மாறுபாடாக நடப்பவர்கள் மாண்டொழிவது திண்ணம் என்பதை மற்றவர்கட்கு அறிவிக்கக்கருதி வெண்பாப்புலியாரைக் கொண்டு,

" இம்முடிசிங் கேந்திரனுக் கேற்ப நடந்தோர்கள்
தம்முடிகொண் டேயுலகில் தாம்வாழ்வார்."—

என்று பாடச் செய்து இதனை வீடுகள்தோறும் எழுதச் செய்திருந்தான். எல்லோரும் இம்முடிசிங்கேந்திரனுக்கு.

அஞ்சி நடந்தார்கள். இச் செய்தியை அவ்வூருக்குச் சென்றிருந்த முத்தப்ப செட்டியார் அறிந்தார். பொருளினிடத்திலே பேரவாக்கொண்டு கொடியவனைப் புகழும் வெண்பாப்புலியாரை வெறுத்ததோடு அத்தீயவனையும் வெறுத்தார். அப்பாட்டைத் தாம் நிறைத்துப் பாடக் கருதினர்:

—சும்மாவோ,
தப்பில் தலையிழப்பர் சாட்சியொன்று வேண்டுமெனில்
அப்பனெனும் தொப்பவீர னும்."

என்று அப் பாட்டை முடித்தார். பிறகு தாம் பழனிக்குப் போய்விட்டுத் தம்மூருக்குப் போய்விட்டார்.

பாட்டு நிறைக்கப்பட்ட செய்தியை இம்முடிலிங்கேந்திரன் உணர்ந்தான். செய்தியை வெண்பாப்புலியாருக்குத் தெரியப்படுத்தினன். வெண்பாப்புலியார் புலிபோற் சீறியெழுந்தார். உடனே தமது திருக்கூட்டத்துடன் முத்தப்ப செட்டியார் வீட்டிற்குச் சென்றார். அப்போது முத்தப்ப செட்டியார் வேலுக் கவிராயர் என்னும் தம்முடைய நண்பர் வீட்டிற்குச் சென்றிருந்தார். வெண்பாப்புலியாரும் அங்குச் சென்றார். இருவருக்கும் சொற்போர் மூண்டது. பிறகு இருவரும் ஒரு முடிவுக்கு வந்தார்கள். வேலுக் கவிராயர் வீட்டு வாசலில் ஆட்டுக்கடா ஒன்று கட்டப்பெற்றிருந்தது. வெண்பாப்புலியார் தாம் தம்முடைய வசையினால் அவ்வாட்டின் தலை வெடிக்குமாறு பாட முடியும் என்றார். முத்தப்ப செட்டியாரோ வெண்பாப்புலியார் அவ்வாறு செய்துவிட்டால் தாம் அந்த ஆட்டை உயிர்ப்பித்துப் பழைய நிலைமையை அடையச் செய்துவிட முடியும் என்றார். "நீர் அவ்வாறு செய்துவிட்டால் நான் உமக்குத் தோற்றவனாவேன்" என்றார் வெண்பாப்புலியார். சிலர் நடுநிலைமையாளராக இருந்தார்கள். வெண்பாப்புலியார்,

"எற்கவிக்கு நேரே எதிர்க்கவியும் சொல்லுதற்கோர்
பொற்கவியும் உண்டோஇப் பூவுலகில்—நற்கவிசொல்
வேலுக் கவிராயர் வீட்டுக் கடாத்தலையே
சால இரு துண்டாவாய் தான்."

என்று வெண்பா ஒன்றைப் பாடினர். ஆட்டுக் கடாவின் தலை பிளந்தது. அது கீழே விழுந்து துடிக்கத் தொடங்கியது. உடனே முத்தப்ப செட்டியார் விரைந்து,

"கலையது படித்த வெண்பாக் கவிப்புலி கவியைக் கேட்டுத்
தலையது வெடிப்புண் டாடு தவிக்கிற தந்தோ முன்போல்
நிலையது பொருந்த என்று நிகழ்த்தினேன் முத்தப் பன்யான்
உலகினில் உள்ளோர் காண்பீர் உமையவள் சுதன்காப் பாமே."

என்னும் விருத்தப்பாவைப் பாடி முருகனைப் போற்றினர். கீழே வீழ்ந்து துடித்த ஆடு திடீரென்று எழுந்துவிட்டது. தலையின் வெடிப்புஞ் சேர்ந்து மூடிவிட்டது. முத்தப்ப செட்டியாரும் தம்மைப்போல் பெருமையுடையவரே என்பதை வெண்பாப்புலியார் உணர்ந்து மகிழ்ந்தார்.

"கற்றவர் கல்விக்(கு) உரையாணி நீ தங்கக் கட்டி நின்னைப்
பெற்றவ ளேசெல்வப் பேறுள்ள தாய்நின் பிதாமுன் செய்த
நற்றவமே தவம் நாட்டார் வணிகர்க்கோர் ரத்தின நீ
கொற்றவ ரும்புகழ் முத்தப்ப பூப குணாரத்னமே."

என்று போற்றிப் புகழ்ந்தார். அதுமுதல் இருவரும் நண்பர்களாக விளங்கியிருந்தார்கள். வெண்பாப்புலியார் தம் ஆர்ப்பாட்டங்களையெல்லாம் விட்டுவிட்டார்.

கருத்தான்

வெண்பாப்புலியாருடைய ஊரிலே கருத்தான் என்னும் பெயருடைய கீழ்மகன் ஒருவன் இருந்தான். அவன் நண்டு தின்பதில் மிகுந்த பேரவா உடையவனாக இருந்தான். அவன் வயல்கள் குளங்குட்டைகள் முதலிய இடங்களில் நண்டுகளைக் கண்டால் உடனே பிடித்துக் கால்களை

ஒடித்துவிட்டு வீட்டிற்குக் கொண்டுபோய்க் கறி சமைத்துச் சாப்பிட்டுவிடுவான். ஒருநாள் வெண்பாப்புலியார் கருத்தானைப் பார்த்து, "அடேய் கருத்தான்! நண்டுகளைப் பிடித்துத் தின்னாதே. இப் பிறப்பில் நண்டுகளைப் பிடித்துக் கால்களை ஒடித்துக் கறி சமைத்துத் தின்பாயாகில் மறு பிறப்பில் தொழுநோய்கொண்டு வருந்துவாய்; பெரியோர்கள்,

"அக்கேபோல் அங்கை ஒழிய விரல் அழுகித்
துக்கத் தொழுநோய் எழுபவே—அக்கால்
அலவனைக் காதலித்துக் கான்முறித்துத் தின்ற
பழவினை வந்தடைந்தக் கால்."

என்று கூறியிருக்கின்றார்கள்" என்று அறிவுரை கூறினர். கருத்தான் தான் நண்டுக்கறி தின்பதை விட்டுவிடுவதாக வாயாற் கூறினானே தவிர உண்மையில் விடவில்லை. ஒரு நாள் கருத்தான் வெண்பாப் புலியாரைப் பார்த்தான். "பெரியீர்! தாங்கள் கூறியபடி நான் நண்டு தின்பதை விட்டுவிட்டேன்; இனிமேல் ஒருநாளும் உண்ணவேமாட்டேன்" என்று கூறினன். இதனைக் கேட்ட வெண்பாப் புலியார், "இப்பொழுது நண்டு அகப்படாதபடியினால் தின்பதை விட்டுவிட்டாய் போலும். நண்டு அகப்படுகிறபொழுதன்றோ உன்னுடைய மொழியின் மெய்ம்மையைக் கண்டுபிடிக்க வேண்டும் என்று சொல்லி,

"வண்டுவந் தால்தெரி யும்மலர் வாசம் வழிநடத்திக்
கொண்டுவந் தால்தெரி யும்பரி வேகம் குணத்துடனே
கண்டுவந் தால்தெரி யும்பிறர் வாஞ்சை கறிக்குதவும்
நண்டுவந் தால்தெரி யுங்கருத் தானுடை நாநயமே."

என்னும் கட்டளைக் கலித்துறையைப் பாடினர்.

குத்தகையில் வெற்றிலை

இவர் ஒரு முறை தம் கூட்டத்துடன் வேறோர் ஊர்க்குச் சென்றிருந்தார். வெற்றிலைத் தோட்டக்காரன் ஒரு

வன் இவருக்கு ஒரு கட்டு வெற்றிலைகொடுத்தான். அவர் அதனைத் தமமூருக்குக் கொண்டு வந்தார். வெற்றிலை மிகுதியாக இருப்பதைக்கண்ட சுங்கச் சாவடிக்காரன் இவருடைய தன்மையை உணர்ந்து கொள்ளாமல் வெற்றிலைக்குச் சுங்கப் பணம் கொடுக்க வேண்டும் என்று மறித்துக் கொண்டான். உடனே இவருக்குச் சினமுண்டாகியது.

" தம்பா முதலி சகலகலை ஞானமுள்ள
வெண்பாப் புலியென்றால் வேறோ—இன்புவியில்
குத்தகையில் வெற்றிலையைக் கொண்டுவந்தால் என்னபயம்
புத்திகெட்ட மாடேநீ போ."

என்னுஞ் செய்யுள் ஒன்றைப் பாடினார். சுங்கச் சாவடிக்காரன் வெண்பாப் புலியாருடைய தன்மையை உணர்ந்து கொண்டு வாலை மடக்கிக்கொண்டான்.

முத்து

வெண்பாப்புலியார் எட்டையபுரத்திற்குச் சென்றார். தெருவிற் சில பெண்கள் உரையாடி நகைத்துக்கொண்டிருந்தனர். அவர்களுடைய பல்லழகு வெண்பாப்புலியாருக்கு மிகுந்த வியப்பை உண்டாக்கியது. உடனே,

" தூது மதுரை துவரை கடையிடைமுன்
ஓதுகின்ற மூன்றெழுத்தை ஒக்குமே—நீதிச்
செகராச ராசர்கள்தம் சிங்கே திளசை
நகரார் இளையார் நகை."

என்னும் வெண்பா ஒன்றைப் பாடினார். தூது, மதுரை, துவரை ஆகிய மூன்று சொற்களின் கடை யிடை முன் ஆகிய மூன்று இடங்களினும் உள்ள மு, த், து 'முத்து' என்றதலைக் காண்க.

வேட்டைப்பாட்டு

வெண்பாப்புலியார் சிவகங்கை நாட்டில் பெருநிலக் கிழாரோடு தங்கியிருந்தார். அப்போது அவர் வேட்டைக்

குச் சென்றார். வேட்டையைப் பார்க்க விரும்பிய வெண்பாப் புலியார் தாமும் உடன் சென்றார். பெருநிலக்கிழார் வேட்டையாடி முடிந்த பின்பு மறுநாள் வெண்பாப்புலியாரைப் பார்த்து, "நேற்று நாம் வேட்டையாடியதைப் பார்த்தீரே எவ்வாறிருந்தது?" என்று கேட்டார். உடனே இவர்,

"கெசபதி போத குருமகராச கிரீடி தென்னவன்
முசல்கலை மான்கொன்ற வேட்டைப்ர தாப முசுவிசும்பில்
சசிகண்டு கோட்டையிட் டுள்ளிருந் தப்புறந் தானகன்று
நிசிகொண்டு மெல்லச் சமுத்திரம் புக்கனன் நிச்சயமே."

என்று பாடினார்.

**தனிப்பாடல்கள்**

இவர் நூல்கள் இயற்றியதாகத் தெரியவில்லை. ஆனால், அவ்வப்போது சமயத்தை நோக்கி இயற்றிய தனிப்பாடல்கள் பல. அவைகளும் ஒன்றுபடுத்தப்பெறாமல் மூலைக்கொன்றாகச் சிதறிப்போயின. தனிச்செய்யுட் சிந்தாமணியில் ஐந்தாறு பாடல்கள் மட்டுமே சேர்ந்துள்ளன. இவர் பிள்ளையார்மீது இயற்றியது,

"பாசத் தளையறுத்துப் பாவக் கடல்கலக்கி
நேசத் தளைபட்டு நிற்குமே—வாசநறும்
காரார் வரைபயின்ற கன்னிப் பிடியளித்த
ஓராளை வந்தென் உளத்து."

**இறுதி**

முத்தப்ப செட்டியார் காலத்தவராகிய இவர் முத்தப்ப செட்டியாருக்கு முன்போ பின்போ இவ்வுலக வாழ்வைத் துறந்தார். இவருடைய வழிமுறையினர் மிதிலைப்பட்டி செவ்வூர் முதலிய இடங்களில் இருக்கிறார்கள்.

## ௨௫. கல்போது பிச்சுவையர்

தோற்றம்

பாண்டிவள நாட்டிலே கல்போது என்னும் ஊரிலே பிச்சுவையர் வாழ்ந்திருந்தார். இவர் சிறந்த புலவர். வேடிக்கையாகச் செய்யுள் இயற்றுவதில் வல்லவர். கல்போது பெருநிலக்கிழாரின் அவைக்களப் புலவராக இருந்ததோடு வேறுபல பெருநிலக்கிழார்கள்மீது தனிப்பாடல்கள் நூல்கள் முதலியன இயற்றியும் தமது வாழ்க்கையை நடத்திக்கொண்டிருந்தார்.

பாட்டியல்பு

இவருடைய பாடல்கள் படிப்பதற்கு மிக வேடிக்கையாக இருக்கும். மொழிகளின் எழுத்துக்களை மூலைக்கொன்றாகப் பிய்த்துப் பிடுங்கி வைத்துவிடுவார். பாட்டைக் கேட்பவர்கள் விழுந்து விழுந்து நகைப்பார்கள். இவருடைய பாடலின் போக்குக் கவிச்சிங்க நாவலராகிய மாம்பழக் கவிராயருக்கு மிகுந்த வியப்பை உண்டாக்கியது. அவர் இவருடைய பாடல்கள் சிலவற்றைப் பார்த்துவிட்டு,

"உச்சிதமா முன்னோர் உரைத்த தமிழையெல்லாம்
அச்சரங்கள் அச்சரங்கள் ஆகவே—நிச்சயமாப்
பிச்சுவைப்ப தாலேஇன் பேர்பிச்சு ஐயனென
வைச்சனன் கல்போது மன்."

என்று பாடினார்.

திருவாடானை அந்தாதி

இவர் திருவாடானையில் எழுந்தருளிய சிவபெருமான் மீது அந்தாதி ஒன்று பாடினார். அவ் வந்தாதி எளிதிற் பொருளறிய இயலாதவாறு மிகவுங் கடுமையாக அமைந்தது.

“முன்னவனைப் பாம்பிரவி கொடுநரகில்
புகுவனென மொழியும் வேதம்
அன்னவனைச் சிறுகாலோ திமம்பழனம்
பவன்கயிலை அடைவான் என்றும்
கன்னனெடுங் கமுகினஞ்சூழ் பொழில்பெருகு
மாடானைக் கருத்தன் பேரை
இந்நிலத்தில் கீர்த்திசெல்வி தரித்திடுமோ
என்றுமடி யேற்குத் தானே.”

[பாம்பு இரவி - பணியாதவன். சிறுகாலோதிமம் பழனம் பவன் - வந்தனம் செய்யாதவன். கீர்த்திசெல்வி தரித்திடுமோ - புகழாமல் அகம் தரித்திடுமோ.]

போடிக்குச் சென்றது

இவருடைய காலத்தில் போடிநாயக்கனூர்ப் பெருநிலக் கிழார் சிறந்த கொடையாளியாக விளங்கியிருந்தார். அவர் மீது இவர் சில செய்யுட்களை இயற்றிக்கொண்டுபோய்ப் பார்த்தார். எக் காரணத்தினாலோ பெருநிலக்கிழார் இவரைப்போற்றி நன்கொடை வழங்கவில்லை. உடனே பெருநிலக்கிழாரைப் பார்த்துப் பிச்சுவையர், “நான் இங்கு வந்ததில் எனக்குத்தான் சிறப்பில்லாமற்போய்விட்டது. என் மனைவிக்குத் தகுந்த சிறப்புக் கிடைத்தது. எவ்வாறென்றால், இதற்கு முன்பெல்லாம் என் மனைவிமீது எனக்குச் சினமுண்டானால், “போடி,” என்று நான் அவளைப் பார்த்துக் கூறுவது வழக்கம். இனிமேற் சினமுண்டாகும்போது அவ்வாறு சொல்லமாட்டேன். ஏனென்றால், ‘போடி’ என்பது தங்களுடைய ஊரைக் குறிப்பதாக இருக்கிறது. ஆகையால் இனிமேற் சினமுண்டாகும்போது, ‘வாடி, வாடி,’ என்றுதான கூறுவேன்,” என்று சொல்லிவிட்டு அங்கிருந்து புறப்பட்டார்.*

* வாடி - கல்போது. போடி - போடிநாய்க்கனூர்.

"வாடி நகரிருக்க மன்னன் தயவிருக்க
ஓடிப் பணிவிடைசெய் வோரிருக்கப்—போடிநகர்க்(கு)
ஏன்தான் பெரியமலை ஏறிவந்தேன் ஐயையோ
நான்தான் இனிவருவ னு."

என்னுஞ் செய்யுளைப் பாடிக்கொண்டே சென்றார்.

திருமங்கலம்

இவர் ஒருநாள் திருமங்கலத்திற்குச் சென்றார். ஊரார்கள் இவரைப் பாராட்டி ஆகவேண்டிய காரியங்களை முடித்து அனுப்பவில்லை. இவருக்கு அவ்வூரைப்பற்றி மனதில் சினமுண்டாகியது.

"நீரோ தொடுமுன் பிடித்திடு காங்கை நிறைந்திருக்கும்
ஊரோ கொடிய உவர்த்தரை யாமிந்த ஊரிலுள்ள
பேரோ அருமை தெரியாத பேரிதைப் பேய்த்தனமா
ஆரோ திருமங் கலமெனக் கூறினர் அன்புவைத்தே."

என்று செய்யுளை அவ்வூர்ப் பொதுமண்டபத்தில் எழுதி வைத்துவிட்டுச் சென்றார். இதனைப் பார்த்தவர்கள், ஐயரைப் போற்றி நல்ல பாட்டுக் கேட்காமற் போனோமே என்று எண்ணி வருந்தினார்கள்.

விநாயக முதலியார்மேற் பாட்டு

சென்னை வியாசர்பாடியில் இருந்த விநாயக முதலியார் திருமயிலையில் அழகிய அறச்சாலை ஒன்று கட்டி அதிற் பல ஓவியங்கள் எழுதி அதற்குச் சித்திரச் சத்திரம் என்று பெயரிட்டார். அச் சத்திரத்தையும் அதிலமைந்த ஓவியங்களையும் பார்த்துப் பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை முதலிய பல புலவர்கள் புகழ்ந்து பாடினார்கள். அப்போது அங்கிருந்த இவரும் அவ் வறச்சாலையைப் புகழ்ந்து,

"அத்திரத்தை ஒத்தவிழி அம்பிகைபா கன்பதத்தில்
அன்பாய் என்றும்
பத்திரத்தைத் தூவிநிதம் பணியும்விநா யகமகிபன்
பண்பாய்ச் செய்த
சத்திரத்தைப் பார்ப்பவர்க்குச் சத்திரத்துள் வாய்ந்தசுவர்த்
தலமேல் ஓங்கும்
சித்திரத்தைப் பார்ப்பவர்க்கும் ஆயிரங்கண் வேண்டுமெயன்
செய்தி லானே."

"புருடநர சிங்கமெனப் புகழுமருச் சுனநிருபன்
புதல்வா செம்பொன்
வருபுலவர்க் கருள்புரியும் மதனவிநா யகமகிபா
வழுத்தக் கேண்மோ
திருமயிலை ஊரினில்நீ கட்டிவைத்த சத்திரத்தின்
சிறப்பை யெல்லாம்
இருநிலத்தைத் தாங்குமரா அதன்நாவால் எடுத்துரைக்க
ஏலா தன்றே."

என்பன முதலிய பாடல்களைப் பாடித் தக்கவாறு நன்கொடை பெற்றார்.

## வேடிக்கைப் பாடல்கள்

வேடிக்கையாகப் பாடல்களை இயற்றுவதில் மிகவும் வல்லவர். விடுகதைப் பாடல்களை அப்பாடலுக்குள்ளேயே விடையும் அமைத்துப் பாடுவார். அத்தகைய பாடல்கள் எல்லோருக்கும் மிகுந்த உவப்பை விளைப்பனவாம். சிலவற்றைக் காண்க:

"அன்புடனே இச்சைகொள்வார் அவனி யோர்கள்
அன்றியப்பா னலமுறுமோ ரணிலுண் டாகும்
வன்படிக நிறமாமற் றுங்கேண் மோக
வளங்கவன மாயிருக்கும் ஆடைக் குள்ளாம்

இன்பமுள்ள சுந்தரதா சேந்த்ரா மிக்க
இயல்பான மதுரவுரை இயம்பு நீதா
முன்பினுள்ள ஈரெழுத்துஞ் சேர்த்துப் பார்க்கில்
மொழிந்தகதை இன்னதென மொழிய லாமே."

[இப்பாட்டின் விடுவிப்பை நண்பர்கள் முயன்று கண்டு பிடிப்பார்களாக.]

"என்னசொல்ல வானாலுந் தானே முந்தும்
இன்னமுங்கேள் கவியுமத னல்உதிக்கும்
வின்னமில்லை தண்ணீர்மேல் வாசஞ் செய்யும்
மேலாகத் தந்தத்தை ஒப்புக் கொள்ளும்
அன்னமுதற் பட்சிக்குஞ் சேர்க்கை ஆகும்
ஆவலப்ப சாமிமகிழ் பழநி யாண்டி
மன்னவா பயனுனக்குச் சொல்லு வேறு
வல்லவா இக்கதையை வழுத்து வாயே.

[தடித்த எழுத்துக்குள் விடுவிப்பு அமைந்திருத்தலைக் காண்க.]

"அன்னமருந் தாதிருக்கும் பூவில் வாழும்
அனுதினமும் மச்சமுண்டாம் படிக்கு மேலாம்
சொன்னகரம் இல்லாத அனலை மேலாத்
தோயுமப்பா எந்நாளும் தொலையா தப்பா
வன்னமுட னேயழகா னகரை யாரும்
வாஞ்சைகொளும் படிகாட்டு மயிலூர் வேலா
என்னிடத்தில் கதைப்பயனைக் கேட்கிற் சொன்னே
னேதடா கம்தாநீ இயம்பு வாயே.

[சொன்னகரம் இல்லாத அனலை—அலை.-தடித்த எழுத்துக்களுக்குள் விடை அமைந்திருத்தலைக் காண்க.]

இவர் இயற்றிய நூல்கள்

1. சுந்தரதாசுத் தேவர் ஒருதுறைக்கோவை
2. திருவாடானை அந்தாதி

முதலியன இவரால் இயற்றப்பெற்ற நூல்கள். இவரால் அவ்வக்காலங்களில் இயற்றப்பட்ட தனிப் பாடல்கள் பல.

அவற்றுள் ஒரு சில மட்டுந் தனிச்செய்யுட் சிந்தாமணியில் இடம் பெற்றுள்ளன.

இறுதி

பெரும்பாலும் பரிசில் வாழ்க்கையையே மேற்கொண்டிருந்த இவர் 1888-ஆம் ஆண்டில் காலமானார்.

## உசா. களத்தூர் வேதகிரி முதலியார்

தோற்றம்

தொண்டைமண்டலத்திலேயுள்ள களத்தூரில் வேதகிரி முதலியார் ஏறக்குறைய நூற்றெழுபத்தைந்து யாண்டுகட்குமுன்பு தோன்றினார். இவருடைய குலம் வேளாளர் குலம். அந்நாளில் சென்னையிற் சிறந்து விளங்கிய இராமநுச கவிராயர் என்பவரிடம் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுத்தேறினார்.

வாழ்க்கை

இவர் மாணவர்கட்குப் பாடஞ் சொல்லுதல் நூல்களைப் பரிசோதித்து அச்சிடுதல் முதலிய தொழில்களிலே தம்முடைய காலத்தைச் செலவிட்டார்.

இயற்றிய நூல்கள்

நீதி சிந்தாமணி, மநுநீதி சதகம் முதலிய நீதி நூல்கள் இயற்றியதுடன் இலக்கணக் களஞ்சியம் இலக்கியக் களஞ்சியம் என்னும் இலக்கண இலக்கிய நூல்களும் எழுதினார். இலக்கணக் களஞ்சியத்தில் அகத்தியம், தொல்காப்பியம், இலக்கணத் திரட்டு, பிரபந்ததீபம், கவிசாகரம், குவலயாநந்தம், அரியவிதி, மயேச்சுரம், அவனியம், பஞ்சலட்சணப்பயன் முதலிய இலக்கண நூல்களில்

பல சூத்திரங்கள் எடுத்துக் காட்டினார். இலக்கியக் களஞ்சியத்திலே ஆசிரிய நிகண்டு, கயாகர நிகண்டு, பொதிய நிகண்டு முதலிய நிகண்டுகளையும் பிறவற்றையும் எடுத்துக் காட்டினார்.

நாலடியார் உரை

நாலடியாருக்கு இவர் ஓர் உரை எழுதினார். அவ்வுரை இலக்கணக் குறிப்புப் பொழிப்பு முதலியவைகளுடன் அமைந்து கற்பவர்களுக்கு நற்பயன் அளிப்பதாகச் சிறந்து விளங்குகிறது.

மீனாட்சிசுந்தரம் பிள்ளையைக் காண்டல்

இவர் பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் காலத்தினர். மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் திரிசிரபுரத்தில் தங்கியிருந்தபோது வேதகிரி முதலியார் ஏதோ அலுவல் ஒன்றை முன்னிட்டுத் திரிசிரபுரத்திற்குச் சென்றார். மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடம் பொறாமை கொண்ட சிலர், 'இம முதலியாரை அப்பிள்ளையிடம் அழைத்துக்கொண்டுபோய் விடுவோமாயின், இலக்கணப் புலியான இவர் அவரை ஏதேனும் கேள்வி கேட்பார். அவர் பதிற் சொல்லமுடியாமல் விழிப்பார். கொட்டம் அடங்கிவிடும்,' என்று எண்ணியவர்களாய் வேதகிரி முதலியாரை மீனாட்சிசுந்தரம் பிள்ளையிடம் அழைத்துக்கொண்டு சென்றனர். முதலியார் பிள்ளையைப் பார்த்துச் சிறிது நேரம் உரையாடிக்கொண்டிருந்தார். முதலியாரை அழைத்துக்கொண்டு சென்றவர்கள் பிள்ளையவர்களைப் பார்த்து, "முதலியார் பெரிய இலக்கணப் புலவர் ஐம்பதினாயிரத்திற்கு மேற்பட்ட இலக்கணச் சூத்திரங்கள் முதலியாருக்கு மனப்பாடமாக உள்ளன. இக்காலத்தில் முதலியாருக்கு மேற்பட்ட இலக்கணப் புலவர்கள் இல்லை," என்று புகழ்ந்து கூறினார்கள்.

இதனைக் கேட்டவுடன் பிள்ளையவர்கட்கு மிகுந்த வியப்புண்டாகியது. அவர் தம் அண்மையில் இருந்த தியாகராசச் செட்டியாரைப் பார்த்து, "முதலியார் அவர்கட்கு மனப்பாடமாகியுள்ள சூத்திரத்தொகைகளை எழுதிக் கூட்டிச் சொல்," என்று கட்டளையிட்டார்.

சூத்திரத்தொகை

முதலியார் இலக்கணச் சூத்திரத் தொகைகளைச் சொல்லத்தொடங்கினர். நன்னூல், சின்னூல், தொல்காப்பியம், தண்டியலங்காரம், யாப்பருங்கலக் காரிகை, யாப்பருங்கலம், புறப்பொருள், அகப்பொருள் முதலிய இலக்கணச் சூத்திரங்களை யெல்லாஞ் சொன்னதன்றித் திருக்குறளும் சூத்திரந்தான் என்று அதனையுஞ் சேர்த்துச் சொன்னார் எல்லாவற்றையுந் தியாகராசச் செட்டியார் சேர்த்துக்கூட்டிக் கணக்குக் கொடுத்தார். சில ஆயிரங்களுக்குமேல் கணக்குச் செல்லவில்லை. தியாகராசச் செட்டியார் பொல்லாதவர், விடாக்கண்டர்; "இவ்வளவு தானா? பத்தாயிரங்கூட ஆகவில்லையே," என்று கூறிக்கிண்டல் செய்யத்தொடங்கினர். பிள்ளையவர்களோ செட்டியாரை அடக்கிவிட்டார். பிறகு வேதகிரி முதலியார் சிறிது நேரம் உரையாடிக்கொண்டிருந்துவிட்டுப் புறப்பட்டுப் போய்விட்டார்.

முதலியார் உரைநடை

"ஆன்மாவாவது அறிவிற்கு இடனாயுள்ளது. அது சீவாத்துமா, பரமாத்துமா என இருவகை உடம்பு உயிரின் போகத்திற்கிடனாயுள்ளது. அஃது அண்டசம் முதலிய நால்வகையுடையது. இந்திரியம் மெய்வாய் முதலியன. அர்த்தம், பிருதிவி அப்பு முதலியன. புத்தி அறிவு. மனமாவது சுகம் முதலிய அநுபவிக்குங் கருவியாகிய இந்

திரியம். பிரவிருத்தியாவது தொழிற்பாடு. தோடம்—குற்றம். அது காமம், வெகுளி, மயக்கம் என மூவகை. பிரேத்தியபாவம் மறுபிறப்பு."

## உஎ. வண்டானம் முத்துச்சாமி ஐயர்

தோற்றம்

திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள வண்டானம் என்னும் ஊரில் முத்துச்சாமி ஐயர் அந்தணர் குலத்திலே தோன்றினார்.

கல்வி

பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் திருவாவடுதுறை யாதீனத்தில் அமர்ந்து பாடஞ்சொல்லிக் கொண்டிருந்தபோது முத்துச்சாமி ஐயர் அங்குக் கல்விகற்கச் சென்றார். குமாரசாமித் தம்பிரான் என்பவரிடம் நூல்களைக் கற்றார். இவர் மிகுந்த நாணமுடையவர். எல்லோரோடும் நெருங்கிப் பழகமாட்டார். பெரும்பாலும் தனித்தே பொழுது போக்கும் இயல்புடையவர். ஒவ்வொன்றையுஞ் செய்யவேண்டிய காலத்திலே செய்யமாட்டார். ஆடைகளைத் தோய்த்து அழுக்கறக் கட்டமாட்டார். பார்வைக்குப் பித்துக்கொள்ளியைப்போல் இருப்பார். இவர் இவ்வாறாக இருக்கவே இவரை மற்றவர்கள் ஒருபொருட்படுத்தவில்லை.

பாட்டு

இவருக்கு உணவு, அறச்சாலையிலே ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. உண்பதற்கும் செல்லவேண்டிய வேளையில் செல்லமாட்டார். காலங்கடந்தே செல்வார். இதனால் இவருக்கு உணவும் ஒழுங்காகக் கிடைப்பதில்லை. உணவு

அகப்படாதபடியினால் திண்டாடிய இவர் ஒருநாள் அறச் சாலைச் சுவரிலே, கீழ்க்கண்டவாறு எழுதிவைத்தார்.

"இந்தஅறச் சாலைதனி லேஇரவும் பகலும்
வந்தவரி முதன்மதிதம் வைரவாங்கிக் கொண்டே
அந்தணருக் கடிசிலிட யாதுமிலை எனலால்
சுந்தரசுப் பிரமணிய தேவனிடஞ் சொல்மின்."

இந்த நிலையில் அந்தணர் ஒருவர் அங்குக் கல்வி பயின்று கொண்டிருத்தல், மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்களுக்கோ ஆதீனத்தலைவராக அப்போது அமர்ந்திருந்த சுப்பிரமணிய தேசிகருக்கோ தெரியாது. ஒருநாள் ஓர் அந்தண மாணவர் உண்பதற்குச் சென்றார். அவர் இந்தப் பாட்டைப் படித்துப் பார்த்தார். இவ்வாறு ஒரு பாட்டு எழுதிவைக்கப்பட்டிருக்கிறதென்று மற்றவர்களுக்குத் தெரியப்படுத்தினார்.

பாராட்டுஞ் சிறப்பும்

இப் பாட்டு மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்களையும் பிறரையும் தன்வழிப்படுத்தியது. இப் பாட்டை யார் எழுதியிருக்கக்கூடும் என்று அவர்கள் ஆராய்ச்சியில் இறங்கினார்கள். இறுதியில் முத்துச்சாமி ஐயரே இதனைச் செய்தவர் என்று தெளிவாகியது. நல்ல அறிஞராகிய இவர் இவ்வாறு இருக்கிறாரே என்று மீனுட்சிசுந்தரம் பிள்ளை மிகவும் இரங்கினார். இவருடைய நிலையை உயர்த்தவேண்டுமென்று உள்ளத்தில் எண்ணினார். "இவர் நல்ல அறிவாளி. எத்தனையோ செய்யுள்களைப் பாடியிருந்தால்தான் இவ்வாறு பாடுதற்கு இயலும். இவருடைய அறிவு நல்ல நுண்ணறிவு. இத்தகைய அறிஞர் ஒருவர் இந் நிலையில் இங்கிருத்தலை நாம் உணர்ந்துகொள்ளவில்லையே. கற்றவர்களைக் கற்றவர்களாகிய நாமே உணர்ந்து போற்றவில்லையென்றால் வேறு எவர்தாம் உணர்ந்துபோற்றுவர்? ஒருவருடைய தோற்றத்தைக்

கண்டு நாம் ஏமாந்துபோதல் கூடாது. 'உருவுகண் டெள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க், கச்சாணி யன்னா ருடைத்து,' என்று தெய்வப் புலமைத் திருவள்ளுவதேவர் கூறியிருப்பதை நீங்கள் அறியீர்களா?" என்று உரைத்தார்.

தேசிகர்க்குப் பாட்டு

பிறகு இவருக்கு நல்லாடைகள் வழங்குதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று எண்ணினார். ஐயரைப் பார்த்து, "ஆதீனத் தலைவரவர்கள் தங்கள் செய்யுளைப் பார்த்தால் மிகுந்த மகிழ்ச்சியடைவார்கள். ஆடைகள் வழங்கவேண்டு மென்று ஒரு செய்யுள் அவர்கள்மீது இயற்றுங்கள்," என்றார். உடனே ஐயர்,

"மாசாரக் கவிநுவல்வோர் குறைகள்தமை
அடியோடே மாற்ற எண்ணித்
தூசார நிதியமுண அடிகள்தரல்
தெரிந்துபெறத் துணிந்து வந்தேன்
ஏசார வறுமையெனுங் கொடும்பிணியால்
நெடுந்துயருற் றிருக்கின் றேற்கின்(று)
ஆசாரம் அளித்தருள்சுப் பிரமணிய
தேசிகமெய் யறிஞ ரேறே."

என்னுஞ் செய்யுளை விரைந்து பாடினார். பிள்ளையவர்கள் தம் மாணவர் ஒருவரைப் பார்த்து, "இவரை அழைத்துக் கொண்டுபோய்த் தேசிகர் திருமுன்புவிட்டு நிகழ்ந்ததைக் கூறும்," என்று சொல்லியனுப்பினார். அம் மாணவரும் அவ்வாறே அழைத்துக்கொண்டு சென்றார். நிகழ்ந்ததைக் கூறினார். தேசிகர் ஐயரின் பாடலைக்கேட்டு மகிழ்ந்தார். சரிகைக்கரையுள்ள இரு வேட்டிகளைக் கொடுத்துக் கட்டிக் கொள்ளச் சொன்னார். பிறகு இவருக்கு அவ்விடத்தில் மிகுந்த நன்மதிப்பு ஏற்பட்டது. இவர் அங்கு நன்கு பாடங்கேட்டு நல்ல புலவராய் ஊரையடைந்தார்.

வாழ்க்கை

நூறு யாண்டுகட்கு முன்பு தமிழ்ப்புலவர்கள் வாழ்க்கை இன்றைய நிலைமையைவிட மிக இழிந்த நிலையில் இருந்து துன்புறுத்திக்கொண்டிருந்தது. செல்வர்கள்பால் பாட்டியற்றிக் கொண்டுபோய்ப் பரிசில் பெற்று வாழ்க்கையை நடத்துவதைத் தவிர வேறு வழியில்லை. அந்நாள் ஆங்கிலேயர் ஆட்சிக்காலம். தமிழ்மொழி தலையெடுக்க முடியாமல் அடங்கிப்போயிருந்தது. உயர்நிலைப் பள்ளிகளில் தமிழறிஞர்கள் தமிழாசிரியர்களாக அமர்த்தப்பெறவில்லை. ஏதோ சில பெரிய கல்லூரிகளில்தான் இரண்டொருவர் பெயரளவுக்கு அமைந்து அடிமை வாழ்க்கையை நடத்திக்கொண்டிருந்தனர். அக்காலத் தமிழ்ப் புலவர்கள் நிலைக்கும் இக் காலத்திய தமிழ்ப் புலவர்கள் நிலைமை அரச போகமென்றே அறையவேண்டும். இதனைக் கருதியே ஒரு புலவர்,

"அடகெடுவாய் பலதொழிலும் இருக்கக் கல்வி
அதிகமென்றே கற்றுவிட்டோம் அறிவில்லாமல்."

என்று அலறிப் புலம்பினர். பாடப் படிக்க நன்கு கற்றுக்கொண்டு சிறந்த அறிஞராக எழுந்த முத்துச்சாமி ஐயர் தமது இரத்தல் தொழிலை மேற்கொண்டு பலவாறு அலைந்தார். அந் நாளில் ஊற்றுமலைப் பெருநிலக்கிழாராக இருந்த இருதயாலயமருதப்ப தேவர்மேல்,

"சுரும்பனங்கன் றிடச்செய்யும் விழிநடையும்
மாதுமுலைத் துணைக ளின்மேல்
கரும்பனங்கன் சூதமலர்க் கணையெய்ய
மிகவுமலை கனத்த லாலே
இரும்பனங்கத் திசையான்றன் ஊர்போலும்
இடைதாங்கா தெய்த்தாள் சேர்வாய்
விரும்பனங்க னகம்புலவர்க் கருளுமித
யாலயநல் விவேக மாலே.

கற்பகமு மலரடையக் கருமுகிலு
மிடியாரக் கவிஞர் சங்கும்
அற்பகலும் பயமேவிப் புலம்பவன
சமும்பங்கம் அடைந்து நிற்பத்
தற்பகரும் கவிஞருக்கு வரையாது
கொடுத்தருளும் தகுதி யுள்ளாய்
நற்பகவற் போற்றுமித யாலயவென்
வேட்டலினை நடத்து வாயே."

என்பன முதலிய பல செய்யுட்களை இயற்றிக் கொண்டு போய்த் திருமணத்திற்குப் பொருளுதவி செய்யவேண்டு மென்று வேண்டிக்கொண்டார். அவர் இவருடைய திருமணச் செலவுக்கு இருநூறு வெண்பொற் காசுகள் வழங்கினர். இவ்வாறே மற்றும் பல பெருநிலக்கிழார்கள் ஆதீனத் தலைவர்கள் முதலியோரைப் புகழ்ந்து பாடிப் பரிசில் பெற்றுத் தம் வாணாளை முடித்தார்.

இவர் இயற்றிய நூல்

பசுந்தையநதாதி என்னும் அந்தாதி நூல் ஒன்றும் தனிப்பாடல்கள் பலவும் இவரால் இயற்றப்பெற்றன. திரிபு, யமகம், சிலேடை முதலியன அமையுமாறு செய்யுள் இயற்றுவதிலும் பிறர் பேசுவதை நகைச்சுவை ததும்புமாறு பிரித்துக் காட்டிப் பொருள் விளக்குவதினும் இவர் வல்லவர்.

சிவப்புத்தேள்

ஒருநாள் சிவனடியார் ஒருவர் இவரைப் பார்த்துக் கேலி செய்தார். உடனே இவர் அவரைப் பார்த்து, "நீங்கள் சிவப்புத்தேள்," என்று கூறினர். இச் சொல், சிவமாகிய புத்தேள் என்று பொருள்படுதலோடு, செம்மை நிறம் பொருந்திய தேள் என்றும் பொருள்படுதலைக்கண்டு மற்றவர்கள் வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தார்கள். ஒரு

நாள் வேறொருவர் இவரைப் பார்த்து, "உண்டு வந்தீரா?" என்று கேட்டார். அதற்கு இவர், "உண்டு உவப்பதற்கு நான் சாப்பாட்டு ராமன் அல்லன்," என்று மறுமொழி கூறினார். இப் பதிலைக்கேட்ட முன்னவர், "உண்டு வந்தீரா?" என்று கேட்டதை உண்டு உவந்தீரா என்று பிரித்துக் கொண்டீரா? நன்று நன்று," என்றுகூறி மகிழ்ந்தார்.

*இறுதி*

இவருடைய பிற வரலாறும் இறுதி முதலிய செய்தியும் விளக்கமாகத் தெரியவில்லை.

## உ அ. சூலியன் வின்சோன்

*தோற்றம்*

வீரமாமுனிவர் போப்பையர் முதலியோர் செந்தமிழ்த் தொண்டு செய்த மேலை நாட்டாராவர். சூலியன் வின் சோன் என்பவர் பிரஞ்சு நாட்டைச் சேர்ந்தவர். இவருடைய தந்தை அந்தக் காலத்தில் இந்தியாவில் காரைக்காலில் நீதிமன்ற நடுவராக இருந்தார் அப்பொழுது சிறுவராயிருந்த சூலியன் வின்சோனைத் தமிழ்ப் படிக்கச் செய்தார். சூலியன் வின்சோன் தமிழை நன்கு படித்துத் தமிழ்ப் புலமை நிரம்பப்பெற்றார். பிறகு தந்தையார் தாய்நாட்டுக்குப் போய்விட்டபடியால் சூலியன் வின்சோனும் உடன் சென்றுவிட்டார்.

*தமிழாசிரியர்*

தாய்நாட்டுக்குச் சென்ற சூலியன் வின்சோன் தமிழ் மொழியை மறந்துவிடவில்லை. மேலும் பல தமிழ் நூல்களைப் படித்துத் தமிழறிவைப் பெருக்கிக்கொண்டார். இவருடைய தமிழறிவை நன்குணர்ந்த பாரிசுப் பல்கலைக்

கழகத்தார் இவரைக் கீழைநாட்டு மொழிகளுக்கு ஆசிரிய ராக அமர்த்தினார்கள்.

தமிழன்பு

உ. வே. சாமிநாதையர் சீவகசிந்தாமணியை ஆராய்ச்சி செய்து அச்சிற்பதிப்பித்து வெளியிட்டதும் புத்தகப்பிரதி பாரிசு பல்கலைக் கழகத்துக்குப் போயிற்று. அதனைச் ஜூலியன் வின்சோன் பார்த்துப் பெருமகிழ்ச்சி யடைந்தார். சாமிநாதையரைப் பாராட்டித் தமிழில் கடிதம் எழுதினார். மேலும் தமிழ் மொழியில் வெளிவராதிருக்கும் நூல்களை யெல்லாம் வெளிப்படுத்தவேண்டுமென்று அடிக்கடி கடிதங்கள் எழுதி ஐயரை ஊக்கினார். ஐயர் வெளியிட்ட சிந்தா மணியைப் படித்துப் பிரஞ்சு மொழியில் சீவகசிந்தாமணிச் சுருக்கம் என்னும் நூல் ஒன்றையும் வெளிப்படுத்தினார். அந் நூலில் சாமிநாதையரை மிகவும் பாராட்டி எழுதினார்.

இயற்றிய நூல்கள்

இவர் தம்மிடம் தமிழ்மொழியைப் பயிலுபவர்களுக் குப் பயன்படும் பொருட்டுத் தமிழ் இலக்கணச் சுருக்கம் ஒன்றை எழுதினார். திருக்குறள் முதலிய நூல்கள் சில வற்றைப் பிரஞ்சு மொழியில் மொழிபெயர்த்தார். இவர் உ. வே. சாமிநாதையருக்கு எழுதிய கடிதங்களில் கீழ்வரும் பாடல்களையும் புதிதாக இயற்றி எழுதியிருந்தார்.

“சிந்தா மணியாஞ் சிறப்புடைய காப்பியமே
பொன்றுதின் மாலை பொருந்திவரக்—கண்டேன்
சிலப்பதி காரமுதல் சீர்நூல்கள் நான்கும்
அளித்தலாம் என்மர் அறைந்து.”

ஆசிரியப்பா

“இளங்கதிர் ஞாயிறு இருள்தொறு நீக்கியபின்
விளங்கிடைச் சங்கெறி வெண்டிரைக் கடல்சூழ்

மாநில மதனில்வாழ் மறைமிகு சோழப்
பூநிலத் தலர்ந்த புகார்நக ரத்துக்
கோவலன் கண்ணகி கூறரும் அன்பொடு
பாவல முடையாட்குப் பற்பொருட் பாத்தலும்
ஆங்கவன் துயரமும் அணிகிளர் சிலம்பு
வாங்குபு போயது மதுரை யிற்கொலைப்
படலு முதலிய பறைதருஞ் சரிதை
அடல்வினைப் பயனெறி அமைபொருள் இன்பம்
வீடெனயாந் தெளிவுற வின்மொழிக் காப்பியம்
சிலப்பதி காரஞ் சிறந்த பெயரால்
உலகெலாம் அறிய ஒளிர்தரு சென்னைக்கண்
அச்சிட வளர்த்தீர் அடைந்த பெரும்புகழ்
மாசிலா நாமுள் மதிதெரிந் திசைக்கு
ஒருபேர் அகத்தியன் உருக்கொடு
மருளுடை மண்மிசை வந்துதோன் றினனே

இறுதி

செந்தமிழிடத்திலே கழிபெருங் காதல் கொண்டு பாரிசுமாநகரில் தமிழ்த்தொண்டு செய்துகொண்டிருந்த இவர் உ. வே. சாமிநாதையருக்குப் பல கடிதங்கள் எழுதியதுடன் அந் நாட்டிலிருந்த நூல் நிலையத்தில் இருந்து தமிழ் நூல்கள் சிலவற்றை ஐயர் விருப்பப்படி எழுதியனுப்பினர். இவருடைய பிற வரலாறுகளும் பிறந்த இறந்த காலங்களும் தெரியவில்லை. ஒரு காலத்தில் உலகெலாம் நந் தமிழ்மொழி பரவி யிருந்ததென்பர் ஆராய்ச்சியாளர். இத்தகைய நிகழ்ச்சிகளால் ஆராய்ச்சியாளர்களுடைய கூற்றுக்களும் மெய்யென நாம் ஊகிக்கலாம்.

